# மாதவ நிதானம்

என்னும்

# ரோக விநிச்சயம்

ரோக நிர்த்தாரண விஷயமாய் ஸ்ரீ மாதவகரன் இயற்றிய
ஸம்ஸ்க்ருத வைத்திய நூலின்
தமிழ் மொழி பெயர்ப்பு


வைத்திய ரத்னம்
பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார் எ. வி. எஸ்.
ஆயுர்வேத பூஷணம், ஆயுர்வேதாசார்ய அவர்களால்
மொழி பெயர்க்கப்பட்டது


மேற்படியார் இயற்றிய
'நிதான தீபிகை' என்னும் உரை, விஷய அகராதி
முதலியவை அடங்கியது.


சீர்திருத்திய இரண்டாம் பதிப்பு

சென்னை:
**வைத்திய கலாநிதி ஆபீஸ்**
வேப்பேரி.
1936

TO

THE MEMORY

OF

**Late Dr. S. RANGACHARI, M.B. & C.M.**

**The most Reputed and Illustrious Surgeon of South India**

In appreciation of his invaluable
services rendered to thousands of
suffering humanity and of his skill
in the art and science of Surgery

**This Ancient Standard Medical Work
is Dedicated**

As a humble mark of Esteem and Gratitude
by the Author.

# மொழிபெயர்ப்பு முறை

இக்கிரந்தத்தைத் தமிழில் மொழிபெயர்த்த ஆசிரியரால் மாதவ நிதாநத்திலுள்ள விஷயங்களெல்லாம் தகுந்தவாறு பிரிக்கப்பட்டு, அவ்வொவ்வொரு விஷயத்திற்கும் "காப்பு", "கிரந்தத்தின் பெயரும் நோக்கமும்," "பஞ்ச லக்ஷணங்கள்", "நிதாநம்", "பூர்வரூபம்", "வியாதிக்குப் பொதுக்காரணங்கள்" என்றவாறு முற்றிலும் விளங்கத் தலையங்கங்கள் சேர்க்கப்பட் டிருக்கின்றன.

(1) இந்நூலில் மதுகோசவியாக்கியாநத்தைப் பல விடங்களில் ஆதாரமாகக் கொண்டும், வேறு சில கிரந்தங்களைச் சில விடங்களுக் குப் பிரமாணமாகக் கிரஹித்தும் தமிழில் மொழிபெயர்த்த ஆசிரிய ராலேயே உரையும் விரிவாக இயற்றிச் சேர்க்கப்பட்டிருக்கிறது. (2) விஷயஅட்டவணை, விஷயஅகராதி முதலியவைகளும் தமிழா சியராலேயே இயற்றப்பட்டவையாம்.

ஒவ்வொரு விஷயத்தின் முடிவிலும் குறிக்கப்பட்டுள்ள இலக்கங் கள் ஸம்ஸ்க்ருத மூலக் கிரந்தத்தின் அந்தந்த அத்தியாயத்தைச் சேர்ந்த ச்லோகங்களின் வரிசைக் கிரமங்களைக் குறிப்பிடுகின்றன.

இம் மொழிபெயர்ப்புக்கு நிர்ணயஸாகர அச்சுக்கூடத்தவர்க ளால் வெளியிடப்பட்டுள்ள வியாக்கியாந ஸஹிதமான கிரந்தமும், வேறு சில ஏட்டுப் பிரதிகளும் ஆதாரமா யுபயோகிக்கப்பட்டன.

# முகவுரை



மூன்று ஸ்கந்தங்கள் அல்லது மூன்று ஸூத்திரங்கள் அடங்கியது ஆயுர்வேதம் என்று ஆதிகாலத்திய சரகர் முதலிய ஆர்ய வைத்தியசாஸ்திரவல்லோர் கூறுவர். ஸ்கந்தங்கள் என்றால் மூன்று முக்கியமான பெருங்கிளைகள் என்று பொருள். அவை ஹேதுஸ்கந்தம், இலக்ஷணஸ்கந்தம், ஔஷதஸ்கந்தம் * என்கிற மூன்றுமேயாம். சாரீரம் முதலிய மற்றப் பகுதிகளனைத்தும் இம் மூன்று பெரும் பகுதிகளில் உள்ளடங்கிய அம்சங்களேயாம். மூன்றுவதான ஔஷதஸ்கந்தம் என்கிற சிகித்ஸா முறையைப்பற்றிய பகுதி சரக-ஸுச்ருத-வாக்படாதி வைத்தியாசிரியர்களால் தம் ஸம்ஹிதைகளில் விஸ்தாரமாகவும், விமர்சையாகவும் விளக்கப்பட்டிருக்கிறது. பிற்காலத்தியவரான ப்ருந்தர், சக்ரபாணி, பாவமிச்ரர் முதலியவர்களும் ஔஷதஸ்கந்த பகுதியை அநேக் வகையிற் பெருக்கித் திரட்டிப் பிரபலமான நூல்களை இயற்றலானார்கள். ஆனால் பிணிகளைப் பரீக்ஷிக்கவும் பகுத்தறியவும் இன்றியமையாத இரு பகுதிகளான ஹேதுஸ்கந்த - லக்ஷணஸ்கந்தங்களைப்பற்றிய விஷயங்களை ஸாங்கோபாங்கமாகவும், ஸம்பூர்ணமாகவும் விவரித்து விளக்கும் தனி ஆயுர்வேத நூல் அரிதிலும் அரிதென்பதை அறிந்து, அவ்விதக் கிரந்த மொன்றை இயற்றி வைத்திய உலகுக்கு உதவ முன்வந்த முற்காலத்திய வைத்திய ஸார்வபௌமன் மாதவகரன் என்பவரே.

## பிரத்தியேக நிதானநூல்

சில ஆசிரியர் தமக்கு முக்கியமாகத் தோற்றி தன் அனுபவத்தில் வந்த சிற்சில வியாதிகளையும், வேறு சில ஆசிரியர் அவருக்குப் பிரதானமாகத் தோன்றிய வேறு சில வியாதிகளையும் குறிப்பாகத் தம் தம் நூல்களில் விவரித்திருக்கிறார்கள். சரக-ஸுச்ருத-வாக்படாதிகள் ரோகவிவரணங்களுக்காகவே பிரத்தியேகமாக 'நிதானஸ்த்தானம்' என்று ஒரு பகுதியைத் தம் நூல்களில் அமைத்திருந்தும், தாம் விவரித்துக் கூறுவதாகக் கருதிய வியாதிகளை யெல்லாம் அப்பகுதியிலேயே தொகுத்துக் கூறாமல், நிதான ஸ்த்தானத்திற் சில ரோகங்களைப் பற்றிய விஷயங்களை மாத்திரம் கூறிவிட்டு, வேறு பல ரோகங்களை

---

* ஹேதுஸ்கந்தம் — ரோககாரணங்களை விவரிக்கும் பாகம். லக்ஷணஸ்கந்தம்—ரோக லக்ஷணங்களை விவரிக்கும் பாகம். ஔஷதஸ்கந்தம்—ரோகங்களுக்கு ஏற்ற சிகித்ஸைகளை விவரிக்கும் பாகம்.

உத்தர ஸ்த்தானத்திலும், சிலர் சிகித்ஸா ஸ்த்தானத்திலுங்கூட நிதான லக்ஷணாதிகளோடு விவரித்திருக்கிறார்கள். அவ்வாறு பல வேறு கிரந்த கர்த்தாக்கள் பல வேறிடங்களில் அவரவர் நோக்கப்படி மொழிந்துள்ள ஸகல ரோகங்களின் ஹேது-லக்ஷணாதிகளையும் ஒருங்கே திரட்டிக் கூறும் பிராசீன வைத்திய நூல் இது ஒன்றே. இந்த நிதானக் கிரந்தம் மாதவகரன் என்கிற ஆசிரியரின் பெயரைக் கொண்டு "மாதவ நிதானம்" என்றும் "ருக் விநிச்சயம்" என்றும் பிரஸித்தமாயுள்ளது*. பல நூற்றாண்டுகளுக்கு முன் இத்தகைய நூல் ஒன்று இல்லாக் குறையைத் தீர்ப்பதற்காகக் கருதி, பல வைத்தியோத்தமர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, அநேக முனிவர்களுடைய அரிய வைத்திய நூல்களிற் சிதறிக் கிடக்கும் சிறந்த விஷயங்களை யெல்லாம் கிரஹித்து இக்கிரந்தம் இயற்றப்படுவதாக "நாநாமுநீநாம் வசநை ரிதாநீம் ஸமாஸதஸ் ஸத்பிஷஜாம் நியோகாத். ஸோபத்ரவாரிஷ்ட நிதான லிங்கோ நிபத்யதே ரோகவிநிச்சயோயம்" என்கிற ஆரம்ப பத்தியத்திலே ஆசிரியரே விளங்கக் கூறியிருப்பதிலிருந்து, இதற்கு முன் வேறு நிதானக்கிரந்தம் தனியாகக் கிடையா தென்பதும், ஸகல வைத்திய நூல்களிலிருந்தும் கிடைக்கக் கூடிய நிதானாம்சங்கள் அனைத்தையும் திரட்டி, அநேகம் மலர்களிலிருந்து தேனைத் திரட்டித் தேனீ தேன்கூடு கட்டுவது போல் இந்நூலை இவ்வாசிரியர் நிர்மித்தார் என்பதும் வியக்தமாகிறது. ஆகவே, இந்நூல் இயற்றப்பட்ட பிறகு, வியாதி நிர்த்தாரணம் செய்வதில் வைத்தியர்களுக்கு அதற்கு முன் அநேகம் நூல்களைத் தேடிப் படிக்கவேண்டி யிருந்த இன்னல்கள் தீர்ந்து, வியாதிபரிசீலனை செய்யும் வேலை வெகு எளிதாய்விடும் என்கிற விசேஷ பிரயோஜனத்தையும் இந் நூலாசிரியர் "நாநா சாஸ்த்ர விஹீநாநாம் பிஷஜா மல்பமேதஸாம். ஸுகம் விஜ்ஞாது மாதங்க மயமேவ பவிஷ்யாதி" என்கிற ச்லோகத்தினால் விசதப்படுத்தி யிருக்கிறார். அக்காலம் முதல் இன்று வரையில் "ரோகவிநிச்சயம்" என்கிற இக்கிரந்தமே ஹேது-லக்ஷணஸ்கந்தங்கள் விஷயமான பிரமாணநூலாக ஆயுர்வேத சாஸ்திரஞ்ஞர்களால் கருதப்பட்டு, அவர்களுக்குக் கண்ணாகவும் இருந்துவருகிறது. ஆனது பற்றியே ஆயுர்வேத மறிந்தவர் "நிதாநே மாதவ: ச்ரேஷ்ட:" (வியாதி நிதான நிர்ணய விஷயத்தில் மாதவன் சிறந்தவன்) என்று முதுமொழி யொன்று வழங்குவர்.

## மாதவகரன் வரலாறு

இங்கு 'மாதவ' என்கிற பெயரைக் குறிப்பிடும்போது, முன்பு இப்பெயருடன் விளங்கிய மூன்று நான்கு ஆசிரியர்கள் சரித்திராராய்ச்சி செய்பவருடைய நினைவுக்கு வருகிறார்கள். இவர்களுள்

---

* ருக் விநிச்சயம் என்றால் வியாதிகளைப் பரீக்ஷித்துத் தீர்மானிக்க உதவும் நூல் என்று பொருள்.

மூன்று மாதவர்கள் வைத்திய சாஸ்திரப் பிரவர்த்தகர்கள் ; மற்றவர் வேத பாஷ்யம் இயற்றியவர்; அவர் ஸாயணமாதவர் என்று மஹாப் பிரஸித்தர். அவர் பிரக்ருத ரோகவிநிச்சய நூலாசிரியரினும் முற்றி லும் வேறுபட்டவர் ; இவ்வாசிரியருக்கு ஐந்து நூற்றாண்டுகள் பிந்தி யவர். இவ்வுண்மை இதன் பிறகு கூறப்போகும் விஷயங்களி லிருந்து விளங்கும். இந்நிதாநநூல் இயற்றியவருக்கு 'மாதவகரன்' என்று பெயர். 'கர' என்பது வட தேசத்தில் ஒரு வகுப்பினர் தம் பெயருடன் வழங்கும் சார்புப் பெயராகும். அவ்வகுப்பினர் பெரும் பாலும் வைத்தியத் தொழிலில் ஈடுபட்டவரென்று கூறப்படுகிறது. இந்துகரன் என்பவர் இவரது பிதா. இவரை கூர்ஜரதேசத்தவர் என்று கூறுவர் சிலர். வங்க தேசத்தில் எட்டாம் நூற்றாண்டுக்கு முன் வெகுப் பிரஸித்தி பெற்று விளங்கிய வைத்தியோத்தமர் என்று வங்காள வித்வான்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். வங்காளத்தில் வெகு காலமாகவே கர, குப்த, ஸேன, தத்த முதலிய சார்புப் பெயர் கள் வைத்தியத் தொழில்புரியும் பரம்பரையினருக்கே வழங்கப் பட்டு வருவதாக 'சப்தகல்பத்ருமம்' என்கிற ஸம்ஸ்க்ருதப் பேரகராதி கூறுவதும் கவனிக்கத் தக்கது. ஆசார்ய வாக்படரது வாக்கியங்களிற் பலவற்றை அவ்வப்படியே இவர் கிரஹித்துத் தன் நூலிற் சேர்த் திருப்பதைக் கொண்டு, வாக்படருக்குப் பிந்திய காலத்தவர் மாதவ கரன் என்பது வியக்தமாவதுடன், இவர் ஏழாம் நூற்றாண்டில் அல்லது அதற்குச் சிறிது முந்திய காலத்தில் இருந்தவரென்று டாக்டர் பி. ஸி. ராய் முதலிய ஆதுநிக ஆராய்ச்சிக்காரர்களும் நிர்ணயம் செய்கிறார்கள். இக்கால நிர்ணயம் பிழையற்றதென்பதைத் தெளிவு படுத்த ஆணித்தரமான ஆதரங்கள் உண்டென்பது ஆயுர்வேத நூல்களைப் படிப்பவருக்கு விளங்காமற் போகாது. மூன்றாவது மாத வன் ஸுச்ருத ஸம்ஹிதைக்கு ஓர் உரை எழுதியவர் என்று பத்தாம் நூற்றாண்டின் அல்லது பதினோராம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்த டல்லணாசார்யர் தன் ஸுச்ருத வியாக்யாநத்தில் குறிப்பிடுகிறார். ஆனால் இவர் வெறும் மாதவனேயன்றி மாதவகரன் அல்ல. மேலும் ஸுச்ருதாதி ஸம்ஹிதைகளுக்கு மாதவநிதாநாசிரியர் உரையெழுதிய தாக எங்கும் ஒரு சிறிதும் பிரமாணமும் கிடையாது. நான்காம் 'மாதவன்' "ஆயுர்வேத ப்ரகாசம்" என்கிற இரஸக்கிரந்த கர்த்தா; இவர் 'ரஸமாதவன்' என்று வழங்கப்படுபவர். தன்னை 'உபாத்யாய மாதவன்' என்றும், 'காசிவாஸி' என்றும் தன் கிரந்தத்திலேயே அவர் குறிப்பிடுகிறார். இவர் ஸாரஸ்வதப் பிராம்மணன். பாவப் பிரகாசத்திலிருந்து சில விஷயங்களை எடுத்திருப்பதிலிருந்து பதி னேழு அல்லது பதினெட்டாம் நூற்றாண்டில் இருந்தவர் இந்த ரஸ மாதவன் என்று விளங்குகிறது. ஏனெனில் பாவப்ரகாசம் 1600-ம் வருஷத்தில் இயற்றப்பட்டதென்பது பிரஸித்தம். முன்பு நான் குறிப்பிடாத ஐந்தாவது மாதவனும் ஒருவருண்டு; அவரை 'ப்ருந்த மாத வன்' என்றேனும் 'ப்ருந்தகுண்டன்' என்றும் கூறுவர். இவர் மாதவ

நிதானத்திற் கூறிய வியாதிகள் அனைத்துக்கும், அதிலுள்ள அத்தியாய வரிசைக்கிரம ரீதியிலேயே சிகித்ஸாகிரமங்களை விளக்கி, 'ஸித்தயோகம்' என்கிற சிகித்ஸாக் கிரந்தத்தைத் தான் இயற்றுவதாகக் கூறி, அவ்விதமே கிரந்தத்தை எழுதி முடித்திருப்பது ஆயுர்வேத சாஸ்திரஞ்ஞர்களுக்குத் தெரிந்த விஷயம். 'ப்ருந்த மாதவம்' எனப்படும் இந்த ஸித்தயோகநூலை வங்காளத்துப் பிராசீன வைத்திய வித்வானை சக்ரபாணி என்பவர் 'சக்ரதத்த ஸங்கிரஹம்' என்னும் தன் கிரந்தத்தில் ஸ்பஷ்டமாகக் குறிப்பிடுகிறார். பதினோராம் நூற்றாண்டில் மகததேசத்தி லிருந்த நயபாலராஜனது சமையலறைக்குச் சர்வாதிகாரியாய் அமர்ந்திருந்த நாராயணன் என்பவருடைய புத்திரர் சக்ரபாணி என்பதாகவும், அவ்வரசனுக்குத் தான் வைத்தியரா யிருந்ததாகவும், தன் கிரந்தத்தில் அவரே இரண்டு ச்லோகங்களால் விளக்கி யிருக்கிறார். இவற்றையும், வேறு பல முகாந்தரங்களையுங்கொண்டு சக்ரபாணியினும் ப்ருந்தமாதவன் இரண்டு நூற்றாண்டுகளும், ப்ருந்தமாதவனினும் மாதவகரன் இரண்டு நூற்றாண்டுகளும் முறையே முந்திய காலத்தியவர் என்று தீர்மானிக்கப்படுகிறது. ஆகவே, இங்கு குறிப்பிட்ட எல்லா மாதவர்களினும் இந்நூலாசிரியரான மாதவகரனே முந்தியவரென்றும், முற்றிலும் அவர்களினும் வேறுபட்ட வைத்தியாசிரியரென்றும் தீர்மானிக்கப்படுகிறது. 'ரத்நமாலா' என்கிற திரவ்ய குணவிஷயமான மற்றொரு கிரந்தமும் மாதவகரனால் இயற்றப்பட்டதாகப் பிரஸித்தியுண்டு. இக்கிரந்தத்தின் வியாக்யாதாவான விஜயரக்ஷிதன் "ப்ரதித ஸர்வாயுர்வேதபோத விசுத்தபுத்தி: ஸ்ரீ மாதவகர:" என்கிற வாக்கியத்தினால் புகழ்ந்திருப்பதிலிருந்து, இவ்வாசிரியர் அக்காலத்தில் வைத்தியபரம்பரையிற் பிறந்து, அஸாதாரணமாக வைத்திய சாஸ்திரவல்லவரா யிருந்ததாய் விளங்குகிறது.

## வியாக்கியானம்

மாதவநிதானத்திற்கு மதுகோசமென்றும், ஆதங்கதர்ப்பணமென்றும், பஞ்சிகா என்றும் மூன்று வியாக்கியானங்கள் உண்டு. அவற்றுள் மதுகோச வியாக்கியானம் மிகப் பிரஸித்தமானது. இந்த வியாக்கியானம் ஆரம்ப முதல் அச்மரீநிதானமீறுக விஜயரக்ஷிதன் என்பவரால் இயற்றப்பட்டது. பிறகு பிரமேஹ நிதானம் முதல் மற்றப் பகுதி விஜயரக்ஷிதனது சீடனை ஸ்ரீ கண்டதத்தன் என்பவரால் இயற்றிப் பூர்த்தி செய்யப்பட்டது. இவ்விருவரும் வங்க நாட்டில் வாழ்ந்த வெகு புகழ் பெற்ற வைத்தியப் பிரமுகர்கள். இவர்களது வாக்கியரசனைகளும், பத்தியரசனைகளும் கம்பீரமாகவும், இனிதாகவும் இருக்கும். இவ்விருவரும் பதின்மூன்றும் சதாப்தத்தின் ஆரம்பத்தில் ஜீவித்திருந்தவர்கள். அந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்த வாசஸ்பதி என்பவரால் தனது ஆதங்கதர்ப்பண வியாக்கியானத்தில் மதுகோசவியாக்கியானம் குறிக்கப்படுவதும், மதுகோசவியாக்

கியாநாரம்பத்திலுள்ள பத்தியத்தில் சக்கிரபாணி விஜயரக்ஷிதனுல் குறிக்கப்படுவதும் இக்காலநிர்ணயத்திற்கு ஆதாரங்களாகும். ப்ருந்தமாதவத்திற்கு 'குஸுமாவலி' என்கிற உரையும் ஸ்ரீ கண்டதத்தனுல் இயற்றப்பெற்றதென்பதும் பிரஸித்தம்: மேற்படி வியாக்கியாநங்கள் மூலக்கிரந்தத்தை மொழிபெயர்க்கையில் நமக்கு மிக்க உபயோகமாயிருந்ததால், அவற்றையும் இங்கு குறிப்பிடுவது யுக்தமாயிற்று.

## மொழி பெயர்ப்புகள்

இந்த நிதாநக்கிரந்தம் எட்டாம் நூற்றுண்டு ஆரம்பிக்கு முன்பே ஹாருன், மான்ஸன் (Harun, Monsun) என்ற காலிபா காலத்தில் பாக்டாட் நகரத்தில் அரபிபாஷையில் மொழி பெயர்க்கப்பட்டு, யவன வைத்தியர்களால் உபயோகிக்கப்பட்டு வந்ததென்றும், அப்பொழுதே இது பாரஸீக பாஷையிலும் மொழிபெயர்க்கப்பட்டதென்றும் பிரொபஸர் வில்ஸன் கூறுகிருர். பிற தேசத்தவர் ஆயிரம் வருஷங்களுக்கு முன்பே ஆயுர்வேதக் கிரந்தமான இந்நிதாந நூலின் உபயோகங்களை யுணர்ந்து, தமக்குப் பிரயோஜனமளிக்கும் பிரமாணநூலாக இதைப் பாராட்டி இங்கிருந்து எடுத்துப் போய், சுய பாஷைகளில் எழுதிப் படித்துப் பயனடைந்திருக்கிருர்கள். இந்தியாவிலும் வட நாடுகளில் வங்காளம், கூர்ஜரம், மஹாராஷ்ட்ரம், ஆந்திரம் ஆகிய பாஷைகளிலும் இந் நூல் மொழிபெயர்க்கப்பட்டு அநேக வருடங்களுக்கு முன்பே வெளியாயிருக்கின்றன. இவ்வாறு இந் நூல் பண்டைக்கால முதல் பல வேறு நாட்டினராலும் பெரிதும் பிரயோஜனமுள்ளதாகப் புகழப்பட் டிருந்தும், ஏனைய தேசபாஷைகளிலும் மொழிபொயர்க்கப்பட் டிருந்தும் தமிழ்ப் பாஷையில் மாத்திரம் மொழிபெயர்க்கப்படாமலும், தமிழரால் தெரிந்துகொள்ளப்படாமலும் இருந்து வந்தது. இக்குறையை நீக்கவும், இவ்வித ஆயுர்வேதக் கிரந்தங்களைத் தமிழுலகுக்கு உதவிப் பயன்படுத்தவும் ஈசனருளால் நமக்கு ஆற்றலேற்பட்டது. இவ்வித வடமொழி வைத்திய நூலின் சிறப்பை இம் மொழிபெயர்ப்பு நூலின் உதவியால் எம் தமிழ் நாட்டுச் சகோதரர்களும் உணர்ந்து பயன் பெறுவாராக.

## இதில் ஸாமாந்ய - விசேஷ ரோகங்கள்

இக் கிரந்தத்தில் ஜ்வரநிதாநம் முதல் க்ஷுத்ரரோக மீருகவுள்ள 51 அத்தியாயங்கள் அநேக வகையான ஸாமாந்ய ரோகங்களை விவரிப்பவை. 52-வதான விஸர்ப்பநிதாநம் முதல் ஏனையவையும் விசேஷ ரோகங்களை விவரிக்கின்றன. மேலும் முகரோகம் முதல் சிரோரோகமீருக ஐந்து விஸ்தாரமான அத்தியாயங்கள் ஐத்ரூர்த்வ ரோகங்கள் என்கிற மார்புக்கு மேற்பட்ட எல்லா உட்புற-வெளிப்புற அவயவங்களிற் காணும் பல வகையான அஸாதாரண ரோகங்களை வகுப்பு வகுப்புகளாகப் பிரித்து விவரிப்பவை. அதன் பிறகு வேறு

விசேஷரோகங்களான ஸ்த்ரீகளுக்குக் காணும் வியாதிகளையும், அப்பால் பாலர்களுக்குத் தோன்றும் பிரத்தியேக ரோகங்களையும் தனித் தனி அத்தியாயங்கள் விளக்குகின்றன. இவ்வாறு பண்டைக் காலத்திலேயே எண்ணிறந்த வியாதிகளையும் ஸாமாந்யங்கள் என்றும் விசேஷங்கள் என்றும் பிரத்தியேகமாகப் பரிசீலனைகள் செய்து வைத்தியர்கள் விவரித்துத் தெரிந்து கொண்டிருந்த வகையை இந்நூல் விளக்குகிறது என்பதை வாசகர்கள் பகுத்தறிந்து படிப்பாராக.

## இப்புத்தக வெளியீடு

முன்பு வைத்தியகலாநிதிப் பத்திரிகையோடு இப்புத்தகத்தின் முதற்பதிப்பு ஒருவாறு வெளியிடப்பட்டது. அப்பொழுது வெளியானவை சொற்பப் பிரதிகளே. பிறகு அப்பழைய பதிப்பைச் சீர் திருத்தி வெளியிட சில காலமாக முயற்சி செய்தும், இப்பொழுது தான் அதை நிறைவேற்ற தைவவசமாய் ஒரு சிறிது அநுகூல ஸந் தர்ப்பம் நேர்ந்தது. இரண்டாம் பதிப்பாக இப் புத்தகத்தை அச்சிட ஆரம்பிக்கையில் ராய்பஹதூர் டி. எம். நரஸிம்மாசார்லு அவர்களை அணுகி, இவ்விஷயத்தைப் பிரஸ்தாபிக்க, அவரும் எனது முயற்சி யின் அருமையைக் கருதி மனமுவந்து, ஆங்கில வைத்தியப் பிர முகராயிருந்து காலஞ்சென்ற டாக்டர். எஸ். ரங்காசார்யார் மனைவி ஸ்ரீமதி கமலம்மாளைக்கொண்டு, இந்நூலைப் பிரசுரிக்க உடனே பேருதவி செய்விக்க முன்வந்தார்கள். ஆகவே இம் முகவுரையின் முடிவில் ஸ்ரீ நரஸிம்மாசார்லுவின் அன்பையும், ஸ்ரீ கமலம்மாளின் உதாரகுணத்தையும் பாராட்டக் கடமைபட்டுள்ளேன்.

மதராஸ்
வேப்பேரி 15-12-1936. } மே. துரைஸ்வாமி.

# விஷய அட்டவணை


பக்கம்

ஸாமாந்ய ரோகங்கள்

1. பஞ்சலக்ஷண நிதானம் ... 1
காப்பு
கிரந்தத்தின் பெயரும் நோக்கமும்
பஞ்ச லக்ஷணங்கள்
நிதானம் ... 2
பூர்வரூபம்
ரூபம் ... 3
உபசயம்
அநுபசயம் ... 4
வியாதி ஸாத்மியம்
வியாத்ய ஸாத்மியம்
ஸம்ப்ராப்தி
வியாதிக்குப் பொதுக் காரணங்கள் ... 6
ரோகமே வேறு ரோகத்திற்குக் காரணம் 7
வியாதி ஸங்கரம் முதலிய விசேஷம் ... 8

2. ஜ்வர நிதானம் ... 9
ஜ்வரத்தின் விப்ரக்ருஷ்ட காரணம்
ஜ்வர ஸம்ப்ராப்தி
ஜ்வரத்தின் ஸாமாந்ய லக்ஷணம் ... 10
ஜ்வரத்தின் ஸாமாந்ய-விசேஷ பூர்வ ரூபங்கள் 11
வாத ஜ்வரம்
பித்த ஜ்வரம்
சிலேஷ்ம ஜ்வரம் ... 12
வாத-பித்த ஜ்வரம்
வாத-கபஜ்வரம்
பித்த-கப ஜ்வரம் ... 13
ஸந்நிபாத ஜ்வரத்தில் அஸாத்யாதி நிலைமைகள் ... 15
ஸந்நிபாத ஜ்வரத்தின் காலாவதி ... 16
ஸந்நிபாத-ஜ்வரத்தின் உபத்திரவம்

பக்கம்

அபிந்யாஸ ஜ்வரம்
ஆகந்துக ஜ்வரத்தின் விப்ரக்ருஷ்ட காரணங்கள் ... 17
ஆகந்துக ஜ்வரங்கள்
ஆகந்துக ஜ்வரங்களில் தோஷப் பிரகோபங்கள் ... 18
விஷம ஜ்வர ஸாதாரண ஸம்ப்ராப்தி
ஐந்து விஷமஜ்வரங்களின் விசேஷ ஸம்ப்ராப்தி
ஐந்து விஷம ஜ்வரங்களின் விவரணம் ... 19
ஸந்தத ஜ்வரம்
ஸதத ஜ்வரம்
அந்யேத்யுஷ்க ஜ்வரம்
த்ருதீயக ஜ்வரம்
சதுர்த்தக ஜ்வரம்
விஷம ஜ்வரம் பூதஸம்பந்தத்தினு லுண்டாகும் ... 20
த்ருதீயகஜ்வரம் மூன்று விதம்
சதுர்த்தக ஜ்வரம் இரண்டுவிதம் ... 21
சதுர்த்தக விபர்யய ஜ்வரம்
வாத பலாஸகஜ்வரம்... 22
பிரலேபக ஜ்வரங்கள்
விசேஷ விஷம ஜ்வரங்கள்
தாதுக்களைப்பற்றிய ஜ்வரங்கள் ... 23
பிராக்ருத-வைக்ருத ஜ்வரங்கள் ... 24
பிராக்ருத ஜ்வரங்களின் உற்பத்திக் கிரமம் ... 25
அந்தர் வேக ஜ்வரம்
பஹிர் வேக ஜ்வரம் ... 26

பக்கம்

ஆமஜ்வரம்
பக்குவ நிலைமைக்கு வரும் ஜ்வரம் ... 27
நிராம ஜ்வரம்
ஜ்வரத்தின் ஸாத்யா ஸாத்ய லக்ஷணங்கள்
கம்பீர ஜ்வரம் ... 28
ஜ்வரம் விடுவதன் குறிகள்
ஜ்வரம் நிவாரணமான தன் குறிகள்
3. அதிஸார நிதானம் ... 29
அதிஸார காரணம்
அதிஸார ஸம்ப்ராப்தி ... 30
அதிஸார பூர்வ ரூபம் ... 31
வாதாதி ஸாரம்
பித்தாதிஸாரம்
கபாதிஸாரம்
ஸந்நிபாதாதிஸாரம்
சோகாதிஸாரம்
ஆமாதிஸாரம் ... 32
மலத்தின் ஆம-பக்வலக்ஷணங்கள்
அதிஸாரத்தில் அஸாத்ய லக்ஷணம்
இரக்தாதிஸாரம் ... 33
பிரவாஹிகை
அதிஸார நிவ்ருத்தி லக்ஷணம் ... 34
ஜ்வராதிஸாரம்
4. கிரஹணீ ரோக நிதானம்
கிரஹணீ ரோகத்தின் ஸம்ப்ராப்தி முதலியன
கிரஹணியின் பூர்வரூபம் 35
வாதக் கிரஹணி
பித்தக் கிரஹணி ... 36
கபக்கிரஹணி
ஸந்நிபாதக் கிரஹணி ... 37
ஸங்கிரஹக் கிரஹணி
கிரஹணியில் ஸாம நிரா மாதிகள்
கிரஹணியில் ஸாத்யா ஸாத்யாதிகள்
5. அர்சோ நிதானம்
அர்சஸ் ஆறு விதம்
அர்சஸ் ஸம்ப்ராப்தி ... 38
வாதார்சஸ்ஸின் காரணம்

பக்கம்

பித்தார்சஸ்ஸின் காரணம்
கபார்சஸ்ஸின் காரணம்
த்வந்த்வ-ஸந்நிபாதார் சஸ்ஸுகள் ... 39
வாதார்சஸ்
பித்தார்சஸ் ... 40
கபாசஸ்
ஸந்நிபாதார்சஸ்
இரக்தார்சஸ்ஸின் ஸாமாந்ய லக்ஷணம் ... 41
வாதஜ ரக்தார்சஸ்
கபஜ ரக்தார்சஸ்
அர்சஸ்ஸின் பூர்வ ரூபம்
அர்சஸ்ஸில் உபத்திரவ காரணங்கள்
ஸுகஸாத்ய அர்சஸ் ... 42
கஷ்ட ஸாத்யஅர்சஸ்
அஸாத்ய அர்சஸ்ஸும் உபத்திரவங்களும்
குதத்தைத் தவிர்த்த அவயவங்களில் அர்சஸ் ... 43
6. அக்நிமாந்த்ய - அஜீர்ணாதி நிதாநங்கள்
நான்குவித ஜாடராக்னிகள்
அஜீர்ணமும் அதன் பேதங்களும் ... 44
அஜீர்ணத்தின் காரணம் 45
ஆமாஜீர்ணம் ... 46
விதக்தாஜீர்ணம்
விஷ்டப்தாஜீர்ணம்
இரஸ சேஷா ஜீர்ணம்
அஜீர்ணத்தின் உபத்திரவங்கள்
அமித போஜனமும் அஜீர்ணமும்
அஜீர்ணம் விஷூசி முதலியவற்றிற்குக் காரணம் ... 47
விஷூசி
அலஸகம்
விளம்பிகா ... 48
ஆமதோஷ-விஷூசிகளில் அஸாத்யங்கள்
உணவு நன்கு ஜீர்ணமாவதன் குறிகள்

பக்கம்

7. கிருமி நிதானம்
பலவகையான கிருமிகள்
பாஹ்யக் கிருமிகள்
கிருமிக்குப் பொதுக் காரணம் ... 49
கிருமிக்கு விசேஷ காரணம்
கிருமி யுண்டா யிருப்பதன் பொது லக்ஷணம்
கபஜக் கிருமிகள்
இரக்தஜக் கிருமிகள்
புரீஷஜக் கிருமிகள் ... 50

8. பாண்டுரோக-காமலாதி நிதானங்கள்
பாண்டு ரோகம்
பாண்டு ரோகம் ஐந்து
பாண்டுவின் நிதான-ஸம்ப்ராப்திகள்
பாண்டுவின் பூர்வ ரூபம் ... 51
வாத பாண்டு
பித்த பாண்டு
கபபாண்டு
ஸந்நிபாத பாண்டு
ம்ருத்திகா பாண்டுவின் ஸம்ப்ராப்தியாதிகள்
பாண்டுவின் அஸாத்ய லக்ஷணங்கள் ... 52
காமலா-காமாலை ... 53
காமாலையின் ஸம்ப்ராப்தி-லக்ஷணங்கள்
கும்ப காமலா
காமாலையின் அஸாத்யக் குறிகள்
கும்ப காமலாவின் அஸாத்யக் குறிகள்
ஹலீமகம்

9. இரக்த-பித்த நிதானம் ... 54
இரக்த-பித்த நிதானாதிகள்
இரக்த-பித்தத்தின் பூர்வ ரூபம்
ச்லேஷ்மிக இரக்த-பித்தம்
வாதிக இரக்த-பித்தம்
பைத்திக இரக்த-பித்தம்
த்வந்த்வ-ஸந்நிபாத இரக்த-பித்தங்கள் ... 55

பக்கம்

இரக்த-பித்தம் மூன்று வகை
இரக்த-பித்தத்தில் ஸாத்யா ஸாத்ய நிலைமைகள்
இரக்த-பித்தத்தில் உபத்திரவங்கள்
இரக்த-பித்தத்தின் அஸாத்ய லக்ஷணங்கள்

10. இராஜயக்ஷ்ம-க்ஷதக்ஷீண நிதானம் ... 56
இராஜயக்ஷ்மா
இராஜ யக்ஷ்மாவின் காரணம்
இராஜயக்ஷ்ம ஸம்ப்ராப்தி
இராஜயக்ஷ்ம பூர்வரூபம் 57
இராஜயக்ஷ்மாவின் ஸாமாந்ய லக்ஷணம்
இராஜயக்ஷ்மாவின் பதினோரு விசேஷ லக்ஷணங்கள்
இராஜயக்ஷ்மாவின் அஸாத்ய லக்ஷணங்கள்
இராஜ யக்ஷ்மாவின் ஸாத்யாஸாத்ய நிலைமைகள் ... 58
சோஷம்
ஏழுவித சோஷங்கள்
வியவாய சோஷம்
சோக சோஷம்
ஜரா சோஷம் ... 59
அத்வ சோஷம்
வியாயாம சோஷம்
விரண சோஷம்
க்ஷத க்ஷீணம்
உரக்ஷத நிதானம்
உரக்ஷதத்தின் லக்ஷணாதிகள் ... 60
க்ஷத-க்ஷீணங்களின் விசேஷ லக்ஷணங்கள்
க்ஷத-க்ஷீணத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்

11. காஸநிதானம் ... 61
காஸத்தின் காரணம்
காஸ ஸம்ப்ராப்தி
காஸம் ஐந்து விதம்
காஸ பூர்வ ரூபம் ...

| | பக்கம் |
|---|---|
| வாத காஸம் | |
| பித்த காஸம் | |
| கபகாஸம் ... | 62 |
| க்ஷத காஸம் | |
| க்ஷய காஸம் | |
| க்ஷதகாஸ-க்ஷய காஸங்களின் ஸாத்யா ஸாத்யாதி நிலைமைகள் | |
| 12. ஹிக்கா-ச்வாஸ நிதாநம் | 63 |
| ஹிக்கா-ச்வாஸ காரணம் | |
| ஹிக்கா | |
| ஹிக்கா ஸம்ப்ராப்தி | |
| ஹிக்கா ஐந்துவிதம் ... | 64 |
| ஹிக்கா பூர்வ ரூபம் | |
| அன்னஜ ஹிக்கா | |
| யமள ஹிக்கா | |
| க்ஷுத்ர ஹிக்கா | |
| கம்பீர ஹிக்கா | |
| மஹாஹிக்கா | |
| ஹிக்காவின் அஸாத்ய லக்ஷணங்கள் | |
| ச்வாஸம் ... | 65 |
| ச்வாஸம் ஐந்துவிதம் | |
| ச்வாஸ பூர்வ ரூபம் | |
| ச்வாஸ ஸம்ப்ராப்தி | |
| மஹா ச்வாஸம் | |
| ஊர்த்வ ச்வாஸம் | |
| சிந்ந ச்வாஸம் ... | 66 |
| தமக ச்வாஸம் | |
| ப்ரதமக ச்வாஸம் | |
| க்ஷுத்ர ச்வாஸம் ... | 67 |
| ச்வாஸத்தில் ஸாத்யா ஸாத்யங்கள் | |
| ச்வாஸ ரோகம்கொடியது | |
| 13. ஸ்வரபேத நிதாநம் | |
| ஸ்வரபேத காரண-ஸம்ப்ராப்திகள் | |
| ஸ்வரபேதம் ஆறுவிதம் | |
| வாதஜ ஸ்வரபேதம் ... | 68 |
| பித்தஜ ஸ்வரபேதம் | |
| கபஜ ஸ்வரபேதம் | |
| ஸந்நிபாதஜ ஸ்வரபேதம் | |
| க்ஷதஜ ஸ்வரபேதம் | |
| மேதோஜ ஸ்வரபேதம் | |
| ஸ்வரபேதத்தில் அஸாத்யமானவை | |

| | பக்கம் |
|---|---|
| 14. அரோசக நிதாநம் ... | 69 |
| அரோசகத்தின் காரணம் | |
| தோஷஜா ரோசகங்கள் | |
| ஆகந்துகா ரோசகங்கள் | |
| ஸந்நிபாதஜா ரோசகங்கள் | |
| அரோசகங்களிற் காணும் விசேஷக்குறிகள் | |
| 15. சர்தி நிதாநம் | |
| சர்திகள் ஐந்துவிதம் | |
| சர்தியின் நிதாந-ஸம்ப்ராப்திகள் ... | 70 |
| சர்தியின் பூர்வரூபம் | |
| வாதஜச் சர்தி | |
| பித்தஜச் சர்தி | |
| கபஜச் சர்தி | |
| ஸந்நிபாதஜச் சர்தி ... | 71 |
| ஆகந்துகச் சர்தி | |
| க்ருமிஜச் சர்தியின் விசேஷக்குறிகள் | |
| சர்தியில் ஸாத்யஸாத்யங்கள் | |
| 16. த்ருஷ்ணா நிதாநம் ... | 72 |
| த்ருஷ்ணா ஸம்ப்ராப்தி | |
| த்ருஷ்ணையின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி | |
| வாத த்ருஷ்ணை | |
| பித்த த்ருஷ்ணை | |
| கப த்ருஷ்ணை ... | 73 |
| க்ஷதஜ த்ருஷ்ணை | |
| ஆமதோஷஜ த்ருஷ்ணை | |
| அன்னஜ த்ருஷ்ணை | |
| ஔபஸர்கிக த்ருஷ்ணை | |
| த்ருஷ்ணையில் அஸாத்ய நிலைமைகள் ... | 74 |
| 17. மூர்ச்சாதி நிதாநம் | |
| மூர்ச்சை | |
| மூர்ச்சையின் நிதாந-ஸம்ப்ராப்திகள் | |
| மூர்ச்சையின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி | |
| மூர்ச்சையின் பூர்வரூபம் | |
| வாத மூர்ச்சை ... | 75 |
| பித்த மூர்ச்சை | |
| கப மூர்ச்சை | |
| ஸந்நிபாத மூர்ச்சை | |
| இரக்த மூர்ச்சையின் ஸம்ப்ராப்தி-காரணங்கள் ... | 76 |

பக்கம்

விஷ-மத்ய மூர்ச்சைக ளின் காரணாதிகள்
இரக்த மூர்ச்சை
மத்ய மூர்ச்சை
விஷ மூர்ச்சையின் இலக்ஷணம்
மூர்ச்சாதிகளின் மூல தத்துவங்கள்
பிரமாதிகள் ... 77
தந்த்ரா
நித்திரை
ஸந்நியாஸம்

18. பாநாத்யயாதி நிதாநம்
மதாத்யயத்தின் பொது நிதாநம்
நான்குவித மதங்கள் ... 78
முதல் மதம்
இரண்டாவது மதம் ... 79
மூன்றாவது மதம்
நான்காவது மதம்
மதாத்யயங்கள்
மதாத்யயாதி தீமைகளுக் கான மதுபான வகை கள்
வாத மதாத்யயம் ... 80
பித்த மதாத்யயம்
கப மதாத்யயம்
ஸந்நி பாத மதாத்யம்
பர மதாதிகள்
பரமதம்
பாநா ஜீர்ணம்
பாநவிப்ரமம்
பாநஹதம் ... 81

19. தாஹ நிதாநம்
மத்யஜ தாஹம்
இரக்தஜ தாஹம்
பித்தஜ தாஹம்
த்ருஷ்ணஜ தாஹம் ... 82
க்ஷதஜ தாஹம்
தாதுக்ஷயஜ தாஹம்
மர்மாபிகாதஜ தாஹம்
தாஹரோகத்தில் அஸாத் யக்குறி

20. உந்மாத நிதாநம்
உந்மாதம் ஆறு விதம்
மதம்

பக்கம்

உந்மாதத்தின் கார ணங்கள்
உந்மாதத்தின் ஸம்ப் ராப்தி ... 83
உந்மாதத்தின் ஸாமாந்ய லக்ஷணம்
வாதோந்மாதம்
பித்தோந்மாதம்
கபோந்மாதம்
ஸந்நி பாதோந்மாதம் 84
சோகாதிஜோந் மாதம்
விஷஜோந்மாதம்
உந்மாதத்தில் அஸாத்ய நிலைமை
பூதோந்மாதத்தின் பொதுக் குறிகள்
தேவோந்மாதம்
அஸுரோந்மாதம் ... 85
கந்தர்வோந்மாதம்
யக்ஷோந்மாதம்
பித்ருக் கிரஹோந்மாதம்
நாகோந்மாதம்
இராக்ஷஸோந்மாதம்
பிசாசோந்மாதம் ... 86
உந்மாதத்தில் அஸாத்ய லக்ஷணங்கள்
தேவாதிக் கிரஹங்களின் ஆவேசத்திற்குரிய காலங்கள்

21. அபஸ்மாரம்
அபஸ்மாரத்தின் நிதாந-ஸம்ப்ராப்திகள்
அபஸ்மாரத்தின் பொது லக்ஷணம் ... 87
அபஸ்மாரத்தின் பூர்வ ரூபம்
வாதாபஸ்மாரம்
பித்தாபஸ்மாரம்
கபாபஸ்மாரம்
ஸந்நிபாதாபஸ் மாரமும் அஸாத்யாபஸ் மார மும்
அபஸ்மாரம் கிளம்பு வதற்கான காலங்கள் 88

22. வாத வியாதி நிதாநம்
வாதரோக ஸாமாந்ய நிதாந-ஸம்ப்ராப்திகள்

| | பக்கம் |
|---|---|
| வாத ரோகங்களின் பூர்வ ரூபம் முதலியன ... | 89 |
| வாத ரோகஸாமாந்ய லக்ஷணங்கள் | |
| வாதம் வெவ்வேறு ரோகங்களை யுண்டு பண்ணும் | |
| ஸ்த்தாந பேதங்களை அனுஸரித்த வாத ரோகங்கள் | |
| தாதுக்களைப் பற்றிய வாதங்கள் ... | 90 |
| ஆவரண வாதங்கள் ... | 91 |
| ஆக்ஷேபக வாதங்கள் | |
| ஆக்ஷேபகம் | |
| தண்டாபதாநகம் ... | 92 |
| தநுஸ்தம்பம் | |
| அபிகாதஜ வாதம் ... | 93 |
| அபதாநகத்தின் அஸாத்யத்தன்மை | |
| பக்ஷவாதம் | |
| ஸர்வாங்க வாதம் | |
| வாத ரோகங்களில் வேறு தோஷக் குறிகள் | |
| பக்ஷவாதத்தில் ஸாத்யா ஸாத்யாதிகள் ... | 94 |
| அர்திக வாதம் | |
| அர்திதத்தில் அஸாத்ய லக்ஷணம் | |
| ஹநுக்ரஹம் | |
| மந்யாஸ்தம்பம் ... | 95 |
| ஜிஹ்வாஸ்தம்பம் | |
| ஸிராக்ரஹம் | |
| க்ருத்ரஸீ வாதம் | |
| விச்வாசீ ... | 96 |
| க்ரோஷ்டுக சீர்ஷம் | |
| கஞ்ஜம்-பங்கு | |
| கலாய கஞ்ஜம் | |
| வாத கண்டகம் | |
| பாத தாஹம் ... | 97 |
| பாத ஹர்ஷம் | |
| அம்ஸ சோஷம் | |
| அபபாஹுகம் | |
| மூகன்-மின்மினன் முதலியவர் | |
| தூநி | |
| பிரதி தூநி | |
| ஆத்மாநம் | |
| பிரத்யாத்மாநம் ... | 98 |
| வாதாஷ்டீலா | |
| பிரத்யஷ்டீலா | |
| வஸ்தியைப்பற்றிய வாதம் | |
| வேபது | |
| கல்லீ | |
| ஊர்த்வ வாதம் | |
| வாதரோக ஸங்கிரஹம் | |
| வாதரோகங்களில் ஸாத்யா ஸாத்யங்கள் ... | 99 |
| வாதரோகத்தின் உபத்திரவங்கள் | |
| வாதம் இயற்கை நிலைமையிலிருத்தல் | |
| 23. வாத-ரக்த நிதானம் | |
| வாத-ரக்தத்தின் காரணம் | |
| வாத-ரக்தத்தின் ஸம்ப்ராப்தி ... | 100 |
| வாத-ரக்தத்தின் பூர்வ ரூபம் | |
| வாதாதிகமான வாத-ரக்தம் | |
| இரக்தாதிகமான வாத-ரக்தம் ... | 101 |
| பித்தாதிகமான வாத-ரக்தம் | |
| கபாதிகமான வாதரக்தம் | |
| த்வந்த்வ-ஸந்நிபாத வாத ரக்தங்கள் | |
| வாத-ரக்தத்தின் விசேஷ லக்ஷணம் | |
| வாத ரக்தத்தில் உபத்திரவ-அஸாத்யாதி நிலைமைகள் | |
| 24. ஊருஸ்தம்ப நிதானம் ... | 102 |
| ஊருஸ்தம்பத்தின் நிதாநாதிகள் | |
| ஊருஸ்தம்பம் | |
| ஊருஸ்தம்பத்தின் பூர்வரூபம் ... | 103 |
| ஊருஸ்தம்பத்தின் இலக்ஷணாதிகள் | |

பக்கம்
ஊருஸ்தம்பத்தில் ஸாத்யாஸாத்யாதிகள்
25. ஆமவாத நிதானம்
ஆமவாதத்தின் நிதாநாதிகள்
ஆமவாதத்தின் ஸாமாந்ய லக்ஷணம் ... 104
ஆமவாதத்தில் உபத்திரவங்கள்
ஆமவாதத்தில் வாதாதிகளாலுண்டாகும் விசேஷங்கள் ... 105
ஆமவாதத்தில் ஸாத்யாஸாத்யங்கள்
26. சூல-பரிணாமசூலாதி நிதானங்கள்
சூலை எட்டு விதம்
வாத சூலை
பித்த சூலை ... 106
கப சூலை
ஸந்நிபாத சூலை
ஆம சூலை ... 107
த்வந்த்வதோஷங்களாலான சூலை
சூலையில் ஸாத்யாஸாத்யங்கள்
பரிணாம சூலை
அன்னத்திரவ சூலை ... 108
27. உதாவர்த்தாநாஹ நிதானம்
உதாவர்த்தத்தின் காரணம்
அபானவாத ஜோதாவர்த்தம் ... 109
மலஜோதாவர்த்தம்
மூத்ரஜோதாவர்த்தம்
ஜ்ரும்பாஜோதாவர்த்தம்
அச்ருஜோதாவர்த்தம்
க்ஷவதுஜோதாவர்த்தம்
உத்காரஜோதாவர்த்தம்
வமனஜோதாவர்த்தம் ... 110
சுக்ரஜோதாவர்த்தம்
க்ஷுத்ஜோதாவர்த்தம்
த்ருஷ்ணாஜோதாவர்த்தம்
உச்சுவாஸஜோதாவர்த்தம்
நித்ராஜோதாவர்த்தம்
வாதஜோதாவர்த்தம்
ஆநாஹம் ... 111
28. குல்ம நிதானம்
குல்மத்தின் காரணம்
குல்மக் கிரந்தியின் ஸாமாந்யரூபம்
ஐந்துவித குல்மங்கள்
குல்மத்தின் பூர்வரூபம் ... 112
குல்மத்தின் ஸாமாந்ய லக்ஷணம்
வாத குல்மம்
பித்த குல்மம் ... 113
கப குல்மம்
த்வந்த்வ தோஷஜ குல்மங்கள்
ஸந்நிபாத குல்மம் ... 114
இரக்த குல்மம்
குல்மத்தில் அஸாத்ய லக்ஷணங்கள் ... 115
குல்மத்தில் உபத்திரவங்கள்
29. ஹ்ருத் ரோக நிதானம்
ஹ்ருத்ரோகத்தின் காரணம்
ஹ்ருத்ரோகத்தின் ஸம்ப்ராப்தி
வாத ஹ்ருத்ரோகம்
பித்த ஹ்ருத்ரோகம்
கப ஹ்ருத்ரோகம் ... 116
ஸந்நிபாத ஹ்ருத்ரோகம்
கிருமி ஹ்ருத்ரோகம்
ஹ்ருத்ரோகத்தின் உபத்திரவங்கள்
30. மூத்ரக்ருச்சிர நிதானம்
மூத்ரக்ருச்சிரத்தின் காரணம்
மூத்ரக்ருச்சிர ஸம்ப்ராப்தி ... 117
வாத மூத்ர க்ருச்சிரம்
பித்த மூத்ரக்ருச்சிரம்
கபமூத்திர க்ருச்சிரம்
ஸந்நிபாத மூத்ரக்ருச்சிரம்

பக்கம்

க்ஷதஜ மூத்திர க்ருச்சிரம்
புரீஷஜ மூத்திர க்ருச்சிரம்
அச்மரீஜ மூத்திர க்ருச்சிரம்
சுக்ரஜ மூத்திரக்ருச்சிரம்
அச்மரீ-சர்க்கரைகளுக்குள்ள ஸம்பந்தமும் பேதமும் ... 118

31. மூத்ராகாத நிதாநம்
மூத்ராகாதத்தின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி முதலியது
வாத குண்டலிகா ... 119
அஷ்டீலா
வாதவஸ்தி
மூத்ராதீதம்
மூத்ரஜடரம்
மூத்ரோத்ஸங்கம்
மூத்ர க்ஷயம்
மூத்ரக் கிரந்தி
மூத்ர சுக்ரம் ... 120
உஷ்ணவாதம்
மூத்ரஸாதம்
விட்விகாதம்
வஸ்தி குண்டலம்

32. அச்மரீ நிதாநம் ... 121
அச்மரீ ஸம்ப்ராப்தி
அச்மரீ பூர்வரூபம்
அச்மரியின் ஸாமாந்ய லக்ஷணம்
வாதாச்மரி
பித்தாச்மரி ... 122
கபாச்மரி
அச்மரியும் பாலர்களும்
சுக்ராச்மரி
சர்க்கரா
அச்மரீ-சர்க்கரைகளின் உபத்திரவங்கள்
அச்மரியில் அஸாத்ய லக்ஷணம்

33. பிரமேஹ-பிரமேஹ பிடகா நிதாநம் ... 123
பிரமேஹம்
பிரமேஹ காரணம்
பிரமேஹ ஸம்ப்ராப்தி

பக்கம்

ஸாத்யாஸாத்யப் பிரமேஹங்களும் அவற்றின் ஸங்க்யா ஸம்ப்ராப்தியும்
ஸர்வ மேஹங்களுடையவும் தோஷ-தூஷ்ய ஸங்கிரஹம் ... 124
பிரமேஹ பூர்வரூபம் ... 125
பிரமேஹத்தின் பொது லக்ஷணம்
பிரமேஹ பேதங்கள்
சிலேஷ்ம மேஹங்கள்
உதக மேஹம்
இக்ஷு மேஹம்
ஸாந்த்ர மேஹம்
ஸுரா மேஹம்
பிஷ்ட மேஹம்
சுக்ர மேஹம்
ஸிகதா மேஹம்
சீத மேஹம் ... 126
சனைர் மேஹம்
லாலா மேஹம்
பித்த மேஹங்கள்
க்ஷார மேஹம்
நீல மேஹம்
கால மேஹம்
மாஞ்ஜிஷ்ட மேஹம்
இரக்த மேஹம்
வாத மேஹங்கள்
வஸா மேஹம்
மஜ்ஜா மேஹம்
க்ஷௌத்ர மேஹம்
ஹஸ்தி மேஹம் ... 127
மேஹங்களில் உபத்திரவங்கள்
மேஹங்களில் அஸாத்ய நிலைமை
மது மேஹம்
பிரமேஹ பிடகைகள் ... 128
பத்துவித பிரமேஹ பிடகைகள்
சராவிகா ... 129
ஸர்ஷபிகா
கச்சபிகா
ஜாலிநீ
விநதா
புத்ரிணீ
மஸூரிகா

பக்கம்
விதாரிகா
வித்ரதி
பிடகைகளின் ஆரமப-காரணுதிகள்
பிரமேஹ பிடகைகளில் அஸாத்யங்கள்
34. மேதோரோக நிதாநம் ... 130
மேதோரோகத்தின் காரண ஸம்ப்ராப்திகள்
மேதோரோகம் ... 131
மேதோ ரோகத்தில் பசியதிகரித்தல்
மேதோவிருத்தியாலுண்டாகும் கேடு
அதிஸ்த்தூலன்
35. உதரரோகநிதாநம்
உதரரோகங்களின் காரணங்கள்
உதரரோக ஸம்ப்ராப்தி ... 132
உதரரோகங்களின் பொதுக்குறிகள்
உதரரோகங்கள் எட்டுவிதம்
வாதோதரம் ... 133
பித்தோதரம்
கபோதரம்
ஸந்நிபாதோதரம்
ப்லீஹோதரம் ... 134
யக்ருதுதரம்
பத்தகுதோதரம்
க்ஷதோதரம் (பரிஸ்ராவ்யுதரம்) ... 135
உதகோதரம் (தகோதரம்)
உதகோதரத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள் ... 136
36. சோதநிதாநம் ... 137
சோதையின் ஸம்ப்ராப்தி
சோதை ஒன்பது விதம்
சோதைகளின் பூர்வரூபங்கள்
சோதைகளுக்குப் பொதுக்காரணங்கள்
பக்கம்
சோதைகளின் ஸாமாந்ய லக்ஷணம் ... 138
வாதசோதை
பித்தசோதை
கபசோதை ... 139
த்வந்த்வ-ஸந்நிபாத சோதைகள்
அபிகாதஜ சோதை
விஷஜ சோதை
தோஷஸ்த்தாநங்களும் சோதையுண்டாகுமிடங்களும்
சோதைகளில் ஸாத்யாஸாத்யங்களும் உபத்திரவங்களும் ... 140
37. வ்ருத்திநிதாநம் ... 141
வ்ருத்தியின் ஸம்ப்ராப்தி
ஏழுவித வ்ருத்திகள்
வாதஜ வ்ருத்தி
பித்தஜ வ்ருத்தி
கபஜ வ்ருத்தி
இரக்தஜ வ்ருத்தி
மேதோஜ வ்ருத்தி
மூத்திரஜ வ்ருத்தி ... 142
அந்த்ர வ்ருத்தி
38. களகண்ட-கண்டமாலாதி நிதாநம்
களகண்டம்
களகண்டத்தின் ஸம்ப்ராப்திகள்
வாதஜ களகண்டம் ... 143
சிலேஷ்மஜ களகண்டம்
மேதோஜ களகண்டம்
கண்டமாலா
கண்டமாலையின் லக்ஷணம்
அபசி ... 144
அபசியின் லக்ஷணுதிகள்
கிரந்தி
கிரந்தியின் ஸம்ப்ராப்தி
வாதக் கிரந்தி
பித்தக் கிரந்தி
கபக்கிரந்தி ... 145
மேதோக்கிரந்தி
ஸிராக்கிரந்தி

பக்கம்

அர்புதம்
அர்புத ஸம்ப்ராப்தி
இரக்தார்புதம் ... 146
மாம்ஸார்புதம்
அர்புதத்தில் அஸாத்ய நிலைமைகள்
அத்யர்புதம்
அர்புதங்கள் பாகமடையாக் காரணம்

39. ச்லீபத நிதானம் ... 147
ச்லீபத ஸம்ப்ராப்தி (யானைக்கால்)
வாதஜ ச்லீபதம்
பித்தஜ ச்லீபதம்
சிலேஷ்மஜ ச்லீபதம்
ச்லீபதத்தில் கபத்திற்குப் பிராதான்யம்
ச்லீபதோற்பத்திக்கு ஏற்ற பிரதேசங்கள்
ச்லீபதத்தில் அஸாத்யம்

40. வித்ரதி நிதானம் ... 148
வித்ரதி ஸம்ப்ராப்தி
வாத வித்ரதி
பித்த வித்ரதி
கப வித்ரதி
மூன்று வித்ரதிகளிலும் வெளிவரும் துர்நீர்
ஸந்நிபாத வித்ரதி
அபிகாதஜ வித்ரதி ... 149
இரக்தஜ வித்ரதி
அந்தர் வித்ரதி
அந்தர் வித்ரதிகளிலிருந்து தோஷம் வெளிவரும் மார்க்கம் .. 150
பாஹ்யாந்தர் வித்ரதிகளில் ஸாத்யா ஸாத்ய நிலைமைகள்
நாபியிலுண்டாகும் வித்ரதியிலிருந்து தோஷம் வெளிவரும் வழி
எல்லா வித்ரதிகளுக்கும் ஸாத்யா ஸாத்யாதி குறிகள்

41. விரண சோத நிதானம்... 151
விரண சோதையின் பூர்வ ரூபம்
விரண சோதை ஆறு விதம்

பக்கம்

வாதாதி விரண சோதைகளின் விசேஷம்
ஆமவிரண சோதை
பக்குவமாகும் விரண சோதை
பக்குவ விரண சோதை 152
விரண சோதை பக்குவமடைகையில் த்ரிதோஷ ஸம்பந்தம்
விரண சோதையிலிருந்து சீழை வெளிப் படுத்தாவிடில் கெடுதி ... 153

42. சாரீர விரண நிதானம்
விரணம் இரண்டு விதம்
வாத விரணம்
பித்த விரணம்
கபவிரணம்
இரக்தாதிகளாலான விரணங்கள் ... 154
விரணங்களின் ஸாத்யா ஸாத்யாதி நிலைமைகள்
அசுத்த விரணம்
சுத்த விரணம்
விரண ரோஹணம் ... 155
ரூட விரண லக்ஷணம்
வேறு வியாதிகளால் வருந்து பவருக்கு விரணம் கஷ்ட ஸாத்யம்
அஸாத்ய விரணங்கள்

43. ஸத்யோ விரண நிதானம் 156
ஆறுவித ஸத்யோ விரணங்கள்
சிந்நம்
பிந்நம்
ஆசயங்களும் அவற்றின் பிந்ந லக்ஷணங்களும்
வித்தம் ... 157
க்ஷதம்
பிச்சிதம் ... 158
க்ருஷ்டம்
ஸசல்ய விரணம்
கோஷ்டத்திற் சல்யம் பாய்ந்ததன் லக்ஷணம்
கோஷ்டம் சிதைந்திருப்பதில் அஸாத்ய லக்ஷணம்

பக்கம்

பஞ்சமர்ம க்ஷத லக்ஷணம்
வெவ்வேறு ஸ்த்தானங்களின் வித்த லக்ஷணம் ... 159
ஸ்நாயுவித்த விரணம்
ஸிராவித்த விரணம்
ஸந்திவித்த விரணம்
அஸ்த்திவித்த விரணம்
மர்மவித்த விரணம் ... 160
விரணோபத்திரவங்கள்

44. பக்நநிதாநம்
பக்நத்தில் இரண்டு பொது பேதம்
ஸந்தி பக்நம்
உத்பிஷ்டம்
விச்லிஷ்டம் ... 161
விவர்திதம்
திர்யக்கதம்
ஊர்த்வ க்ஷிப்தம்
அதக்ஷிப்தம்
காண்டபக்நம்
அஸ்த்திபக்நத்தில் கஷ்டஸாத்யாதிகள் ... 162
பலவித எலும்புக் குண்டாகும் கோளாறுகள் ... 163

45. நாடிவிரணநிதாநம்
நாடிவிரண நிதாந-ஸம்ப்ராப்திகள்
நாடிவிரணம் ஐந்து விதம் ... 164
வாதஜ நாடிவிரணம்
பித்தஜ நாடிவிரணம்
கபஜ நாடிவிரணம்
ஸந்நிபாதஜ நாடிவிரணம்
சல்யஜ நாடிவிரணம் ... 165
நாடிவிரணத்தில் ஸாயாஸாத்யாதிகள்

46. பகந்தரநிதாநம்
பகந்தர முண்டாகும் வகை
சதபோநகம்
உஷ்ட்ரக்ரீவம் ... 166
பரிஸ்ராவி
சம்பூகாவர்த்தம்
உந்மார்கி
பகந்தரத்தில் அஸாத்யாதி நிலைமைகள் ... 167

47. உபதம்சநிதாநம்
உபதம்சத்தின் காரணங்கள்
வாதஜோபதம்சம்
பித்தஜோபதம்சம்
இரக்தஜோபதம்சம்
கபஜோபதம்சம்
ஸந்நிபாதஜோபதம்சம்
உபதம்சத்தில் அஸாத்யலக்ஷணாதிகள்
லிங்கவர்த்தி ... 168

48. சூகதோஷநிதாநம்
சூகரோகத்தின் காரணம்
ஸர்ஷபிகா ... 169
அஷ்டீலிகா
கிரந்திதம்
கும்பிகா
அலஜி
ம்ருதிதம்
ஸம்மூடபிடகா
அதிமந்தம்
புஷ்கரிகா ... 170
ஸ்பர்சஹாநி
உத்தமா
சதபோநகம்
த்வக்பாகம்
சோணிதார்புதம்
மாம்ஸார்புதம்
மாம்ஸபாகம்
வித்ரதி
திலகாலகம் ... 171
சூகதோஷங்களில் அஸாத்யமானவை

49. குஷ்டரோகநிதாநம்
குஷ்டத்தின் காரணங்கள்
தோஷபேதத்தினால் குஷ்டம் ஏழு விதம் .. 172
குஷ்டங்களின் பூர்வ ரூபங்கள்
மஹா குஷ்டங்கள் ... 173
காபாலம்
ஔதும்பரம்
மண்டல குஷ்டம்

பக்கம்

ருஷ்ய ஜிஹ்வம்
புண்டரீகம்
ஸித்மம்
காகணம்
க்ஷுத்ர குஷ்டங்கள் ... 174
ஏக குஷ்டம்
சர்ம குஷ்டம்
கிடிமம்
வைபாதிகம்
அலஸகம்
தத்ருமண்டலம்
சர்மதளம்
பாமா
கச்சு
விஸ்ப் போடகங்கள் ... 175
சதாரு
விசர்ச்சிகா
குஷ்டத்தில் தோஷ லக்ஷணங்கள்
தாதுக்களைப்பற்றிய குஷ்டங்கள்
குஷ்டத்தில்ஸாத்யா ஸாத்யாதிகள் ... 176
பல குஷ்டங்களிலும் பிரதானதோஷம் ... 177
ஸப்த மஹா குஷ்டங்கள்
ச்வித்ரம் அல்லது கிலாஸம் (வெண் குஷ்டம்)
கிலாஸம்
கிலாஸத்தில் ஸாத்யா ஸாத்யங்கள் ... 178
குஷ்டம் முதலியவை ஸாங்க்ராமிக ரோகங்கள் ... 179

50. உதர்த-கோட நிதானம்
உதர்த ஸம்ப்ராப்தி
உதர்த பூர்வரூபம்
உதர்தம்
கோடம் ... 180

51. அம்ல-பித்த நிதானம்
அம்ல-பித்தத்தின் காரணம்
அம்ல-பித்தத்தின் பொதுலக்ஷணம் ... 181
அதோகதாம்ல-பித்தம்

பக்கம்

ஊர்த்வகதாம்ல-பித்தம்
அம்ல-பித்தத்தில் ஸாத்யாஸாத்யாதிகள்
அம்ல-பித்தத்தில் மூன்று விசேஷ த்வந்த்வ லக்ஷணங்கள் ... 182
கப-பித்தங்கள் ஸமமாய் பிரகோபித்த அம்ல-பித்தம்

சர்ம ரோகங்கள்

52. விஸர்ப்ப நிதானம்
விஸர்ப்பத்தின் காரணம்
விஸர்ப்பம் ஏழு விதம் ... 183
விஸர்ப்பத்திற் கோளாறடையும் தோஷ-தாதுக்கள்
வாதவிஸர்ப்பம்
பித்தவிஸர்ப்பம்
கபவிஸர்ப்பம் ... 184
ஸந்நிபாத விஸர்ப்பம்
அக்னி விஸர்ப்பம்
கிரந்தி விஸர்ப்பம்
கர்தம விஸர்ப்பம் ... 185
ஆகந்துக விஸர்ப்பம்
விஸர்ப்பத்தின் உபத்திரவங்கள்
விஸர்ப்பங்களில் ஸாத்யா ஸாத்யங்கள் ... 186

53. விஸ்போட நிதானம்
விஸ்போடத்தின் காரணாதிகள்
விஸ்போடத்தின் பொது லக்ஷணம்
வாத விஸ்போடம் ... 187
பித்த விஸ்போடம்
கப விஸ்போடம்
த்வந்த்வ தோஷஜ விஸ்போடம்
ஸந்நிபாதவிஸ் போடம்
இரத்த விஸ்போடம்
விஸ் போடங்களில் ஸாத்யா ஸாத்யங்கள் 188

பக்கம்

54. மஸூரிகா நிதானம்
மஸூரிகையின் காரணம்
மஸூரிகையின் பூர்வ ரூபம்
வாத மஸூரிகை
பித்த மஸூரிகை
இரத்த மஸூரிகை ... 189
சிலேஷ்ம மஸூரிகை
ஸந்நிபாத மஸூரிகை
சர்மதள மஸூரிகை
ரோமாந்திக மஸூரிகை
தாதுக்களைப் பற்றிய மஸூரிகைகள்
தாதுக்களைப் பற்றிய மஸூரிகையில் தோஷ ஸம்பந்தம் ... 190
மஸூரிகைகளில் ஸாத்யா ஸாத்யாதிகள்
மஸூரிகையில் உபத்திரவம் ... 191
55. க்ஷுத்ரரோக நிதானம்
அஜகல்லிகா
யவப்ரக்யா ... 192
அந்த்ராலஜி
விவ்ருதா
கச்சபிகா
வல்மீகம்
இந்திர வித்தா
கர்தபிகா ... 193
பாஷாண கர்தபம்
பநஸிகா
ஜால கர்தபம்
இரி வேல்லிகா
கக்ஷா
கந்தமாலா
அக்னி ரோஹிணீ ... 194
சிப்பம்
குநகம்
அநுசயி
விதாரிகா
சர்க்கரார்புதம்
பாததாரி ... 195
கதரம்
அலஸம்
இந்திரலுப்தம்
தாருணகம் ... 196
அரும்ஷிகா

பக்கம்

பலிதம்
யுவாநபிடகா
பத்மிநீ கண்டகம் ... 197
ஜதுமணி
மஷகம்
திலகாலகம்
நியச்சம்
வியங்கம் ... 198
நீலிகா
பரிவர்த்திகா
அவபாடிகா
நிருத்தப்பிரகசம்
ஸந்நிருத்த குதம் ... 199
அஹிபூதநம்
வ்ருஷணகச்சு
குதப்ரம்சம் ... 200
வராஹதம்ஷ்ட்ரா
ஜத்ரூர்த்வரோகங்கள்
56. முகரோக நிதானம்
முகரோகங்களுக்குப் பொதுக்காரணம்
உதடுகளைப் பற்றிய ரோகங்கள்
வாதஜ ஓஷ்டரோகம்
பித்தஜ ஓஷ்டரோகம்
கபஜ ஓஷ்டரோகம்
ஸந்நிபாதஜ ஓஷ்டரோகம் ... 201
இரக்தஜ ஓஷ்டரோகம்
மாம்ஸஜ ஓஷ்டரோகம்
மேதோஜ-ஓஷ்டரோகம்
அபிகாதஜ-ஓஷ்டரோகம்
கிரதிதோஷ்டம்
தந்தமூலங்களைப் பற்றிய ரோகங்கள்
சீதாதம்
தந்தபுப்புடகம்
தந்தவேஷ்டம் ... 202
ஸௌஷிரம்
மஹாஸௌஷிரம்
பரிதரம்
உபகுசம்
வைதர்ப்பம்
கலிவர்த்தநம்
கராளம்

பக்கம்

அதிமாம்ஸகம்
தந்தங்களைப் பற்றிய ரோகங்கள்
தாளனம்
கிருமிதந்தகம் ... 203
பஞ்ஜனகம்
தந்தஹர்ஷம்
தந்தசர்க்கரை
காலிகா
ச்யாவதந்தம்
தந்தவித்ரதி
ஜிஹ்வா (நாக்கு) ரோகங்கள்
அலாஸம் ... 204
உபஜிஹ்வா
தாலு (உள்தவடை) ரோகங்கள்
கண்ட சுண்டீ
துண்டிகேரி
அத்ருஷம்
கச்சபம்
தால்வர்புதம்
மாம்ஸஸங்காதம் ... 205
புப்புடம்
தாலுசோஷம்
தாலு பாகம்
கள (தொண்டை) ரோகங்கள்
ரோஹிணி
கண்ட சாலூகம் ... 206
அதிஜிஹ்வம்
வலயம்
பலாஸம்
ஏகப்ருந்தம்
ப்ருந்தம்
சதக்நி ... 207
களாயு
களவித்ரதி
களௌகம்
ஸ்வரக்நம்
மாம்ஸதானம்
விதாரீ ... 208
முகத்திற்குள் ஸர்வஸர வியாதிகள்
முகரோகங்களில் அஸாத்யங்கள்

பக்கம்

57. கர்ணரோக நிதானம்
கர்ணத்தின் உட்புற வியாதிகள்
கர்ணசூலை
கர்ணநாதம் ... 209
பாதிர்யம்
கர்ணக்ஷ்வேடம்
கர்ணஸ்ராவம்
கர்ண கண்டூ
கர்ணகூதம்
கர்ணப் பிரதீநாஹம்
கிருமிகர்ணகம் ... 210
கிடகர்ணம்
கர்ணவித்ரதி
கர்ணபாகம்
பூதிகர்ணம்
கர்ண சோதை முதவியன ... 211
கர்ண ரோகங்களில் பொதுவான தோஷ லக்ஷணங்கள்
கர்ணபாளியைப் பற்றிய ரோகங்கள்
பரி போடகம்
உத்பாதம்
உந்மந்தகம் ... 212
துக்கவர்த்தநம்
பரிலேஹி
58. நாஸாரோக நிதானம்
பீநஸம்
பூதிநஸ்யம்
நாஸாபாகம் ... 213
பூயரக்தம்
க்ஷவது
ப்ரம்சது
தீப்தம்
பிரதீநாஹம்
நாஸாஸ்ராவம்
நாஸாசோஷம் ... 214
பீநஸத்தில் ஆம-பக்வ லக்ஷணங்கள்
பிரதிச்யாய ரோகங்கள்
பிரதிச்யாய நிதாந-ஸம்ப்ராப்திகள்
பிரதிச்யாயத்தின் பூர்வரூபம்
வாதப் பிரதிச்யாயம் ... 215
பித்தப் பிரதிச்யாயம்

பக்கம்

கபப் பிரதிச்யாயம்
ஸந்நிபாதப் பிரதிச்யாயம்
துஷ்டப் பிரதிச்யாயம் ... 216
இரக்தப் பிரதிச்யாயம்
அஸாத்ய துஷ்டப்பிரதிச்யாயம்
பீநஸத்தின் உபத்திரவங்கள்
வேறு நாஸா ரோகங்கள்
59. நேத்திர ரோக நிதாநம் ... 217
நேத்திரரோகங்களின் பொதுக்காரணங்கள்
நேத்திரத்தில் ஸகல பாகங்களையும் பற்றிய வியாதிகள் ... 218
அபிஷ்யந்தங்கள் நான்கு
அதிமந்தம்
நேத்திர ரோகங்களில் ஆம-பக்குவ நிலைமைகள் ... 219
நேத்திர பாகம்
ஹதாதிமந்தம்
வாத பர்யயம் ... 220
சுஷ்காக்ஷிபாகம்
அந்யதோவாதம்
அம்லாத்யுஷிதம்
ஸிரோத்பாதம்
ஸிராஹர்ஷம்
கருவிழியைப்பற்றிய ரோகங்கள்
சுக்லம்
அக்ஷிபாகாத்யயம் 221
திருஷ்டியைப்பற்றிய வியாதிகள் 222
முதற்படலத்தைப்பற்றிய வியாதி
இரண்டாம் படலத்தைப் பற்றிய வியாதி
மூன்றும் படலத்தைப் பற்றிய வியாதி ... 223
நான்காம் படலத்தைப் பற்றிய வியாதி

பக்கம்

திமிர ரோகங்களில் வாதாதி லக்ஷணங்கள் ... 224
பரிம்லாயி (திமிரம்) ... 225
லிங்கநாசம்
விதக்த்த திருஷ்டி முதலியன ... 226
நக்தாந்த்யம்
தூமதர்சி
ஹ்ரஸ்வ ஜாட்யம்
நகுலாந்த்யம் ... 227
கம்பீரிகா
ஆகந்துக லிங்கநாசங்கள்
சுக்லபாகத்தைப்பற்றிய ரோகங்கள்
பிரஸ்தார்யர்மம்
சுக்லார்மம் ... 228
இரக்தார்மம்
அதிமாம்ஸார்மம்
ஸ்நாய் வர்மம்
சுக்தி
அர்ஜுநம்
பிஷ்டகம்
ஸிராஜபிடகை
பலாஸக்கிரதிதம்
பூயாலஸம் ... 229
சிலேஷ்மோபநாஹம்
நாடீரோகங்கள் முதலியன
பூயஸ்ராவம்
சிலேஷ்மஸ்ராவம்
இரக்தஸ்ராவம்
பித்தஸ்ராவம் ... 230
அலஜி
கிருமிக்கிரந்தி
வர்த்ம ரோகங்கள்
உத்ஸங்கபிடகா
கும்பீகைகள்
போதகி
வர்த்ம சர்க்கரா
அர்சோ வர்த்மா ... 231
சுஷ்கார்சஸ்
அஞ்ஜநநாமிகா
பஹுலவர்த்மா
க்லிஷ்ட வர்த்மா
வர்த்ம கர்தமம்
ச்யாவ வர்த்மா
பிரக்லிந்நவர்த்மா

பக்கம்

அக்லிந்நவர்த்மா ... 232
வாதஹதவர்த்மா
அர்புதம்
நிமேஷம்
சோணிதார்சஸ்
நகணம்
பிஸவர்த்மா
குஞ்சநம்
பக்ஷ்ம கோபம் ... 233
பக்ஷ்ம சாதம்
நேத்திரரோகஸங்க்யை

60. சிரோரோக நிதாநம் ... 234
சிரோரோகங்களின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி
தோஷஜசிரோ ரோகங்கள்
விசேஷ சிரோ ரோகங்கள்
இரத்த சிரோரோகம்
க்ஷயஜ சிரோரோகம் ... 235
கிருமி சிரோரோகம்
ஸூர்யாவர்த்தம்
அநந்தவாதம் ... 236
அர்த்தாவபேதம்
சங்ககம்

ஸ்த்ரீரோகங்கள்

61. அஸ்ருக்தர நிதாநம்
அஸ்ருக்தரத்தின் காரணாதிகள்
கபாஸ்ருக்தரம் ... 237
பித்தாஸ்ருக்தரம்
வாதாஸ்ருக்தரம்
ஸந்நிபாதாஸ்ருக்தரம்
அஸாத்யமான அஸ்ருக்தரங்கள்
சுத்தார்த்தவலக்ஷணம்

62. யோநிவியாபந் நிதாநம் ... 238
யோநிவியாபத்தின் பொதுக் காரணங்கள்
வாதஜ யோநி ரோகங்கள்:—
உதாவர்த்த யோநி
வந்த்யா
விப்லுதா
பரிப்லுதா
வாதலா

பக்கம்

பித்தஜ யோநி ரோகங்கள்:—
இரக்தக்ஷயா
வாமிநீ
பிரஸ்ரம்ஸிநீ
புத்திரக்நி
பித்தலா
சிலேஷ்மஜயோநி ரோகங்கள்,— ... 239
அத்யாநந்தா
கர்ணிநீ
அசரணா
அதிசரணா
சிலேஷ்மஜா
ஸந்நிபாதஜ யோநி ரோகங்கள்:—
ஷண்டீ
அண்டலீ
விவ்ருதா
ஸூசிவக்த்ரா
ஸந்நிபாதஜா

63. யோநிகந்த நிதாநம்
யோநிகந்தத்தின் காரணாதிகள்
வாதஜ யோநிகந்தம்
பித்தஜ யோநிகந்தம் 240
சிலேஷ்மஜ யோநிகந்தம்
ஸந்நிபாதஜ யோநிகந்தம்

64. மூடகர்ப்ப நிதாநம்
மூட கர்ப்பத்தின் பொதுக் காரணங்கள்
கர்ப்ப வித்திரவம்
கர்ப்ப பாதம்
அகாலப் பிரஸவம்
மூடகர்ப்பம் ... 241
மூடகர்ப்பத்தில் நான்கு வகைகள்
பீஜகம்
கீலகம்
பிரதிகுரம்
பீஜகம் ... 242
பரிகம்
மூடகர்ப்பத்தில் அபாயக் குறிகள்
சிசு கருப்பையில் இறந்தல்
கர்ப்பிணிக்கு உண்டாகும் அஸாத்யக் கோளாறுகள்

பக்கம்

65. ஸூதிகா ரோக நிதானம்
ஸூதிகா ரோகம் ... 243
ஸூதிகா ரோகத்தின் காரணங்கள்

66. ஸ்தன ரோக நிதானம்
ஸ்தன ரோக ஸம்ப்ராப்தி
ஸ்தன ரோகங்கள் ஐந்து
பால ரோகங்கள்

67. ஸ்தந்யதோஷ நிதானம் ... 244
ஸ்தந்ய தோஷத்தின் காரணங்கள்
ஸ்தந்ய தோஷங்கள்
சுத்த ஸ்தந்யம்

68. பால ரோக நிதானம்
துஷ்டஸ்தந்யபானத்தினுலான பால ரோகங்கள்
சிசுவின் வேதனைகளை அறியுமுபாயம் ... 245
குகூணகம்
பாரிகர்ப்பிகம்
தாலு கண்டகம்
மஹாபத்மம் முதலியது
அஜகல்லிகா ... 246
அஹிபூதநம்
பாலருக்குண்டாகும் இதர ரோகங்கள்
பாலக்கிரஹ பீடைகள்
ஸ்கந்தாபஸ்மாரம்
சகுநிக் கிரஹம் ... 247
ரேவதீக்கிரஹம்
பூதநாக் கிரஹம்
சீதபூதனை
முகமுண்டதிகாக் கிரஹம்
நைகமேயக் கிரஹம்
விஷக் கோளாறுகள்

69. விஷ நிதானம்
விஷம் பொதுவாக இரண்டு விதம்
ஜங்கம விஷங்களின் பொதுக் குறிகள் ... 248
ஸ்த்தாவர விஷங்களின் பொதுக்குறிகள்

பக்கம்

விஷமிட்டவனைக் கண்டறியுமுபாயங்கள்
ஸ்த்தாவர விஷங்களின் விசேஷக்குறிகள்
திக்த்தவிஷலக்ஷணம் ... 249
விஷபானக் கோளாறுகள்
ஜங்கம விஷங்கள்
ஸர்ப்ப ஜாதிகள்
ஸர்ப்ப ஜாதிக்கடிகள் ... 250
ஸர்ப்பக்கடியில்அஸாத்யாதி நிலைமைகள்
தூஷீவிஷங்கள் ... 251
தூஷீவிஷமும் அதன் குணங்களும்
தூஷீவிஷக்கோளாறுகளின் பூர்வரூபம்
தூஷீவிஷக் கோளாறின் பொதுக்குறிகள்
தூஷீவிஷ பரிபாஷை ... 252
தூஷீவிஷத்தில் ஸாத்யாஸாத்யாதிகள்
ஸம்யோகஜ விஷம்
லூதாவும் லூதாவிஷமும்
சிலந்திக்கடி-அஸாத்யக்கோளாறுகள் ... 253
ஆகு தூஷீவிஷம்
மூஷிக தம்சம் ... 254
க்ருகலாஸ தம்சம்
வ்ருச்சிகதம்சம்
வேறு விஷக்கடிகள்:
கணபதம்சம்
நிர்விஷ லக்ஷணம் ... 255
ரோக பரீக்ஷைக்கு மூன்று உபாயங்கள்

70. விஷயாநுக்ரமணிகா
இக்கிரந்தத்தில் விவரிக்த ரோகநிதாந ஸங்கிரஹம்
ஆசிரியரின் முடிவுரை 256

அநுபந்தம்
ஸ்நாயுக நிதாநம்
ஸ்நாயுக நிதாந-ஸம்ப்ராப்திகள்

## மாதவ நிதாநம்

| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| ஸ்நாயுகத்தில் உபத்திரவம் | ... 257 | பிரங்க ரோகத்தில் உபத்திரவம் | ... 258 |
| ஸ்நாயுகத்தில் வாதாதி தோஷ லக்ஷணங்கள் | | பிரங்க ரோகத்தில் ஸாத்யா ஸாத்யங்கள் | |
| பிரங்கரோக நிதாநம் | | ஸோமரோக நிதாநம் | |
| பிரங்கரோக முற்பத்தியாகும் வகை | | ஸோமரோக நிதாந ஸம்ப்ராப்திகள் | |
| பிரங்க ரோகம் மூன்று விதம் | | ஸோம ரோகம் | |
| | | ஸோம ரோக காரணம் | |
| | | விஷய அகராதி | ... 259 |

---

# பிழை திருத்தம்

அடியிற் கண்ட அச்சுப் பிழைகளைத் திருத்திப் படிக்கவும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 7 | வியாத் ஸாத்மியம் | வியாத்யஸாத்மியம் |
| 38 | 4 | மேதஸ்ஸூகனே | மேதஸ்ஸூகனே |
| 49 | 32 | ஸூகந்தம் என்பதற்குப் பிறகு 'ஹ்ருதயாதம்' என்று சேர்க்கவும். | |
| 70 | 5 | திதாந | நிதாந |
| 95 | 38 | சிரோக்ரஹம் | சிராக்ரஹம் |
| 134 | 36 | நூஷீ | தூஷீ |
| 142 | 23 | அற்புத | அர்புத |
| 150 | 38 | க்லோம | க்லோமா |
| 192 | 9 | வீவ்ருதா | விவ்ருதா |
| 195 | 33 | சர்க்சரா | சர்க்கரா |
| 219 | 20 | அது சோதையின்றி யுண்டான | அது சோதையுடன் உண்டான |
| 224 | 8 | 29—4½ | 29—40½ |

ஸ்ரீ

# மாதவ நிதாநம்

என்னும்

# ரோக விநிச்சயம்

## 1. பஞ்ச லக்ஷண நிதாநம்.*

காப்பு:—உலகத்தின் ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரங்களுக்குக் காரணமாய், ஸ்வர்க்கம் - மோக்ஷம் இவற்றை அடைவதற்கு வாயிலாய், மூவுலகங்களுக்கும் முக்கிய இரக்ஷகனுயுமுள்ள சிவபெருமானைப் பணிந்து இக்கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது. 1.

கிரந்தத்தின் பெயரும் நோக்கமும்:—அறிவிற் சிறந்த வைத்தியர்களுடைய அநுமதியின்பேரில், பல முனிவரது வசநங்களைப் பிரமாணமாகக் கொண்டு, அக்கிரந்தங்களிலுள்ள விஷயங்களைச் சங்கிரஹித்து, ரோக விநிச்சயம்[1] என்கிற இந்நூல் இயற்றப்படுகிறது; இதில் உபத்திரவம், அரிஷ்டம், நிதாநம், லிங்கம்[2] என்கிற விஷயங்களின் விவரணம் அடங்கியிருக்கும். அநேகவித கிரந்தங்களைக் கிடைக்கப் பெருத, பிரபலமான நூல்களைப் படித்தறியும் திறமையில்லாத வைத்தியர்கள், வியாதி நிலைமையை எளிதிற் கற்றறிய இக்கிரந்தமே ஏற்ற கருவியாயிருக்கும். 2, 3.

பஞ்ச லக்ஷணங்கள்:—நிதாநம், பூர்வரூபம், ரூபம், உபசயம், ஸம்ப்ராப்தி என்கிற இவை வியாதிகளை அறிவதற்கான ஐந்து உபாயங்களாம்.[3] 4.

---

* நிதாநம் (அல்லது காரணம்), பூர்வரூபம், ரூபம், உபசயம், ஸம்ப்ராப்தி என்கிற பஞ்சலக்ஷணங்களை விவரிக்கும் ப்ரகரணம் "பஞ்சலக்ஷண நிதாநம்." இங்கு ஒவ்வொரு அத்தியாயம் அல்லது பகுதியும் நிதாநம் என்கிற பெயரால் அழைக்கப்படும்.

1. மாதவகரன் என்கிற ஆசிரியரால் இயற்றப்பட்ட நிதாநக் கிரந்தம் மாதவ நிதாநம் என்று கூறப்படுகிறது; ஆனல் இதற்கு ஆசிரியர் இட்ட பெயர் ரோகவிநிச்சயம் என்பதே.

2. ஒரு வியாதியை ஆதாரமாகக் கொண்டு உண்டாகும் மற்ரெரு வியாதி 'உபத்திரவம்'. மரணஸூசகமான குறி 'அரிஷ்டம்'. வியாதிக்குக் காரணம் 'நிதாநம்'. வியாதியின் குறி 'லிங்கம்' அல்லது 'இலக்ஷணம்'. இவற்றின் மற்ற விவரணம் பின்னல் வரும்.

3. நிதாநம் முதலிய ஐந்து அம்சங்களும் தனித்தனியாகவும், ஒருமிக்கவும் வியாதி நிலைமைகளை அறிவிப்பவை. இவை பொது

**நிதானம்:—** நிமித்தம், ஹேது, ஆயதனம், பிரத்யயம், உத்தானம் காரணம், நிதானம் இவற்றை வியாதிக்கு மூலகாரண மென்பதைக் குறிப்பிடும் பர்யாய சப்தங்களாக வழங்குவர்.[1] 4½.

**பூர்வரூபம்:—**(1) பூர்வரூபம் அல்லது பிராக்ரூபம் என்றால் முத குறி; ஒரு வியாதி, குறிப்பிட்ட எத்தோஷ ஸம்பந்தமான குறியை யும் பெருமலிருக்கையிலேயே எந்த இலக்ஷணத்தினுல் அது ஒரு வாறு முன்னதாய் அறியப்படுகிறதோ அது பூர்வரூபம். (2) உண் டாகப்போகிற வியாதியின் குறி சொற்பமாயிருக்குமாகையால்

---

வாகப் "பஞ்ச லக்ஷணங்கள்" எனப் படுகின்றன. மேலும் ஹேது லக்ஷணுதிகளை நிர்தேசம் செய்வதால், அல்லது அவற்றை நிச்சயிப் பதற்கு ஸாதகமாயிருப்பதால் இவ்வைந்தும் "நிதானம்" என்கிற பொதுப்பெயராலும் வழங்கப்படும். ஆகவே இவ்விஷயங்களை விவரிக்கும் நூலும் "நிதானக் கிரந்தம்" எனப்படும். நிதானம் என் பதற்கு மூலகாரணம் என்பது பொருள். அதன்படி வியாதிக்குக் காரணம் என்கிற பொருளிலும் இது முக்கியமாக விவஹரிக்கப் படும். இவற்றிற்குப் "பஞ்ச நிதானம்" என்றும் பெயருண்டு.

1. வாதாதி தோஷங்களைக் கோளாறடையச் செய்து வியாதி யின் உற்பத்திக்கு ஆதாரமா யிருப்பது நிதானம். அல்லது வாதாதி தோஷங்களே நிதானமா யிருப்பதுண்டு. நிதானம் நான்கு விதமாகக் கருதப்படும்:—(1) ஸந்நிக்ருஷ்ட நிதானம்:—ஸமீபித்த காரணம் எனப் பொருள்; ஸாதாரணமாய் பகல், இரவு, போஜனம் முதலியவை தோஷப் பிரகோபத்திற்கு உடனே காரணங்களாகின்றன; சயா வஸ்த்தை முதலியவைகளை இக்காரணங்கள் எதிர் பார்ப்பதில்லை; ஆகவே இவை ஸந்நிக்ருஷ்ட காரணங்கள். (2) விப்ரக்ருஷ்ட நிதானம்:—தூரத்திலுள்ள காரணம் எனப் பொருள்; கிரீஷ்மருதுவில் சயா வஸ்த்தையை அடைகிற வாயு, பிறகு வர்ஷருதுவில் பிரகோபித்து வியாதியையுண்டுபண்ணும்; இங்கே வாததோஷம் வர்ஷருதுவில் வியாதியுண்டாக்குவதற் கேற்றவாறு கிரீஷ்மருதுவில் அதற்குச் சயாவஸ்த்தை ரூபமான கோளாறை யுண்டாக்கக் காரணம் ஏற்படு கிறதாகையால் இது விப்ரக்ருஷ்ட காரணமாகும். (3) வியபிசாரி நிதானம்:—வியாதியை நன்கு உண்டு பண்ணுவதற்குப் போதிய சக்தியில்லாத காரணம்; அல்லது வியாதியை எளிதில் உண்டாக்க அனுகூலமான துர்பல தாதுக்களுடன் கூடிய தேஹத்திற் சேராது, பலமான தேஹத்திற் சேரும் ஸாதாரண வியாதிகாரணம் என்றும் சொல்வர். (4) பிரதான நிதானம்:—பலமான காரணம்; விஷம்முதலி யன இதற்கு திருஷ்டாந்தம். வேறு வகையில் நிதானத்தை மூன்று விதமாகவும் பகுக்கலாம். (1) தோஷப் பிரகோபஹேது:—தோஷங் களின் சய - ப்ரகோப - ப்ரசமங்களுக்குக் காரணமாய் அந்தந்த ருதுவில் ஏற்படும் மதுராதி இரஸம் நிரம்பிய வஸ்து முதலியது. (2) வியாதிப் பிரகோபஹேது :— தோஷக் கோளாறை எதிர்பாராது நேராக ரோகத்தை உண்டுபண்ணும் காரணம். மண் உண்பது நேரா கப் பாண்டுரோகத்திற்குக் காரணமாகும் என்பது. (3) உபயப்பிர கோபஹேது:—விதக்த்தமான (காந்தல்) உணவு முதலியதை யுண்ப வனுக்கு இரத்தம் அழன்றுபோய், வாதமும் பிறகு கோளாறடைந்து, வாத-ரக்த வியாதி யுண்டாகிறது; இதில் தோஷம் வியாதி இரண்டும் ஒரே ஸமயத்தில் பிரகோபிக்கும்.

*இந்த நிலைமையில் அக்குறி விளங்கத் தோன்றுது; இப்பூர்வரூபம் அந்தந்த வியாதிக்குத் தகுந்தவாறு பேதப்படும்.*[1] 5, 6.

ரூபம் :—*அப் பூர்வரூபக்குறியே விளங்கத் தோன்றினல் ரூபம் எனப்படும். இதுவே ஸம்ஸ்த்தாநம், வியஞ்ஜநம், லிங்கம், இலக்ஷணம், சிஹ்நம், ஆக்ருதி என்கிற பெயர்களாலும் வழங்கப்படும்*[2]. 7.

உபசயம் :—(உபசயமும் அநுபசயமும்)[3] :— *வியாதியின் காரணத்திற்காவது வியாதிக்காவது இயற்கையில் நேர் எதிரிடையான்,*

---

1. இனி உண்டாகப் போகிற வியாதி இன்னதென்பதை முன்னதாகவே ஸூசிப்பிக்கும் குறி பூர்வரூபம். இது இருவகைப் படும். (1) வியாதியின் காரணம் தேஹத்திற் பற்றி, தோஷ-தாதுக்களுக்குக் கலவரத்தைத் தந்து, ஜ்வரம் முதலிய குறிப்பிட்ட வியாதியுண்டாகுமென்பதை மாத்திரம் முன்னதாகத் தெரிவிக்கும் பொதுக் குறி ஸாமாந்யபூர்வரூபம். (2) ஜ்வரம் உண்டாவதற்கு முன்பு சிரமம், அமைதியின்மை, முகம் முதலியதிற் கலக்கம் முதலியவை ஸாமாந்ய பூர்வரூபக் குறிகள். (2) உண்டாகப் போகிற வியாதி வாதாதி தோஷங்களில் இதனிதன் கோளாறுல் முக்கியமாய் உண்டாகுமென்று ஒருவாறு ஊஹித்தறியக் கூடிய குறி விசேஷ பூர்வரூபம். ஜ்வரத்தில் அது நன்கு உண்டாகு முன்பு முற்கூறிய ஸாமாந்யக் குறிகளோடு கொட்டாவி அதிகமானல், உண்டாகும் ஜ்வரம் வாத ஸம்பந்தமா யிருக்குமென்றும், கண்களில் அழற்சி யேற்பட்டால் பித்தஜ்வரம் உண்டாகுமென்றும், அன்னத்தில் அருசியுண்டானல் அது கபஸம்பந்தமா யிருக்குமென்றும் ஊஹிக்கலாம். இவை விசேஷ பூர்வரூபத்திற்கு திருஷ்டாந்தமாகும். மேலே முதலிற் குறிப்பிட்ட (1) என்கிற பாகம் ஸாமாந்யபூர்வரூபத்திற்கும், இரண்டாவது குறிப்பிட்ட (2) என்கிற பாகம் விசேஷ பூர்வரூபத்திற்கும் இலக்ஷணங்கள். குளிர்ந்த காற்று வீசுவதும், கார்மேகம் ஆகாயத்திற் சூழ்வதும் மழை வரப் போவதை முன்னதாய் அறிவிக்குமாப்போலே, பூர்வ ரூபங்கள் என்கிற சில முந்திய தோற்றங்கள் பிறகு வரக்கூடிய வியாதிக்கு ஸூசகங்களாம்.

2. ரூபம் என்றுல் வியாதி யுற்பத்தியான பிறகு காணும் குறி. ரூபத்தைக்கொண்டு வியாதி இன்னதென்று அறிகிறோம்; ரூபமின்றி வியாதி யுண்டாகாது. அருசி, அமைதியின்மை, தாபம் முதலியவை சேர்ந்தால் ஜ்வரம். பிறகு விவரிக்கப்படுமாறு காஸம் முதலிய பதினெரு இலக்ஷணங்கள் சேர்ந்தால் அவை இராஜயக்ஷ்மாவைக் குறிப்பிடும். ஆகவே ரூபங்களை வியாதியின் காரியங்களெனக் கூறலாம். "அப் பூர்வரூபக் குறியே......"என்பதால், விசேஷ பூர்வரூபக்குறி முக்கியமாகக் குறிக்கப்படுகிறது. பெரும்பாலும் பூர்வரூபம் தோன்றியே அப்பால் ரூபம் காணுமாகையால் "அப் பூர்வரூபக்குறியே" எனக் கூறப்பட்டது. பூர்வ ரூபத்திற்குப் பிறகு ஸம்ப்ராப்தி விஷயம் கூறப்பட்டு, அதன் பிறகே ரூபவிஷயம் மொழிய வேண்டியிருக்க, பூர்வரூபத்திற்குப் பிறகு ரூபம் இங்கு எடுத்துக் கொள்ளப் பட்டது. விஷயம் சிறிது விரிவாகக் கூறப்படவேண்டி யிருப்பதால் அதன் விவரணம் பஞ்ச லக்ஷண நிதாநத்திற் கடைசியிற் கூறப்படுகிறது.

3. உபசயம் என்றுல் வியாதி நிவ்ருத்தியாதல். நிதாநம் எனப் படும் ரோககாரணத்திற்காவது, ரோகத்திற்காவது குணத்தில் எதி

அல்லது அவற்றிற்கு எதிரிடையான காரியங்களைச் செய்யக்கூடிய வையான ஔஷதம், உணவு, வேலை இவற்றின் பிரயோகத்தினால் வியாதிநிவாரண ரூபமான சுகத்தை உண்டுபண்ணும் உபயோகத்தை உபசயம் என்று அறிக; இவ்வுபசயமே வியாதிஸாத்மியம் எனப்படும். அப்படிக்கின்றி முற்குறித்த ஔஷதாதிகளின் உபயோகம் வியாதியை நிவ்ருத்திக்காவிடில், அவ்வநுகூலமின்மையே அநுபசயம் என்றும், வியாத்ஸாத்மியம் என்றும் கூறப்படும். 8, 9,

ஸம்ப்ராப்தி :—தோஷம் முதலிற் கோளாறடைந்த வகைகளையும், அப்பால் அது தேஹத்தில் வியாபிக்கும் விதங்களையும், அதனால் வியாதி யுண்டாகும் கிரமத்தையும் அறிவிக்கும் முறை ஸம்ப்ராப்தி

---

ரிடையான ஔஷதத்தையும், உணவையும், வேலையையும் உபயோகிப்பதால் வியாதிக்கு உபசயம் (உபசாந்தி) உண்டாகும். என்றும்—ஹேதுவிபரீதமான அல்லது வியாதி விபரீதமான ஔஷத-அன்ன விஹாரங்களால் வியாதிக்கு உண்டாகும் தணிவு உபசயம். நிதானத்திற்காவது வியாதிக்காவது எதிரிடையல்லாத குணமுள்ளவைகளாகத் தோற்றுபவையும், இறுதியில் (பலனில்) அவற்றிற்கு எதிரிடையான காரியங்களைச் செய்பவையுமான ஔஷத-அன்ன-விஹாரங்கள் ஹேது விபரீதார்த்தகாரிகள் என்றும், வியாதிவிபரீதார்த்தகாரிகள் என்றும் கூறப்படும். உதாரணங்கள் :—(1) ஹேது விபரீதமான ஔஷதம்—குரு ஸ்நிக்த்த சீதங்கள் என்னும் காரணங்களால் உண்டான வியாதியில், இலகு ரூக்ஷ உஷ்ணங்கள் என்கிற குணங்களையுடைய பதார்த்தங்களை முறையே பிரயோகித்தல். (2) ஹேது விபரீதமான அன்னம்—ஸந்தர்ப்பணத்தினால் (தேஹத்துக்கும் மனதுக்கும் த்ருப்தி யுண்டுபண்ணி பலந்தரும் சிகித்ஸையால்) உண்டான வியாதியில் அபதர்ப்பணமான (இலங்கநம் முதலிய) சிகித்ஸையைச் செய்தல். (3) ஹேதுவிபரீதமான விஹாரம்—பகலில் தூங்குவதால் ஏற்பட்ட வியாதியில் உடம்பு அசையாமல் அமைதியாயிருத்தல். (4) கபத்தினால் உண்டான ஜ்வரத்தில் கபகரமான கிருபானம் செய்வித்தல் வியாதி விபரீதமான ஔஷதமாம். (5) அதே கபஜ்வரத்தில் பேயா என்னும் கஞ்சி வகைகளை உபயோகித்தல் வியாதி விபரீதமான அன்னமாம். (6) அதே ஜ்வரத்தில் அமைதியாகப் படுத்திருப்பது வியாதிவிபரீதமான விஹாரமாம். (7) ஹேது விபரீதார்த்தகாரியான ஔஷதம் — பித்தப்பிரதானமான வீக்கத்தில் பித்தகரமான உஷ்ணமாயுள்ள பசு முதலிய ஒற்றடங்களை உபயோகித்தல்; இதனால் பித்தவீக்கம் தணியும். (8) ஹேது விபரீதார்த்தகாரியான அன்னம்—அதே பித்தவீக்கத்தில் உஷ்ண வீர்யமான விதாஹி குணமுள்ள உணவுகளை உபயோகித்தல். (9) சர்த்தியில் விரல் குச்சி முதலியவற்றைத் தொண்டையில் செலுத்தி சர்த்தியையே உண்டுபண்ணுதல் ஹேதுவிபரீதமான செயல் அல்லது விஹாரமாகும். (10) சர்த்தியென்னும் வாந்தியில் அதையே உண்டாக்கக்கூடிய உப்பு முதலியதை உபயோகித்தல் வியாதி விபரீதார்த்தகாரி ஔஷதமாம். (11) அதிஸாரத்தில் விரேசன முண்டுபண்ணும் பாலையே உட்கொள்ள, சில விரேசநம் ஆய் அதிஸாரம் நிற்கும்; இது வியாதி விபரீதார்த்தகாரியான அன்னம். (12) உட்

களிலும் கடுப்பு, வியர்வை யின்மை, தோஷங்களும் மலமும் இறுகிப் போதல் இவை அந்தர்வேக ஜ்வரத்தின் குறிகள். [1]. 59, 59½.

பஹிர்வேக ஜ்வரம்:—பஹிர்வேக ஜ்வரத்தில் வெளியங்கங்களில் அதிக தாபமுண்டாகும்; நாவறட்சி முதலியவை [2] குறைவாயிருக்கும். இது ஸுக ஸாத்ய ஜ்வரம். 60½.

ஆம ஜ்வரம்:—[3] உமிழ் நீர் அதிகமாயூறும்; இருதயம் படபடத்து அடித்துக்கொள்ளும்; உள்ளே ஏதோ அசுத்தமா யிருப்பது போன்ற உணர்ச்சி, அரோசகம், சோம்பல், ஆலஸ்யம், உணவு ஜீர்ணமாகாமை, வாயில் அருவருப்பு, தேஹம் பாரமாதல், பசியின்மை, அதி மூத்திரம், உடல் விரைப்பு, கடுமையான ஜ்வரம் இவைகளும் உண்டாகும். இவ்வித ஆமதோஷ நிலைமையில் ஔஷதம் கொடுக்கலாகாது; கொடுத்தால் ஜ்வரம் இன்னும் அதிகமாகும் [4]. 61—63.

---

1. சில ஜ்வரங்கள் தேஹத்தின் உட்புறத்தையே தபிக்கச் செய்யும்; அவ்விதமான ஜ்வரம் அந்தர் வேகம் அல்லது உட்காய்ச்சல் எனப்படும். வெளி தேஹத்திலேயே அழற்சியை யுண்டுபண்ணுவது பஹிர்வேக ஜ்வரம் அல்லது வெளிக்காய்ச்சல் எனப்படுகிறது. அந்தர் வேகஜ்வரத்தையே கம்பீரஜ்வரம் என்பர்.

2. நாவறட்சி முதலியவை யென்பதால், அந்தர்வேக ஜ்வரத்திற் கூறிய பிதற்றல், பெருமூச்சு, தலைச்சுற்றல், ஸந்தி-அஸ்த்திகளில் வேதனை முதலிய குறிகளும் கிரஹிக்கப்படும்.

3. ஆமஜ்வரம்—பக்குவநிலைமைக்கு வராத ஜ்வரம். ஜ்வரத்தில் ஆமதோஷம் நீங்கி பக்குவ நிலைமையுண்டாவதற்கு எட்டு நாட்கள் ஆகும் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. பசி முதலியவை யுண்டாய், உடம்பு இலகுவாகப் போகும் இலக்ஷணம் எப்பொழுது உண்டாகிறதோ அதுவே ஆமதோஷம் நீங்கி ஜ்வரத்திற்குப் பக்குவ நிலைமை யுண்டாய்விட்டதன் குறியென்று சில ஆசிரியர்கள்.

4. இரஸ ஸம்பந்தமான ஆமதோஷம், தோஷ ஸம்பந்தமான ஆமதோஷம் என்று ஆமதோஷம் இரண்டு விதம். வாய் அருவருப்பா யிருத்தல் முதலிய சில இலக்ஷணங்களைக் கொண்டு இரஸ ஸம்பந்தமான ஆமத்தையும், தருணஜ்வரமாக ஏழு நாட்கள் வரையில் இருந்து வருவதைக் கொண்டு தோஷ ஸம்பந்தமான ஆமத்தையும் அறிக. ஆகவே தோஷ ஸம்பந்தமான ஆமதோஷம் எட்டாவது நாள்தான் தணிவடையும் எனக் கூறவேண்டும். "ஏழு தாதுக்களைப் பற்றிய தோஷங்கள் தணிவதற்கு வரிசையாக ஏழு நாட்கள் செல்லும்; பிறகு எட்டாவது தினத்தில் பெரும்பாலும் ஜ்வரத்தின் ஆமதோஷம் நீங்குகிறது" என்று ஹரிசந்திரன். இரஸ ஸம்பந்தமான ஆமதோஷமோ எட்டாவது தினத்திற்குப் பிறகு கூட தொடரக் கூடும். இதற்குத் "தருண ரூபமான ஆமதோஷம் எட்டு நாட்களில் நிவ்ருத்தியாகும்; ரஸஸம்பந்தமான ஆமமோ அதற்குப் பிறகும் அநுவர்த்திக்கும்" என்று ஸுச்ருதடீகை. (தருணரூபமான என்றால் வாதாதி தோஷ ஸம்பந்தமான ஆமதோஷம் எனப் பொருள்.) தருண ரூபமான ஆமதோஷத்தில் ஔஷதம் கொடுக்கக்கூடாது. ஆனால் இரஸ ஸம்பந்தான ஆமத்தில் ஔஷதம் உபயோகிக்கலாமென்பதே இவ்விருவித ஆமதோஷங்களைப் பகுத்தறிவதன் பிரயோஜநமாம்.

பக்குவநிலைமைக்கு வரும் ஜ்வரம்:[1] — ஜ்வரம் அதிகமாதல், நாவறட்சி, பிதற்றல், பெருமூச்செறிதல், தலைச்சுற்றல், மலம் ஸாதாரணமாய் வெளிவருதல், குமட்டல், உமிழ்நீருறுதல் இவை ஜ்வரம் பக்குவ நிலைமை அடைவதற்கான குறிகளாம். 64.

நிராம ஜ்வரம்[2] :—எட்டாவது நாள் வந்ததும் பசியால் வாடுதல், தேஹம் இலகுவாதல், ஜ்வரம் தணிதல், தோஷங்கள் வெளிவருதல் ஆக இவை ஜ்வரத்தில் ஆமதோஷம் நீங்குவதன் குறிகளாம். 65.

ஜ்வரத்தின் ஸாத்யாஸாத்ய லக்ஷணங்கள் [3] :— (1) ஸாத்யம்,— பிணியாளி பலிஷ்டனாயிருத்தல், [4] வியாதிக்குக் காரணமான தோஷங்கள் சொற்பமாயிருத்தல், உபத்திரவங்கள் இன்மை [5] ஆக இந்நிலைமைகளில் ஜ்வரம் ஸாத்யமாகும், (2) அஸாத்யக்குறிகள்:— அநேக காரணங்களாலும் வலுவான காரணங்களாலும் உண்டாவது, பெரும்பான்மையான குறிகளோடு கூடியிருப்பது, பலவிதமாய் பிராணவஸ்தையை யுண்டுபண்ணுவது, எளிதில் புலன்களைப் பழுதாக்கு வது, தேஹமிளைத்தவனுக்கும் வீங்கியவனுக்கு முண்டாவது ஆகிய இந்த ஜ்வரங்களும், கம்பீர ஜ்வரமும், நீண்ட காலமாய்த் தொடரும் ஜ்வரமும், வெகு கடுமையாகத் தோன்றிய ஜ்வரமும், தலை மயிர்கள் உதிர்ந்து சிரஸ்ஸில் வடுக்களை யுண்டாக்கும் ஜ்வரமும் [6] அஸாத்ய மாகும். அதிக உட்காய்ச்சல், நாவறட்சி, அதிகமலபந்தம், கடுமையான

---

1. இது பச்சியமாந ஜ்வரம் எனப்படும்.

2. நிராம ஜ்வரம்—ஆமதோஷம் நீங்கிய ஜ்வரம் . இதுவே பக்வஜ்வரம். [பக்வஜ்வரத்தின் இலக்ஷணங்கள் கூறப்பட்டதி லிருந்து, ஜீர்ணஜ்வர விஷயமும் இங்கு குறிக்கப்படுவது யுக்த மென்றறிகிறோம். "பதின் மூன்று நாட்களுக்கு மேற்பட்டது ஜீர்ண ஜ்வரம் ஆகும்'' என்று ஜதூகர்ணன். ஆனால் "யாதொரு ஜ்வரம் இருபத்தோரு நாள் தொடர்ந்து அடித்து, அப்பால் சொற்பமாகக் குறைந்து போய், ப்லீஹவீக்கத்தையும், ஜாடராக்னிக்குக் குறைவை யும் உண்டு பண்ணுகிறதோ அது ஜீர்ண ஜ்வரம் எனப்படுகிறது'' என்றும் கூறப்படுகிறது.]

3. ஸாத்ய லக்ஷணங்கள்-சிகித்ஸையினால் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடிய வியாதிக்கான குறிகள். அஸாத்யலக்ஷணங்கள்—நிவ்ருத்திக் கக்கூடாத வியாதிக்கான குறிகள்.

4. "பலாதிஷ்டாநமாரோக்யம்'' (ஆரோக்கியம் தேஹவன் மையை முக்கிய ஆதாரமாகப் பெற்றது) என்கிறபடி பலிஷ்டனா யிருப்பவனிடம் எளிதிற் பிணியணுகாது.

5. உபத்திரவம்—1-ம் பக்கம் பார்க்க. "இருமல், மூர்ச்சை, அரோசகம், வாந்தி, நாவறட்சி, அதிஸாரம், மலபந்தம், விக்கல், ச்வாஸம், உடல் வேதனை இப்பத்தும் ஜ்வரத்தின் உபத்திரவங்கள்.

6. "எவனுக்குத் தலையில் மயிர்களுதிர்ந்து வரி வரியாக வடுக் கள் உண்டாகின்றனவோ, புருவங்களும் இமைமயிர்களும் உதிர்ந்து மிகவும் நெறிப்புள்ளவைகளாக ஆகின்றனவோ, அவன் சீக்கிரம் மரணமடைவான்'' என்றும் கூறப்படுகிறது.

ச்வாஸ,காஸங்கள் இக்குறிகளுள்ளது கம்பீர ஜ்வரம்[1] என்றறியவும். மேலும் ஆரம்பம் முதல் விஷம ஜ்வரமாயிருந்து, நீடித்த காலமாகத் தொடர்ந்து இளைத்தும் அதிருக்ஷமாயு மிருப்பவனுக்குண்டாகிற கம்பீர ஜ்வரங்கள் ரோகியைக் கொன்றுவிடும். அல்லாமலும் ஞாபக மிழந்து படுத்த விடத்திலிருந்து எழுந்திருக்க முடியாமலும், கடுங்குளிரால் தாக்கப்பட்டும் அதிக உட்காய்ச்சலோடு வருந்துபவனும் ஜ்வரத்தினால் இறப்பான். அன்றியும் மயிர்ச்சிலிர்க்கையோடு கூடி கண்கள் மிகச் சிவந்து, இருதயத்தில் இடிக்கப்படுவது போன்ற நோவையும் பெற்று, வாயாலேயே ச்வாஸம் விடும் மனிதனையும் ஜ்வரம் மாய்த்துவிடும். பின்னும் விக்கல், பெருமூச்சு, நாவறட்சி இக் குறிகளோடு கூடியிருத்தல், மதிமயக்கங்கொள்ளல், கண்களை விறண்டு விழித்தல், இடைவிடாது ஊர்த்வ ச்வாஸமுண்டாதல், மிக இளைத்துப் போதல் இந்த இலக்ஷணங்களும் பிணியாளி பிழைக்க மாட்டானென்பதை அறிவிப்பவைகளாம். மேலும் உடலின் இயற்கையொளி அழிதல், புலன்கள் பஞ்சடைந்து உணர்ச்சியற்றுப் போதல், தேஹம் க்ஷீணித்தல், கடுமையான அரோசகமுண்டாதல், கம்பீரமும் தீக்ஷ்ணமுமான உஷ்ணவேகத்தால் பீடிக்கப்படுதல் ஆகிய குறிகளுள்ள ஜ்வர ரோகியையும் கைவிட வேண்டியதுதான். 66—73.

ஜ்வரம் விடுவதன் குறிகள்:—தேஹத்தில் வெப்பமதிகரித்தல், அடுத்தாற்போல வியர்த்தல், மயக்கம், நாவறட்சி, உடம்பு உதறல், மலம் சிறிது உடைந்து வெளிவருதல், ஞாபகக் குறைவு, கூவுதல்,[2] வாயில் துர்நாற்றம் இவை ஜ்வரம் விடுவதன் குறிகள்.[3] 74.

ஜ்வரம் நிவாரணமானதன் குறிகள்:—தாராளமான வியர்வை, தேஹம் இலகுவாதல், தலையில் தினவுண்டாதல், வாய் ஒருவாறு அழற்சியுறுவது, தும்மலுண்டாதல், உணவில் விருப்பமேற்படுதல் ஆக இவை ஜ்வரம் நிவாரணமானதன் இலக்ஷணங்களாம். 75.

---

1. கம்பீரஜ்வரத்தையே சரகர் அந்தர்வேகஜ்வரம் என்கிறார்.

2. "ஜ்வரம் விடும் ஸமயத்தில் தோஷமானது தாதுக்களைக் கிளறிக் கலக்கும்; ஆகையால் பிணியாளி பெருமூச்செறிந்துகொண்டு, வியர்த்துக் கூவுவான்; வாந்தி செய்து களைத்துப்போய் வருந்துவான். ஜ்வரத்திற்குக் காரணமான தோஷங்கள் ஜ்வரம் விடும் ஸமயத்தில் மிகக் குறையவேண்டியிருந்தும், அவை எண்ணெயின்றி அவிந்து போகும் தருவாயில் தீபம் பிரகாசமா யெரிவதுபோல் இவ்விதம் கடுமையான குறிகளைக் கடைசியிற் காட்டுவது இயல்பு."—வாக்படர்.

3. "தேஹத்தில் வெப்பமதிகரித்தல் முதலிய குறிகள் ஸந்நிபாதத்தினால் உண்டாகும் ஜ்வரத்திலும், அந்தர்வேக ஜ்வரத்திலும், தாதுக்களைப் பற்றிய ஜ்வரத்திலுமே அவை விடுகிற ஸமயத்தில் தோன்றும். இவற்றைத் தவிர ஏனைய ஜ்வரங்களில் வியர்வைதான் விசேஷமா யுண்டாகும்" என்கிறார் பாலுகி.

# 3. அதிஸார நிதாநம் *

**அதிஸார காரணம்:**—குரு [1], அதிக [2] ஸ்நிக்த்தம், ருக்ஷம், உஷ்ணம், திரவம், ஸ்த்தூலம், சீதளம் [3] ஆக இத்தகைய குணங்களையுடைய உணவுகளாலும், விருத்தமாகவும் [4] அமிதமாகவும் அஜீர்ணம் பண்ணக்கூடியவையாகவும் விஷமமாகவுமுள்ள போஜனங்களாலும், [5] அதியோகமாகவும் [6] மித்தியாயோகமாகவும் [7] உபயோகிக்கப்பெற்ற

* பித்த ஜ்வரத்தில் அதிஸாரம் உண்டாவது, ஜ்வரமும் அதிஸாரமும் ஒன்றோடொன்று உபத்திரவமாக ஏற்படுவது இத்யாதி ஸம்பந்தங்களால் ஜ்வரத்திற்குப் பின் அதிஸாரம் கூறப்படுகிறது.

1. குரு—இது மாத்ராகுரு என்றும், ஸ்வபாவகுரு, என்றும் பாககுரு என்றும், குணத்தில் குரு என்றும் நாலு வகைப்படும். (1) மாத்திரையில் (அளவில்) அதிகமாகப் பிரயோகிக்க வேண்டிய ஔஷதம் மாத்ராகுருவாகும். (2) இயல்பாகவே பாரமாயிருப்பது ஸ்வபாவ குரு. (3) சுபாவத்தில் குருவாகவோ இலகுவாகவோ இருந்தபோதிலும் சொற்ப அளவிலுபயோகித்தும் எளிதில் ஜீர்ணமாகாதது குணத்தில் குரு. (4) சுபாவாதிகளில் இலகுவாகத் தோற்றிய போதிலும் உபயோகித்த பிறகு ஜீர்ணமாகுந் தருவாயில் குருத் தன்மையை அடைவது பாக குருவாம்.

2. "அதிக" என்பது அடுத்துவரும் ஸ்நிக்த்தம் ருக்ஷம் முதலியவற்றிற்கும் சேர்ந்த விசேஷணம்.

3. ஸ்பர்ச சீதளம் என்றும், வீர்ய சீதளம் என்றும் சீதளம் இரண்டு விதம். (உஷ்ணமும் அங்ஙனமே ஸ்பர்சோஷ்ணம், வீர்யோஷ்ணம் என்று இரண்டு வகையாம்.)

4. விருத்தம் என்பதால் ஒன்றோடொன்று அநேக பதார்த்தங்கள் சேருவதால், அப்பதார்த்தங்கள் விஷத்தன்மை யடைதல், காலதேசாதிகளால் நல்ல பதார்த்தங்களும் தீங்கிழைக்கக்கூடிய குணங்களைப் பெறுதல் முதலியவை குறிக்கப்படுகின்றன. விருத்தம் என்பது ஸுச்ருதத்தில் ஹிதாஹிதீயாத்தியாயத்திலும், சரகத்தில் ஆத்ரேயபத்ர காப்யீயாத்தியாயத்திலும் விவரிக்கப்படுகிறது.

5. அதிக போஜநம் என்பது அத்யசநம் எனப்படும். முதலில் புஜித்த உணவு நன்கு ஜீர்ணமாகாமலிருக்கையிலேயே மீண்டும் புஜிப்பது அத்யசநமாகும். அஜீர்ண போஜநம் என்பது அபக்வாந்நம் என்றும் கூறப்படும். "அதிகமாகவும், சொற்பமாகவும், அகாலத்திலும் இங்ஙனம் நியமமின்றி புஜிக்கப்படும் உணவு விஷம போஜநம் (விஷமாசநம்) எனப்படும்" என்கிறார் ஸுச்ருதர்.

6. அதியோகம்—ஸ்நேஹ ஸ்வேத வமநாதி சிகித்ஸைகளை மிதமிஞ்சிப் பிரயோகித்தல். (காலம் பொருள் முதலியவற்றிற்கும் இங்ஙனமே அதியோகம் உண்டு.)

7. மித்தியா யோகம்—பலமான சிகித்ஸை செய்வதற்கு அற்ப சிகித்ஸையைப் பிரயோகிப்பதும், சொற்ப சிகித்ஸை செய்வதற்கு வெகு பலமான சிகித்ஸையைப் பிரயோகிப்பதும் இப்பெயரால் வழங்கப்படும். (காலத்திற்கும், சிகித்ஸாதிகளில் உபயோகிக்கப்படும் பதார்த்தங்களுக்கும் இவ்விதமே மித்தியாயோகம் உண்டு. மித்தியாயோகம் என்பதை இங்கு ஹீநயோகம் என்று கருதவேண்டுமென்று விஜயரக்ஷிதன்.)

ஸ்நேஹாதி க்ரியைகளாலும்,[1] விஷங்களாலும், விசேஷ பயத்தினு லும், மனத்துயரத்தினுலும், கெட்டுப்போன ஜலம் மது இவற்றையும் அமிதமான மதுவையும் பானம் செய்வதாலும், அஸாத்மிய போஜ னத்தினுலும்,[2] அந்தந்த ருதுவுக்கு ஏற்றவையல்லாத பதார்த்தாதி களாலும், மிதமிஞ்சிய ஜலக்ரீடைகளாலும், வேகங்களை[3] அடக்குவ தாலும், கிருமி தோஷங்களாலும்[4] அதிஸாரம் உண்டாகிறது. இதன் இலக்ஷணம் பின்னுல் கூறப்படும்.[5] 1—3.

அதிஸார ஸம்ப்ராப்தி:—(1) அப்தாதுக்கள் எனப்படும் நீர்மய மான தேஹ-தாதுக்கள்[6] பிரகோபித்து ஜாடராக்னியை மிகவும் மந்தமாக்கி மலத்துடன் மிச்ரமாய், வாயுவினுல்[7] கீழ் நோக்கித் தள்ளப்பட்டு, திரவமாக அதிகமாய் வெளிப்படுகின்றன ; ஆகவே இக்கொடிய வியாதியையே "அதிஸாரம்" என்பர்.[8] (2) வாத பித்த- க்பங்களால் தனித்தனி ஒவ்வோர் அதிஸாரமும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும், சோகத்தினுல் ஒன்றும், ஆமதோஷத்தினுல்[9] ஒன்றும் ஆக ஆறுவித அதிஸாரங்கள் உண்டு. 4, 4½.

---

1. ஸ்நேஹாதி க்ரியைகள்—ஸ்நேஹசிகித்ஸை, ஸ்வேதசிகித் ஸை, விரேசநசிகித்ஸை, வஸ்திசிகித்ஸை முதலியவை,

2. அஸாத்மிய போஜநம்—ஸாத்மியம் என்ருல் ஹிதமானது. பிறவியிலேயே சரீரத்திற்கு அனுகூலமாய்விட்ட விஷயம் அல்லது வஸ்து பிரக்ருதி ஸாத்மியம் என்றும், பிற்காலத்தில் பழக்கத்தினுல் அநுகூலமாகச் செய்து கொள்ளப்பட்டது அப்யாஸ ஸாத்மியம் என் றும் வழங்கப்படும். ஆகவே, பிரக்ருதியிலேயோ அப்யாஸத் திலேயோ அனுகூலமல்லாத உணவு "அஸாத்மிய போஜநம்."

3. வேகங்கள்—மலமூத்திராதிகளின் பிரவ்ருத்தி. மல மூத் திர அபாநவாதாதிகளை வலிய அடக்குதல் வேகநிரோதம் எனப்படும்.

4. கிருமி தோஷங்கள்—குடலிலுண்டாகும் பூச்சிகளாலும், இதர நுண்ணுயிர்களாலும் உற்பத்தியாகும் தோஷங்கள்.

5. இங்கு கூறப்பட்டுள்ள நிதாநங்களில் சில வாத தோஷத்தை யும், சில பித்ததோஷத்தையும், வேறு சில கபதோஷத்தையும் அதனதன் தன்மைகளுக்கேற்ப பிரகோபிக்கச் செய்து, வாத-பித்த- கபாதிஸாரங்களை முறையே உண்டு பண்ணும்.

6. இரஸம், மூத்திரம், ஸ்வேதம், மேதஸ், கபம், பித்தம், இரத் தம் முதலிய திரவரூபமான சாரீர பதார்த்தங்கள் அப்தாதுக்கள். மூத்திர-ஸ்வேதாதிகள் சில தோஷங்களா யிருந்தும், அவையும் இங்கு பொதுவாக தாதுக்களாகவே கருதப்படும்.

7. வாயு—இங்கே முக்கியமாக அபாந வாயு.

8. அதீவ ஸரதி (மிகுதியாகத் திரவரூபமாய் மலம் வெளியாகி றது) என்று "அதிஸாரம்" என்கிற பெயர் வந்தது.

9. சரகஸம்ஹிதை முதலியதில் ஆமதோஷ ஸம்பந்தமான அதி ஸாரத்திற்குப் பதிலாக பயஸம்பந்தமான அதிஸாரம் கூறப்படுகிறது. அஜீர்ணத்தினுல் ஏற்படும் ஸந்நிபாத ஸம்பந்தமான அதிஸாரத்தில் ஆமாதிஸாரம் அடங்கிவிடுவதாகக் கருதி சரகர் அதை விட்டு பயாதி ஸாரம் என்பதை ஆறுவதாகக் கூறுகிருர். எந்த அதிஸாரத்திலும்

**அதிஸார பூர்வரூபம்:**—மார்பிலும், நாபியிலும், குதத்திலும், ஆமாசயத்திலும், வயிற்றிலும், மற்றப் பாகத்திலும் குத்தல் வேதனை யுண்டாகும்; தேஹம் வாடி யிளைக்கும்; அபாநவாயு அடைபடும்; மலச்சிக்கல் காணும்; வயிறு விம்மிக்கொள்ளும்; அப்பால் ஆஹாரம் ஜீர்ணமாவதில்லை; ஆக இவை அதிஸாரத்தின் பூர்வரூபங்களாம். 5.

**வாதாதிஸாரம்:**—வாததோஷத்தாலான அதிஸாரத்தில் மலமானது ஒரு சிறிது சிவந்து நுரைத்ததாகவும், பசையற்றதாகவும் காணப்படும்; மேலும் அது சொற்பம் சொற்பமாகவும் அடிக்கடியும் அபக்குவமாகவே வெளியாகும்; மலம் வெளிவரும்போதெல்லாம் வயிற்று நோவும் சப்தமும் உண்டாகும். 6.

**பித்தாதிஸாரம்:**—பித்த தோஷத்தினுலான அதிஸாரத்தில் மலம் மஞ்சள் நிறமாகவோ இலைப்பசுமை நிறமாகவோ சிறிது சிவப்பாகவோ இருக்கும்; நாவறட்சி, மயக்கம், தேஹ அழற்சி, குடலில் வேக்காடு இவையும் காணும். 6½.

**கபாதிஸாரம்:**—மலம் வெண்மையாவும், திரள் திரளாகவும், சிலேஷ்மத்துடன் கூடியதாகவும், துர்நாற்ற மதிகரித்ததாகவும், மிகக் குளிர்ந்ததாகவும் வெளியாய், பிணியாளியும் மயிர்ச்சிலிர்த்து வருந்துவானுகில் அதை சிலேஷ்மாதிஸாரம் என்றறிக. 7.

**ஸந்நிபாதாதிஸாரம்:**—பன்றியின் கொழுப்பு அல்லது நெய் போன்றதும், மாம்ஸம் கழுவிய நீர் போன்றதும், வாதாதிஸாரம் முதலிய மூன்றுக்கும் விவரித்துள்ள எல்லாக் குறிகளுடனும் கூடியதுமான மலப்போக்கை மூன்று தோஷங்களாலுமுண்டான அதிஸாரம் என்றறிக; இது கஷ்ட ஸாத்யம். 8.

**சோகாதிஸாரம்: ஸம்ப்ராப்தி லக்ஷணங்கள்:**—(1) பல காரணங்களால் மனத்துயரமுற்று, போதிய போஜன முண்ணுமலிருக்கும் மனிதனுக்குச் சோகத்தினுலெழும் ஆவியும் உடற்சூடும் குடலிற் சென்று

ஆரம்பத்தில் ஆமதோஷம் அதிகரிப்பதும், அது நிவ்ருத்தியாகும் ஸமயத்தில் ஆமம் நீங்கி பக்குவநிலைமை யேற்படுவதும் இயல்பாயிருக்க, ஆமதோஷத்தினுல் ஓர் அதிஸாரம் உண்டாவதாகக் கூறுவது எவ்வாறு? ஆமம் என்று அஜீர்ண நிலைமைக்குப் பெயர்; இந்த நிலைமையே எல்லா அதிஸாரங்களுக்கும் ஆரம்பத்தி லேற்படுவது. குடலில் கெட்டுப்போன உணவிலிருந்து பிரத்தியேகமா யுண்டாகும் வேறொரு தோஷமும் ஆமம் எனப்படும். இது வாதாதி தோஷங்களுக்காவது, இரஸாதி இதர தாதுக்களுக்காவது, மல-ஜலாதி தோஷங்களுக்காவது ஸம்பந்தப்படாமல் வாதாதிகளைப்போலவே தனித்துள்ள ஒரு தோஷம்; அவ்விதமான ஆமதோஷத்தினுல் பிரத்தியேகமாய் மற்றொரு அதிஸாரம் உண்டாகிறது. த்வந்த்வ தோஷங்களால் ஸம்பவிக்கும் அதிஸாரங்கள் பிரக்ருதி ஸம ஸமவாயாரப்த்தங்களா யிருக்குமாகையால், அவற்றை இங்கு பிரத்தியேகமாக விவரிக்கவில்லை. இனி இதர வியாதிகளில் கூட த்வந்த்வஜ இலக்ஷணங்கள் விக்ருதி விஷம ஸமவாயா ரப்த்தங்களா யிருப்பவைகளுக்கே பெரும்பாலும் பிரத்தியேகமாய் விவரிக்கப்படும்.

ஜாடராக்னியுடன் சேர்ந்து[1] இரத்தத்தைக் கலக்கிக் கெடுக்கும்; நிறத்திற் குன்றுமணிபோன்ற அந்த இரத்தம் கீழ்நோக்கி, சோகாதிஸாரமென்னும் வியாதியையுண்டு பண்ணும். (2) அக்கீழ்நோக்கிய இரத்தம் மலத்துடன் கூடியோ, தனி இரத்தமாகவோ, துர்கந்தமாகவோ, நாற்ற மற்றதாகவோ வெளியாகும். சோகாதிஸாரம் க்ருச்சிரஸாத்ய ரோகம் என்று கூறப்படுகிறது. 9, 10.

ஆமாதிஸாரம்:—அதன் ஸம்ப்ராப்தியும் இலக்ஷணமும்:—உணவு ஜீர்ண மாகாமையால் அதிலிருந் துண்டான தோஷங்கள் தேஹத்தில் பல பாகங்களிற் பரவி குடலையும், ஸகல தாதுக்களையும், மலங்களையும் கலக்கி, பல நிறங்களுள்ளதாக மலத்தை அடிக்கடியும் திரவமாக வெளிப்படுத்தும்; இதில் வயிற்றுளைத்தலு முண்டாம். இதை ஆருவது அதிஸாரமாகக் கூறுவர். 11.

மலத்தின் ஆம-பக்வ லக்ஷணங்கள்:— (1) முற்கூறிய தோஷங்களுடன்[2] கூடிய மலம் ஜலத்தில் விடப்பட்டால் உடனே அமிழ்ந்துவிடும்;[3] அதிக துர்கந்தமாகவும், பிசுபிசுப்பாகவும் இருக்கும்; இவை மலத்தின் ஆமதோஷக் குறிகளாம். (2) முற்கூறியவற்றிற்கு எதிரிடையான குறிகளுடன்[4] கூடி மலம் அதிக இலகுவாகவும் இருந்தால் அதைப் பக்குவ மடைந்த மலமாகக் கூறலாம். 12, 13.

அதிஸாரத்தில் அஸாத்ய லக்ஷணம்:—மலம் அளிந்த நாவற்பழம் போன்றிருத்தல், யக்ருத்தென்கிற கல்லீரலின் கண்டம் போன்றதாயிருத்தல், அதிக தெளிவாகத் தோற்றுதல், நெய் - தைலம்-வஸை யென்னும் நிணம் • மஜ்ஜை-வேஸவாரம்-[5] பால்-தயிர்-மாம்ஸம் கழுவிய நீர் இவற்றைப்போன்றிருத்தல், கறுப்பாகவோ கருஞ்சிவப்பாகவோ ரூக்ஷமான இளங்கறுப்பாகவோ[6] ஸ்நிக்த்தமாகப் பல நிறங்கொண்டதாகவோ சந்த்ரகமென்னும் இரேகைகளோடு கூடியதாகவோ தோன்றல், பாரமாயிருத்தல், சவர்நாற்றங் கொள்ளல், மூளைபோலிருத்தல், ஸுகந்தம் வீசுதல், அழுகிக் கிடத்தல்,

---

1. பித்தத்துடன் சேர்ந்து என்று வேறொரு பாடம். வஹ்நி யென்கிற மூலபதத்துக்குப் பித்தம் என்று பொருளென்றும், ஜாடராக்னி யென்பதல்ல வென்றும் கதாதரன்.

2. முற்கூறிய தோஷங்கள் என்றால் வாதாதிஸாரம் முதலியவற்றிற்குக் கூறிய தோஷங்கள் என்று விஜய ரக்ஷிதன்.

3. ஆமதோஷமுள்ள வஸ்து இயற்கையில் அதிக கன மாகையால், அவ்வித மலமும் நீரில் அமிழ்ந்து விடுவது இயல்பு.

4. ஆமதோஷாதிகளுடைய கலப்பற்று இலகுவாய் நீரில் மிதத்தல், பிசுபிசுப் பில்லாமலிருத்தல் இவை எதிரிடையான குறிகள்.

5. வேஸவாரம்—எலும்புகளில்லாம லெடுக்கப்பட்ட இறைச்சியில் சுக்கு, கொத்தமல்லி விதை, ஓமம், காயம் முதலியதைக் கூட்டி இடித்து எடுத்த வஸ்து வேஸவாரம் எனப்படும்.

6. பித்தாதிஸாரத்தைத் தவிர மற்ற அதிஸாரங்களிலே இந்த நிறங்கள் அஸாத்யக் குறிகளாகும் என்றறிக.

அளவில் வெகு அதிகமாய் வெளிவருதல்; இவை வியாதி அஸாத்ய மென்பதை விளக்கும் குறிகளாம். நாவறட்சி, அழற்சி, கண் இருளடைதல், ச்வாஸ மதிகரித்தல், விக்கல், பார்ச்வசூலை, எலும்பு உளைத்தல், மூர்ச்சை, அமைதியின்மை, இந்த்ரியங்கள் உணர்ச்சி யற்றுப்போதல், குதத்தினுள் வலிகளென்கிற மடிப்புகள் அழன்று போதல், தன்னையறியாமலே பிதற்றல், ஆஸநத்வாரம் மலர்ந்த வண்ணமாதல், உடல் மிகவும் இளைத்தல், வயிற்றுப் பொருமல், அநேக உபத்திரவங்க ளுண்டாதல்,[1] குதம் வெந்துபோதல், தேஹச் சூடு நீங்கி சீதளம் மேலிடுதல் ஆகிய குறிகளுள்ள அதிஸார ரோகி யும் கைவிடவேண்டியவனே. அன்றியும் பெரு மூச்சு, வயிற்றுளைத் தல், நாவறட்சி, ஜ்வரம் இவற்றால் வருந்துபவனையும், வயதுசென்ற வனையும்[2] அதிஸாரம் அழித்து விடும். 14—19.

இரக்தாதி ஸாரம்:—பித்தாதிஸாரம் இருக்கையிலே, பித்தத்தை விருத்தி செய்யும் பதார்த்தங்களை அடிக்கடியும் அதிகமாகவும் புஜித் தால், கடுமையான இரக்தாதிஸாரம் உண்டாகிறது.[3] 20.

பிரவாஹிகை:—அஹிதமான உணவுகளை உண்பவனுக்கு வாயு பிரகோபமடைந்து குடலில் மிகச் சேர்ந்துள்ள சிலேஷ்மம் போன்ற தோஷத்தை[4] சொற்பம் சொற்பமாக அடிக்கடியும் சிறிது மலத் துடன் கீழ்நோக்கித் தள்ளும்; அப்பொழுது ரோகி பிரயாஸப்பட்டு முக்குவான். சாஸ்திரஞ்ஞர் அப்பிணியை பிரவாஹிகை யென்பர்.[5] (1) வாதம் அதிகரித்த பிரவாஹிகையில் வயிற்று நோயதிகரிக்கும்.[6]

---

1. வீக்கம், உளைத்தல், ஜ்வரம், அதிக நாவறட்சி, ச்வாஸம், காஸம், அரோசகம், வாந்தி, மூர்ச்சை, விக்கல் இவை அதிஸாரத்தின் உபத்திரவங்கள்.

2. பாலர்களுக்கு உண்டாகும் கடுமையான அதிஸாரமும் அஸாத்யமாகும் என்கிறார் ஸுச்ருதர்.

3. பித்தாதிஸாரத்தில் பித்தத்தை விருத்தி செய்பவைகளை உப யோகிப்பதால் இரக்தாதிஸாரம் உண்டாகு மென்பதனால், பித்தாதி ஸாரத்திற்கு இரக்தாதிஸாரம் உபத்திரவமா யேற்படுகிறது எனக் கருத்து. ஆகவே கீழே அதிஸாரம் ஆறு என்று கூறப்பட்டது. இரக் தாதி ஸாரம் ஸ்வதந்திர வியாதியா யிருந்தால், இதையும் கூட்டி, அதி ஸாரம் எழு விதம் என்று சொல்லப்பட்டிருக்கும்.

4. சிலேஷ்மம் போன்ற தோஷம் என்பதால், உண்மையில் அத்தோஷம் சிலேஷ்மமல்ல. பிரவாஹிகையில் வெளியாகும் தோ ஷம் கபமாகவே இருந்தால், கபப்பிரவாஹிகையில் அத்தோஷத் துடன் கபம் கலந்திருக்குமென்று கூறுவது பொருந்தாது.

5. பிரவாஹிகை—சீதபேதி. அதிக கடுப்புடன் குடலின் உட் புறமும் குதமும் கீழ்நோக்கி அடிக்கடியும் நெளிந்து தோஷத்தைத் தள்ளுவதால் பிரவாஹிகை எனப் படுகிறது. இதை போஜன் முதலியவர் விஸ்ரம்ஸீ யென்றும், பராசரர் அந்தர் க்ரந்தி யென் றும், ஹாரீதர் நிச்சாரகம் என்றும் வழங்குகிறார்கள்.

6. பிரவாஹிகை யெல்லாம் பொதுவாக வாதப்பிரகோபத்தினு

(2) பித்தப் பிரவாஹிகையில் அழற்சி அதிகமாகும். (3) கபாதிகப் பிரவாஹிகையில் கபம் கலந்த தோஷம் வெளியாகும். (4) இரத்த தோஷத்தினுலான[1] பிரவாஹிகையில் தோஷத்துடன் இரத்தமும் கலந்திருக்கும். இவை பொதுவாக ஸ்நிக்த்தத்தன்மையோ ரூக்ஷத் தன்மையோ அதிகரிப்பதால் உண்டாகும். அவற்றிற் கெல்லாம் தனித் தனி இலக்ஷணங்களும், ஆம-பக்குவ நிலைமைகளும், சிகித்ஸா முறைகளும் அதிஸாரத்திற்குக் கூறியவை போன்றவையே. 21, 22.

அதிஸார நிவ்ருத்தி லக்ஷணம் ;—மூத்திரோத்ஸர்க்கம் செய்கையில் மலப் பிரவ்ருத்தியின்றி நீர் மாத்திரம் இறங்கும்; அபாநவாயுவும் நன்கு வெளிப்படும்; ஜாடராக்னியும் விருத்தியாய் குடலும் இலகுவாகத் தோற்றும்; இவை அதிஸாரம் நீங்கியதன் குறிகள்,[2] 23.

ஜ்வராதிஸாரம்[3] :—(தனித்தனியே ஜ்வரத்திற்குக் கூறிய காரண இலக்ஷணுதிகளும், அதிஸாரத்தின் காரண இலக்ஷணுதிகளும் சேர்ந்து ஜ்வராதிஸாரத்தில் தோன்றும். ஆகவே இவ்விஷயம் பிரத்தியேகமாக இங்கு கூறப்படவில்லை.)

---

## 4. கிரஹணீ ரோகநிதாநம்*

கிரஹணீ ரோகத்தின் ஸாமாந்ய ஸம்ப்ராப்தியும் லக்ஷணமும் :—
(1) அதிஸாரம் தீர்ந்திருக்கையிலும்,[4] மந்தாக்னியாயிருந்து தகாத உணவைப் புஜித்தால் ஜாடராக்னி மீண்டும் மிகக் கோளாறடைந்து கிரஹணி யென்கிற குடலின் பாகத்தையும் கெடுக்கும். (2) தனித்

---

லேயே உண்டாகும். ஆகிலும் வாதப்பிரவாஹிகையில் மற்றப் பிரவாஹிகைகளைவிட வாதம் மிக்க பலமாயிருக்கு மென்று கருத்து.

1. வாத-பித்த-கபங்களைப்போல் இரத்தத்தையும் ஒரு தோஷமாக (நான்காவது தோஷமாக)க் கூறும் ஸம்பிரதாயப்படி இரத்தப் பிரவாஹிகை யொன்று பிரத்தியேகமாக் கூறப்பட்டது.

2. குடலில் வாயு அதிகரித்து, வயிற்றுப் பொருமலுண்டாய் அதிஸாரத்தில் மலம் கட்டிப்போவதுண்டு. அவ்விதமான தொந்தரவுகளுடன் கூட மலம் கட்டிப்போவது அதிஸார நிவ்ருத்தியாக மாட்டாது. அத்தொந்தரவுகள் நீங்கி மலம் கட்டினுல் அது அதிஸார நிவ்ருத்தி லக்ஷணம்.

3. ஜ்வரத்தில் அதிஸாரமும் சேர்ந்துண்டாவது ஜ்வராதிஸாரம்.

4. "அதிஸாரம் நிவ்ருத்தியா யிருக்கையிலும்" என்றதனுல், அதிஸாரமின்றியே பிறகு கூறப்படும் காரணங்களால் சுயமாகவும் கிரஹணீரோகம் உண்டாகலாம் எனக் கருத்து.

* கிரஹணி— ஆமாசயம் என்கிற இரைப்பைக்கும் பக்வாசயத்திற்கும் இடையில் அமைந்துள்ள பாகத்திற்கு "கிரஹணி" என்று பெயர். உணவு ஆமாசயத்தில் ஒருவாறு பக்குவமாய் ஒருவித குழம்பான பக்குவ நிலைமையை அடையும் வரையில் அதைச் சிறு குடலுக்கு விடாமல் ஆமாசயத்தின் கீழ் முனையிலுள்ள த்வாரம் நன்கு

தனியே ஒவ்வொரு தோஷமும் மிகவும் விருத்தியாய் மூன்றுவித கிரஹணீ வியாதிகளையும், மூன்று தோஷங்களும் ஒருமிக்க விருத்தியாய் ஸந்நிபாதக் கிரஹணீ வியாதியையும் உண்டுபண்ணும். இத் தோஷங்களால் கோளாறடைந்த கிரஹணி யென்னும் அவயவம் புஜித்த உணவை வெகுவாக ஜீர்ணமாகாத ஆமநிலைமையிலேயே வெளிவிடும்; அரிதாகப் பக்குவமான நிலைமையிலும் வெளிவிடும். அப்பொழுது வயிற்றில் நோவுண்டாகும்; மலம் துர்க்கந்தமாகவும், மாறி மாறி திரவமாகவும், கெட்டியாகவும் வெளியாம். ஆயுர்வேத மறிந்தவர் அதை கிரஹணீ ரோகம் என்பார்கள். 1—3.

கிரஹணியின் பூர்வரூபம்:—நாவறட்சி, சோம்பல், பலக்குறைவு உணவு குடலில் காந்திப்போதல், அல்லது மிக நேரம் கழித்து ஜீர்ணிந்தல், உடல் கனத்தல் இவை கிரஹணியின் முற்குறிகளாம். 4.

வாதக் கிரஹணீ:—(நிதாந-ஸம்ப்ராப்தி-லக்ஷணங்கள்):—காரம், கைப்பு, துவர்ப்பு, அதிக ரூக்ஷம், மிகக் கெட்டுப்போனது[1] ஆக இத் தகைய உணவுகளாலும், வெகு சொற்ப போஜனத்தினுலும், [2] உபவாஸத்தினுலும், அதிக தூரம் வழி நடப்பதாலும், வேகங்களை அடக்குவதாலும், அமிதமான புணர்ச்சியாலும் வாயு பிரகோபமடைந்து, ஜாடராக்னியைக் கெடுத்து விகாரங்களை யுண்டுபண்ணும். அவனுக்கு, உணவு ஜீர்ணமாவது கஷ்டம்; அது வயிற்றில் காந்தி புளித்துப் போம்; தேஹம் உரத்துப்போகும்; தொண்டையும் வாயும் வறட்சியடையும்; பசியும் தாஹமும் அதிகரிக்கும்; கண் பார்வை மந்தப்படும்; செவிகளில் ஒருவித ஓசை கிளம்பும்; விலாப்பக்கங்கள், துடைகள், துடையிடுக்குகள், கழுத்து இவற்றில் அடிக்கடி நோவுண்டாகும்; விஷூசியும் காணும்; இருதயத்தில் வேதனையுண்டாகும்; தேஹம் இளைத்து பல ஹீநப்படும்; அரோசக முண்டாகும்; குதம் கடுக்கும்; எல்லாவிதமான இரஸங்களிலும் விருப்பம் ஏற்படும்; மனம் குன்றும்; உணவு ஜீர்ணமாகும்போதும் ஜீர்ணமான பிறகும் வயிற்றில் பொருமலேற்பட்டு, போஜனம் செய்ததும் அது தணியும்; அது வாதகுல்மமோ, இருதய ரோகமோ, ப்லீஹவ்ருத்தியோ என்று

---

மூடிக்கொண்டிருக்கும். இவ்விதம் மூடிக்கொள்ளும் பாகம் (ஆமாசயத்திலேயே அபக்வான்னத்தைப் பிடித்து நிறுத்துவதால்) கிரஹணி யெனப்படுகிறது. இவ்விதம் சரகராலும், ஸுச்ருதராலும் கிரஹணி யென்கிற அவயவத்தின் ஸ்வரூபம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இந்த கிரஹணி யென்கிற பாகம் கோளாறடைந்தால் ஆமாசயத்தில் உணவு பக்குவமானதும் பக்குவமாகததுமாய் பலவாருக அங்ஙனமே அது குதமார்க்கத்தினுல் வெளியாகும். ஆகவே இவ்வஜீர்ணபேதி கிரஹணி யென்றே வழங்கப்படுகிறது.

1. "மிகக் கெட்டுப்போனது" என்பதற்குப் பதிலாக "மிகவும் குளிர்ந்து போனது" என்று பாடமுண்டு.

2. "வெகு சொற்ப அளவான போஜனத்தினுலும்" என்பதற்குப் பதிலாக் "காலம் தவறியுண்பதாலும்" என்று பாடமுண்டு.

ஸந்தேஹிக்கக் கூடியதா யிருக்கும்; ஒரு ஸமயம் திரவமாகவும், சில ஸமயம் சுஷ்கமாகவும், சில வேளை தெளிவாகவும், சில ஸமயம் ஆமதோஷத்துடனும், வெகு நேரம் அதிக சிரமப்பட்டு அதிக அபானவாயுவின் சப்தத்தோடும் மலம் வெளியாகும்; அதிலும் இருமலோடும், பெருமூச்சோடும் நுரைத்து மலம் வெளியாகும். 5—10.

பித்தக்கிரஹணி:—(நிதாந-ஸம்ப்ராப்தி-லக்ஷணங்கள்):—கடுரஸம், அஜீர்ணதோஷம், விதாஹியான பதார்த்தம்,[1] அம்லங்கள், க்ஷாரங்கள் இவை முதலியவற்றால்[2] பித்தம் விருத்தியடைய, அது உஷ்ணஜலம் நெருப்பை அவிப்பதுபோல், ஜாடராக்னியைக் கலைத்து அழியச் செய்கிறது; தேஹம் மஞ்சள்நிறம் பெறும்; கறுத்தும் மஞ்சள் நிறமும் கலந்து திரவரூபமாக மலம் வெளியாகும்; உடலில் ஒருவித துர்நாற்றம் தோன்றும்; புளித்த தேக்கெறிவும், மார்பிலும் தொண்டையிலும் அழற்சியும், அரோசகமும், அமித நாவறட்சியும் உண்டாய் அவன் வருந்துவான். 11, 12.

கபக்கிரஹணி:—(நிதாந-ஸம்ப்ராப்தி-லக்ஷணங்கள்.):—குரு, அதிக ஸ்நிக்த்தம், அதிக சீதம் ஆகிய குணங்களையுடைய உணவுகளாலும், அமித போஜனத்தினாலும், போஜனம் செய்தவுடனே நித்திரை யுறுவதாலும்[3] பிரகோபமடைந்த கபம் ஜாடராக்னியை அழித்து விடுகிறது; அவனுக்கு உணவு ஜீர்ணமாவது வெகு கஷ்டம்; இருதயம் மிகப்பட படத்தல், வாந்தி, அரோசகம், பசையினால் வாய் பூசப்பட்டது போன்றிருத்தல், வாய் இனிப்பாக ஆதல், இருமல், தும்மல், பீநஸம் இவை காணும்; இருதயம் இறுகித் திரண்டிருப்பதுபோல் உணரப்படும்; வயிறு கனத்துப் பொருமலடையும்; அருவருப்புடன் தித்திப்பான தேக்கெறிவு உண்டாகும்; ஜாடராக்னி அழியும்; ஸ்த்ரீகளிடம் தென்புண்டாகாது; மலம் உடைந்து ஆமதோஷத்தோடும், கபத்தோடும் கலந்து கனமாக வெளியாகும்; உடம்பு இளைக்காம லிருந்தும்[4] பலஹீனமடையும்; சோம்பலும் உண்டாகும். 13—16.

---

1. விதாஹி—ஆமாசயத்தில் மிகவும் புளித்துப்போய் (அல்லது காந்திப்போய்), மார்பில் (அன்னவாஹி யென்கிற குழலில்) அழற்சியை யுண்டுபண்ணுவது.

2. 'க்ஷாரங்கள்' அபாமார்கக்ஷாரம், யவக்ஷாரம் முதலியவையும், அவை கலந்த திரவ்யங்களும், க்ஷாரஜலம் முதலியவைகளும். காமரூபம் முதலிய சில தேசங்களில் க்ஷாரநீரில் பக்குவம் செய்த வியஞ்ஜநாதிகளை புபயோகிப்பது வழக்கம் என்று கூறப்படுகிறது. 'முதலியவை' என்பதால் லவணம், தீக்ஷ்ணம், உஷ்ணம் இக்குணங்களுள்ள பதார்த்தங்கள் குறிக்கப்படுகின்றன.

3. பகல்போஜனத்திற்குப் பிறகு உடனே நித்திரையுறுவது தகாதென்பது இதன் கருத்து.

4. தேஹம் இளைக்காமை கபத்திற்கு இயல்பான செயலாம்.

ஸந்நிபாதக் கிரஹணி:—வாதக் கிரஹணி முதலியதற்குத் தனித் தனியே கூறப்பட்டுள்ள காரணங்களும் இலக்ஷணங்களும் ஒருமிக்கச் சேர்ந்து கண்டால் அது ஸந்நிபாதக் கிரஹணியாகும்.[1] 17.

ஸங்கிரஹக் கிரஹணி:—(குடலிரைத்தல், சோம்பல், வலி வின்மை, உடலிளைத்தல் இவற்றோடு, திரவமாகவும் திரண்டதாகவும் குளிர்ந்ததாகவும், ஸ்நிக்த்தமாகவும் மலம் இடுப்பு வலியோடு வெளியாம்; சில ஸமயம் மலம் ஆமதோஷத்துடன் அளவில் அதிகமாய், பிசுபிசுப்பாய் சொற்ப வேதனையோடு அதிக சப்தத்தோடு வெளியாகும்; இக்கோளாறு பக்ஷத்திற்கு ஒரு முறையோ, மாஸத்திற்கு ஒரு முறையோ, பத்து நாட்களுக்கு ஒரு முறையோ, அல்லது தினந் தோறுமாவது உண்டாகும்; இது பகலில் விருத்தியாய் இரவில் தணிவடையும்; இதன் நிலைமை நிச்சயிக்க முடியாததாகவும், சிகித்சைக்கு வசப்படாததாகவும், நீடித்துத் தொந்தரவளிக்குந் தன்மையதாகவும் இருக்கும்; ஆமதோஷத்துடன்கூடிய வாதக் கோளாறால் காண்கிற இது "ஸங்கிரஹக் கிரஹணி" யெனப்படும். தூங்கும் போது இரு பாரிசங்களிலும் குத்துவலி யுண்டாகும்; மேலும் குடத்திலிருந்து நீரைக் கொட்டுவதுபோல் குடலில் சப்தமுண்டாம்; அஸாத்யமான இவ்வியாதியை கடீயந்த்ரம் என்றும் கூறுவர்.)

கிரஹணியில் ஸாம நிராமாதி லக்ஷணங்கள்:—(1) கிரஹணீ ரோகத்தில் மலாதிகளுக்குள்ள ஆம நிலைமையும், பக்குவ நிலைமையும் அதிஸாரத்திற் கூறிய விதமேயாம். (2) மேலும் அதிஸாரத்தின் அஸாத்திய லக்ஷணங்களே கிரஹணியிலும் அஸாத்தியக் குறிகளாகும். (3) கிழவருக்குக் காணும் கிரஹணீரோகம் தேஹத்தைச் சீரழித்து அஸாத்யமானதாகும். 18, 19.

கிரஹணியில் ஸாத்யாஸாத்யங்களைப் பற்றி தந்வந்தரியின் கொள்கை:—(கிரஹணீரோகம் பாலர்களுக்குண்டானால் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியது; யுவாக்களுக்குண்டானால் கஷ்ட ஸாத்யமாகும்; கிழவருக்கானால் அஸாத்ய மென்றறிக. இது தந்வந்தரியின் கொள்கை.)

---

## 5. அர்சோ நிதாநம்.*

அர்சஸ் ஆறுவிதம் :—வாத - பித்த - கபங்களால் தனித்தனியே மூன்றுவிதமும், ஸந்நிபாததத்தினால் ஒன்றும், இரத்தத்தினால் ஒன்றும், ஸஹஜமானது[2] ஒன்றும் ஆக ஆறுவித அர்சஸ்ஸுகள் குதத்தி

---

1. ஸமாக்னி, மந்தாக்னி, தீக்ஷ்ணாக்னி, விஷமாக்னி யென்று ஜாடராக்னி நாள்கு விதம்; இவற்றுள் ஸமாக்னியைத் தவிர மற்ற மூன்றும் கிரஹணீ தோஷத்தா லானவை என்று சரகர்.

2. ஸஹஜார்சஸ் — பிறக்கும்போதே ஏற்பட்டுள்ள அர்சஸ்.

* அர்சஸ்—மூலரோகம்.

னுள் அமைந்துள்ள மூன்று வலிகள்[1] என்கிற மடிப்புகளைப் பற்றி உண்டாகின்றன. 1.

அர்சஸ் ஸம்ப்ராப்தி:—வாத - பித்த - கபங்கள் சர்ம மாம்ஸ[2] மேதஸ்ஸுகளைக் கோளாறடையச் செய்து, அபானத்வாரம் முதலியதில்[3] பலவித உருவமுள்ள மாம்ஸ முளைகளை உண்டுபண்ணும்; அம்முளையை "அர்சஸ்" என்பார்கள். 2

வாதார்சஸ்ஸின் காரணம்:—துவர்ப்பும் காரமும் கைப்புமான இரஸங்கள், ரூக்ஷமும் சீதமும் இலகுவுமான குணங்கள் ஆக இத்தன்மையுள்ள பதார்த்தங்களும், மிகச் சொற்ப உணவும், தீக்ஷ்ணகுணமுள்ள மதுவும், அதிக புணர்ச்சியும், இலங்கநமும், மிகக் குளிர்ச்சியான தேச - காலங்களும்,[4] கடுமையான வியாயாமமும்,[5] மனத்துயரமும், வெயிலும் காற்றும் அதிகமாகத் தாக்குவதும் வாததோஷ ஸம்பந்தமான அர்சஸ் உண்டாகக் காரணங்களாம். 3, 4.

பித்தார்சஸ்ஸின் காரணம்:—கடுரஸம், அம்லரஸம், இலவண ரஸம், உஷ்ணவீர்யம் ஆக இவ்வித பதார்த்தங்களும், அதிக வியாயமமும், அக்னியின் சூடு வெயில் இவை தாக்குவதும், உஷ்ணமான தேசகாலங்களும்[6], கோபமும், மதுபானமும், பொறாமையும், விதாஹியும் தீக்ஷ்ணமுமான பானங்கள் அன்னம் ஔஷதம் இவையும் பித்தப்பிரதான அர்சஸ்ஸுக்குக் காரணங்களாம். 5, 6.

கபார்சஸ்ஸின் காரணம்:—இனிப்பு உப்பு புளிப்பு இச்சுவைகளையும், ஸ்நிக்த்த-சீத-குரு குணங்களையும் உடைய பதார்த்தங்களும், வியாயாமமின்மையும், பகல் நித்திரையும், படுப்பது உட்கார்ந்திருப்பது முதலிய சுகங்களிலேயே பற்றுதலும், கீழ்காற்றுக்கு

---

1. குதம் என்னும் அவயவம் நாலரை அங்குலம் நீண்டது; அதில் மூன்று வித வலிகள் என்னும் மடிப்புகள் அமைந்துள்ளன; அவை சங்குச் சுழிபோன்றிருக்கும்; அவற்றுள் ஒன்றுக்கு பிரவாஹணி யென்றும், இரண்டாவதுக்கு விஸர்ஜநி யென்றும், மூன்றுவதுக்கு ஸம்வரணி யென்றும் பெயர். குதத்தின் உதடு குதௌஷ்டம் எனப்படும்; அக்குதௌஷ்டம் அரையங்குலம் அளவு; அதன்மேல் முதல் வலி ஓர் அங்குலம் அளவு; இரண்டாவது மூன்றுவது வலிகள் ஒவ்வொன்றும் ஒன்றரை அங்குலம் அளவு.

2. சர்மம் மாம்ஸம் இவற்றைப்போல் இவற்றிலடங்கிய இரத்தமும் இவ்வியாதியில் கோளாறடையும்; ஆகவே அர்சஸ்சிகித்ஸையில் இரக்த மோக்ஷணம் செய்யவேண்டு மெனப்படுகிறது.

3. "அபானத்வாரம் முதலியது" என்பதால் நாசி முதலிய இதர அவயவங்களிலும் இவ்வித முளைகள் உண்டாகுமென்று அறிக.

4. குளிர்ச்சியான தேச காலங்கள்—ஆநூபதேசமும், ஹேமந்தாதி காலங்களும்.

5. வியாயாமம்—கஸரத்து என்கிற தேஹவுழைப்பு.

6. உஷ்ணமான தேச காலங்கள்—ஜாங்கல தேசமும், கிரீஷ்ம ருது முதலிய காலங்களும்.

எதிரிலிருப்பதும், சீதளமான தேச-காலங்களும், கவலையற்றிருத்த லும் சிலேஷ்ம ஸம்பந்தமான அர்சஸ்ஸுக்குக் காரணங்களாம். 7,8.

த்வந்த்வ - ஸந்நிபாதார்சஸ்ஸுகள்:—(1) வாதாதி அர்சஸ்ஸு களுக்குத் தனித்தனியே கூறியுள்ள காரணங்களும் இலக்ஷணங்களும் இரண்டிரண்டாகச் சேர்ந்திருந்தால் த்வந்த்வார் சஸ்ஸுகளென்றும், (2) மூன்று தோஷங்களின் காரண லக்ஷணாதிகள் சேர்ந்துண்டானால் ஸந்நி பாதார்சஸ் என்றும் அறிக. ஸந்நிபாதார்சஸ்ஸின் லக்ஷணங் கள் ஸஹஜார்சஸ்ஸுக்குச் சமானமாயிருக்கும். [1] 9.

வாதார்சஸ் :—வாததோஷம் அதிகரித்துண்டான முளைகள் சுஷ்கமாகவும், சிமசிமாவென்று தினவுடண்டுபண்ணுபவையாக வும், வாடியும், கருஞ்சிவப்பாகவும், விரைத்துக் கசிவற்றவையாக வும், கடினமாகவும், உருவத்தில் வெவ்வேறு வகையாகவும், வக் ரங்களாகவும்; தீக்ஷ்ணமாகவும், பிளந்த முகமுள்ள வையாகவும், கோவை - பேரீச்சு - குமுழன் - பருத்தி இவற்றின் கனிகள்போன்ற உருவமுள்ள வையாகவும் இருக்கும்; மேலும் சில முளைகள் கடப்பம் பூபோன்றும், சில முளைகள் வெண்கடுகு போன்றும் காணப்படும்; சிரஸ்ஸு, விலாப்பக்கங்கள், இடுப்பு, துடைகள், துடையிடுக்குகள் இவை முதலிய வற்றில் அதிக வேதனையை இவ்வர்சஸ் உண்டு பண் ணும்; தும்மல், தேக்கெறிவு, வயிற்றுப் பொருமல், மாரடைப்பு, அரோசகம் இவையும் காணும்; இருமல், ச்வாஸம், ஜாடராக்னி சில ஸமயம் அதிகரித்தல் சில ஸமயம் குறைவாதல், காதிரைத்தல், தலைச் சுற்றல் இவையும் தோன்றும்; கட்டிக்கட்டியாகவும், சொற்பமா கவும், பிசுபிசுப்பான நீர் நுரைகளுள்ளதாகவும், கடுப்பை யுண்டு பண்ணுவதுமான மலம் அதிக அபானவாயுவோடு வெளியாகும்; சர்மமும், நகங்களும், மலமூத்திரங்களும், முகமும் கறுநிறங் கொள் ளும். இதனால் குல்மம், ப்லீஹவிருத்தி, மஹோதரம், அஷ்டீலா இந்த ரோகங்களும் உபத்திரவமாக உண்டாகலாம்-10—15.

---

1. ஸுச்ருதத்தில் மொழியப்படுகிவதாவது "ஸஹஜார்சஸ் ஸுகள் (பிறவிமூலமுளைகள்) குரூரமானவை; சிவந்தும் பழுத்த நிறமாகவுமிருக்கும்; அம் முளைகள் காணக்கூடாதவாறு உட்புற மாகவும் தொந்தரவளிக்கக் கூடியவையாகவும் இருக்கும்; அம் மனிதன் இளைத்திருப்பான்; சொற்பவுணவே புஜிப்பான். அதிக கோபியாயிருப்பான்; உடம்பெங்கும் ஸிரைகள் (காரிரத்தக் குழாய் கள்) தடித்துப் பரவியிருக்கும்; அவனுக்குக் குழந்தைகள் அரிதா கப் பிறக்கும்; சுக்ரம் க்ஷீணித்திருக்கும்; குரல் க்ஷீணிக்கும்; ஜாட ராக்னி மந்தப்பட்டிருக்கும்; நாசி சிரஸ் நேத்திரம் செவி இவற் றைப் பற்றிய ரோகங்கள் அடிக்கடியும் உண்டாகும்; குடலிரைத்தல், வயிற்றுப்பொருமல், மார்பினுள் ஏதோ பூசப்பட்டது போன்ற உணர்ச்சி, அரோசகம் இவற்றால் வருந்துவான்.'' சரகத்தில் வேறு சில இலக்ஷணங்களும் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. எல்லா அர்சஸ்ஸுகளுமே மூன்று தோஷங்களாலும் உண்டாவதா கக் கூறப்பட்டாலும் மற்ற அர்சஸ்ஸுகளில் வாத பித்த கபங்கள்

பித்தார்சஸ்:—பித்தம் அதிகரித்துண்டான மூலமுளைகள் சிவப்பு மஞ்சள் கறுப்பு இந்நிறங்களுடன் முனையில் நீலமாகவும் காணப் படும்; மேலும் தெளிவான இரத்தக்கசிவுடன் சவர்நாற்ற முள்ளவை யாய், மெலிந்து மிருதுவாய், நீண்டு தளர்ந்தவையாய், கிளியின் நாக்கு-கல்லீரல்துண்டு அட்டையின் முகம் இவற்றைப் போன்றவை யாய், அழற்சி-அதிக வெப்பம்-ஜ்வரம்-வியர்வை-நாவறட்சி-மூர்ச்சை - அரோசகம் - மோஹம் இக்கோளாறுகளுண்டுபண்ணு பவையாய், வெகு உஷ்ணமா யிருக்கும். இவ்வர்சோரோகியின் மலம் திரவமாகவும், கறுப்பாகவும், உஷ்ணமாகவும், மஞ்சள் நிற மாகவும், இரத்தம் போன்றதாகவும், ஆமதோஷமுள்ளதுமா யிருக்கும். முளைகள் வாற்கோதுமைபோல மத்தியில் பருத்திருக் கும். இப்பிணியாளியின் சர்மம் நகம் முதலியவை [1] இலைப்பசுமை அல்லது மஞ்சள் நிறங்கொள்ளும். 16—18.

கபார்சஸ்—கபம் அதிகரித்துண்டான மூலமுளைகள் ஆழ்ந்து விசாலமாகப் பரவியும், வேர்களோடு அடர்த்தியாகவும், அதிக வலி தருபவையாகவும், வெண்மையாகவும், நன்கு நீண்டும், தடித்தும், ஸ்நிக்த்தமாகவும், விறைத்துக்கொண்டும், உருட்சியாகவும், குரு வாகவும், அசைந் தாடாதவையாகவும், பிசுபிசுப் புள்ளவையாகவும், ஸ்திமிதமாகவும், வழவழப்பாகவும், அதிக தினவுள்ளவையாகவும், அடிக்கடி பரிசிக்க இதமானவையாகவும், மூங்கிற்குருத்து-பலா வித்து-பசுவின் முலை இவற்றைப் போன்றவையாகவும், துடை யிடுக்குகளில் பிடிப்புண்டாக்குபவையாகவும், குதம் - வஸ்தி - நாபி இவற்றில் இசிவுண்டு பண்ணுபவையாகவும் இருக்கும். மேலும் இவ்வியாதியில் ச்வாஸம், காஸம், இயற்கைக்கு விரோதமான இரு தய சலனம், வாயில் உமிழ்நீர் சுரத்தல், அரோசகம், பீநஸம், பிரமேஹம், மூத்திர க்ருச்சிரம், தலைவலி, குளிர்ஜ்வரம், நபும்ஸகத் தன்மை, அக்னிமாந்த்யம், வாந்தி, வேறு ஆமதோஷ விகாரங்கள் இவை உபத்திரவங்களாகக் காணும். மேலும் வெளியாகும் மலம் கொழுப்பு போன்றும், கபத்துடன் கூடியும், அளவில் அதிகரித்தும், வயிற்றுக் கடுப்புடன் கூடியதுமா யிருக்கும்; இம்முளைகள் இரத்தக் கசிவு பெறுவதுமில்லை, உடைவதுமில்லை; இப்பிணியாளியின் சர்மம் முதலியவை வெளிறியும் ஸ்நிக்த்தமாகவும் இருக்கும். 19—23.

ஸந்நிபாதார்சஸ்:—வாதார்சஸ் முதலிய மூன்றுக்குங் கூறிய இலக்ஷணங்கள் அனைத்தும் ஒருமிக்கக் கண்டால், அதை 'ஸந்நிபா

---

மூன்றும் ஏற்றத்தாழ்வான நிலைமையில் பிரகோபித்திருக்கும். ஸந்நி பாதார்சஸ்ஸிலோ தோஷங்கள் மூன்றும் ஸமபலமாகப் பிர கோபித்து கடுமையான ரோகத்தை உண்டுபண்ணும்.

1. முதலியவை யென்பதால், மூத்திரம், கண், வாய் இவை களும் குறிக்கப்படுகின்றன.

தார்சஸ்' என்றறிக. ஸஹஜார்சஸ்ஸின் இலக்ஷணங்களும் ஸந்நி பாதார்சஸ்ஸுக்கு ஒப்பானவையே. 23½.

இரக்தார்சஸ்ஸின் ஸாமாந்ய லக்ஷணம்:—இரத்தம் அதிகரித் துண்டான மூலமுளைகள் குதத்தில் கீலங்களைப் போன்று அடைத்துக் கொண்டிருக்கும்; பித்தார்சஸ்ஸின் இலக்ஷணங்களும் தோன்றும். ஆலம்விழுது போலவும், குன்றுமணி போலவும், பவளக்கொடி போலவும் கிளம்பியிருக்கும்; மலம் வெளிவருகையில், இறுகிய மலத்தினால் அம்முளைகள் நசுக்கப்பட்டு திடீரென்று இரத்தப் பெருக்குண்டாகும்; இரத்தம் மிகுதியாக வெளிப்படவே ரோகி தவளையைப் போன்ற தேஹ நிறம் பெற்று, தேஹநிறம், தேஹபலம், மனத்தென்பு, ஓஜோதாது இவை க்ஷயிக்க, இந்த்ரி யங்கள் கலக்கங்கொண்டு வருந்துவான்; மலம் கறுத்தும் கடின மாகவும் பசையற்றதாகவு மிருக்கும்; அபானவாயுவும் வெளி யாகாது. 24—27.

வாதஜ ரக்தார்சஸ்:—இரத்தார்சஸ்ஸில் முளைகளிலிருந்து வெளி யாகும் இரத்தம் தெளிவாகவும், இளஞ்சிவப்பாகவும், நுரையோடு கூடியதாகவும் இருந்து, இடுப்பு துடைகள் குதம் இவற்றில் நோவும் அதிக பலஹீனத் தன்மையும் உண்டானால், அவ்வர்சஸ் உண் டாவதற்கு ரூக்ஷகுணமும் காரணமா யிருந்தால் அதில் வாத தோஷம் அநுபந்தமா யிருக்கும். 28, 28½.

கபஜ ரக்தார்சஸ்[1]:—இரக்தார்சஸ்ஸில் மலம் உடைந்தும், வெளுத்தும், சிறிது மஞ்சளாகவும், ஸ்நிக்த்தமாகவும், குருவாகவும், குளிர்ந்ததாகவும் இருந்து, முளைகளிலிருந்து இரத்தம் தோய்ந்தும், நூல்போன்று வெண்மையாகவும், பிசுபிசுப்பாகவும் கசிந்து, குத த்வாரம் பிசுபிசுப்பாகவும் ஸ்தப்த்தமாகவு மிருந்து, அர்சஸ் உண்டாவ தற்கு குரு குணமும் ஸ்நிக்த்த குணமும் காரணமா யேற்பட்டிருந் தால் அதில் கபதோஷம் அநுபந்தமா யிருப்பதாகக் கற்றறிந்தவர் கருதுவர். 29, 30.

அர்சஸ்ஸின் பூர்வரூபம்:—அர்சோரோகம் பலமாக உண்டாவ தன் முற்குறிகள்: உணவு ஜீர்ணமாகாது, பலம் குறையும், வயிறு விம்மிச் சப்திக்கும், உடலிளைக்கும், அதிக தேக்கெறிவு உண்டாம், துடைகள் சுருங்கும், மலம் சொற்பமாகும். இது கிரஹணீரோகமோ- பாண்டுவோ-உதரரோகமோ வென்கிற ஸந்தேஹம் ஜனிக்கும். 31,32.

அர்சஸ்ஸில் உபத்திரவங்கள் உண்டாகக் காரணம்[2]:—ஐந்து

---

1. இரக்தார்சஸ் பொதுவாகப் பித்தார்சஸ்ஸுக்குச் சமான லக்ஷணமுள்ள தென்று முன்னமே கூறப்பட்டதால், பித்தஜரக்தார் சஸ் தனியே கூறப்பட வில்லை.

2. ஆஸநத்தில் மூலம் உண்டானால் எல்லாத் தேஹத்திலும் பல கோளாறுகள் காண்பதேன் என்கிற ஸந்தேஹம் இதனால் நிவர் ரணம் செய்யப்படுகிறது.

விதமான வாயுவும்,[1] ஐந்துவித பித்தமும்,[2] ஐந்துவித கபமும்,[3] குதத்திலுள்ள மூன்று வலிகள் என்கிற மடிப்புகளும் அர்சோரோகம் உண்டாகையில் மிகக் கோளாறடையும். ஆகவே, அர்சோரோகங்கள் துன்பமளித்து வேறு வியாதிகளையு முண்டுபண்ணும்; தேஹமெங்கும் தாபமளிப்பவையாகும்; பெரும் பாலும் கஷ்ட ஸாத்யமாகவும் ஆகின்றன. 33, 34.

ஸுகஸாத்யமான அர்சஸ்:—குதத்தின் வெளிப்புறத்து மடிப்பில் உண்டானதும், ஒரே தோஷம் கோளாறடைந்துண்டானதும், ஸமீப காலத்தில் உற்பத்தியானதுமான மூலரோகம் எளிதில் நிவ் ருத்திக்கக் கூடியதாகும். 35.

கஷ்டஸாத்யமான அர்சஸ்:—இரண்டு தோஷங்களால் உண்டா னதும், இரண்டாவது வலியில் கிளம்பியதும், ஒரு வருஷத்திற்கு மேற்பட்டதுமான மூலரோகம் வெகு கஷ்ட ஸாத்யமாகும். 36.

அஸாத்யமான அர்சஸ்ஸும் உபத்திரவங்களும்:—(1) ஸஹஜார் சஸ்ஸும், ஸந்நிபாதார்சஸ்ஸும், மூன்றும் வலியை ஆச்ரயித் துண் டாகும் அர்சஸ்ஸும் சிகித்ஸைக்கு வசப்படமாட்டா. (2) அதே அர்சஸ்ஸுகள் நான்கு பாதங்களும்[4] குறைவின்றி அமைந்து, ஜாட ராக்னியும் நல்ல நிலைமையிலிருந்து, ஆயுளும் இருந்தால் யாப்யங்க ளாகும்;[5] அவ்விதமில்லையேல் பிணியாளி பிழையான். (3)கையிலும்,

1. ஐந்து விதமான வாயு:—பிராணவாயு, அபாநவாயு, ஸமாந வாயு, உதாநவாயு, வியாநவாயு. இவற்றிற்கு மார்பு, குதம், நாபி, கண்டம், ஸர்வசரீரம் ஆக இவை முறையே ஸ்தாநங்களாம்.

2. ஐந்து வித பித்தம்:—ஆலோசகம், இரஞ்ஜகம், ஸாதகம், பாசகம், பிராஜகம். இவற்றிற்கு நேத்திரம், கல்லீரல், இருதயம், பக்வாசயம், சர்மம் ஆகிய அவயவங்கள் முறையே ஆச்ரயங்கள்.

3. ஐந்து வித கபம்:—அவலம்பகம், கிலேதகம், போதகம், தர்ப்பகம், சிலேஷகம். இவற்றிற்கு மார்பு, ஆமாசயம், நாக்கு, சிரஸ், ஸந்திபாகங்கள் இவை முறையே ஆச்ரயங்களாகும்.

4. வைத்தியன், ரோகி, பரிசாரகன், ஔஷதம் இவற்றிற்கு நான்கு பாதங்கள் அல்லது 'சதுஷ்பாதம்' எனப் பெயர். [1. திறமை யுள்ளவனுகவும், யோக்யதையிற் சிறப்புற்ற ஆசிரியரிடம் வித்யாப் யாஸம் செய்தவனுகவும், வேலைகளை அநுபவப்படி கற்றறிந்தவனுக வும், முற்றிலும் பரிசுத்தனுகவும் வைத்தியன் இருக்கவேண்டும். 2. செல்வம், வைத்தியனுக்குக் கீழ்ப்படிந்து நடத்தல், ஞாபகசக்தி, தைரி யம் இவை ரோகிக்கு அவச்யமான நான்கு லக்ஷணங்கள். 3. ரோகி யினிடம் அன்பு, பரிசுத்தமாயிருத்தல், திறமையுடன் வேலைகளைச் செய்தல், புத்திசாலித்தனம் இவை பரிசாரகனுக்கு அவச்யமான நான்கு குணங்கள். 4. அநேகவித முறைகளாகப் பக்குவம் செய் யக் கூடியதாயிருத்தல், அநேக குணங்கள் அடங்கியதாயிருத்தல், சிறந்த பூமியிலுண்டாய் தகுந்தவாறு ஸம்ஸ்கரிக்கப்பட்டிருத்தல், அந்தந்த வியாதிக்கு ஏற்றதாயிருத்தல் ஆக இவை ஔஷதத்திற்கு அவச்யமான நான்கு குணங்கள்.]

5. யாப்யம்—வியாதி அஸாத்யமாயிருந்தும், சீக்கிரத்தில் பிராா

பாதத்திலும், முகத்திலும், நாபியிலும், குதத்திலும், பீஜங்களிலும் வீக்கம், இருதயத்திலும் விலாப்பக்கங்களிலும் வலி; இக் குறிகள் உள்ள மூலவியாதியும் அஸாத்யமாம். மேலும் இருதயத்திலும் பார்ச்வங்களிலும் வலி, மயக்கம், வாந்தி, உடல்வலி, ஜ்வரம், நாவறட்சி, ஆஸநத்வாரத்தில் வேக்காடு, அரோசகம், வயிற்றுவலி, அதிக இரத்தப்பெருக்கு, வீக்கம், அதிஸாரம் இவற்றுடன் கூடிய அர்சோரோகியும் க்ஷீணித்து உயிர் துறப்பான். 37—41.

குதத்தைத் தவிர்த்த அவயவங்களில் அர்சஸ்:—அந்தந்த அவயவங்களுக்குத் தகுந்தவாறு ஆண்குறிமுதலிய வேறிடங்களிலும்,[1] நாபியிலும் அர்சஸ்ஸுகள் உண்டாவதுண்டு. அவை மண்ணுணிப் பாம்பின் முகம் போன்றும், பிசுபிசுப்பாகவும், மிருதுவாகவும் இருக்கும். 42.

சர்மகீலம்:—வியாநம் என்கிற வாயு கபதோஷத்தைக் கிரஹித்து, வெளிப்புறத்து சர்மத்தில் கடினமாய் அசைவற்ற பெரிய அடைப்பான் போன்ற முளையை யுண்டுபண்ணும். அதை 'சர்மகீலம்' என்றறிக. (1) வாததோஷத்திலுலான சர்மகீலம் குத்தல் வலியுண்டு பண்ணும்; கடினமாகவும் இருக்கும். (2) பித்த தோஷத்திலுண்டான சர்மகீலத்தின் முகம் ஒருவாறு கருநிறமாகக் காணப்படும். (3) கபதோஷத்தாலான சர்மகீலம் கிரந்திபோன்றதாய், சர்மத்திற்குச் சமமான நிறமுள்ளதாயிருக்கும். 43, 44.

---

## 6. அக்னிமாந்த்ய-அஜீர்ண-விஷூசி-அலஸக விளம்பிகா நிதானம்*

நான்குவித ஜாடராக்னிகளும் அவற்றின் வேலைகளும்—குடலில் உணவுகளைப் பக்குவம் செய்வதற்கான அக்னியானது கபம் அதிகரிப்பதால் மந்தமாகவும்,[2] பித்தம் அதிகரிப்பதால் தீக்ஷ்ணமாகவும்,[3]

---

ணுபாயமுண்டாக்காமல் வெகு காலம் பிணியாளி பிழைத்திருக்கக் கூடிய வியாதி நிலைமை. [ஆகவே வியாதியின் அஸாத்ய நிலைமை இரண்டு விதம்—ஒன்று யாப்யம்: ஆயுள் மிகுதியால் காலங்கழித்தல். மற்றொன்று பிரத்யாக்யேயம்: சீக்கிரத்தில் பிராணுபாயமுண்டாகுமென்று கைவிடக் கூடியது.]

1. நாசி, செவி முதலிய வேறு அவயவங்களிலும் முளைகள் உண்டாகலாம். நாசியிலுண்டாவது நாசார்ஸ். செவியிலுண்டாவது கர்ணார்சஸ். லிங்கத்திலுண்டாவது லிங்கார்சஸ் என்றவாறு.

2. மந்தாக்னி-உணவை நன்கு ஜீர்ணிக்கப் போதிய சக்தியில்லாத ஜாடராக்னி.

3. தீக்ஷ்ணக்னி—மிதமிஞ்சிய உணவையும் ஜீர்ணம் செய்யும் கடுமையான ஜாடராக்னி.

* அக்னி மாந்த்யம், அஜீர்ணம், அலஸகம், விஷூசி, விளம்பிகா என்கிற குடலைப்பற்றிய ஐந்துவித வியாதிகள் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்படும்.

வாதம் அதிகரிப்பதால் விஷமமாகவும்,[1] மூன்று தோஷங்களும் இயற்கையான ஸம நிலைமையி லிருப்பதால் ஸமமாகவும்[2] இருக்கும். ஆகவே ஜாடராக்னி நான்கு விதம். விஷமமான ஜாடராக்னி வாதஸம்பந்தமான ரோகங்களையும், தீக்ஷ்ணமான ஜாடராக்னி பித்த வியாதிகளையும், மந்தமான அக்னி கப வியாதிகளையும் உண்டுபண்ணும். ஏற்றக் குறைவில்லாது இயற்கை யளவிலுள்ள ஜாடராக்னி ஸமாக்னி யெனப்படும்; தகுந்த அளவில் புஜிக்கப் பட்ட உணவு அவ்வக்னியினால் நன்கு ஜீர்ணம் செய்யப்படும். மேலும் மந்தமான ஜாடராக்னியை யுடையவன் வெகு சொற்ப அளவான உணவை யுட்கொண்டாலும் அது ஜீர்ணமாகாது. விஷமாக்னியான மனிதனுக்கோ ஆஹாரம் சில ஸமயம் நன்கு ஜீர்ணமாகும், சில ஸமயம் ஜீர்ணமாகாமலுமிருக்கும். உணவு சரியான அளவில் உபயோகிக்கப்பட்டாலும், அதிக அளவாக புஜிக்கப் பட்டாலும் எளிதில் ஜீர்ணமாய்விட்டால் அதை தீக்ஷ்ணமான ஜாடராக்னி[3] என்றறிக. இவர்களுக்குள் ஸமாக்னியாயிருப்பவனையே ஆரோக்கியத்திற் சிறந்தவன் என்பர். 1—4.

அஜீர்ணமும் அதன் பேதங்களும்:—கபம், பித்தம், வாதம் இம் மூன்றின் கோளாறால் முறையே ஆமம், விதக்தம், விஷ்டப்தம் என்று மூன்றுவித அஜீர்ணங்கள் உண்டாகும். இரஸதாதுவானது நன்கு இரத்தம் முதலியதாகப் பரிணமமடையாமல் நின்று, இரஸசேஷாஜீர்ணம் என்கிற நான்காவது அஜீர்ணத்தை உண்டாக்குவதாகச் சிலர் கூறுவர்.[4] உட்கொண்ட உணவு பக்குவமாவதற்கு

1. விஷமாக்னி—ஸமநிலைமை தவறிய ஏற்றத் தாழ்வான ஜாடராக்னி.

2. ஸமாக்னி—கோளாறடையாது இயற்கை நிலைமையிலுள்ள ஜாடராக்னி; இதுதான் உணவை நன்கு ஜீர்ணிப்பித்து, தாதுக்களைச் சம நிலைமையில் வைத்து தேஹத்தைப் பரிபாலிப்பது.

3. பஸ்மகம் என்கிற வியாதி தீக்ஷ்ணாக்னியினால் ஏற்படுகிறது. சரகர் கூறுகிறார்,—"ஒரு மனிதனுக்கு கபம் க்ஷீணித்து, பித்தம் மிகப் பிரகோபமடைந்து, வாத தோஷமும் பித்தத்திற்கு அனுகூலமாக விருத்தியாய் விட்டால், அப்பொழுது அப்பித்தம் ஜாடராக்னியை மிகவும் தீக்ஷ்ணமாகச் செய்ய, அப்பொழுது வாதத்துடன் கூடிய ஜாடராக்னி அதிக பலம் பெற்று உடலை வாட்டும். அடிக்கடி புஜித்தபோதிலும் உடனுக்குடனே உணவு ஜீர்ணமாய்விடும். மீண்டும் உடனே உணவு உட்கொள்ளப் படாவிட்டால் கடுமையான அந்த ஜாடராக்னி இரத்தம் முதலிய தாதுக்களை எரிக்க ஆரம்பிக்கும். அதனால் தேஹபலம் குன்றியும் போய், பலவித கோளாறுகள் ஏற்பட்டு ஒருக்கால் மரணமும் ஸம்பவிக்கும். உணவு வயிற்றில் விழுந்ததும் அமைதி யேற்பட்டாலும், அது அந்த க்ஷணமே ஜீர்ணமாய் விடுவதால் அடுத்தாற்போல அவன் கடும்பசியால் தவிப்பான். நாவறட்சி, இருமல், தேஹதாபம், மூர்ச்சை இவையும் காணும்."

4. "இரஸசேஷம் என்றால், அந்நரஸம் ஜீர்ணமானபின் ஜீர்ணமாகாமல் குடலில் தங்கிப்போன உணவு; அதனால் உணடாவது இரஸ

ஓர் இராப்பகல் தேவையென்றால், அதற்கிடையில் உள்ள அபக்வ நிலைமை ஐந்தாம் அஜீர்ணம் என்றும், திநபாகி[1] என அதற்குப் பெயரென்றும் சிலர் கூறுவர் ; இவ்வஜீர்ணம் கேடு விளைவிக்காது.[2] அன்றியும் தினந்தோறும் போஜனம் செய்தவுடனே உணவு ஜீர்ண மாகாத இயற்கை நிலைமையை பிராக்ருதாஜீர்ணம் என்கிற ஆறுவது அஜீர்ணம்[3] என்றும் சிலர் கருதுகிறார்கள். 5, 6.

அஜீர்ணத்தின் காரணம்:—ஏற்ற காலத்தில் ஸாத்மியமாகவும் இலகுவாகவும் உண்ட உணவுகூட அதிக தண்ணீர் அருந்துவதாலும், விஷமமான உணவுகளைப்[4] புஜிப்பதாலும், வேகங்களை அடக்குவ

---

சேஷாஜீர்ணம்'' என்று ஜெஜ்ஜடர். இப்படியானால் ஆம-விதக்த்த-விஷ்டப்த்தா ஜீர்ணங்களின் குறிகளுள் முக்கியமானவை சில இதில் காணவேண்டும். அப்பொழுது அம்மூன்றினும் இது வேறுபட்டதாக மாட்டாது. அம்லோத்காரம் என்கிற புளித்த தேக்கெறிவு முதலிய கோளாறு ஜீர்ணமாகாத உணவு குடலில் தங்கியிருக்கையில் உண் டாகவேண்டும். இரஸசேஷாஜீர்ணத்தில் இக்குறிகள் காண்பதில்லை யென்று ஸுசருதர் கூறுகிறார்:-''தேக்கெறிவு சுத்தமாயிருந்தும் உண வில் அபேக்ஷையுண்டாகாது; இருதயம் குருவாகத் தோற்றும்; உமிழ் நீர் அதிகமாய் ஊறும்; இது இரஸசேஷம் என்கிற நான்காவது அஜீர்ணம்.'' ஆகவே இரஸசேஷம் என்பது அன்னசேஷமாக மாட்டாது என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது. ஆகிலும், அன்ன சேஷம் மிகச் சொற்பமாயிருக்கையில், தேக்கெறிவு சுத்தமாயிருத்தலும் கூடும் ; எனவே இரஸசேஷம் என்றால் அன்னசேஷந்தான் எனப்படுகிறது. ''ஆஹாரம் குடலில் ஏற்றவாறு பக்குவமடையாமை யால் ஆமம், விதக்த்தம், விஷ்டப்த்தம், இரஸசேஷம் என்று நான்கு வித அஜீர்ணங்கள் உண்டாகும்'' என்று வேறு சில நூல்கள். "இரஸதாதுவில் ஜீர்ணமாகாத ஆஹாராம்சம் கலந்து விடுவதால் இரஸசேஷம் என்கிற அஜீர்ணம் உண்டாகிறது'' என்று கதாதரன். எவரது அபிப்பிராயம் எங்ஙனமிருப்பினும், இரஸதாது நன்கு பக்கு வமாகாமல் ஸம்பவிக்கும் ஓர் அஜீர்ண ரோகம் இரஸசேஷாஜீர்ணம் என்று கருதப்படுகிறது. இதில் மற்ற அஜீர்ணங்களுக்கு இருப்பது போல வாதாதி தோஷ விகாரங்கள் கிடையாது.

1. திநபாகி—அறுபது நாழிகையில் ஜீர்ணமாவது.

2. வயிற்றுப் பொருமல், பேதி, வாந்தி, வயிறுளைத்தல் முதலிய விகாரங்களற்றது எனக் கருத்து. காலம் தவறி பக்குவமாகியும் விகாரங்களை யுண்டுபண்ணுகதது.

3. உட்கொண்ட உணவு நன்கு ஜீர்ணமாகிற வரையில் அது ஒரு அஜீர்ண நிலைமையாகக் கருதப்படுகிறது. ஏனெனில் அது ஜீர்ண மாவதற்கு முன்பு மீண்டும் ஆஹார முபயோகிக்கக் கூடாது. ஆகி லும் அது எக்கோளாறையும் உண்டுபண்ணாத இயற்கை அஜீர்ணம் (பிராக்ருதா ஜீர்ணம்) ஆகும்.

4. விஷமமான உணவு—விஷமபோஜநம் அல்லது விஷமாசநம் எனப்படுகிறது. ''அளவு மீறியும், வெகு சொற்ப அளவாகவும், அகாலத்திலும் செய்யப்படும் போஜநம் விஷமபோஜநம் எனப் படுகிறது'' என்று பாவமிச்ரர்.

தாலும்,[1] பகல் நித்திரை முதலிய விபரீதமான நித்திரையாலும் நன்கு ஜீர்ணமாவதில்லை.[2] (பொருமை - பயம் - கோபம் பேராசை-வலி-தீனத்தன்மை-பகைமை இவற்றல் மனம் பீடிக்கப் படுகையில் புஜிக்கப்படும் உணவும் நன்கு ஜீர்ணமாவதில்லை.) 7.

ஆமாஜீர்ணம்—அவற்றுள் ஆமதோஷஸம்பந்தமான அஜீர்ணத்தில் தேஹம் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சி, வாயில் நீரூறுதல், கன்னங்களிலும் கண்களைச் சுற்றிலும் வீக்கம், புஜித்த உணவு அப்படியே புளிப்பில்லாத தேக்கெறிவுடன் மேல் நோக்குதல், ஆக இக்குறிகள் காணும். 8.

விதக்த்தா ஜீர்ணம்:—தலைச்சுற்றல், நாவறட்சி, மூர்ச்சை, பித்தம் அதிகரித்த பலவித விகாரங்கள், புகைந்து புளிப்பான தேக்கெறிவு, வியர்வை, தேஹதாபம் இக்குறிகள் விதக்த்தம் என்னும் அஜீர்ணத்தில் உண்டாகும். 9.

விஷ்டப்த்தாஜீர்ணம்: — வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், பலவித வாத ஸம்பந்தமான வேதனைகள், மலமும் அபாநவாயுவும் வெளிப்படாமை, உடல் விறைத்தல், மயக்கம், தேஹமெங்கும் வேதனை இக்குறிகள் விஷ்டப்த்தம் என்னும் அஜீர்ணத்திற் காணும். 10.

இரஸ சேஷாஜீர்ணம்:—இரஸ சேஷம் என்கிற அஜீர்ணத்தில் அன்னத்வேஷம், இருதயக் கலக்கம் போன்ற உணர்ச்சி, தேஹ பாரம் ஆக இக்குறிகள் உண்டாகும். 10½.

அஜீர்ணத்தின் உபத்திரவங்கள்:—மூர்ச்சை, பிதற்றல், வாந்தி, வாயில் உமிழ் நீர் அதிகமாயூறுதல், தேஹமிளைத்தல், தலைச்சுற்றல் இவை அஜீர்ணத்தினுல் உண்டாகக் கூடிய உபத்திரவங்கள்; அல்லது அதனுல் மரணமாவது நேரிடும்.[3] 11½.

அமிதபோஜனமும் அஜீர்ணமும் :— விஷயமுணருமல் மிருகம் போல அமிதமாக்ப் புஜிப்பவர்கள் அநேகவியாதிகளுக்குக்[4] காரணமான அஜீர்ணவியாதியை அடைவர். 12½.

---

1. வேகங்களை அடக்குவது—வேகநிரோதம் எனப்படுவது. (30-ம் பக்.)

2. அஜீர்ணஸாமாந்ய லக்ஷணம்—"மலம் அதிகமாக வெளியாதல் அல்லது முற்றிலும் கட்டிப் போதல், சோர்வு, அபாநவாயு அடைபடுதல், வயிறு விம்மிக் கொள்ளுதல், உடல் பாரமாயிருத்தல், தலைச்சுற்றல் ஆகிய இவை அஜீர்ணத்தின் பொதுக்குறிகள்."

3. கடுமையான அஜீர்ணம் மரணத்திற்கும் காரணமாகும் என்று விஜயரக்ஷிதன்.

4. அநேகம் என்பதால் விஷூசி, அலஸகம், விளம்பிகை முதலியவை குறிக்கப்படுகின்றன. அஜீர்ணத்திற்கு முற்கூறியவை ஸாமாந்ய காரணங்கள்; அமித போஜநம் அதற்கு விசேஷ காரணமாகும்.

அஜீர்ணம்—விஷூசி முதலியவற்றிற்குக் காரணம்:—ஆமம், விஷ்டப்த்தம், விதக்த்தம் என்று கூறப்பட்ட அஜீர்ணங்களால் விஷூசி, அலஸகம், விளம்பிகை யென்னும் வியாதிகளும் உண்டாகும்.[1] 13½.

விஷூசி:—வாயுவானது அவயவங்களை ஊசிகளால் குத்துவது போலத் தொந்தரவளிக்கும் வியாதி[2] "விஷூசி" யெனப்படுகிறது. அளவறிந்து, மிதமாகப் புஜிப்பவர் இவ்வியாதியைப் பெறமாட்டார்; இந்த்ரியங்களை அடக்கியாள முடியாத மூடர்கள், தோன்றியவாறு உணவுகளைத் தின்பதிற் பேரவா கொண்டு, இவ்வியாதிக்கு ஆளாகிறார்கள். இதில் மயக்கம், அதிஸாரம், வாந்தி, அதிக நாவறட்சி, வயுற்றுளைத்தல், தலைச்சுற்றல், காலின் ஆட்டுச்சதை முதலியவற்றில் வலிப்பு, கொட்டாவி, தேஹதாபம், உடல் கறுநிறங்கொள்ளல், நடுக்கல், இருதயத்தில் வேதனை, தலைவலி ஆக இக்குறிகள் காணும்.[3] 14—16.

அலஸகம்:—வயிறு மிகவும் விம்மிக்கொள்ளும்; சோர்வும் கூக்குரலும் உண்டாம்; அபாநவாயு கீழே தடையுற்று மேல் நோக்கிக் குடலில் ஓடும்; மலமும் அபாநவாயுவும் கட்டப்படும்; நாவறட்சியும் தேக்கெறிவும் அதிகமா யுண்டாம்; இவ்வித ரோகம் "அலஸகம்" எனப்படும்.[4] 17, 18.

---

1. "ஆமாஜீர்ணத்தால் விஷூசியும், விஷ்டப்த்தாஜீர்ணத்தால் அலஸகமும், விதக்த்தாஜீர்ணத்தால் விளம்பிகையும் முறையே உண்டாகும்" என்று கார்த்திகுண்டன் முதலியவர். "ஆனால் விதக்த்தம் என்பது விசேஷமாக பித்தத்தினாலும், விளம்பிகை யென்பது வாத-கபங்களாகலும் உதிப்பவை: ஆகவே-விதக்த்தாஜீர்ணம்விளம்பிகைக்குக் காரணமென்று கூறுவது யுத்தமல்ல. மூன்று அஜீர்ணங்களில் எதனாலும் எந்த அஜீர்ணமும் ஸம்பவிக்கலா மென்பது நியாயம். 'அஜீர்ணத்தினால் வாதம் முதலிய தோஷங்கள் பலமாகக் கோளாறடைவதால், அஜீர்ணத்தினால் பொதுவாக விஷூசி முதலிய எக்கோளாறும் காணக்கூடும்'' என்று வகுளகரர்.

2. உடலில் முக்கியமாக வயிற்றில் ஊசிகளால் குத்துவது போல் வேதனை உண்டாவதால் விஷூசி யெனப்படும்.

3. வாந்தியும் அதிஸாரமும் ஒரு மிக்கக் காணும் வியாதியே விஷூசி யாகும் என்று ஸுச்ருதர். ஆகவே உலக வழக்கத்திலும் இது வாந்தி-பேதி யெனப்படுகிறது. "மேல் நோக்கி வாந்தியும், கீழ் நோக்கி அதிஸாரமும் காணும். இதில் திரவதாதுவைத் தவிர மலரூபமான வஸ்து விசேஷமாகக் கலந்திராது. இதை விஷூசி யென்றறிக" என்று சரகர்.

4. அலஸகம் என்பது தோஷம் ஓரிடத்தில் தங்கி விடுவதைக் குறிப்பிடும் பெயர். "புஜித்த உணவு மேல் நோக்கியும் வருவதில்லை, கீழ்நோக்கியும் போவதில்லை, ஜீர்ணமுமாவதில்லை; ஆனால் ஆமாசயத்திலேயே மந்தித்துத் தங்கிக்கொண்டு தொந்தரவளிக்கும்; ஆகவே இவ்வியாதி அலஸகம் எனப்படுகிறது." என்று வாக்படர்.

விளம்பிகா:—உண்ட உணவு கபத்தினுலும், வாதத்தினுலும் விகாரமடைய, அது வாந்தி ரூபமாய் வாயினுலாவது, மலரூபமாய் குதத்தினுலாவது வெளிவராமல் வருந்த நேரிடும்; அந்த வியாதி "விளம்பிகை" எனப்படும்.[1] இது கஷ்ட ஸாத்யமான வியாதியென்று சாஸ்திரஞ்ஞர் கூறுவர். 19.

ஆமதோஷ-விஷூசிகளிற் காணும் அஸாத்யக் குறிகள்:—(1) ஆம தோஷம் தேஹத்தில் தங்குமிடங்களில் கோளாறுகளைப் பலவாறு உண்டுபண்ணி தொந்தர வளிக்கும்; மேலும் சரீரத்திற் பரவியுள்ள வேறு தோஷங்களின் விகாரங்களும் ஆமதோஷ ஸம்பந்தமான கோளாறுகளோடு கூடி பிணியாளியை வருந்தச் செய்யும். (2) எவ னுக்குப் பற்களும் உதடுகளும் நகங்களும் கருநிறங் கொள்கின்ற னவோ, ஞாபக சக்தி சொற்பமாய் விடுகிறதோ, வாந்தியும் மிக வருத்துகின்றதோ, கண்கள் ஆழ்ந்து விடுகின்றனவோ, குரல் குன்றிப்போகின்றதோ, தேஹமெங்கும் பூட்டுகள் மிகத் தளர்ந்து விடுகின்றனவோ அவ்விஷூசி ரோகி உயிர் துறப்பான். 20, 21.

உணவு நன்கு ஜீர்ணமாவதன் குறிகள்:—புளித்த தேக்கெறிவு முதலிய துர்க்குணங்கள் நிவ்ருத்தியாதல், உத்ஸாஹம் விருத்தி யாதல், தகுந்தவாறு அந்தந்த வேகங்கள் நன்கு வெளியாதல், தேஹம் இலகுவாதல், பசியும் தாஹமும் உற்றவா றுண்டாதல் ஆக இவை உணவு நன்கு ஜீர்ணமாவதன் குறிகளாம். 22.

---

## 7. கிருமி நிதாநம்

பலவகையான கிருமிகள்:—(1) பாஹ்யக்கிருமிகள் என்றும், ஆப்யந்தரக் கிருமிகள் என்றும்[2] கிருமிகள் பொதுவாக இருவகைப் படும். (2) வெளியில் சர்மம் முதலியவற்றின் அழுக்கிலும், கபத்தி லும், இரத்தத்திலும், குடலிலுள்ள மலத்திலும் ஆக நான்கிடங்களில் உற்பத்தியாவதால் கிருமிகள் ஜன்மபேதத்தைக்கொண்டு நான்கு வகையாகக் கூறப்படுகின்றன. (3) முற்கூறப்பட்ட கிருமிகள் பெயர்களைக் கொண்டு இருபது விதங்களாகும்.[3] $1\frac{1}{2}$.

பாஹ்யக் கிருமிகள்:—அவற்றுள் பாஹ்யக் கிருமிகள் சர்மாதி களிலுண்டாகும் அழுக்குகளில் உற்பத்தியாகும்; அவை உருவத்தி

---

1. அலஸகத்தில் சூலை முதலிய கோளாறுகள் வெகு கடுமை யானவை; விளம்பிகையில் அவ்விதமிரா. இது இவற்றின் பேதம்.

2. பாஹ்யக்கிருமிகள்—தேஹத்தின் வெளிப்புறத்தைப் பற்றிப் பெருகும் நுண்ணுயிர்கள். ஆப்யந்தரக் கிருமிகள்—உடலின் உட் புறத்தைப் பற்றி விருத்தியாகும் கிருமிகள்.

3. இங்கே ஸாதாரண கிருமிகள் இருபது விதங்கள் எனப்படு கிறது. இவற்றினும் அதிக ஸூக்ஷ்மமான கிருமிகள் இருபது விதங்களுக்கு மேற்பட்டனவாயுமுண்டு என்று சரகர் கூறுகிறார்.

லும் நிறத்திலும் எள்ளுக்குச் சமானமானவை; அவை உரோமங் களையும் அழுக்கு வஸ்திரங்களையும் பற்றி வளரும்; அநேகம் கால் களோடு உருவத்திற் சிறியவை. இவற்றுள் அதிக காலுளுள்ளவை யூகங்கள் என்றும்,[1] சிறியவையா யிருப்பவை லிக்ஷைகள் என்றும்[2] வழங்கப்படும். இக்கிருமிகள் தழும்புகள், கட்டிகள், சொறி, கொப்புளங்கள் இவற்றையுண்டுபண்ணும். 2, 3.

கிருமிக்குப் பொதுக் காரணம்:—புஜித்த உணவு ஜீர்ணமாகாம லிருக்கையிலேயே மீண்டும் உண்பது, திரவவஸ்துவை விசேஷ மாகப் பருகுவது, இனிப்பும் புளிப்புமான பண்டங்களையும், மாப் பண்டங்களையும், வெல்லத்தையும் அமிதமாய் உண்பது, அவற்றுடன் வியாயாமம் இல்லாமை, பகலில் தூங்குதல், விருத்தமான ஆஹாரங் களை[3] உண்பது ஆக இவற்றால் கிருமிகள் உற்பத்தியாகும். 4.

கிருமிக்கு விசேஷ காரணம்:—(1) உளுந்து, மாப்பண்டம், அம்ல ரஸம், இலவண ரஸம், வெல்லம், சில சாகங்கள் இவற்றைப் புஜிப் பதால் 'புரீஷஜங்கள்' எனப்படும் மலத்தை ஆச்ரயித்த கிருமிகளும், (2) மாம்ஸம், மத்ஸியம், வெல்லம், பால், தயிர், காடி இவற்றை மிதமிஞ்சி யுட்கொள்வதால் 'கபஜங்கள்' என்கிற சிலேஷ்மத்தைப் பற்றிய கிருமிகளும், (3) விருத்த போஜநம், அஜீர்ண போஜநம், சாகாஹாரம் இவை முதலியவற்றால் 'சோணிதஜங்கள்' என்கிற இரத்தத்தைப் பற்றிய கிருமிகளும் விருத்தி யாகின்றன. 5, 5½.

கிருமியுண்டா யிருப்பதற்கான பொது லக்ஷணம்:—ஜ்வரம், முகம் முதலியவற்றின் நிறம் கருத்தல், வயிற்றுவலி, இருதய வேதனை, தேஹமிளைத்தல், தலைச்சுற்றல், அன்னத்வேஷம், அதி ஸாரம் இவை கிருமியுண்டா யிருப்பதற்கான குறிகளாம். 6½.

கபஜக் கிருமிகள்:—கபத்தைப்பற்றி ஆமாசயத்தில் கிருமிகள் விருத்தியடைந்து, அப்பால் குடலெங்கும் பரவும். அவற்றுள் சில பெரிய நாடாக்களைப் போன்றும், சில மண்ணுணிப்பாம்பு போன் றும், வேறு சில முளைத்த தானியங்களின் முளைகள் போலவும் இருக் கும்; அவை மிக மெல்லியவைகளாய் நீண்டும் அல்லது மிகக் குறுகி யும், சில வெண்மையாகவும், வேறு சில சிவப்பாகவும் காணப் படும். அவை அந்த்ராதம், உதராவேஷ்டம், மஹாகுதம், சுரு, தர்ப்பு குஸுமம், ஸுகந்தம் என்று ஏழு விதமாம். இக்கிருமிகள் இருதயத் திற்கு அதிக துடிப்பு, அதிக உமிழ் நீர், அஜீர்ணம், அரோசகம், மூர்ச்சை, வாந்தி, ஜ்வரம், வயிற்றுப்பொருமல், இளைப்பு, வீக்கம், பீநஸம் இவற்றை உண்டு பண்ணும். 7—10½.

இரக்தஜக் கிருமிகள்:—இரத்தக் குழாய்களில் ஓடும் இரத்தத்தி

1. யூகம—பேன்.
2. லிக்ஷா (அல்லது லிக்ஷை)—ஈர் என்னும் பேன் முட்டை.
3. விருத்தாஹாரம்—29-ம் பக்கம் பார்க்க.

ளுள்ள ஜீவன்கள் அணுரூபமானவை ; அவை கால்கள் இல்லாமல் வட்ட வடிவமாய் செந்நிறமாயிருக்கும்; வெகு ஸூக்ஷ்மமாயிருப்ப தால் வெறுங்கண்ணுக்குப் புலப்படா; அவை கேசாதம், ரோம வித்வம்ஸம், ரோமத்வீபம், உதும்பரம், ஸௌரஸம், மாத்ரு என்று அறு வகைப்படும்; இவை குஷ்டத்திற்கு ஆதாரமானவை.[1] 11, 12.

புரீஷஜக் கிருமிகள் [2] :— குடலில் பக்வாசயத்தில் மலங்களில் கிருமிகள் உண்டாகும்; அவை கீழே குதத்தை நோக்கி ஊர்ந்து செல்லும்; அவையே முதிர்ந்து பெரிதானபின் ஆமாசயத்தை நோக் கிச் செல்லும். அச்சமயம் அதிக தேக்கெறிவும், பெரு மூச்செறித லும், மலத்திற்குச் சமமான துர் நாற்றமும் காணும். அவற்றுள் சில கிருமிகள் வெகு நீண்டவையாகவும், சில உருட்சியாகவும், சில வெகு மெல்லியவையாகவும், வேறு சில மிகப் பருமனாகவும் இருக் கும். அங்ஙனமே நிறத்திலும் சில கிருமிகள் கபிலமாகவும், சில பசு மையாகவும், சில வெண்மையாகவும், வேறு சில கறுவலாகவும் காணப்படும். அக்கிருமிகள் ககேருகம், மகேருகம், ஸௌஸுராதம், ஸசூலம், லேலிஹம் என்று ஐந்து விதங்களாகும். பேதி, வயிற் றுளைத்தல், வயிற்றுப் பொருமல், தேஹவாட்டம், தேஹம் கடின மாதல், தேஹம் வெளுத்துப் போதல், மயிர்ச் சிலிக்கை, ஜாடராக்னி மந்தமாதல், குதத்தில் தினவு இவையும் வேறு பல கோளாறுகளும் இக்கிருமிகளால் காணும். 13—16.

---

# 8. பாண்டு ரோக-காமலா-கும்பகாமலா-ஹலீமக நிதாநம்

## பாண்டு ரோகம்

பாண்டு ரோகம்-ஐந்து:—வாத-பித்த - கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு பாண்டு ரோகமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், மண் ணுண்பதால் ஒன்றும் ஆகப் பாண்டு ரோகங்கள் ஐந்து விதம். 1.

பாண்டுவின் நிதாந ஸம்ப்ராப்திகள்:—சக்தியை மீறி வியாயா மம் செய்தல், அம்ல-லவணரஸங்களையும், மதுவையும் அமிதமாய் உபயோகித்தல், மண்ணுண்பது, அதிகமாய் பகலில் நித்திரையுறுவது,

---

1. இரத்தத்திலேயே இயற்கையில் இக்கிருமிகள் வெகு ஸூக்ஷ்மமாயிருப்பதாகவும், இவை கோளாறடைந்தால் குஷ்டம் உண்டாகு மென்றும் சிலரது கருத்து. வேறு சிலர் இவ்வித கிருமி கள் குஷ்டமுண்டாவதற்கே காரணமானவை யென்றும், ஆகவே குஷ்டரோகிகளுடைய இரத்தத்தில் இவை ஏராளமா யிருக்கு மென் றும் கூறுவர். "எந்த குஷ்டமும் ஸந்நிபாத தோஷத்தையும் கிருமி களையும் காரணமா யுடையதாகும்" என்று ஸுச்ருதர்.

2. புரீஷஜக் கிருமிகள் — குடலிலுள்ள மலத்திலுண்டாகும் கிருமிகள்.

தீக்ஷ்ண வஸ்துக்களை யுபயோகிப்பது இவற்றால் வாதாதி தோஷங்கள் கோளாறடைந்து, இரத்தத்தைக் கெடுத்து, சர்மத்தை வெளிறச் செய்கின்றன [1]. 2.

பாண்டுவின் பூர்வரூபம்:—சர்மம் சிறிது வெடித்துப் போதல், மூக்கிலிருந்து சளியொழுகுதல், உடல் இளைத்தல், மண்ணுண்பதில் விருப்பம், கண்களைச் சுற்றி வீங்குதல், மலமும் மூத்திரமும் பசுமை நிறமாதல், உணவு ஜீர்ணமாகாமை இவை பாண்டு ரோகம் உற்பத்தியாவதன் முற்குறிகளாம். 3.

வாத பாண்டு:—சர்மம், மூத்திரம், கண்கள் முதலியவை ரூக்ஷமாகவும் கருநிறம் அல்லது சென்னிறமாகவும் ஆதல் [2], தேஹத்தில் குத்தல் வலி, நடுக்கல், வயிற்றுப் பொருமல், தலைச்சுற்றல் இவை முதலிய குறிகள் வாத ஸம்பந்தமான பாண்டு ரோகத்திற் காணும். 4.

பித்த பாண்டு:—பித்தக் கோளாறுலான பாண்டுவில் மூத்திரம், மலம், கண் இவை மஞ்சள் நிறமாகும்; தேஹ தாபமும், நாவறட்சியும், ஜ்வரமும், பேதியும் உண்டாகும்; உடல் மிகப் பசுமையாகும் [3]. 5.

கப பாண்டு:—வாயில் கோழை அதிகமாய் ஊறுதல், வீக்கம், சோம்பல், ஆலஸ்யம், உடல் பாரமாதல், சர்மம் - மூத்திரம் - கண்கள் முகம் இவை வெளிறிப்போதல் ஆக இவ்விகாரங்கள் கபதோஷக் கோளாறுலான பாண்டுவிற் காணும். 6.

ஸந்நிபாத பாண்டு:—மூன்று தோஷங்களும் பிரகோபமடைந்துண்டான பாண்டு ரோகத்தில் ஒவ்வொரு தோஷத்தின் குறிகளும் சேர்ந்து காண்பதோடு ஜ்வரம், அரோசகம், அதிகமான இருதயத்துடிப்பு, வாந்தி, நாவறட்சி, சோர்வு, உடலிளைத்தல், இந்த்ரிய க்ஷயம் ஆக இக்குறிகளும் காணும்; அது அஸாத்ய வியாதியாகும். 7.

ம்ருத்திகா பாண்டுவின் ஸம்ப்ராப்தி லக்ஷணங்கள்:—(1) மண்ணை உண்ணும் வழக்கமுடையவனுக்கு தோஷங்களில் ஏதேனும் ஒன்று பிரகோபமடையும். அவற்றுள் கஷாயரஸமுள்ள மண் வாதத்தையும், உவர்மண் பித்தத்தையும், இனிப்பான மண் கபத்தையும் பிரகோபிக்கச் செய்து, இரஸாதிதாதுக்களையும், ரூக்ஷத் தன்மையினால் புஜித்த உணவையும் வறளச் செய்யும். ம்ருத்திகை பக்வமடை

---

1. இரததம் என்பது உபலக்ஷணம்; மாம்ஸமும் இரஸமும் கூட கோளாறடைவதாக த்ருடபலனும் ஹாரீதரும் கூறுகிறார்கள்.

2. எல்லாப் பாண்டு ரோகங்களிலும் வெளுமை அதிக மிருப்பதால் இது பாண்டு எனப்படுகிறது. இங்கே கருநிற - சென்னிறங்கள் உண்டாவதாக மொழியப்படினும், ரோகத்தின் முக்கியலக்ஷணமான வெண்மை அதிகமிருக்கும்.

3. பாண்டு ரோகம் பொதுவாகப் பித்தத்தினாலேயே உற்பத்தியாவதாகக் கூறுவர். ஆகிலும் இதர தோஷஸம்பந்தமில்லாமல் கேவலம் பித்தத்தினால் உண்டாவது பித்த பாண்டு வாகும்.

யாதாகையால், அது ஸ்ரோதஸஸு-கள் என்னும் இரஸ-இரத்தக் குழாய்களை நிரப்பி, அவற்றில் அடைப்பையும் உண்டுபண்ணி, அது இந்த்ரியங்களுடைய சக்தியையும் சரீரகாந்தியையும், [1] வீர்யத்தையும், ஓஜோதாதுவையும் அழித்து, சீக்கிரத்தில் பாண்டு ரோகத்தையுண்டு பண்ணும். (2) ம்ருத்திகையினலுண்டாகும் பாண்டுரோகம் தேஹபலத்தையும், நிறத்தையும், ஜாடராக்னியையும் அழிக்கும். கண்மண்டலம், கன்னம், புருவம் இவை வீக்கங்கொள்ள, பாதங்களும் - நாபியும்-குதமும் வீங்க, குடலில் கிருமிகள் சேர, இரத்தம் கபம் இவற்ருேடு கூடிய மலம் அதிஸார ருபமாய்வெளியாகும். 8—11.

பாண்டுவின் அஸாத்ய லக்ஷணங்கள்:-(1)நீடித்துத் தொடர்வதும், மிக்க முதிர்ந்து போனதும், ஆகவே உரத்துப் போனதுமான பாண்டு ரோகம் சிகித்ஸைக்கு வசப்படாது. (2) அவயவங்கள் வீங்கிப்போய், பார்க்கப்படுபவை யெல்லாம் மஞ்சள் நிறமாகத் தோற்றினல் அப்பாண்டுவும் அஸாத்யமாம். (3) இறுகிய சொற்ப மலத்துடன் மஞ்சள் நிறமாகவும், கபத்துடன் கூடியதாகவும் [2] அதிஸாரமும் உண்டானல், அதுவும் அஸாத்யமாம். (4) அதிக தீநத்தன்மையடைந்து, மிகுதியாக வெண்மை நிறத்தினலேயே அவயவங்கள் பூசப்பட்டதுபோலத் தோற்ற, வாந்தி மூர்ச்சை நாவறட்சி இவற்ருல் வருந்தினலும் அவனும் பிழைக்க மாட்டான். (5) இரத்தம் க்ஷீணித்து உடலெல்லாம் வெண்மையானல், அவ்வித பாண்டுவும் அஸாத்யமே. (6) பற்களும், நகங்களும், நேத்திரங்களும் வெண்மையாகப்போய் வெண்ணிறமான மண்டலங்கள் பார்வையில் எங்கும் புலப்படுமானல் அப்பாண்டுரோகியும் பிழையான். (7) தேஹத்தின் முனைகள் [3] வீக்கங்கொண்டு, மத்திய அவயவங்கள் மிக்க இளைத்துப் போனலும், முனைபாகங்கள் இளைத்து மத்திய அவயவங்கள் வீக்கங்கொண்டாலும், குதம்-ஆண்குறி - பீஜங்கள் இவை வீங்கினலும் அவர்களையும் கைவிட வேண்டியதே. (8) மிக்க இளைத்துத் தவித்தும் பிரஞ்ஞையுற்றவன்போல் வீழ்ந்துமிருக்கும் பாண்டுரோகியையும் நற்பெயர் விரும்பும் வைத்தியன் ஏற்றுக் கொள்ளலாகாது. [4] (9) அதிஸாரம் ஜ்வரம் இவைகளுள்ள பாண்டுவும் அஸாத்யமாம். 12—15.

---

1. தேஜஸ் என்பதை சரீர காந்தி யென்று சிலரும், உடற் சூடு என்று சக்ரதத்தர் முதலியவர்களும் கூறுகிருர்கள்.

2. இதில் கபம் முக்கியமாய் ஸம்பந்தித்திருந்தும் மலம் இளகுவதற்குப் பதிலாய் இறுகலாகவும், அதிகமாவதற்குப் பதிலாகச் சொற்பமாகவும், வெண்மைக்குப் பதிலாக மஞ்சளாகவும் இருப்பது வியாதியின் பிரபாவத்தினல் என்றறிக.

3. கைகள், கால்கள், சிரஸ் இவை தேஹ முனைகள்.

4. இந்த நிலைமையை ஸுச்ருதர் பாலகம் என்றும், அதனல் பீடிக்கப்படுவனை பாலகி யென்றும் கூறுகிருர். "முனைகளில் வீங்கியும், இடையில் இளைத்தும் அல்லது முனைகளில் இளைத்தும் இடையில் வீங்கியும், குதம் ஆண்குறி இவற்றில் வீங்கியும், ஜ்வரம் அதிஸாரம்

## காமலா அல்லது காமாலை. [1]

காமாலையின் ஸம்ப்ராப்தி லக்ஷணங்கள் :— (1) பாண்டு ரோகி பித்தத்தை விருத்தி செய்யும் பதார்த்தங்களை அதிகமா யுபயோகித்தால், பித்தம் இரத்தத்தையும் மாம்ஸத்தையும் தஹித்து காமலாரோகத்தை யுண்டு பண்ணும். (2) இதில் நேத்திரங்கள், சர்மம், நகங்கள், முகம் இவை பசுமை நிறமடையும்; மலமும் மூத்திரமும் சிவப்பாக வேனும், மஞ்சளாக வேனும் மாறும்; தவளையைப்போல் தேஹவர்ணம் மாறும்; புலன்கள் மங்கலடையும்; உடல் அழன்று-பலம் குன்றி-இளைப்பதாலும், அரோசகத்தினாலும், உணவு ஜீர்ணமாகாமையாலும், அவன் துன்புறுவான். 16, 17.

கும்ப காமலா;—கோஷ்டத்தையும் [2] சாகைகளையும் [3] பற்றி, மிகப் பித்தமேலீட்டினால் உண்டாகும் இக்காமாலை காலக் கிரமத்தில் மிகவும் முதிர்ந்து, கஷ்டஸாத்யமான கும்பகாமலா என்பதாக[4] மாறும். 18.

காமாலையின் அஸாத்யக்குறிகள்:—மலம் கறுப்பாகப்போய், மூத்திரம் பசுமையாய், தேஹம் மிகவும் வீங்கி, கண்களும் முகமும் சென்னிறமடைந்து, வாந்தியும் மூத்திரமும் இரத்தங் கலந்து வெளியானால், தேஹம் துவளல், தேஹ தாபம், அரோசகம், நாவறட்சி, வயிற்றுப் பொருமல், சோம்பல், மூர்ச்சை இவற்றாலும் துன்பப்பட்டால், முற்றிலும் பசியற்றுப் போய் ஞாபகசக்தியுமிழந்தால் அக்காமாலை ரோகி சீக்கிரம் இறந்து விடுவான். 19, 20.

கும்ப காமலாவின் அஸாத்ய நிலைமை:—வாந்தி, அரோசம், இருதயம் அதிகமாகத் துடித்தல், ஜ்வரம், தேஹம் துவளல், அதிஸாரம், ச்வாஸம், காஸம் இவற்றால் துன்பப்படும் கும்பகாமாலை ரோகி பிழைக்க மாட்டான். 21.

ஹலீமகம்:—பாண்டுரோகத்தில் தேஹநிறம் மஞ்சளாகவும், கறும் பசுமையாகவும் ஆய், தேஹபலமும் உத்ஸாஹமும் க்ஷீணித்துப் போய், சோம்பல், ஜாடராக்னி மந்தித்தல், மிருதுவான ஜ்வரம்

---

முதலியவைகளால் மூர்ச்சித்து இறந்தவன் போலும் தோற்றும் ரோகி பாலகி யெனப்படுவான்'' என்று மற்றோர் ஆசிரியர்.

1. காமாலை பாண்டுரோகத்தின் உபத்திரவமாகவும் உண்டாகலாம், தனித்துச் சுதந்திரமாகவும் காணலாம்.

2. கோஷ்டம்—ஆமாசயம், அக்நியாசயம், பக்வாசயம், மூத்திராசயம், இரத்தாசயம், ச்வாஸாசயம், மலாசயம் என்பவை கோஷ்டங்களாம். இது விசேஷ பரிபாஷை. ஸாதாரணமாக இரைப்பை முதல் குதம் வரையிலுள்ள குடலே கோஷ்ட மெனப்படும்.

3. சாகைகள்—இரத்தம் முதலிய ஆறு தாதுக்கள், சர்மம் இவற்றின் பொதுப் பெயர். (வேறிடங்களில் கை கால்கள் சாகைகள் எனப்படும்.)

4. கும்பகாமாலை—வறட்காமாலை யென்று வழங்கப்படும்.

இவை தொடர்ந்து, ஸ்த்ரீகளிடம் ஆவலற்று, உடலுளைத்தல் கண்டு தேஹத்தில் அழற்சியும் நாவறட்சியும், அரோசகமும், தலைச்சுற்றலும் உண்டானால் அப்பிணியாளிக்கு "ஹலீமகம்" என்னும் வியாதி கண்டிருப்பதாய் அறிக. இது வாதமும் பித்தமும் மிகப் பிரகோபித்து உண்டாகிறது.[1] 22, 23.

## 9. இரக்த-பித்த நிதானம்*

இரக்த-பித்த நிதானமும் ஸம்ப்ராப்தியும்:—வெயிலில் அதிகமாய் நடமாடுதல், அதிகமாய் வியாயாமம் செய்தல், அதிக மனத்துயரம், மிகுதியாக வழி நடத்தல், மிதமிஞ்சிய புணர்ச்சி, தீக்ஷ்ண வஸ்துக்களையும், உஷ்ண வஸ்துக்களையும், க்ஷாரத் திரவ்யங்களையும்,[2] அம்லங்களையும், கடுரஸமுள்ள சரக்குகளையும் அமிதமா யுபயோகிப்பது இவற்றால் பித்தம் பிரகோபித்து அழன்றுபோய், அப்பித்தம் தன் கோளாறடைந்த குணத்தினாலேயே இரத்தத்தையும் சீக்கிரம் அழலச் செய்கிறது. பிறகு அவ்வித ரத்தம் மேலும் கீழும் அல்லது இரண்டு பக்கங்களிலுமாய் நாசி, செவி, கண்கள், வாய் இவற்றின் மூலமாகவும், ஆண்குறி அல்லது யோநி, குதம் இவற்றாலும், தேஹத்தில் மயிர்க்கால்கள் மூலமாகவும் வெளிப்படுகிறது. 1—3.

இரக்த-பித்தத்தின் பூர்வரூபம்:—ஜாடராக்னி மந்தமாதல், குளிர்ச்சியில் விருப்பம் அதிகரித்தல், தொண்டை உஷ்ணமாதல், வாந்தி, ச்வாஸத்தில் அயத்தின் வாஸனையேற்படுதல் ஆகிய இக்குறிகள் இரக்த-பித்தம் உண்டாவதை அறிவிக்கும் முற்குறிகளாம். 4

ச்லேஷ்மிக இரக்த-பித்தம்:—கபஸம்பந்தமான இரக்த - பித்தத்தில் இரத்தம் கனமாகத் தோய்ந்தும், வெளிறி ஸ்நிக்த்தமாகவும், பிசுபிசுப்பாகவும் வெளியாகும். 4¼.

வாதிக இரக்த-பித்தம்:—வாததோஷம் அதிகரித்த இரக்த-பித்தத்தில் வெளியாகும் இரத்தம் கறுஞ்சிவப்பாகவும், நுரைத்ததாகவும், ருக்ஷமாகவும் இருக்கும். 5.

பைத்திக இரக்த-பித்தம்:—பித்த ஸம்பந்தமான இரக்த - பித்தத்தில்[3] இரக்த-பித்ததோஷம் கஷாய நிறமாகவும், கறுப்பாகவும், பசு

1. பாண்டுவிலேயே லாகவகம் அல்லது அலஸம் என்கிற மற்றொரு நிலைமை கூறப்படுகிறது. [லாகவகம்—ஜ்வரம், உடலுளைத்தல், தலைச்சுற்றல், அக்னிமாந்த்யம், சோம்பல், தேஹம் க்ஷீணித்தல் இவை இதற்குக் குறிகள்.]

2. க்ஷாரத்திரவ்யங்கள்—யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம் முதலியன.

3. எல்லா இரக்த - பித்தங்களும் கோளாறடைந்த பித்தத்தினால் உண்டாகையில் பிரத்தியேகமாய் பித்தத்தினால் உண்டாகும் இரக்த-பித்தமென்றால், இதர தோஷ ஸம்பந்த மில்லாமல் பித்தக் கோளாறு ஒன்றையே ஆதாரமாகக் கொண்ட இரக்த-பித்தம் எனக் கருத்து.

* இரக்த-பித்தம்—பித்தம் வேக்காடடைந்து (காந்தலுற்று), இரத்தமும் அதனால் அழன்று, தேஹத்தில் ஏதேனும் ஒரு வழியால் அத்தோஷம் வெளியாதல்.

மூத்திரம் போன்றதாகவும், ஒருவித ஊதாநிறமாகவும், ஒட்டடை போன்றதாகவும், மைபோன்றதாகவும் இவ்வாறு பல வேறு நிறமுள்ளதாக வெளியாகும். 6.

த்வந்த்வ-ஸந்நிபாத இரக்த-பித்தங்கள்:—(1) இரட்டைத் தோஷங்களால் காணும் இரக்த-பித்தம் ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு தோஷங்களுடைய குறிகள் கலந்து உண்டாகும். (2) ஸந்நிபாத இரக்த - பித்தத்தில், ஒவ்வொரு தோஷத்தாலு முண்டாகும் குறிகளெல்லாம் ஒரு மிக்கச் சேர்ந்து காணும். 6½.

இரக்த-பித்தம் மூன்று வகைப்படும்:—(1) மேல் நோக்கி வெளியாவது ஊர்த்வக ரக்த-பித்தம் எனப்படும்; இது கபதோஷத்துடன் கூடியது. (2) கீழ் த்வாரங்களால் வெளியாவது அதோக ரக்த-பித்தம்; இதில் வாததோஷம் தொடர்ந்திருக்கும். (3) இரண்டு மார்க்கங்களாலும் வெளியாவது உபய மார்க்க கரக்த-பித்தம் எனப்படும்; இதில் வாத-கபங்கள் இரண்டும் தொடர்ந்திருக்கும். 7½.

இரக்த-பித்தத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—அவற்றுள் ஊர்த்வக ரக்த-பித்தம் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியது; அதோக ரக்த-பித்தம் யாப்யமாகும்; உபயமார்க்ககமான இரக்த-பித்தம் அஸாத்யமாம். மேலும் ஒரு மார்க்கத்தினால் வெளியாவதும், பல்சாலிக்குக் காணுவதும், அதிக வேகமில்லாமல் மிதமாய் வெளிப்படுவதும், சொற்ப காலத்திற்குள் உண்டானதும், ஸாகமான சீதள காலத்தில் தோன்றியதும், உபத்திரவங்களால் தொடரப் படாததுமான இரக்த-பித்தமும் எளிதில் நிவ்ருத்தியாம். ஒரு தோஷத்தினால் காணும் இரக்த-பித்தம் ஸாத்யமாகும்; இரண்டு தோஷங்கள் தொடருமானால் யாப்யம்; மூன்று தோஷங்களால் உண்டாவதும், அதிக வேகமாக வெளியாவதும், அக்னிமாந்த்யமிருக்கையிற் காண்பதுமான இரக்த-பித்தமும், வேறு வியாதிகளால் தேஹம் க்ஷீணித்தவனுக்கும், கிழவனுக்கும், அரோசகம் முதலியதால் உணவுண்ணுமை விருப்பவனுக்கும் உண்டாகும் இரக்த-பித்தமும் அஸாத்யமாகும். 8—10.

இரக்த-பித்தத்தில் உபத்திரவங்கள்:—பலமின்மை, ச்வாஸ-காஸம், ஜ்வரம், வாந்தி, வெறி, தேஹம் வெளுத்தல், தேஹ தாபம், மூர்ச்சை, உணவு கடுமையாகக் குடலில் புளித்துக் காந்தலுறுதல், எப்பொழுதும் மனதில் அதைர்யம், இருதயத்தில் அபரிமித வேதனை, நாவறட்சி, பேதியாதல், சிரஸ்ஸில் தாபம், நாசியினால் சீழைச் சிந்துதல், அன்னத்வேஷம், அஜீர்ணம் ஆக இவை இரக்த-பித்தத்திற் காணும் பலவேறு விகாரங்களும் உபத்திரவங்களுமாம். 11.

இரக்த-பித்தத்தின் அஸாத்ய லக்ஷணங்கள்:—இதில் வெளியாகும் இரக்த-பித்த தோஷம் மாம்ஸம் கழுவிய தண்ணீர் போலவும், கொதிக்க வைத்துப் பழுதடைந்த இரத்தம் போலவும், சேறு கலந்த தண்ணீர் போலவும், கொழுப்பும் சீழும் இரத்தமும் கலந்த தோஷம் போலவும், அல்லது யக்ருத் என்கிற கல்லீரல் போலவும்,

பழுத்த நாவற்கனி போலவும், கறுப்பாகவும், அதிக நீலமாகவும், அதிக சவநாற்றமுடையதாகவும், இந்திரதனுஸ்ஸுக்குச் சம்மான காந்திகளைப் பெற்றதாகவும் இருக்குமானால் அது அஸாத்ய மென்றறிக. மேலும் இரக்த-பித்த ரோகியானவன், தான் நோக்கும் வஸ்துக்களையும், ஆகாயத்தையும் இரத்தநிறமாகவே கண்டால் அவனுக்குண்டாயுள்ள வியாதியும நிச்சயமாய் அஸாத்யமாம். அன்றியும் மிகுதியாக இரத்தத்தைக் கக்குபவனும், இரத்தம் போன்று மிகச் சிவந்த நேத்திரங்களையுடையவனும், பார்க்கப்படுவதை யெல்லாம் இரத்தமயமாகவே காண்பவனும் ஜடிதியில் உயிரிழப்பான். 12—14

## 10. இராஜயக்ஷ்ம-க்ஷதக்ஷீண நிதானம்*

### இராஜயக்ஷ்மா

இராஜ யக்ஷ்மாவின் காரணம்:—வேகங்களைத் தடுப்பது,[1] தாதுக்கள் க்ஷீணமடைவது, ஸாஹஸமான கடும் வேலைகளைச் செய்வது, விஷமமான உணவுகளைத் தின்பது[2] ஆக இந்த நான்கு முக்கியமான காரணங்களால் மூன்று தோஷங்களும் கோளாறடைந்து இராஜயக்ஷ்மா என்கிற க்ஷயரோகம்[3] உண்டாகிறது 1.

இராஜயக்ஷ்ம ஸம்ப்ராப்தி:—முக்கியமாக கபமும்,[4] ஸாதாரணமாய் மற்றத் தோஷங்களும் பிரகோபித்து, இரஸதாது ஓடுவதற்கான ஸ்ரோதோமார்க்கங்கள் தடுக்கப்படுவதாலும், அதிகமாகச் சிற்றின்பத்தில் ஈடுபட்டு சுக்ரதாது க்ஷீணிப்பதாலும் மற்றத் தாதுக்கள் அனைத்தும் கிரமமாக க்ஷீணித்து[5] அம்மனிதன் முற்றிலும் சுஷ்கித்து விடுகிறான். 2.

---

* இராஜயக்ஷ்மா—க்ஷயம் என்று வழங்கப்படும் வியாதி. க்ஷதக்ஷீணம்—இதற்கே உரக்ஷதம் என்றும் பெயர்; இது ச்வாஸாசயத்தைப் பற்றிய கழலைரோகம்,

1. வேகங்களைத் தடுப்பது—அபானவாதம், மலம், மூத்திரம் இவைகளின் வேகத்தை அடக்குதல். "ஏதேனும் முகாந்தரத்தினால் அபானவாதம், மூத்திரம், மலம் இவற்றின் வேகம் தடுக்கப்படுமானால் அது யக்ஷ்மாவுக்குக் காரணமாகும்" என்று சரகர்.

2. "பலவேறு உணவுகளை நியமமின்றி யுண்கிறவர்களுக்கு வாத தோஷம் முதலியவை வைஷம்ய மடைந்து, போஷணைத்திரவ்யம் செல்லும் மார்க்கங்களான ஸ்ரோதஸ்ஸுகளை அடைத்து, தாதுக்கள் போஷிக்கப்படாமையால் மிகக் கோளாறடைய அத்தோஷங்கள் க்ஷயத்தை உண்டு பண்ணுகின்றன" என்று சரகர்.

3. இதற்கே சோஷம், யக்ஷ்மா என்றும் பெயர். ஆனால் தாதுக்களின் ஸ்தாரண இளைப்பு சோஷம் எனப்படும்.

4. க்ஷயரோகத்தில் மிகுதியாக கபதோஷம் கோளாறடைவதும், அதனாலேயே ச்வாஸாசயம் மிகக் கெடுவதும், விகாரமடைந்த கபதோஷம் அதிகமாய் ஸ்ரவிப்பதும் இயல்பு.

5. இரஸம், இரத்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, மஜ்ஜா, சுக்ரம் என்கிற ஸப்ததாதுக்களால் ஆனது தேஹம். இதில் முதலில்

இராஜயக்ஷ்ம பூர்வரூபம்:--ச்வாஸக் கோளாறு, உடல் வேதனை, கோழை ஊறுதல், தவடை சுஷ்கித்தல், வாந்தி, பசியின்மை, வெறி, பீநஸம், காஸம், அதிக நித்திரை இவ்விகாரங்கள் க்ஷயம் உண்டாவதற்கு முன்பு தோன்றும்; அம்மனிதன் கண்கள் வெளிறி, இறைச்சியுண்பதில் அதிக விருப்பத்தையும், புணர்ச்சியில் அதிக ஆவலையும் பெறுவான். மேலும் ஸ்வப்னத்தில் காகம், கிளி, ஸல்லகி யென்கிற பக்ஷி, மயில், கழுகு இப்பறவைகளும், குரங்குகளும், ஓணான்களும் தன்னைச் சுமந்துகொண்டு போவதாக அல்லது தீண்டுவதாகவும் தோற்றும்; வற்றிப்போன நதிகளையும், உலர்ந்தும், காற்று - புகை - காட்டுத்தீ இவைகளால் அழிக்கப்பட்டும் கிடக்கும் விருக்ஷங்களையும் அவன் ஸ்வப்னத்திற் காண்பான். 3, 4.

இராஜயக்ஷ்மாவின் ஸாமாந்ய லக்ஷணம்: — தோள்கள் விலாப் பக்கங்கள் இவற்றில் வேக்காட்டுடன் கூடிய வேதனை, கைகளிலும் பாதங்களிலும் எரித்தல், உடலெங்கும் ஆச்ரயித்த ஜ்வரதாபம் இவை இராஜயக்ஷ்மாவிற் காணும் பொதுக் குறிகளாம்.[1] 5.

இராஜயக்ஷ்மாவின் பதினொருவித விசேஷ லக்ஷணங்கள்:—(1) இராஜயக்ஷ்மாவில் வாததோஷம் அதிகரித்தால் குரல் பேதித்துப் போதல், வயிற்றுளைத்தல், தோள்கள் விலாப்பக்கங்கள் இவை சுருக்கங்கொள்ளல் இக்கோளாறுகள் காணும். (2) பித்ததோஷம் அதிகரித்த இராஜயக்ஷ்மாவில் ஜ்வரம், உடலழற்சி, அதிஸாரம், இரத்தம் வெளியாதல் ஆகிய விகாரங்கள் தோன்றுல். (3) கபதோஷம் அதிகரித்த யக்ஷ்மாவில் சிரஸ் பாரமாயிருப்பதாகத் தோற்றல், உணவில் விருப்பமின்மை, காஸம், தொண்டை பிளக்கப்படுவது போன்ற வேதனை இக்கோளாறுகள் உண்டாகும். 6, 7.

இராஜயக்ஷ்மாவின் அஸாத்ய லக்ஷணங்கள்:—இராஜயக்ஷ்மாவில் முற்கூறிய பதினொரு குறிகளுமோ அல்லது அவற்றுள் ஆறு குறிகளோ[2] ஒருமிக்கக் காணுமாறுலும், காஸம், அதிஸாரம், விலாப் பக்க வலி, தொண்டை வலி, அரோசகம், ஜ்வரம் இவையாவது, காஸம்-ச்வாஸம்-இரக்தவாந்தி இம்மூன்றும் சேர்ந்திருந்தாலும் அவ்வித க்ஷயரோகிக்கு சிகித்ஸை செய்ய நற்பெயரில் விருப்பமுள்ள வைத்தியன் பிரவ்ருத்திக்கக் கூடாது. ஆகவே ஸகல லக்ஷணங்க

இரஸதாது க்ஷீணித்து, பிறகு போஷணையின்மையினுல் இரத்தம் முதலிய தாதுக்கள் க்ஷயிப்பது அநுலோமக்ஷயம். சுக்ரதாது க்ஷயித்து, கிரமமாக அதற்கு முன்புள்ள மஜ்ஜாதிதாதுக்கள் க்ஷீணமடைவது விலோமக்ஷயம். இவ்விருவித க்ஷயங்களுக்கும் முறையே இவை ஸம்ப்ராப்திகிரமங்களாம்.

1. போஜன் முதலிய வேறுசிலர் "காஸம், ஜ்வரம், இரக்தபித்தம் ஆகிய மூன்றும் இராஜயக்ஷ்மாவின் பொதுக்குறிகள்" என்கிறுர்கள்.

2. அன்னத்வேஷம், ஜ்வரம், ச்வாஸம், காஸம், இரத்தம் கக்குதல், குரல் மாறுபடுதல் இவை ஸுச்ருதர் கூறும் ஆறு குறிகளாம்.

ளோடும் கூடியதாகவோ, அல்லது அதிற் பாதியான ஆறு லக்ஷ ணங்க ளுள்ளதாகவோ, அல்லது காஸம் ச்வாஸம் இரத்தம் கக்குதல் இம்மூன்று குறிகளோடு கூடியதாகவோ காணப்படும் ரோகத்திற்குச் சிகித்ஸை செய்வதிற் பிரயோஜனமில்லை; மற்ற எந்த லக்ஷணங்கள் இருந்த போதிலும் நிவாரணம் செய்யக்கூடிய தேயாம்.[1] அன்றியும் அமிதமாகப் புஜிப்பவனும், மிக க்ஷீணித்து வருபவனும், அதிஸாரத்தி னால் வருந்துபவனும், பீஜமும் வயிறும் வீங்கியவனும், கண்கள் வெளுத்துப் போனவனும், அன்னத்தை வெறுப்பவனும், ஊர்த்வச் வாஸத்தினால் வருந்துபவனும், கஷ்டப்பட்டு அதிகமாய் மூத்திர விஸர்க்கம் செய்பவனுமான யக்ஷ்மரோகியும் பிழைக்கமாட் டான். 8—12.

**இராஜயக்ஷ்மாவில் ஸுகஸாத்யநிலைமைகள்:** — ஜ்வரம் தொட ராததும், பலசாலி-பலமான சிகித்ஸைகளைத் தாங்குமியல்புள்ளவன்-தைரியசாலி-நல்ல ஜாடராக்னியுடையவன்-பருமனான தேஹமுள்ள வன் ஆகியவர்களுக்குக் காணுவதுமான இராஜயக்ஷ்மா எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியதாம். 13.

## சோஷம்

**ஏழுவித சோஷங்கள்:**—வியவாய சோஷம், சோக சோஷம், ஜரா சோஷம், வியாயாம சோஷம், அத்வ சோஷம், விரண சோஷம், உரக்ஷத சோஷம் என்கிற ஏழு சோஷ வியாதிகளின்[2] இலக்ஷணங்கள் அடியிற் கூறப்படுகின்றன. 14.

**வியவாய சோஷம்:**—வியவாயம் என்கிற மிதமிஞ்சிய புணர்ச்சி யினாலான க்ஷயம் சுக்ரக்ஷயக் குறிகளுடன்கூடி[3] பிணியாளியை வருத்தும்; தேஹம் மிக்க வெளிறிப்போய், சுக்ரம் முதல் இரஸம் வரையிலுள்ள தாதுக்கள் கிரமமாக விலோமமாய் க்ஷயிக்கும். 15.

**சோக சோஷம்:**—இவன் எப்பொழுதும் எதையேனும் நினைத்து

---

1. "வாதரோகம், அபஸ்மாரம், குஷ்டம், பீஜரோகம், புராண ஜ்வரம், குல்மம், மதுமேஹம், இராஜயக்ஷ்மா இந்த ரோகங்களில் சரீரகனமும் தசைகளும் க்ஷீணித்தால் அஸாத்யமாகும்'' என்று சரகர்.

2. இவ்வேழும் கேவலம் அந்தந்த தாது முதலியதின் பலமான இளைப்பால் உண்டாகுபவை. சோஷ வியாதியில் சில தோஷங் களுடைய லக்ஷணங்களைத் தவிர மூன்று தோஷங்களுடைய எல்லாக் குறிகளும் காணுவதில்லை. ஆகையால் இவ்வித வியாதிகள் தாது க்ஷயங்கள் என்று மாத்திரம் கூறப்படுமேயன்றி இராஜயக்ஷ்மா வென்று வழங்கப்படுவதில்லை.

3. சுக்ரக்ஷயத்திலுண்டாகும் முக்கியமான குறிகள் பின்வரு மாறு:—'சுக்ரக்ஷயத்தில் ஆண்குறி பீஜங்களில் வேதனை-புணர்ச்சியில் சக்தியின்மை- சுக்ரம் சிறிதும் ஸ்ரவிக்காமை அல்லது மிகச்சொற்ப மாக ஸ்ரவித்தல் அல்லது சுக்ரத்திற்குப் பதிலாக இரத்தம் ஸ்ரவித்தல் இவை குறிகளாம்' என்று ஸுச்ருதர்.

நினைத்துக் கவலையுறுவான்; அவயவங்கள் தளர்ந்து, சுக்ரக்ஷீணம் போன்ற மற்றக் கோளாறுகளாலும் வருந்துவான்.[1] 15½.

ஜரா சோஷம்[2]:—கிழத்தனத்தினாலான க்ஷயத்தில் சுக்ரம், புத்தி, தேஹவன்மை, நேத்திரம் முதலிய இந்த்ரியங்கள் இவை க்ஷீணிக்கும்; நடுக்கமும், அரோசகமும் உண்டாகும்; குரல் உடைந்த வெண்கலத்தைத் தட்டும் சப்தம் போன்றிருக்கும்; கபமில்லாமலே நாசியைச் சிந்துவான்; தேஹம் பாரமாகும்; புறட்டல் அரட்டல்களால் பீடிக்கப்படுவான்; வாயிலும், நாசியிலும், கண்களிலும் நீர் ஊறும்; மலம் இறுகிச் சுஷ்கிக்கும்; தேஹம் காந்தி மழுங்கி ரூக்ஷமாகும். 16—17½.

அத்வ சோஷம்:—சக்திமீறி வழி நடப்பதாலான சோஷத்தில் அவயவங்கள் சோர்ந்துவிழும்; வறுக்கப் பட்டதுபோல் தேஹநிறம் கோளாறடையும்; அவயவங்கள் உணர்ச்சி யிழக்கும்; க்லோமம், தொண்டை, வாய் இவை வறட்சியுறும். 18½.

வியாயாம சோஷம்:—வியாயாம மென்னும் தேஹவுழைப்பினால் உண்டாகும் சோஷத்தில் அத்வசோஷத்திற்குக் கூறிய லக்ஷணங்களே பெரும்பாலும் காணும்; மேலும் இரக்தப் பெருக்கைத் தவிர்த்து உரக்ஷதத்தின் மற்றக் குறிகளும் உண்டாகலாம். 19.

விரண சோஷம்:—விரணம் உண்டானவனுக்கு இரத்தம் மிகவும் க்ஷீணித்துப் போவதாலும், பலவித வேதனைகளாலும், உணவை உட்கொள்ளாமற் போவதாலும் ஒருவித க்ஷயம் உண்டாகும்; அது மிகவும் அஸாத்யமாகக் கருதப்படுகிறது. 20.

## க்ஷத-க்ஷீணம்[3]

உரக்ஷத நிதானம்:—வில் முதலிய ஆயுதப்பயிற்சியால் மிக்க ஆயாஸப்படுதல், பெரும் சுமையைச் சுமத்தல், பலிஷ்டர்களோடு த்வந்த்வயுத்தம் செய்தல், மேடுபள்ளமான உயர்ந்த பிரதேசத்தினின்று விழுதல், ஓடுகிற விருஷபம் அல்லது குதிரை அல்லது சிரமப்பட்டு அடக்கக்கூடிய வேறு மிருகத்தை அடக்குதல், பாறை-பெரிய மரக்கட்டை - கனத்த கருங்கல் இவற்றை யெடுத்து வீசி யெறிதல், எதிரிகளை பலமாகத் தாக்குதல், மிகவும் உரத்துப் படித்தல், நெடுந்தூரம் ஓடுதல், பெரிய ஆறுகளை நீந்திக் கடத்தல், குதிரைகளோடு விரைந்தோடுதல், வலிய எழும்பிக் குதித்தல், வேகமாகக் கூத்தாடுதல், கடுமையான வேறு காரியங்களால் மிகவும் ஆயாஸப்படுதல், ஸ்த்ரீகளிடம் மிதமிஞ்சி சேருதல், ரூக்ஷமாகவும் சொற்பமாக

1. "சுக்ரம் க்ஷயித்துப் போவதைத் தவிர சுக்ரக்ஷீணஸம்பந்தமான மற்றக் கோளாறுகளோடு கூடியது" என்று ஸுச்ருதர்.

2. ஜரா சோஷம்-கிழத்தனத்திலேற்படும் க்ஷயம்.

3. க்ஷதம்—விரணம் உண்டாவது. பிறகு அச்சிதைவை ஆதாரமாகக்கொண்டு ஏற்படும் க்ஷயத்திற்கு க்ஷீணம் என்ப் பெயர். ஆகவே இவ்விரண்டுக்கும் ஒருங்கே க்ஷத-க்ஷீணம் எனப்பெயர் வழங்கப்படுகிறது. க்ஷதமே உரக்ஷதம் என்றும் கூறப்படும்.

வும் அல்லது அமிதமாகவும் புஜித்தல் ஆகியவற்றல் மார்பினுட்புறம் சிதைவடைய, அதனல் இக்கடுமையான வியாதி ஸம்பவிக்கின்றது.[1] 21—25.

**உரக்ஷதத்தின் லக்ஷணுதிகள்:—**இந்த வியாதியில் மார்பு விறிந்து போவது போலவும், பிளக்கப்படுவது போலவும், சிதைக்கப்படுவது போலவும், நசுக்கப்படுவது போலவும் கடுமையான நோவுண்டாகும். அப்பால் விலாப்பக்கங்கள் சுஷ்கிக்கும்; அவயவங்கள் நடுக்கங் கொள்ளும்; தேஹத்தின் சுறுசுறுப்பும், வன்மையும், காந்தியும், உணவுகளில் விருப்பமும், ஜாடராக்னியும் கிரமமாகக் குன்றிப் போம்; ஜ்வரம், மனத்துயரம், மனச்சோர்வு, பேதி, ஜாடராக்னி அழிதல் ஆகிய இத்துர்க்குணங்களும், அடிக்கடி இருமலுமுண்டாகும்; அங்ஙனம் இருமும்போது கெட்டுப்போய் ஆகவே ஒருவாறு கருநிறமாகவும், அதிக துர்க்கந்த முள்ளதாகவும், மஞ்சள் நிறமாகவும், கட்டிக் கட்டியாகவும், அளவில் அதிகமாகவும், இரத்தத்தோடு கூடியதாகவும் உள்ள கபம் வெளியாகும். இது க்ஷதம் (அல்லது க்ஷத க்ஷீணம்) எனப்படும். சுக்ரதாதுவும், ஓஜோதாதுவுங்கூட க்ஷயிக்க, இப்பிணியாளி மிகவும் க்ஷயித்துப்போவான். இக்குறிகள் நன்கு விளங்காத வகையில் தோன்றியிருந்தால் அவையே க்ஷீணத்தின் பூர்வ ரூபமாகும். 26—29.

**க்ஷத க்ஷீணங்களின் விசேஷ லக்ஷணங்கள்:—**(1) க்ஷதம் என்கிற நிலைமையில் மார்பில் நோவும், இரத்தம் கக்குதலும், இருமலும், ஆக இவை விசேஷ லக்ஷணங்களாம். (2) க்ஷீணம் அல்லது க்ஷயமடைவது என்கிற நிலைமையில் மூத்திரம் இரத்தங் கலந்திருக்கும்; விலாப் பக்கங்களிலும், ப்ருஷ்டபாகத்திலும், இடுப்பிலும் இசுவும் பிடிப்பும் ஏற்படும்.[2] 30.

**க்ஷத - க்ஷீணத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—**லக்ஷணங்கள் சொற்பமாகக் கண்டு, ஜாடராக்னியும் நல்ல நிலைமையிலிருந்து, ரோகியும் இயற்கையிலேயே பலிஷ்டனுயிருந்துவந்தால், வியாதியும் சொற்ப காலத்தில் ஏற்பட்டதா யிருந்தால் அது சிகித்ஸிக்கக் கூடியதாகும். வியாதி ஒரு வருஷத்திற்கு மேற்பட்டு முதிர்ந்து போனதாயிருந்தால் யாப்யமாகும். எல்லாக் குறிகளும் பூர்ணமாயுண்டான வியாதி அஸாத்யம். 31.

---

1. இக்காரணங்களுள் சில எல்லாத் தேஹத்திற்கும், சில மார்புக்கு மாத்திரமும் தீங்கிழைப்பவையாம்.

2. க்ஷதம், க்ஷீணம், (அல்லது [illegible]) இவை ஸம்பந்தமாய் அடுத்த கால நிதானத்தில் (க்ஷதகாஸ ப்ரகரணத்திலும் க்ஷயகாஸம் என்கிற) வேறு விவரங்கள் கூறப்படுவதையும் காண்க.

# 11. காஸ நிதானம்

**காஸத்தின் காரணம்:**—புகையினால் ச்வாஸமார்க்கம் அடைபடுதல், ஆமரஸம் ச்வாஸாசயத்திற் சேருதல்,[1] அதிக வியாயாமம் ருக்ஷமான அன்னத்தைப் புஜித்தல், விழுங்கும்போது உணவு அதன் பாதையை விட்டு வேறு வழியிற் பிரவேசிப்பது, வேகங்களை அடக்குவது, அவ்விதமே தும்மலை அடக்குவது இத்யாதி காரணங்களால் காஸ நோய் உண்டாகிறது. 1.

**காஸ ஸம்ப்ராப்தி:**—பிராணவாயுவானது கோளாறடைந்து, உதான வாயுவினாலும் பின்பற்றப் பட்டதாய், உடைந்த வெண்கலப் பாத்திரத்திற்கொப்பான சப்தத்தை யுண்டுபண்ணிக்கொண்டு தோஷங்களுடன் கூடியதாய்[2] பலமாக வாயிலிருந்து கிளம்புகிறது; இது அறிஞர்களால் 'காஸம்' எனப்படுகிறது.[3] 2.

**காஸம் ஐந்து விதம்:**—வாதம், பித்தம், கபம், க்ஷதம், க்ஷயம் இவ்வொவ்வொன்றையும் காரணமாகக் கொண்டு ஐந்துவித காஸங்கள் உண்டாகின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் மேன்மேலும் ஒன்றைவிட மற்றொன்று தன்மையில் வலுத்ததாகும்; இவற்றுள் எதையுபேக்ஷித்த போதிலும் இறுதியில் அது க்ஷயகாஸமாகப் பரிணமிக்கும். 3.

**காஸ பூர்வரூபம்:**—தொண்டை, வாய் இவை சின்னஞ் சிறிய முளைகள் நிரம்பியதா யிருக்கும்; அல்லது அவ்விதம் நிரம்பி யிருப்பது போன்ற உணர்ச்சி யுண்டாகும்; தொண்டையில் தினவும், உணவில் விருப்ப மின்மை அல்லது உணவை விழுங்க முடியாமையும்[4] அந்த காஸங்களுக்குப் பூர்வரூபங்களாகத் தோன்றும். 4.

**வாதகாஸம்:**—வாதத்தினாலுண்டான காஸத்தில் இருதயம், கன்னங்கள், சிரஸ், வயிறு, விலாப்பக்கங்கள் இவற்றில் வலியுண்டாம்; முகம் மெலிந்திருக்கும்; தேஹவன்மை - குரல் - ஓஜோதாது இவை க்ஷீணிக்கும்; தொண்டை கம்மிப்போய் குரல் மாறும்; அடிக்கடியும் சுஷ்கமாகவே இருமலுண்டாம். 5.

**பித்தகாஸம்:**—பித்தத்தினாலுண்டாகும் காஸத்தில் மார்பு எரியும்; ஜ்வரம் கண்டு வாயுலரும்; வாய் கைப்பாயிருக்கும்; நாவறட்சி

---

1. ஆமரஸம் வாதத்தினால் மேல்நோக்கித் தள்ளப்பட்டு, கோளாறடைந்த கபமாகக் காஸத்தில் வெளியாகும். [ச்வாஸமார்க்கத்தில் ரஜஸ் (தூசுகள்) பிரவேசிப்பதாலும் காஸம் உண்டாகும் எனப் பாடமுண்டு.]

2. தோஷங்கள் என்பதால் பித்தமும், கபம் முக்கியமாகவும் குறிக்கப்படுகின்றன.

3. காஸம்—இருமல்.

4. தொண்டையினுள் கிரந்தி முதலியவை தோஷங்களால் வீங்கிப்போவதால் உணவு விழுங்க முடியாமற் போவது வழக்கம்,

யுண்டாம்; மஞ்சள் நிறமாகவும் கைப்பாக அல்லது காரமாகவும் வாந்தியுண்டாம்; உடல் வெளுத்தும் தொண்டை அழற்சியுண்டும் பிணியாளி இருமலுடன் வருந்துவான். 6.

கப காஸம் :— கபத்தினலுண்டான காஸரோகத்தில் வாயில் சிலேஷ்மம் சூழ்ந்து விடும்; தலைவலி துன்புறுத்தும்; தேஹத்தில் கபம் நிரம்பி, பாரமும் தினவும் ஏற்பட்டு, அன்னத்வேஷமுண் டாய் தோய்ந்துபோன கபத்தை வெளிப்படுத்திக்கொண்டு ரோகி அதிகமா யிருமுவான். 7,

க்ஷத காஸம்:—அதிக வியாயாமம், அதிகமாய் வழிநடத்தல், மிகவும் கனமான சுமைகளைச் சுமத்தல், கடுமையாக யுத்தம்செய்தல், யானை குதிரைகளைப் பலமாக எதிர்த்துப் பிடித்து அடக்குதல், இவற் றால் ருக்ஷமாயிருப்பவனுக்கு மார்பில் சிதைவு ஏற்பட, வாயுவானது அந்தச் சிதைவிலிருந்து இரத்தத்தைக் கிரஹித்து காஸத்தை யுண்டு பண்ணும்; அப்பிணியாளி முதலில் வறட்டிருமலாகவே இருமி, அப்பால் இரத்தங் கக்குவான்; அப்பொழுது தொண்டைவலி வெகு அதிகமாகும்; மார்பு பிளக்கப்படுவது போலாகும்; மேலும் கூர்மை யான ஊசிகளால் குத்தப்படுவது-பிளக்கப்படுவது - நசுக்கப்படுவது- எரிக்கப்படுவது போன்ற வேதனைகளால் மார்பில் கடும் நோயுண் டாக, அதனல் மார்பு பரிசிக்கவும் கூடாமலிருக்கும். கணுக்களில் பிளக்கப்படுவது போன்ற வலியும், ஜ்வரமும், ச்வாஸமும், நாவறட்சி யும், அரோசகமும் உண்டாய் மிகத் தொந்தரவுண்டாகும்; மாடப் புறுபோல் அவன் கூக்குரலிட்டு வருந்துவான்; க்ஷதம் என்கிற மார்புச் சிதைவாலான காஸத்தில் இக்குறிகள் காணும். 8—11.

க்ஷயகாஸம்:—விஷமமான அல்லது-அஸாத்மியமான ஆஹாரங் களைப் புஜிப்பது, அதிக வியாயாமம், வேகங்களை அடக்குதல், மிகவும் மனமொடிந்து துயரப்படுதல் இக்காரணங்களால் ஜாடராக்னி முற்றிலும் அழிய, அதனல் மூன்று தோஷங்களும் பிரகோபித்து தேஹத்திற்கு க்ஷய முண்டுபண்ணும் க்ஷயகாஸ வியாதியை யுண்டு பண்ணுகின்றன. அந்த ரோகி அவயவங்கள் தோறும் வலி, ஜ்வரம், தேஹதாபம், மூர்ச்சை இவற்றால் வருந்தி இறுதியில் உயிரிழப்பான். இவன் சுஷ்கித்துப் போய், மாம்ஸ க்ஷீணத்தையும் பெற்று, சீழுடன் கூடிய இரத்தத்தைக் கக்குவான். க்ஷயகாஸத்தை ஸந்நிபாதத்தின லுண்டாவதாகவும், மிகவும் கஷ்டஸாத்தியமானதென்றும் சாஸ்திர மறிந்த வைத்தியர்கள் கூறுவர். 12, 13.

க்ஷதகாஸ - க்ஷயகாஸங்களின் ஸாத்யாஸாத்யாதி நிலைமைகள்:— முற்கூறிய க்ஷயகாஸம் சுயம் தேஹம் மெலிந்துள்ள மனிதனுக் குண்டானல் அவனுடலை அழித்துவிடும்; அதுவே பலிஷ்டர்களுக் குண்டானல் ஸாத்யமாகவாவது யாப்யமாகவாவது ஆகும். க்ஷதகா ஸத்திலும் ஸாத்யாஸாத்யாதி நிலைமைகளை இங்ஙனமே யறிக. இவ் விருவித காஸங்களும் ஆரம்பதசையிலிருந்தாலும், சதுஷ்பாதங்

களும் குறைவின்றிருந்தாலும், [1] ஒருக்கால் சிகித்ஸையினல் நிவ்ருத்தியாம். கிழவருக்குண்டாகும் ஜராகாஸம் எவருக்குமே யாப்யமாகத் தானுகும். முதலிற் கூறிய மூன்று காஸங்களும் சிகித்ஸையினல் நிவாரணம் செய்யக்கூடியவையாம். யாப்யங்களெனப்படும் காஸங்களும் அனுகூலமான சிகித்ஸையை செய்து வந்தால் தான் யாப்யங்களா யிருக்கும். 14, 15.

---

# 12. ஹிக்கா-ச்வாஸ நிதாநம். *

ஹிக்கா-ச்வாஸ காரணம்:-விதாஹி,[2] குரு, விஷ்டம்பி[3], ருக்ஷம், அபிஷ்யந்தி [4], சீதளம் என்கிற குணமுள்ள அன்ன - பானங்களாலும், அவ்விதமான இடங்களில் அதிகமாய் நடமாடுவதாலும், தும்பு தூசுகள் - தூமம்-வாயு இவை உட்புகுவதாலும், வியாயாமம்-பாரமான சுமையைச் சுமத்தல்-அதிக வழி நடத்தல்-வேகங்களை அடக்குதல்-இலங்கநம் முதலிய அபதர்ப்பணக்ரியைகள் [5] ஆகியவற்ருலும் விக்கலும், ச்வாஸமும், காஸமும் உண்டாகின்றன [6]. 1, 2.

## ஹிக்கா

ஹிக்காவின் ஸம்ப்ராப்தி: — வாயுவானது [7] அடிக்கடியும் சப்தத்துடன் மேல் நோக்கி வாயிலிருந்து வெளிக்கிளம்பும்; அப்பொழுது யக்ருத், ப்லீஹம், குடல் இவை வாய் மூலமாகப் பிடுங்கித் தள்ளப்படுவது போன்ற உணர்ச்சியுண்டாகும்; ஹிக் என்கிற தொனியுடன் பிராணனைப் பறிப்பது போன்றிருப்பதால் இது அறிஞர்களால் ஹிக்கா [8] என்று கூறப்படுகிறது. 3.

---

1. சதுஷ்பாதங்கள்—42-ம் பக்கம் பார்க்க.

* ஹிக்கா—விக்கல் ; ஹித்மா என்றும் கூறப்படும். ச்வாஸம்-ச்வாஸ ரோகம்.

2. விதாஹி—36ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. விஷ்டம்பி—மல மூத்திராதிகளைக் கட்டி வயிற்றுப்பொருமல் முதலியதையுண்டு பண்ணும் தன்மை.

4. அபிஷ்யந்தி—பசையினுலும், குருத்தன்மையினுலும் இரஸாயனிகள் என்னும் குழாய்கள் மூலம் செழிப்பு தரும் குணம்.

5. அபதர்ப்பணம்—உபவாஸம், விரேசநம், வமநம் முதலியதால் தேஹத்தை இளைக்கச் செய்யும் சிகித்ஸை.

6. ஹிக்கா, ச்வாசம், காஸம் இம்மூன்றும் ஒரே காரணத்தினல் உற்பத்தியாகையில், காஸத்தை மாத்திரம் பிரத்தியேகமான அத்தியாயத்தில் விவரிப்பதற்குக் காரணம் மூன்று தோஷங்களாலும தனித் தனியே காஸம் உண்டாகின்றது; ஹிக்கா-ச்வாஸங்களோ கப-வாதங்களால் ஸம்பவிக்கின்றன. "கப-வாதங்களால் உண்டாகிற இவ்விரண்டுக்கும் பித்தாசயம் ஸ்த்தாநமாகும்" என்று த்ருடபலன்.

7. வாயு வென்று இங்கே உதாநவாயுவுடன் கூடிய பிராண வாயு குறிக்கப்படுவதாகச் சிலரது அபிப்பிராயம்.

8. ஹிநஸ்தி ப்ராணுந் (உயிரை வதைக்கிறது) என்கிற விற்பத்தியால் ஹிக்கா என்கிற பெயர் வந்தது.

ஹிக்கா ஐந்துவிதம்:—வாயுவானது கபத்தினால் பின்தொடரப்பட, ஐந்துவித ஹிக்கா என்கிற விக்கலை யுண்டுபண்ணும்; அவையாவன:— அன்னஜ ஹிக்கா, யமளஹிக்கா [1], க்ஷுத்ரஹிக்கா, கம்பீரஹிக்கா, மஹா ஹிக்கா என்பனவாம். 4.

ஹிக்கா பூர்வரூபம்:—தொண்டை மார்பு இவற்றில் குருத்வம், வாய் கஷாயரஸமடைதல், வயிற்றிற் குழப்பம் இவை எல்லா ஹிக்காவுக்கும் பொதுவான பூர்வரூபமாம். 5.

அன்னஜ ஹிக்கா:—அமிதமாயுட் கொண்ட அன்னபானங்களால் திடீரென்று கோஷ்டத்தில் ஒருமிக்க அமுக்தப்பட்ட வாயுவானது மேலே கிளம்பி விக்கலை யுண்டுபண்ணும்; இதை அன்னஜ ஹிக்கா என்றறிக. 6.

யமள ஹிக்கா:—வெகு தாமதித்து இரட்டை வேகங்களோடு, சிரஸ் கழுத்து இவைகளை நடுங்கச் செய்துகொண்டு[2] உண்டாவது யமள ஹிக்கா எனப்படும். 7.

க்ஷுத்ர ஹிக்கா:—வெகு நேரம் கழித்துச் சொற்பவேகத்துடன் தொண்டையின் அடிப்புறத்திலிருந்து கிளம்பும் விக்கல் க்ஷுத்ர ஹிக்கா எனக் கூறப்படும். 8

கம்பீர ஹிக்கா:—நாபி ஸ்தானத்திலிருந்து கிளம்பி கம்பீரமாகச் சப்தம் உண்டுபண்ணிக்கொண்டு கடுமையாகவும், அநேகம் உபத்திரவங்களோடும் வெளியாவது கம்பீர ஹிக்கா எனக் கூறப்படுகிறது. 9.

மஹா ஹிக்கா:—மர்மஸ்தானங்களைக் களைந்து வெளித் தள்ளுவது போல் அகில அவயவங்களையும் நடுங்கச்செய்தவாறு இடைவிடாது உண்டாகும் விக்கல் மஹா ஹிக்கா என்னப்படும். 10.

ஹிக்காவின் அஸாத்ய லக்ஷணங்கள்:—(1) விக்கும்போது தேஹம் மிக்க விறிவதுபோலானால் கண்பார்வையும் மேல் நோக்கி யிழுக்கப்பட்டு எப்பொழுதும் கஷ்டமுண்டானால் அந்த ஹிக்காரோகியும், (2) இளைத்துப்போய், உணவை வெறுத்து மிக்க அதிகமாய் விக்கலால் வருந்தினால் அவனும், (3) இறுதியிற் கூறிய இரண்டு ஹிக்கா ரோகிகளும் சிகித்ஸையினால் ஸௌக்கியமடையார். மேலும் தோஷம் தேஹத்தில் மிகுதியாகச் சேர்ந்து விடுபவனுக்கும், உணவின்மையினால் இளைத்தவனுக்கும், வியாதிகளால் க்ஷீணித்தவனுக்கும், கிழவனுக்கும், அதிக புணர்ச்சியுள்ளவனுக்கும் முற்கூறிய விக்கல்களுள் எதுவும் உயிரைச் சீக்கிரம் போக்கிவிடும். வாய்ப் பிதற்றல், வலி, மூர்ச்சை, நாவறட்சி இவற்றுடன் கூடிய 'யமிகா' என்கிற ஹிக்காவும் அஸாத்யமாம். இளைக்காதவனாகவும், தீனத் தன்மையற்றவனாகவும், பலமான தாதுக்களையும் இந்திரியங்களையும்

---

1. யமளஹிக்கா—வ்யபேத ஹிக்கா என்றும் கூறப்படும்.

2. சிரஸ்ஸையும் கழுத்தையும் நடுங்கச்செய்வது என்பது உபலக்ஷணம். வாய்ப்பிதற்றல், மூர்ச்சை, வாந்தி, நாவறட்சி, கொட்டாவி, வாயுலர்தல் முதலியவையும் காணும் என்று கயாதாஸன்.

பெற்றவனுக்கவும் உள்ளவனுக்குண்டாயுள்ள யமிகா[1] என்னும் ஹிக்கா எளிதில் சிகித்ஸிக்கக்கூடியதாம்; வேறு குறிகளுடன் கூடிய ஹிக்கா சீக்கிரம் உயிரைப் போக்கி விடும். 11—14.

## ச்வாஸம்

ச்வாஸம் ஐந்து விதம்:—ச்வாஸம் என்கிற ஒரு மஹாவியாதியே மஹாச்வாஸம், ஊர்த்வ ச்வாஸம், சிந்ந ச்வாஸம், தமக ச்வாஸம், க்ஷுத்ர ச்வாஸம் என்று ஐந்து விதமானது.[2] (க்ஷுத்ரச்வாஸம் வாததோஷம் அதிகரித்தது; தமகச்வாஸம் கபதோஷத்தினுல் உண்டாவது; சிந்நம் என்பது கபம் வாதம் இவ்விரண்டாலும் உண்டாகிறது; மஹா ச்வாஸத்தில் மூன்று தோஷங்களும் ஸம்பந்தித்திருக்கும்; ஊர்த்வச்வாஸமும் அப்படிப்பட்டதே.) 15.

ச்வாஸ பூர்வ ரூபம்:—இருதயவேதனை, வயிற்றுவலி, வயிற்றிலும் மார்பிலும் பொருமல், வயிற்றிற் குழப்பம், வாய் அரோசகமடைதல், கன்னங்களில் வேதனை ஆகியவை ச்வாஸரோகத்தின் பூர்வ ரூபங்களாகும். 16.

ச்வாஸ ஸம்ப்ராப்தி:—முதலில் கபமும் பின்னுல் வாதமும் மார்பறையைச் சேர்ந்த ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் குழல்களை நிரப்பி யடைத்து, அந்த ஸ்ரோதஸ்ஸுகளில்[3] நாற்புறமும் அவை வேகமாகப் பரவும்பொழுது, அவ்வேகம் பலவித ச்வாஸ விகாரங்களையும் உண்டு பண்ணுகிறது. 17.

மஹா ச்வாஸம்:—இப்பிணியாளி பெரிதும் மேல் மூச்செறிந்து கொண்டு மஹத்தான சப்தத்தோடு, ஏக்கமுற்று, ச்வாஸம் அடைபட, கொழுத்த விருஷபம் மூச்சுவிடுவதுபோல இடைவிடாது உரத்து மூச்சுவிடுவான்; ஞான - விஞ்ஞானமென்கிற ஸகல அறிவையும் இழப்பான்; விரண்டு பார்ப்பான்; கண்களும் முகமும் விரியும்; மூத்திரமும் மலமும் கட்டிப்போகும்; வார்த்தை தழுதழுக்கும்; தீனமான நிலைமையைப் பெறுவான்; இவனது பெருமூச்சு வெகு தூரத்திலிருந்தே கேட்கப்படும்; இது மஹாச்வாஸம் எனப்படும். இவன் சீக்கிரம் உயிர் துறப்பான். 18—20

ஊர்த்வ ச்வாஸம்:—மேல் நோக்கிவரும் ச்வாஸம் மிகவும் நீண்டிருக்கும்; மீண்டும் ச்வாஸத்தை உள்ளுக்கு இழுக்கச் சக்தியற்றவனுவான்;[4] வாய் தொண்டை முதலிய த்வாரங்கள் கபத்தினுல் மிகவும் சூழப்படும்; பிரகோபித்து மேலெழும் வாயுவால் ஸங்கடமுண்டாகும்;

---

1. யமிகா—யமளஹிக்கா.

2. ச்வாஸம்—துருத்தியை ஊதுகையில் வாயுவானது துருத்தியை நிரப்பி நிரப்பி பலமாக மேற்கிளம்பும் விதமாய், ச்வாஸாசயத்திலிருந்து கடும் வேகத்துடன் வரும் மூச்சு ச்வாஸ வியாதி.

3. ஹிக்கா ரோகத்திற் குறிப்பிட்ட பிராணவஹஸ்ரோதஸ்ஸுகளும் உதாநவஹஸ்ரோதஸ்ஸுகளும் இங்கு குறிக்கப்படுகின்றன.

4. நிச்வாஸம் என்கிற வெளியிடும் மூச்சு வெகு நீடித்தும், உச்சுவாஸம் என்கிற உள்ளுக்கு வாங்கும் மூச்சு வெகு சொற்பமாகவும் இருக்குமென்பது பொருள். மேல் நோக்கி வரும் ச்வாஸம் வெகு நீண்டதாகையாலேயே இது ஊர்த்வச்வாஸம் எனப்படுகிறது.

அவன் மேல் நோக்கியும் இங்கு மங்குமாய் விரண்டு விழித்தும் பார்ப்பான்; வேதனைகளால் வருந்தி-முகம் வெளுத்து, இருந்தவிடத்தி லிருக்க முடியாமல் தவித்து மயக்கங் கொள்வான்; மேல் நோக்கிய (ஊர்த்வ) ச்வாஸம் பிரகோபிக்கையில் உள்ளுக்கு இழுக்கவேண்டி யது (உச்சுவாஸம்) தடைபடும் ; இப்பிணியாளி ஊர்த்வ ச்வாஸத் தினால் வருந்துவதாய் அறிக. மூர்ச்சை யடைந்து கொண்டும், வேறு பல வேதனைகளால் தவித்துக் கொண்டும் இவன் சீக்கிரம் உயிர் துறக்க நேரிடும். 21—23.

சிந்ந ச்வாஸம் : — உயிருடன் மன்றாடிக்கொண்டு இடை யிடையே விட்டு விட்டு ச்வஸிப்பது, அல்லது ச்வஸிக்க முடியாமலே மர்மங்கள் அறுக்கப்படுவது போன்ற வேதனைகளால் வருந்துவது, வயிற்றுப் பொருமல் - அதிக வியர்வை-மூர்ச்சை இவற்றால் பிடிக்கப் படுவது, மூத்திரப்பை எரிக்கப்படுவது போல் ஆவது, கண்களில் நீர் ததும்புதல், மிக்க இளைத்தல், இடையிடையே பெருமூச்செறிதல், ஒரு கண் மிகச் சிவத்தல், ஞாபகம் தவறுதல், வாய் உலர்தல், முகம் கறுத்தல், பிதற்றுதல் ஆக இவை மூச்சு தடையுண்டு சிந்ந ச்வாஸத்தினால் வருந்துபவனுடைய குறிகளாம். மூச்சு முற்றிலும் தடையுறுவதால் இவன் சீக்கிரம் உயிர் துறப்பான். 24—26.

தமக ச்வாஸம்:—ச்வாஸம் இயற்கைக்கு எதிரிடையாய் வெவ் வேறு ஸ்ரோதோமார்க்கங்களிற் புகுந்து, தொண்டை சிரஸ் இவற் றின் ஸ்ரோதஸ் ஸுகளென்கிற வழிகளைத் தடுத்து, கபத்தை மிகுதி யாகக் கிளப்பி குர் குர் என்கிற சப்தத்தையும் பீநஸவியாதியையும் உண்டு பண்ணினால், பிராணனைப் பிடிக்கவல்ல கடுமையான ச்வாஸமு முண்டானால் அதனால் பிணியாளி மிகவும் சோர்வுறுவான் ; நாவறட்சி யடைவான்; அசைவற்று மிருப்பான் ; அடிக்கடி இருமிக்கொண்டே மூர்ச்சை யடைவான் ; கபம் வெளிப்படாதவரையில் மிக வருந்தி, அது வெளிப்பட்டதும் சற்று நேரம் ஸுகமாயிருப்பான்; இவனது தொண்டையில் அதிக தினவுண்டாகும் ; சிரமப்பட்டு சிறிது பேசு வான்; ச்வாஸத்தினால் வருந்தி படுத்து நித்திரையுற முடியாது வருந்து வான்; படுக்கும்போது வாயுவானது அவனது பார்ச்வபாகத்தைப் பற்றிக் கொள்கிறது ; உட்கார்ந்தால் ஸுகம் பெறுகின்றான் ; உஷ் ணம் தாக்குவது அவனுக்கு இதமாயிருக்கும்;[1] நெற்றி வியர்க்க, கண்கள் வீங்கிப் போக, வாய் உலர்ந்துபோக, அடிக்கடியும் பெரு மூச்சு விட்டுக்கொண்டு தேஹம் குலுங்க வருந்துவான் ; இத்த ச்வா ஸமானது மேகம், தண்ணீர், குளிர்ச்சியான வஸ்து, கீழ்க்காற்று, கபத்தை விருத்தி செய்யும் வேறு பதார்த்தங்கள் இவற்றால் விருத்தி யடையும். தமகச்வாஸம் எனப்படுகிற இது யாப்ய வியாதி ; இது புதிதாக உண்டானதாயிருந்தால் ஸாத்யமாகவும் ஆகும். 27—34.

பிரதமக ச்வாஸம்:—தமக ச்வாஸத்தில் ஜ்வரமும், மூர்ச்சையும்

---

1. இந்த வியாதி வாத - கபங்களால் ஏற்படுவதால் வாத-கபங் களுக்கு எதிரிடையான உஷ்ணத்தினால் சுகம் உண்டாகிறது.

கூடியிருந்தால், அதை பிரதமக ச்வாஸம் என்றறிக [1]. உதாவர்த்தம், தூசுகள், அஜீர்ணம், விதக்த்தமான உணவு, வேகங்களை அடக்குதல் இவற்றாலும் இது உண்டாகிறது. இருட்டில் இவ்வியாதி மிகவும் விருத்தியடைகிறது; சீதளமான வஸ்து முதலியவற்றால் சீக்கிரம் உபசாந்தியடையும்; இருட்டில் ஆழ்ந்து போவதுபோல் பிணியாளி யுணருவான். இதையே "ஸந்தமகம்" என்றும் கூறுவர். 35, 36.

க்ஷுத்ர ச்வாஸம்:—ரூக்ஷத்தன்மை அதிகரிக்க ஆயாஸகரமான காரியங்களைச் செய்வதால் ச்வாஸாசயத்திலிருந்து பலமில்லாத ஒரு மூச்சு கிளம்பும்; அது க்ஷுத்ர ச்வாஸம் எனப்படுகிறது. அதிகமாய் சரீரத்தை வருத்தக்கூடிய மற்ற ச்வாஸவியாதிகளிற் காணும் துன்பங்கள் இதில் உண்டாவதில்லை. போஜன - பானங்கள் உட்செல்லுவதற்குத் தடங்கலுமுண்டாகாது. இந்திரியங்களில் எதற்கும் கெடுதியுண்டாவதுமில்லை. வேறு எவ்வித நோவும் உண்டாகாது. இது ஸுகஸாத்யமானது. 37—38½.

ச்வாஸத்தில் ஸாத்யாஸாத்யங்கள்:—நல்ல பலிஷ்டர்களுக்குண்டாகுபவையும், ச்வாஸ வியாதிக்குரிய லக்ஷணங்களை நன்கு பெறுதவையுமான எல்லா ச்வாஸ ரோகங்களும், க்ஷுத்ரச்வாஸமும் ஸாத்யங்கள். தமகச்வாஸம் க்ருச்ச்ர ஸாத்யம். அதிலும் துர்ப்பலமான மனிதனுக்குண்டாகும் தமகச்வாஸமும், மற்ற மூன்று ச்வாஸங்களும் அஸாத்யமாகும். 39, 40.

ச்வாஸரோகம் கொடியது:—உயிரைப் பறிப்பவையான வியாதிகள் பல உண்டு; ஆனால் அவை யெல்லாம் ச்வாஸம் ஹிக்கா இவற்றைப் போன்றவையல்ல; இவ்விரண்டும் சீக்கிரத்தில் பிராணனைப் போக்கி விடும். 41.

---

## 13. ஸ்வர பேத நிதாநம்*

ஸ்வர பேதகாரண-ஸம்ப்ராப்திகள்:—மிகவும் உரத்துப் பேசுதல், ஏதேனும் விஷம் ஸம்பந்தப் படுதல், உரத்த குரலுடன் ஓதுதல், அடி தாக்குதல் இக்கோளாறுகளால் வாதம் முதலிய தோஷங்கள் பிரகோபித்து, குரலுக்கு ஆதாரமான ஸ்ரோதஸ்ஸுகள் என்கிற த்வாரங்களில் தங்கி தொண்டையிலிருந்து குரல் கிளம்புவதைக் கெடுத்துவிடுகின்றன. 'ஸ்வரபேதம்' எனப்படும் இவ்வியாதி ஆறு விதம். 1.

ஸ்வரபேதம் ஆறுவிதம்:—(வாதம் முதலிய மூன்று தோஷங்களால் தனித்தனியே ஒன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், மேதஸ் என்னும் கொழுப்பு அதிகரிப்பதால் ஒன்றும், க்ஷயத்தினால் ஒன்றுமாக ஸ்வரபேதம் ஆறுவிதம்.)

---

1. பிரதமகத்தில் பித்தமும் அதிகமாவதால் ஜ்வரமும் காணும்.

*ஸ்வரபேதம் — குரல் கெட்டுப்போவது. ச்வாஸரோகம் போலவே இதிலும் பிராணவாயுவும், உதாநவாயுவும் கோளாறடைகின்றன.

வாதஜ ஸ்வரபேதம்.—வாததோஷத்தினலான ஸ்வரபேதத்தில் பிணியாளியின் கண்களும், முகமும், மல-மூத்திரங்களும் கருநிறங் கொள்ளும்; [1] தொனி உடைந்தும் வெகு மெதுவாகவு மிருக்கும்; கழுதையின் குரலைப்போல் பேச்சு ஒருவாறு கர கர வென்றும் தோன்றும். 1½.

பித்தஜ ஸ்வரபேதம்: — பித்தத்தினலுண்டாகும் ஸ்வரபேதத்தில் கண்கள், முகம், மல-மூத்திரங்கள் இவை மஞ்சள் நிறமாயாகும்; பேசும்போது தொண்டையில் அழற்சியுண்டாகும். 2.

கபஜ ஸ்வரபேதம்:—கபத்தின லுண்டாகும் ஸ்வரபேதத்தில் எப்பொழுதுமே தொண்டையில் கபம் சூழ்ந்து அடைத்துக்கொள்ள, சொற்பமாகவும், மெதுவாகவும் பேசுவான்; பகல் வேளையில் மாத்திரம் நன்ருகப் பேச முடியும். 2½.

ஸந்நிபாதஜ ஸ்வரபேதம்:—மூன்று தோஷங்களாலும் உண்டாகிற ஸ்வரபேதத்தில் முற்கூறிய ஒவ்வொரு தோஷத்தினு முண்டாகிற ஸ்வரபேதத்தின் இலக்ஷணங்கள் அனைத்தும் தோன்றும். இதை இருஷிகள் அஸாத்ய வியாதியென்பர். 3.

க்ஷயஜ ஸ்வரபேதம்:—க்ஷயத்தினலுண்டாகும் [2] ஸ்வரபேதத்தில், பேசும்போது வாயிலிருந்து கடுமையான ஆவி கிளம்பும்; பிறகு வாக்கும் க்ஷீணமடையும்; [3] அவ்விதம் பேச முற்றிலும் சக்தியற்றுப் போன பிறகு இவ் வியாதிக்கு சிகித்ஸை செய்ய முடியாது. 3½.

மேதோஜ ஸ்வரபேதம்:—மேதஸ் என்கிற கொழுப்பு கோளாறடைவதாலான க்ஷயத்தில் குரல் உள்ளுக்கு இழுக்கப்பட, சொற்கள் விளங்காவண்ணம் வெகு நேரத்திற்கு ஒரு வார்த்தையாகப் பேசுவான்; கபம் அல்லது மேதஸ் தொண்டையில் சூழ்ந்திருக்கும்; நாவறட்சியினல் வருந்துவான். 4.

ஸ்வரபேதத்தில் அஸாத்யமானவை:—தேஹம் இளைத்துப் போனவன், கிழவன், இயற்கையில் மெலிந்த தேஹமுடையவன் இவர்களுக்குண்டாகும் ஸ்வரபேதமும், நீடித்த காலமாகத் தொடரும் ஸ்வரபேதமும், பிறந்தது முதலேயுள்ள ஸ்வரபேதமும், [4] மிகக் கொழுத்த சரீரமுடையவனுக்குக் காணும் ஸ்வரபேதமும், [5] ஸந்நிபாத தோஷங்களாலுண்டாகும் ஸ்வரபேதமும் சிகித்ஸைக்கு வசப்படாதவையாம். 5.

---

1. ஸ்வரபேதத்திற்குக் காரணமான தோஷங்கள் தேஹமெங்கும் வியாபிப்பதால் மல மூத்திராதிகளும் விகாரமடைகின்றன.

2. க்ஷயம் என்ருல் தேஹதாதுக்கள் க்ஷீணமாவது.

3. ஓஜோதாது அழிவதால் மனிதன் பேச சக்தியற்றுப் போவது இயல்பு.

4. பிறவிக்குரல்விகாரத்தை காகஸ்வரம் என்பார்கள்.

5. இதற்குமுன் கூறிய மேதோஜ ஸ்வரபேதம் கொழுப்பு விகாரங்கொள்வதால் ஏற்படுகிறது. இங்கே கூறப்படுவது கொழுப்பு மிகவும் அதிகரித்தவனுக்குண்டாவது எனப் பொருள்.

## 14. அரோசக நிதாநம் *

அரோசகத்தின் காரணம்:—(ஐந்து வித அரோசகங்கள்.) வாத-பித்த-கபங்களால் தனித் தனியே மூன்று அரோசகங்களும், ஸந்நிபாதத்தினால் ஒரு அரோசகமும், மனத்துயரம், பயம், அதிகலுப்தத் தன்மை, அதிககோபம், மன வெறுப்புண்டாக்கும் உணவு, அத்தகைய ரூபங்களைப் பார்த்தல், அவ்விதமான வாஸனை இவற்றால் ஆகந்துகமான ஐந்தாம் அரோசகமும் [1] உண்டாகின்றன. 1.

தோஷஜா ரோசகங்கள்:—(1) வாததோஷத்தினா லுண்டாகும் அரோசகத்தில் பற்கள் கூசும்; வாய் கஷாயரஸமாகத் துவர்க்கும். (2) பித்தத்தினா லான அரோசகத்தில் வாய் கைப்பாகவும், அம்லமாகவும், உஷ்ணமாகவும், ஒரு ஸமயம் விரஸமாகவும், இலவணரஸமுள்ளதாகவும், துர்நாற்ற முடையதாகவும் ஆகும். (3) கபத்தினாலான அரோசகத்தில் வாய் இனிப்பாகவும், அதிகபசை சேர்ந்துள்ளது போலவும், குருத்தன்மையும் சைத்யமும் பெற்று, அதிக கோழை சூழ்ந்ததாய், திறந்து அசைக்க முடியாததாகவும் ஆகும். 2.

ஆகந்துகாரோசகம்: — சோகம், பயம், அதிக லோபித்தனம், கோபம் இவை முதலியவற்றாலும், அருவருப்பான நாற்றம் முதலியவைகளாலும் உண்டாகும் அரோசகத்தில் வாய்மாத்திரம் சுபாவ நிலைமையிலேயே இருக்கும். 2¼.

ஸந்நிபாதஜாரோசகம்: — மூன்று தோஷங்களாலும் காண்கிற அரோசகத்தில் வாய் வாதஜாரோசகாதிகளிற் கூறியவாறு பலவிதமான அருசிகளைப் பெற்றதாயிருக்கும். 3.

அரோசகங்களிற் காணும் விசேஷக்குறிகள்:—(1) வாதஜாரோசகம் இருதயத்தில் குத்தல் வேறுவிதமான வலி இவற்றையும், (2) பித்தஜாரோசகம் நாவறட்சி தேஹ அழற்சி காந்தல் இவற்றையும், (3) கபஜாரோசகம் அதிக கபத்தின் சேர்க்கையையும், (4) ஸந்நிபாஜாரோசகம் பலவித நோக்காடுகளையும் உண்டு பண்ணும். (5) மற்ற ஆகந்துகாரோசகங்களை மனதில் கலவரம், மயக்கம், திமிர்ப்பு இக் குறிகளைக் கொண்டு அறியவும். 4.

---

## 15. சர்தி நிதாநம் †

சர்திகள் ஐந்து விதம்:—கோளாறடைந்த மூன்று தோஷங்களால் தனித் தனியே மூன்று சர்திகளும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும்,

---

1. மனத்துயரம், பயம் முதலிய பல காரணங்களால் அரோசகம் உண்டான போதிலும், ஆகந்துகம் என்கிற ஒரு பொதுவான ஹேதுவால் உண்டாவது ஒரேவித அரோசகமாகக் கருதப்படுகிறது. "அரோசகம் ஐந்து விதந்தான்" என்று ஸுச்ருதரும் கூறுகிறார்.

*அரோசகம்—நாக்கின் சுவையறியும் சக்தி கெட்டுப்போதல். அன்னத்வேஷம் என்பதும் இதில் அடங்குகிறது.

† சர்தி—வாந்தி அல்லது வமநம்.

அருவருப்பான விஷயங்களைப் பார்ப்பது அல்லது நினைப்பது முதலியவற்ருல் மற்றென்றும் ஆக ஐந்துவித சர்திகள் உண்டாம். இதன் கீழ் அவற்றின் இலக்ஷணங்களைக் காண்க. 1.

சர்தியின் நிதான-ஸம்ப்ராப்திகள்:—அதிக திரவமானவை, அதிக ஸ்நிக்த்தமானவை, மனதுக்குப் பிடிக்காதவை, அதிக உப்புள்ளவை, அளவில் அதிகமானவை, அகாலத்தில் உபயோகிக்கப்படுபவை, அஸாத்மியமானவை ஆகிய இவ்வித உணவுகளாலும், பயத்தினுலும், அங்ஙனமே உள்ளக்கொதிப்பாலும், அஜீர்ணத்தினுலும், கிருமிகள் வயிற்றிற் சேருவதாலும், ஸ்திரீ கர்ப்பம் தரிப்பதாலும், அதிக துரிதமாகப் புஜிப்பதாலும், பீபத்ஸமான வேறு காரணங்களாலும் தோஷம் வலிவாகக் கிளறி வேகமாய் மேல் நோக்கிக் கொண்டு வரப்பட்டு வாந்தி செய்யப்படுகிறது. வேகங்களால் வாயை நிரம்பச் செய்து அவயவங்களை ஒடுக்கிப் பீடித்து வேகம் உண்டாவதிலிருந்து இதற்குச் "சர்தி" என்கிற பெயர் வந்தது. 2—4.

சர்தியின் பூர்வ ரூபம்:—இருதயம் பட பட வென்று அடித்துக் கொள்ளுதல், தேக்கெறிவு தடையுறுதல், வாயில் உப்பாகவும் பசையற்றதாகவும் உமிழ் நீரூறுதல், அன்ன பானங்களில் அதிக வெறுப்புண்டாதல் ஆகிய இவை வமநம் உண்டாகப் போவதைக் குறிப்பிடும் பூர்வரூபமாகும். 5.

வாதஜச் சர்தி:—வாதஸம்பந்தமான சர்தியில் இருதயத்திலும், விலாப்பக்கங்களிலும் வலி, வாயில் வறட்சி, சிரஸ்ஸிலும் நாபியிலும் வேதனை, இருமல், குரல் கம்மிம்போதல், குடைத்தல், இத்தொந்தரவுகளோடு, பிரபல தேக்கெறிவுபோன்ற சப்தமுமுண்டாகச் சிறிது நேரத்திற் கொருமுறை வாந்தி செய்வான். மேலும் வாந்தியானது நுரைத்தும், சிறிது கறுப்பாகவும், தடிப்பில்லாததாகவும், கஷாய ரஸமுள்ளதாகவும், அளவில் வெகு சொற்பமாகவும் இருக்கும். இதில் மஹத்தான வேகத்தினுல் மிகப் பீடிக்கப்பட, வெகு சிரமப்பட்டு சொற்ப அளவான வஸ்துவை வாந்தி செய்வான். இச்சர்தி மிகத் துன்பமளிக்கக் கூடியது. 6.

பித்தஜச் சர்தி:—பித்த ஸம்பந்தமான சர்தியில் மூர்ச்சை, நாவறட்சி, வாய் சுஷ்கித்தல், சிரஸ்-தவடைகள்-கண்கள் இவற்றில் அழற்சி, கண் இருளடைதல், தலைச் சுற்றல் இத்துன்பங்களுடன் மஞ்சள் நிறமாகவும், அதிக சூடாகவும், அதிக பசுமையாகவும், கருஞ் சிவப்பாகவும், கைப்பான சுவையோடும், அதிக அழற்சியோடுங் கூட வாந்தியுண்டாகும். 7.

கபஜச் சர்தி:—சோம்பல், வாய் இனிப்பாதல், கபம் ஊறுதல், எப்பொழுதுமே நன்கு புஜித்தது போன்ற திருப்தி, நித்திரை, வாய் அரோசகமடைதல், உடம்பு பாரமாதல் இவற்றுடன் ஸ்நிக்த்தமாகவும், இனிப்பாகவும், வெண்மையாகவும், மயிர்ச்சிலிற்கையோடும் அதிக வேதனை யின்றி வாந்தியெடுப்பது கபச்சர்தியாகும். 8.

ஸந்நிபாதஜச் சர்தி:—மூன்று தோஷங்களும் பிரகோபித்துண்டாகும் சர்தியில் பின்வரும் குறிகள் பலமாகக் காணும்: வயிற்று வலி, உணவு ஜீர்ணமாகாமை, அரோசகம், குடலழற்சி, நாவறட்சி, ச்வாஸம், அதிக மயக்கம்; வாந்தி இடைவிடாமலுண்டாகும்; வாந்தியில் வரும் தோஷம் இலவண ரஸமாகவும், அம்லமாகவும், கறுப்பாகவும், அதிக கனமாகவும், உஷ்ணமாகவும், இரத்தங் கலந்ததாகவும் இருக்கும்; அன்றியும் தோஷம் மேல்நோக்கி வெளியாகக்கூடிய நிலைமையில் வாயுவானது மலம், வியர்வை, மூத்திரம், இரஸம் இவற்றிற்கு ஆதாரமான ஸ்ரோதோமார்க்கங்களை அடைத்து, வயிற்றில் மிகுதியாகச் சேர்ந்துபோய் மல-மூத்திரங்களுக்குச் சமமான நாற்றமும் நிறமுமுள்ள தோஷத்தைக் குடலிலிருந்து இடைவிடாமல் கிளப்பித் தள்ளுமானால், நாவறட்சியும் ச்வாஸமும் விக்கலும் தொடர்ந்துண்டானால், கெட்டுப்போன மலாதிகளையும் வேகத்துடன் வமநம் செய்தால் அப்பிணியாளி சீக்கிரத்தில் உயிர் துறப்பான். 9—11.

ஆகந்துகச் சர்தி:—அருவருப்பான விஷயங்களைப் பார்ப்பது அல்லது நினைப்பது முதலிய வற்றாலுண்டாவதும், கர்ப்ப கால விருப்பத்தாலுண்டாவதும், ஆமதோஷத்தினாலானதும், அஸாத்மிய வஸ்துக்களை யுபயோகிப்பதாலுண்டாவதும், கிருமிகளால் உண்டாவதுமான சர்திகளனைத்தையும் ஐந்தாவது சர்தியாகக் கருதவேண்டும். இவற்றுள் கிருமிச் சர்திக்கு வாதாதி தோஷஸம்பந்தத்தாலான குறிகள் முதலில் வாதாதி சர்திகளுக்குக் கூறிய விதங்களேயாம். 12.

கிருமிஜச் சர்தியின் விசேஷக்குறிகள்:—கிருமிகள் குடலிற் சேருவதால் உண்டாகும் வாந்தியில் வயிற்றுவலியும், இருதயத்தில் படபடப்பும் விசேஷமாயுண்டாகும்; கிருமிஸம்பந்தமான ஹ்ருதய ரோகத்தின் லக்ஷணங்களும் [1] காணும். 13.

சர்தியில் ஸாத்யா ஸாத்யங்கள்:—உடல் க்ஷீணித்தவனுக்குண்டாகும் வாந்தியும், அமிதமாயுண்டாகும் வாந்தியும், உபத்திரவங்களோடு கூடிய வாந்தியும், இரத்தம் சீழ் இவற்றுடன் கூடிய வாந்தியும், சந்திரிகையென்னும் பல நிறங்கொண்ட வட்டங்களுள்ள தோஷத்துடன் [2] வெளியாகும் வாந்தியும் அஸாத்யமென்றறிக. மற்ற

---

1. பைத்ஸஜச் சர்தி (அருவருப்பான விஷயங்களைப் பார்ப்பது) முதலிய அனைத்துக்கும் வாதாதி தோஷஸம்பந்தம் சிலரால் கூறப்படுகிறது. ஆனால் கிருமிஜச் சர்தியைத் தவிர, ஆகந்துகச் சர்திகளில் மற்ற எதற்கும் சிகித்ஸைக்கு முகாந்தரமாயமையக்கூடிய தோஷ ஸம்பந்தம் எவராலும் கூறப்படுவதாகத் தெரியவில்லை. ஆகவே இங்கு கிருமிஜச் சர்திக்கு மாத்திரம் பிரத்தியேகமாக வாதாதி தோஷங்களின் ஸம்பந்தம் குறிப்பிடப்படுகிறது. பிறகு 29-வது ஹ்ருத்ரோக நிதாநத்திற் கூறப்படும் மார்பில் வேதனை முதலிய குறிகளும் உண்டாகும் எனப் பொருள்.

2. நிணங்களும் இரத்தாணுமுதலியதும் கலந்திருப்பதால் மயிற்றோகை சாயலான வட்டங்கள் வாந்தியில் காண்பது ஸஹஜம்.

ஸாத்யமான குறிகளுள்ளதும், உபத்திரவங்களில்லாததுமான[1] சர்திக்கு சிகித்ஸை செய்யவும். 14.

---

## 16. த்ருஷ்ணு நிதாநம்*

த்ருஷ்ணு ஸம்ப்ராப்தி:— பயத்தினலாவது, சிரமத்தினலாவது, பலம் க்ஷீணிப்பதாலாவது, பித்தம் விருத்தியடைவதற்கான காரணங்களாலாவது சயாவஸ்த்தையடைந்த பித்தமும் வாதமும் பிறகு பிரகோபித்து, தாலுவென்கிற தவடைகளிலுள்ள[2] ஸ்ரோதஸ்ஸுகளைப்பற்றி மனிதருக்கு தாஹத்தை யுண்டுபண்ணும்; மேலும் கோளாறடைந்த உணவு ஆமதோஷம்[3] கபம் இவற்ருலும் உதகவஹ ஸ்ரோதஸ்ஸுகளென்கிற நீர்க்கால்கள் தூஷிக்கப்படுவதனுலும் மனிதனுக்கு த்ருஷ்ணை யென்னும் நாவறட்சியுண்டாகிறது. 1, 1½.

த்ருஷ்ணையின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி:—அவ்வித த்ருஷ்ணை வாத-பித்த-கபங்களால் தனித் தனியே மூன்றும், அடிபடுவதால் ஒன்றும், க்ஷயத்தினல் ஒன்றும், ஆம தோஷத்தினல் ஒன்றும், அன்னவிகாரத்தினல் ஒன்றும் ஆக எழுவகைப்படும். இவற்றுள் ஒவ்வொன்றிற்குள்ள இலக்ஷணமும் இதனடியிற் கிரமமாக விவரிக்கப்படும். 2½.

வாத த்ருஷ்ணை: — வாதத்தினலான த்ருஷ்ணையில் முகம் வாடி, தீனத்தன்மை யடையும்; கன்னங்களிலும் சிரஸ்ஸிலும் குடைத்தலுண்டாகும்; இரஸவஹாதி ஸ்ரோதஸ்ஸுகள் அடைபடும்; வாய் விரஸமாகும்; குளிர்ந்த நீரால் வியாதி விருத்தியாம்[4]. 3½.

பித்த த்ருஷ்ணை:—பித்ததோஷஸம்பந்தமான த்ருஷ்ணையில் மூர்ச்சை, அன்னத்வேஷம், வாய்ப் பிதற்றல், தேஹதாபம், கண்கள் சிவத்தல், இடைவிடாத நாவறட்சி, குளிர்ச்சியில் அதிக விருப்பம், வாயில் கைப்பு, ஏக்கமுறுதல் ஆகிய இக்குறிகள் காணும். 4½.

---

1. காஸம், ச்வாஸம், ஜ்வரம், விக்கல், நாவறட்சி, மனம் ஏக்கமுறுதல், இருதய ரோகம், தமகச்வாஸம் இவை சர்தியின் உபத்திரவங்களாம்.

* த்ருஷ்ணை:—நாவறட்சி.

2. இங்கே தாலுபாகம் என்பது உபலக்ஷணம். க்லோமா முதலிய இதர அவயவங்களின் ஸ்ரோதஸ்ஸுகளும் கோளாறடையும். "இரஸவஹமான குழாய்களையும், நாக்கின் அடிப்புறம் தொண்டை தவடை இவற்றிலடங்கிய ஸ்ரோதஸ்ஸுகளையும், க்லோமாவையும் சோஷணம் செய்து பிரபலமான அவ்விரண்டு தோஷங்களும் த்ருஷ்ணையை யுண்டுபண்ணும்" என்று சரகர்.

3. தூஷிக்கும் தன்மையினலும், கோளாறடைந்த தோஷங்களின் ஸம்பந்தத்தினலும் ஆமதோஷமும் அன்னமுங்கூட இங்கே த்ருஷ்ணைக்குக் காரணமாகின்றனவாம்.

4. வாததோஷம் சீதளத்தினல் விருத்தியாவது இயல்பாகையால், சீதளத்தினல் இதற்கு அநுபசயம் கூறப்பட்டது.

கப த்ருஷ்வண:—ஜாடராக்னி முதலிய உட்புறச்சூடு கபதோஷத்தினுல் சூழ்ந்து மறைக்கப்பட, அதனுல் தேஹச்சூடும் ஆவரணம் செய்யப்படுவதால், அப்பொழுது கபத்தினுல் த்ருஷ்ணையுண்டாகிறது. இதில், நித்திரையினுல் தேஹம் பாரமாயிருப்பதாகத் தோற்றுதல், வாய் இனிப்பாதல் ஆகிய குறிகள் உண்டாகும்; இதனுல் வருந்துபவன் மிகவும் சுஷ்கிப்பான்[1]. 5½.

க்ஷதஜ த்ருஷ்வண:—ஆயுதாதிகள் தாக்கி விரணமுண்டாக, அதிலிருந்து இரத்தம் அமிதமாய் வெளிவந்து நோவும் அதிகரித்தால் அப்பொழுது த்ருஷ்ணை யுண்டாகும். இது அடி தாக்கிய விரணத்தினுலுண்டாவதால் க்ஷதஜ த்ருஷ்ணை யெனப்படுகிறது. 6.

க்ஷயஜ த்ருஷ்வண:—இரஸதாது க்ஷயிக்குங்கால் க்ஷயத்ருஷ்ணை யென்கிற வறட்சியுண்டாகும். இதற்காளானவன் இராக்காலங்களில் தண்ணீரை மிகுதியாகக் குடிப்பான்; எவ்வளவு குடித்தும் திருப்தியடைவதில்லை[2]; இதை ஸந்நிபாத ஸம்பந்தமானதென்று சிலர் கூறுவர். இரஸக்ஷயத்திற்குக் கூறப்படும் இலக்ஷணங்களெல்லாம்[3] இதற்குமுண்டா மென்பதை வைத்தியர் கவனிக்கவேண்டும். 7, 7½.

ஆமதோஷஜ த்ருஷ்வண:—ஆமதோஷத்தினு லுண்டாகும் த்ருஷ்ணையில் மூன்று தோஷக் குறிகளும் காணும்; மார்பில் வலி, கோழை அல்லது உமிழ்நீரை அதிகமாகத் துப்புதல், தேஹமிளைத்தல் இக்கோளாறுகளும் உண்டாகும். 8.

அன்னஜ த்ருஷ்வண:—அதிக ஸ்நிக்தமாகவும், அதிக அம்லமாகவும், அதிக உப்பாகவும், அதிக குருவாகவுமுள்ள உணவு சீக்கிரம் நாவறட்சியைத் தரும். 8½.

ஔபஸர்கிக த்ருஷ்வண:—[4] உபத்திரவத்தினு லுண்டாகும் த்ருஷ்ணையில் ரோகிக்குக் குரல் க்ஷீணிக்கும்; மிகவும் சோர்வுண்டாகும்; அதிக தீனததன்மை யேற்படும்; வாயும் தொண்டையும் தவடைகளும் உலர்ந்துபோகும்; அவ்வித த்ருஷ்ணை சரீரத்தைச் சோஷிப்பித்து

1. சரகத்திலும் கபஜ த்ருஷ்ணை கூறப்படவில்லை. ஆனுல் கபம் சுதந்திரமாக த்ருஷ்ணை யுண்டாக்குவதில்லை. கபம் தேஹச்சூடு முதலியதை ஆவரணம் செய்து புடபாகரீதியில் உள்ளேயே வேக்காட்டையுண்டுபண்ணி த்ருஷ்ணைக்குக் காரணமாவதாகக் கருத்து.

2. "எல்லாவித த்ருஷ்ணையிலும் எவ்வளவு தண்ணீர் குடித்தாலும் திருப்தியுண்டாவதில்லை. அடிக்கடியும் அமிதமாகத் தண்ணீர் அருந்தியும் திருப்தியடையாமல், மீண்டும் மீண்டும் தண்ணீரை விரும்புகிறவன் த்ருஷ்ணுரோக முள்ளவன்" என்று ஸுச்ருதர்.

3. இரஸக்ஷய லக்ஷணம்:—இருதயத்தில் வேதனை, நடுக்கம், உடல் ஸாரமற்றதாகத் தோற்றுதல், நாவறட்சி இவையாம்.

4. ஔபஸர்கிக த்ருஷ்ணை—உபஸர்கம் என்றுல் உபத்திரவம்; உபஸர்க ஸம்பந்தமானது ஔபஸர்கிகம். உபத்திரவங்களால் உண்டாகும் த்ருஷ்ணை யெனப் பொருள்.

விடும்; இது கஷ்டஸாத்ய வியாதி. இதில் ஜ்வரம், மூர்ச்சை, க்ஷயம், காஸம், ச்வாஸம் முதலியவை உபத்திரவக் குறிகளாம்.[1] 9, 10.

த்ருஷ்ணையில் அஸாத்ய நிலைமைகள்:— எந்த த்ருஷ்ணையும் அதிகரித்துவிட்டால் சிகித்ஸைக்கு வசப்படாதென்றுணருக. மேலும் வேறு ரோகங்களால் இளைத்துப் போனவருக்கும், சர்தியினால் வருந்துபவருக்கு முண்டானாலும், கடுமையான உபத்திரவமுள்ளவையானாலும் அவ்வித த்ருஷ்ணைகளும் அபாயமானவையாம். 11.

---

# 17. மூர்ச்சாதி நிதாநம்*

## மூர்ச்சை

மூர்ச்சையின் நிதாந - ஸம்ப்ராப்திகள்:—மிகவும் இளைத்துள்ளவன், தோஷம் மிக்க விகாரமடைந்திருப்பவன், விருத்தாஹாரங்களைப் புஜிப்பவன், மல-மூத்திராதி வேகங்களை அடக்குபவன், அடி முதலியதால் தாக்குண்டவன், ஸத்வகுணமிழந்தவன் இவர்களுக்கு இந்த்ரியங்களுக்கு ஆதாரமான வெளிப்புற ஸ்ரோதஸ்ஸுகளிலும்[2], உட்புற ஸ்ரோதஸ்ஸுகளிலும்[3] தோஷங்கள் உக்கிரமாகப் பிரவேசிக்கையில் மூர்ச்சை யுண்டாகும். இங்ஙனம் ஸம்ஜ்ஞாவஹ நாடிகள் என்கிற உணர்ச்சி நரம்புகள் வாதாதி தோஷங்களால் மறைக்கப்பட, இன்ப-துன்பங்களை அறிய முடியாதவாறு அந்நாடிகளை உடனே தமோகுணம் வந்து மூடிக் கொள்கிறது. அந்த நிலைமையை மூர்ச்சை யென்றும், மோஹம் என்றும் கூறுவர். 1—3.

மூர்ச்சையின் ஸங்க்யாஸம்ப்ராப்தி:—அந்த மூர்ச்சை வாத-பித்த-கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு விதமும், இரத்தத்தினால் ஒன்றும், மத்யபானத்தினால் ஒன்றும், விஷத்தினால் ஒன்றும் ஆக ஆறு விதமாகக் கூறப்படுகிறது. ஆறுவிதமான மூர்ச்சைகளிலும் பித்த தோஷமே மேலாக நிற்கின்றது. 4,5.

மூர்ச்சையின் பூர்வரூபம்:—இருதய வேதனை, அதிக கொட்டாவி, சோர்வு, ஞாபகசக்தி குறைதல் இவை மூர்ச்சைகளுக்குப் பூர்வரூபங்

---

1. த்ருடபலன் ஐந்துவித த்ருஷ்ணாரோகங்களையே விவரிக்கிறார்; அவை வாதத்ருஷ்ணை, பித்தத்ருஷ்ணை, க்ஷயத்ருஷ்ணை, ஆமத்ருஷ்ணை, ஔபஸர்கிகத்ருஷ்ணை என்பனவாம்.

* மூர்ச்சாதிகள்—மூர்ச்சை, பிரமை, தந்திரை, நித்திரை, ஸந்நியாஸம் இவற்றின் நிதாநங்கள் அடங்கிய அத்தியாயம்.

2. இதனால் பாஹ்யேந்த்ரியங்கள் என்கிற குதம், உபஸ்த்தம், ஹஸ்தங்கள், பாதங்கள், வாக் என்கிற கர்மேந்த்ரியங்கள் குறிக்கப்படுகின்றன.

3. ஆப்யந்தர ஸ்ரோதஸ்ஸுகள் — செவி, நேத்திரம், நாக்கு, சர்மம், நாசி, மனது என்கிற ஞானேந்திரியங்கள்.

களாம். அவற்றின் குறிகள் விளங்கத் தோன்றினால் வாதாதி தோஷஸம்பந்தத்தையும் அவற்றிற் கண்டு கொள்க. 6.

வாத மூர்ச்சை:—ஆகாயம் நீல நிறமாகவோ, கருநிறமாகவோ, சிறிது சென்னிறமாகவோ தோற்ற, அங்ஙனமே அறிவிழந்து மயக்க முண்டாம்; சீக்கிரத்தில் தெளிவு முண்டாம்; உடல் நடுக்கமும், உடம் பெல்லாம் துவைக்கப்பட்டது போன்ற வலியும், இருதய வேதனையும் காணும்; தேஹம் இளைத்துக் கருஞ்சிவப்பான நிறத்தைப் பெறும்; இவை வாததோஷத்தினாலான மூர்ச்சையின் குறிகளாம். 7, 8.

பித்த மூர்ச்சை:—பித்தத்தினாலுண்டாகும் மூர்ச்சையில் தன் முன்னிலையில் ஆகாயம் சிவப்பாகவோ பசுமையாகவோ பொன்னிற மாகவோ தோற்ற, கண்கள் இருளடைய பிணியாளி மூர்ச்சிப்பான்; பிறகு உடல் வியர்க்க மீண்டும் உணர்ச்சி பெறுவன்; நாவறட்சி யும் தாபமும் உண்டாகும்; கண்கள் சிவப்பாகவோ, பொன்னிற மாகவோ, இளஞ் சிவப்பாகவோ கலங்கும்;[1] மலம் உடைந்து பேதி யாகும்; தேஹமும் பசுமையாகும். 9, 10.

கப மூர்ச்சை:—சிலேஷ்மத்தினா லுண்டாகும் மூர்ச்சையில் முத லில் ஆகாயமண்டலம் மேகத்தினால் முற்றிலும் சூழப்பட்டது போல வும், கன இருள் மூடியது போலவும் தோன்ற அங்ஙனமே கண் இருண்டு, மயக்கமுண்டாம்; பிறகு வெகு நேரம் சென்று தெளி வுண்டாகும்; நனைந்த சர்மத்தினால் போர்க்கப்பட்டவைபோல அங் கங்கள் தடித்து பாரமாயிருப்பதாகத் தோற்றும்; வாயில் உமிழ்நீர் அதிகமாய் ஊறும்; இருதயத்துடிப்பும் பலமாகும். 11, 12.

ஸந்நிபாத மூர்ச்சை[2]:—மூன்று தோஷங்களும் பிரகோபித்துண் டாகும் மூர்ச்சையில் ஒவ்வொரு தோஷத்திற்குமுள்ள இலக்ஷணங்கள் அனைத்தும் சேர்ந்துண்டாகும். அது அபஸ்மாரம் போல ஸம்பவித்து,[3] ஜடிதியில் மனிதனைக்கீழே தள்ளும்; ஆனால் வாயில் நுரை தப்புவது முதலிய கோரமான சேஷ்டைகள் உண்டாகா. 13.

---

1. 'நாவறட்சியும்' என்பது முதல் 'கலங்கும்' என்ப திருகவு ள்ள விஷயம் ஸம்பந்தமான "ஸபிபாஸஸ் ஸஸந்தாபோ ரக்த்த பீதாருணேக்ஷண:" என்கிற மூல ச்லோகம் பிரக்ஷிப்தம் என்று கருதப் படுகிறது. மேலும் "ரக்தபீதாருணேக்ஷண:" என்பதற்குப் பதிலாக "ரக்தபீதா குலேக்ஷண:" என்று வேறு பாடமும் கூறப்படுகிறது. அப்பொழுது "கண்கள் இரத்தநிறமாகவும் பொன்னிறமாகவும் விரண்டவையாகவும் இருக்கும்" என்பது அதன் பொருள்.

2. ஸந்நிபாத மூர்ச்சையைச் சேர்க்காது, மூர்ச்சை ஆறு என்று கூறப்பட்டது. ஸந்நிபாதமும் சேர்ந்தால் ஏழு விதமாம். முதலில் ஸுச்ருதருடைய கொள்கைப்படி ஆறுவித மூர்ச்சைகளும், பிறகு சரகரது கொள்கைப்படி ஸந்நிபாத மூர்ச்சையும் சேர்த்துக் கூறப்பட்ட தென்றறிக.

3. 21-வது அபஸ்மார நிதானம் பார்க்க.

**இரக்த மூர்ச்சையின் ஸம்ப்ராப்தியும் காரணமும்:**—மண் அல்லது ப்ருதிவீ பூதமும், நீர் அல்லது அப் பூதமும் தமோகுணமயமானவை;[1] இரத்தத்தின் வாஸனையும் அவ்விரு பூதங்களின் பற்றுதலுள்ளது; ஆகவே இரத்தத்தின் நாற்றத்தால் பூமியில்[2] மனிதர் மூர்ச்சையடைவர். இரத்தத்தைக் கண்டு[3] மூர்ச்சையடைவது, அந்த திரவியத்தின் இற்யகைத்தன்மை யென்றும் சிலர் கூறுவர். 14, 14½.

**விஷ-மத்ய மூர்ச்சைகளின் ஸம்ப்ராப்தியும் காரணமும்:**—இதர பதார்த்தங்களிலுள்ள லக்வாதி குணங்களே[4] விஷத்திலும் மதுவிலும் வெகு கடுமையாகச் சேர்ந்திருக்கின்றன; ஆகையினாலேயே விஷ-மத்யங்களால் பின் கூறப்படுமாறு மூர்ச்சை உண்டாகும். 15½.

**இரக்த மூர்ச்சை:**—இரத்த வாஸனையாலான மூர்ச்சையில் கண்களும், மற்றும் பெரும்பான்மையான அவயவங்களும் செயலற்று நிற்கும்; ச்வாஸம் விடுவதே விளங்கத் தெரியாது. 16.

**மத்ய மூர்ச்சை:**—மதுபானத்தாலான மூர்ச்சையில் பிதற்றிக்கொண்டு பிணியாளி படுத்துக்கொள்கிறான்;[5] அப்பொழுது உணர்ச்சியிழந்த அல்லது பிரமித்துப்போன மனதுடையவனாயிருப்பான்; அவயவங்களைத் தரையில் அடித்துக் கொள்வான்; பானம் செய்த மது ஜீர்ணிக்கும் வரையில் இக் குறிகள் தொடரும். 17.

**விஷமூர்ச்சையின் இலக்ஷணம்:**—பொதுவாக விஷங்களாலான மூர்ச்சையில் அவயவங்களில் நடுக்கல், நித்திரை, நாவறட்சி, கண்கள் இருளடைதல் இக்குறிகள் காணும; மேலும் வெவ்வேறு விஷத்திற்கு மேன்மேலுமுள்ள கடுங்குணங்களையும், அந்தந்த விஷத்திற்கும் கூறப்படுகிற குணங்களின் பேதங்களைக் கொண்டு அறிக.[6] 18.

**மூர்ச்சாதிகளின் மூல தத்துவங்கள்:**—(1) மூர்ச்சையானது பித்தமும் தமோகுணமும் பெரும்பான்மையும் கலந்துண்டாகும் ஓர்

---

1. "தமோ பஹுலா ப்ருதிவீ ஸத்வதமோ பஹுலா ஆப:" என்று ஸுச்ருதர்.

2. தமோகுணப்பிரதானமான ப்ருதிவியிலுண்டாகும் மனிதரும் தமோகுணமயமானவர்; ஆகவே அவர்கள் எளிதில் தமோரூபமான மூர்ச்சையை யடைகிறார்கள் எனக் கருத்து.

3. இரத்தவாஸனையினால் மூர்ச்சையடைவதுபோலவே, இரத்தத்தைக் காண்பதாலும் மூர்ச்சையடைகிறார்கள் எனப் பொருள். "யச் ச த்ருஷ்ட்வாபி முஹ்யதி" என்கிற பாடம் ஒன்றுண்டு; அதற்கு "இரத்தத்தைப் பார்த்தால்கூட மூர்ச்சையடைகிறான்" எனப் பொருள்.

4. விஷ குணங்களைப்பற்றி 69-வது விஷநிதானம் பார்க்க.

5. "நிஸ்வநந் ப்ராந்தமாநஸ:" என்று மூலத்தில் வேறொரு பாடமுண்டு. அதற்குப் பிணியாளி சப்தித்துக் கொண்டு, மனம் தடுமாற்றமடைந்திருப்பான் எனப் பொருள்.

6. விஷநிதானத்திற் கூறப்போகிற மூலவிஷம், பத்திர விஷம், க்ஷீர விஷம் முதலிய பேதங்கள் இதனால் குறிப்பிடப்படுகின்றன.

அவஸ்த்தை. (2) பிரமம் என்கிற தலைச்சுற்றல் இரஜோகுணமும் வாத-பித்த தோஷங்களும் சேர்ந்துண்டாகும். (3) தந்த்ரா என்னும் சோம்பல் தமோகுணமும், வாத-கபங்களும் சேர்ந்துண்டாவது. (4) நித்திரை கபதோஷமும் தமோகுணமும் கூடியுண்டாவது. 19.

பிரமாதிகள்:—(சக்கரம் சுற்றுவது போல் மனிதன் தனது தலை சுற்றுவதாய் உணருவான்; அந்த நிலைமையில் அடிக்கடியும் பூமியில் விழுவான்; பிரமரோகம் என்ற இது வாத-பித்த தோஷங்களும், இரஜோகுணமும் சேர்ந்துண்டாகும் நிலைமையாம்.)

தந்த்ரா:—இந்த்ரிய விஷயங்களில் பிரவ்ருத்தியின்மை, தேஹம் பாரமாதல், அதிக கொட்டாவி, நித்ரையுறு பவனுக்குள்ளது போன்ற உணர்ச்சி ஆகிய குறிகள் தந்த்ரை யென்னும் சோம்பலின் இலக்ஷணங்களாம்.[1] 20.

ஸந்நியாஸம்:—மனிதருக்கு வெறியாவது மூர்ச்சையாவது உண்டானால், அவை தோஷங்கள் வேகங்களைக் காட்டியடங்கிய பின்பு தாமே தணிவடைகின்றன; ஸந்நியாஸ ரோகமோ, ஔஷதப் பிரயோகங்களின்றி அடங்குவதில்லை. இதில் தோஷங்கள் வலியவே கடுமையாகப் பிரகோபித்து, வாக் தேஹம் மனது இவற்றின் செயல்களைக் கவர்ந்து ஒடுக்கி, பிராணியை துர்பலமாக்கி, மர்மஸ்த்தாநங்களிற் பிரவேசித்து மயக்கமுண்டுபண்ணுகின்றன. மனிதன் ஸந்நியாஸ வியாதியினால் பீடிக்கப்பட்டு, கட்டையைப்போலவும் உயிரிழந்த சவத்தைப் போலவும் வீழ்ந்து, உடனே பலன் தரக்கூடிய சிகித்ஸையைச்[2] செய்தாலன்றி சீக்கிரம் உயிர் துறப்பான். 21—23.

## 18. பாநாத்யயாதி நிதாநம் *

மதாத்யயத்தின் பொது நிதாநம்:—(மதுவின் பொது குணங்கள்:); விஷத்திற்குக் கூறப்படும் குணங்கள் மத்யத்திலும் உண்டு. ஆகவே

1. இங்கே பிரமத்திற்கும், நித்திரைக்கும் (அவை வெகுப் பிரஸித்தமானவையாகையால்) இலக்ஷணம் பிரத்தியேகமாகக் கூறப்படவில்லை. (ஆனால் பிரமத்திற்கு மாத்திரம் கூறியுள்ள லக்ஷணம் பிரக்ஷிப்த ச்லோக ஸம்பந்தமானது.) "எப்பொழுது இந்த்ரியங்கள் மிகவும் சோர்ந்துபோய், மனதும் அயர்ந்துபோய், அதற்கு லக்ஷ்யமான விஷயங்களில் பிரவருத்திக்க முடியாமல் ஓய்வடைகின்றனவோ அப்பொழுதுள்ள நிலைமை ஸ்வப்நம் அல்லது நித்திரை யெனப்படும்'' என்று சரகர். நித்திரையில் இந்த்ரியங்களும் மனதும் ஒரு மிக்கச் சோர்ந்து மந்தப்படுகின்றன; தந்த்ரையிலோ இந்த்ரியங்கள் மாத்திரமே சோர்வடைகின்றன. இதுதான் நித்திரைக்கும் தந்த்ரைக்கு முள்ள பேதம்.

2. "ஸூசீவ்யதநம் (ஊசியால் கீறி ஔஷதம் செலுத்தல்), அஞ்ஜநமிடல் முதலியவை உடனே பலன் தரக்கூடிய சிகித்ஸைகள் என்று'' விஜய ரக்ஷிதன்.

* மதுபாநம் அமிதமாகச் செய்வதாலுண்டாகும் தீங்கு பாநாத்யயம். மதாத்யாயம் என்பதும் அதுவே. பாநாத்யயாதி யென்பதால்

மதுவை முறைதவருக அருந்தினுல் கடுமையான மதாத்யயம் என்னும் வெறி யுண்டாகின்றது. ஆனுல் மது, அதன் சுபாவத்தைக்கொண்டு அன்னத்திற்குச் சமமாகவே கருதப்படுகிறது; முறைதவருக உட யோகித்தாலோ அது ரோகமுண்டு பண்ணும்; முறைப்படி யுபயோகித்தால் அதுவே அமுதம் போன்றதாம். அதெங்ஙனமெனில்.— பிராணிகளுக்கு அன்னமே உயிர்; ஆனுல் அதையே முறை தவருக உட்கொண்டால் பிராணனுக்கு அபாயம் விளைவிக்கிறது. அங்ஙனமே விஷம் ஸாதாரணமாய் உயிரைப் போக்கிவிடுகிறது; அதுவே, முறைப்படி பிரயோகிக்கப்படுமானுல் இரஸாயநமாகிறது. முறைப்படி, அளவறிந்து, தகுந்த காலத்தில்,[1] அனுகூலமான உனவுகளோடு அவரவரது தேஹபலத்திற்கேற்றவாறு, மனக்களிப்புடன் மதுவைப் பானம் செய்தால் அது அமுதம் போல் குணம் செய்யும். அதை ஸ்நிக்த்தமான [2] அன்னத்தோடும், மாம்ஸங்களோடும், இதர பக்ஷ்யங்களோடும் உட்கொண்டால் ஆயுள் விருத்தியடையும்; தேஹ பலமும் புஷ்டியுடன் மேன்மையுறும். இங்ஙனம் மத்யம் முறைப்படி யுட்கொள்ளப்பட்டால், இரம்யமான வஸ்துக்களில் மனம் இன்புற்று களிப்படையும்; சரீர தேஜஸ்ஸும் அதிகப்படும்; மேலான வீர்யமும் உண்டாகும். 1—6.

## நான்குவித மதங்கள் [3]

முதல் மதம்: — மதுபானத்தினுலுண்டாகும் மதத்தின் முதல் நிலைமையானது புத்திக்கும், ஞாபகசக்திக்கும் அனுகூலமாகவும்,

---

பரமதம், பாநாஜீர்ணம், பாநவிப்ரமம் என்கிற கோளாறுகளும் குறிக்கப்படுகின்றன.

1. கிரீஷ்ம காலத்தில் சீதமும் மதுரமுமான மாத்வீகம் முதலிய மதுவும், சீதகாலத்தில் கௌடிக-பைஷ்டிகாதி உஷ்ண - தீக்ஷ்ணமான மதுக்களும் உபயோகமானவை. அவ்விதமே வாதவிகாரத்தில் ஸ்நிக்த்தகுணமுள்ள மதுவும், கபவிகாரத்தில் ரூக்ஷாதிகுணமுள்ள மதுவும் உபயோகிக்கத் தகுந்தவை.

2. இங்கே ஸ்நிக்த்தம் என்பது உபலக்ஷணம்; ஆகவே மத்யத்திற்கு எதிரிடையான இதர குணங்களோடும் கூடிய அன்னுதிகள் உபயோகிக்கப்படவேண்டு மென்பது கொள்கை. மத்யத்தின் ஸாதாரண குணங்களாவன:—"மதுவானது அம்லம், தீக்ஷ்ணம், ஸூக்ஷ்மம், விசதம், ரூக்ஷம், ஆசுகாரி, வியவாயி, விகாஸி என்கிற பொதுவான குணங்களையுடையது" என்று ஸுச்ருதர். "மைரேயம், மதிரை, சீது, மது இந்த நான்கு விதமான மதுக்களில் ஒவ்வொன்றிலும் அறு சுவைகளும் உண்டு. ஆனுல் முக்கியமான ரஸம் அம்லந்தான்" என்று போஜன் கூறும் விதமாய் மத்யங்களில் முக்கியமாய் அடங்கியுள்ளது அம்லரஸமே. "மத்யமே அம்லரஸமுள்ள வஸ்துக்கள் அனைத்திலும் மேலானது" (ஸர்வேஷாம் அம்லஜாதீநாம் மத்யம் மூர்த்நி வ்யவஸ்திதம்) என்பர்.

3. மதம் என்பது மதுபானத்தினுலுண்டாகும் வெறி; இது ஸாதாரணமாய் பிரதம மதம், மத்திம மதம், அந்திம மதம் என்று மூன்று விதமாகத்தான் வழங்கப்படும். ஆனுல் மத்திம மதத்திற்கும் அந்திம

இன்பந்தருவதாகவும், இதர பானங்கள் அன்னமுண்ணுதல் நித்திரை யுறுதல் சிற்றின்பம் இவற்றில் நல்ல விருப்ப முண்டு பண்ணுவதாக வும், வாத்தியத்திலும் பாடுவதிலும் உத்ஸாஹத்தைக் கொடுப்பதோடு குரலை மேன்மையுறச் செய்வதாகவும் இருக்கும். ஆகவே முதல் மதம் வெகு இரம்யமானதெனக் கூறப்படுகிறது. 7.

இரண்டாவது மதம்:—மத்திம மதம் என்னும் இரண்டாவது வெறியினுல் மதங்கொண்டவனுக்கு புத்தியும், ஞாபகசக்தியும், பேச் சும், நடக்கையும் தெளிவாக அல்லது ஒழுங்காக இருக்கமாட்டா. அவன் தன் செயலாலும் தோற்றத்தினுலும் பித்தன் போலவும் அடங்காப்பிராணியாகவும் இருப்பான்; அவனுக்குத் தந்த்ரையும் நித்திரையும் அடிக்கடியும் அதிகரிக்கும். 8.

மூன்ருவது மதம்:—மூன்ருவது வெறியில்[1] மனிதன் நெறிதவறி நடக்கத் துணிவான்; பெரியோர்களேயும் மதிக்கமாட்டான்; தகாதன வற்றையும் தின்பான்; ஞாபகமிழப்பான்; மதியிழந்து மனதிலுள்ள இர்ஹஸ்ய விஷயங்களேயும் மொழிந்திடுவான். 9.

நான்காவது மதம்:—நான்காவது மதத்தில் மனிதன் முற்றிலும் அறிவற்றவனுய், ஒடிந்த மரம்போலச் சாய்ந்து செயலற்றிருப்பான்; செய்வன செய்யாதனவற்றை யுணரவியலாதவனுய்,[2] சவத்தினும் கேடுண்ட நிலைமையில் வீழ்ந்திருப்பான். மூடனல்லாத புத்திஸ்வ தீனமும் விவேகமுமுடைய எம்மனிதன் தான் கொடிய விலங்குகள் நிரம்பிய அடவியைப் போன்றதும், பித்து போன்றதுமான அத் தகைய மதத்தை அடைய விரும்புவான்! 10, 11.

## மதாத்யயங்கள்

மதாத்யயாதி தீமைகளுக்குக் காரணமான மதுபான வகைகள்:— (1) வேறு உணவின்றியே தினந்தோறும் மதுவையே தனித்துப் பருகினுல் வெகு கஷ்டஸாத்யமான கோளாறுகள் உண்டாய், சீக்கி ரத்தில் உடலழிவும் நேரிடும். (2) வெகு கோபமாயிருக்கையிலும், (3) பயந்திருக்கையிலும், (4) நாவறட்சி மேலிட்டிருக்கையிலும், (5) மனம் கிலேசமடைந்திருக்கையிலும், (6) பசித்திருக்கையிலும், (7) வியாயாமம்-சுமை யெடுத்துச் செல்லுதல் - வெகு தூரம் வழி நடத்தல் ஆகிய இக்கடுங் காரியங்களால் அயர்ந்திருக்கையிலும்,

---

மதத்திற்கும் இடையில் ஸம்பவிக்கும் நிலைமை மூன்ருவது மதமாகக் கருதப்படுகிறது. ஆகவே மதம் நான்கு விதம் எனப்படுகிறது.

1. சரகத்தில் இரண்டாவது மூன்ருவது மதங்களுக்கு இடையில் வேறொரு வகையான மதம் கூறப்படுகிறது:—"மத்திமமான மதத் தைத் தாண்டி அந்திமம் அல்லது உத்தமமதத்தைப் பெறுவதற்கு முன்பு இராஜஸ - தாமஸகுணமுள்ள மனிதர் எல்லாப்பிழையையும் செய்வர். பித்து போன்ற அத்தகைய மதத்தை எவர்தான் அடைய விரும்புவர்?"

2. "செய்வன செய்யாதனவற்றை யுணரும் பகுத்தறிவு இழந் தும்" என்று வேறொரு பாடமுண்டு.

(8) வேகங்களை அடக்கி வருகையிலும், (9) அதிக தண்ணீரைக் குடிக்கையிலும், (10) அஜீர்ண போஜனங்களைப் புஜித்திருக்கையிலும், (11) துர்ப்பலமான நிலைமையிலும், (12) உஷ்ணத்தினால் தவிக்கும் நிலைமையிலும் மத்ய பானம்செய்தால் பானாத்யயம், பரமதம், பானாஜீர்ணம், கடுமையான பானவிப்ரமம் ஆகிய பல கோளாறுகள் உண்டாம்; அவற்றின் இலக்ஷணங்கள் அடியில் வருமாறு.—12—15.

வாத மதாத்யயம்:—விக்கல், ச்வாஸம, தலை நடுக்கம், பக்கச்சூலை, நித்திரையின்மை, மிகுதியாகப் பிதற்றுதல் இக்குறிகளைக் கொண்டு மதாத்யம் பெரும்பாலும் வாதத்தினால் உண்டானதாய்[1] அறிக. 16.

பித்த மதாத்யயம்:—நாவறட்சி, தேஹதாபம், ஜ்வரம், அதிக வியர்வை, மயக்கம், அதிஸாரம், தலைச்சுற்றல், சரீரம் மஞ்சள் நிறமாதல் இவற்றைக் கொண்டு மதாத்யயம் பெரிதும் பித்தத்தினாலேற்பட்டதாய் அறிக. 17.

கப மதாத்யயம்:—வாந்தி, அரோசகம், இருதயம் மிகத் துடித்தல், சோம்பல், தேஹம் திமிர்த்தல், பாரமாதல், மிகக் குளிர்ந்துபோதல் இவற்றைக் கொண்டு மதம் பெரும்பாலும் கபத்தினாலுண்டானதென்றறிக. 17½.

ஸந்நிபாத மதாத்யயம்:—ஒவ்வொரு தோஷத்தின் தனித் தனி லக்ஷணங்களும் சேர்ந்து கண்டால் அதை ஸந்நிபாதமதாத்யயம் என்றறிக. 18.

## பரமதாதிகள்

பரமதம்:—நாசி முதலியதிலிருந்து அதிக கபம் பெருகுவது, தேஹ குருத்வம், அரோசகம், மலமூத்திரங்களின் அடைப்பு, சோம்பல், சிரஸ்ஸிலும் பூட்டுகளிலும் பிளக்கப்படுவது போன்றவலி இக்குறிகள் 'பரமதம்' என்கிற கடும் வெறியில் உண்டாவதாகச் சாஸ்திரஞ்ஞர் கூறுவர். 19.

பானாஜீர்ணம்:—பானம் செய்த மது ஜீர்ணமாகாமல் கடுமையான வயிற்றுப் பொருமல், வாந்தி, தொண்டை-மார்புகளில் அழற்சி ஆகிய குறிகள் 'பானாஜீர்ணம்' என்பதில் உண்டாகும். 19½.

பானவிப்ரமம்:—இருதயத்திலும் தேஹத்திலும் குத்தல், கபம் ஊறுதல், தொண்டையில் புகைவது போன்ற வேக்காடு, மூர்ச்சை, வாந்தி, ஜ்வரம், தலைவலி, தேஹ அழற்சி, ஸுரை யென்னும் மதுவிலும் மாப்பண்டங்களாலான உணவுகளிலும் வெறுப்பு ஆக இவை உண்டானால் அக் கோளாறு 'பானவிப்ரமம்' எனப்படும். 20½.

---

1. "எல்லா மதாத்யயங்களும் மூன்று தோஷங்களுடைய ஒரு மித்தக் கோளாறால் உண்டாகின்றன" என்று சரகர் கூறுவதால், வாததோஷம் மற்ற இரண்டையும் விட அதிகமாகப் பிரகோபித்துண்டாகும் மதாத்யயத்தில் வாததோஷக்குறிகள் மற்றவைகளைவிட விளங்கத் தோன்றும் எனக் கருதி, "பெரும்பாலும்" எனக் குறிப்பிடப்பட்டது. இங்ஙனமே பித்தமதாத்யயம், கபமதாத்யயம் இவற்றிலும் அந்தந்த தோஷத்திற்குள்ள விசேஷக் குறிகள் தோன்றுவதாக மேலே கூறப்படுகிறது.

பாநஹதம்:—மதுபாநத்தினால் உடலழியும் நிலைமை நேரிட்டால் அது 'பாநஹதம்' எனப்படும்; அப்பொழுது மேலுதடு நீண்டுத் தொங்கும்; உடல் மிகவும் குளிர்ந்து விடும்; தேஹத்தின் உட்புறத்தில் அமித அழற்சியேற்படும்; வாய் எண்ணெய் பூசப்பட்டதுபோல் தோன்றும்; இந்த நிலைமை அஸாத்யமென்றறிக. மேலும் இவனுடைய பற்களும் உதடுகளும் நாக்கும் கருக்கும் அல்லது நீலநிறமாகும்; கண்கள் பசுமையாகவோ சிவப்பாகவோ மாறும் விக்கலும், ஜ்வரமும், வாந்தியும், உடல் நடுக்கமும், பக்கவலியும் இருமலும், தலைச்சுற்றலும் [1] இக் கோளாறில் தோன்றும்.[2] 21, 22.

---

## 19. தாஹ நிதாநம் *

மத்யஜ தாஹம்:—முற்கூறிய மதுபானத்தினா லுண்டான வெப்பமானது பித்த-ரக்தங்களோடு கலந்து விருத்தியாய் சர்மத்தை யடைந்து கொடிய தாபத்தை உண்டுபண்ணும். 1.

இரக்தஜ தாஹம்:—அமிதமாய் விருத்தியாய் தேஹமெங்கும் வியாபித்துள்ள இரத்தம் பிணியாளியை மிகவும் எரிக்க, அவன் அக்னியினால் தஹிக்கப்படுவதுபோல வருந்துவான்; நாவறட்சி விசேஷித்து, உடலெல்லாம் பொதுவாகவும், நேத்திரங்கள் முக்கியமாகவும் செந்நிறமாகும்; பொதுவாக தேஹத்திலும், முக்கியமாய் முகத்திலும் லோஹத்தின் நாற்றமுண்டாகும்.[3] 2.

பித்தஜ தாஹம்:—பித்ததோஷம் அதிகரித்த தாஹரோகத்தில் உடலில் நெருப்புத்தழலை இறைப்பதுபோல் அழற்சியும் பித்த ஜ்வரத்திற்கான மற்றக் குறிகளும் காணும். 3.

---

1. விக்கல் முதலியவை பாநாத்யயத்தின் உபத்திரவங்கள் என்றும், இவை கஷ்டஸாத்யக் குறிகளேயன்றி அஸாத்யக்குறிகள் அல்லவென்றும் சிலரது கொள்கை.

2. சரகத்தில் த்வம்ஸகம், விக்ஷேபகம் என்கிற வேறு இரண்டு மதுபானக் கோளாறுகள் கூறப்பட்டிருக்கின்றன. "மதுபான வழக்கத்தை இடையில் சில நாள் விட்டிருந்து, மீண்டும் அதை அமிதமாயுட்கொண்டால் த்வம்ஸகம், விக்ஷேபகம் என்கிற கோளாறுகள் உண்டாகின்றன. த்வம்ஸகம்:—கபம் அதிகமாகச் சுரத்தல், தொண்டையும் வாயும் சுஷ்கித்தல், எந்த சப்தத்தையும் ஸஹிக்கமுடியாமை, அதிக சோம்பல், அதிக நித்திரை. விக்ஷேபகம்:—மாரடைப்பு, தொண்டையடைப்பு, மயக்கம், வாந்தி, உடலெல்லாம் நோவு, ஜ்வரம், நாவறட்சி, இருமல், தலைவலி."

* தாஹம்—அழற்சி. மத்ய பாநாதிகளால் பிரகோபித்த பித்தம் முக்கியமாய் இக் கோளாறை யுண்டு பண்ணுகிறது. இது பெரும்பாலும் ஜ்வரம் போன்ற ரோகம்.

3. இரத்தத்தில் முக்கியமாய் லோஹம் (அயம்) என்னும் தாதுப் பொருள் இயற்கையிலிருப்பதால், இவ்வித நாற்றம் இக்கோளாறில் காண்கிறது. முற்கூறிய 'இரத்தஜதாஹம்' தோஷங்கள், இரத்தம் இவற்றின் கோளாறால் ஏற்படுகிறது; இதில் காயம் பலமாகத் தாக்குவதால் தாஹம் உண்டாகிறது. இது இவற்றின் பேதம்.

த்ருஷ்ணஜ தாஹம்:—த்ருஷ்ணை யென்கிற நாவறட்சியை அதிகமாய் அடக்குவதால் நீர் மயமான தாது க்ஷீணிக்க, உடலில் வெப்பம் மிக்க விருத்தியடைய, அவ்வுஷ்ணவேகம் பகுத்தறிவில்லா அம்மனிதனின் தேஹத்தை உள்ளும் புறமும் எரித்துவிடும். 4.

க்ஷதஜ தாஹம் :—சஸ்திராதிகளால் உடலின் உட்புறம் தாக்கப்பட, அதனால் கோஷ்டத்தில் இரத்தம் நிரம்பி தாங்க வியலாத தாஹம் உண்டாகும். அதில் தொண்டையும், தவடைகளும், உதடுகளும் உலர்ந்து, நாக்கை இழுத்து பிணியாளி நடுக்கமுறுவான். 5.

தாதுக்ஷயஜ தாஹம்:—தேஹ தாதுக்கள்[1] க்ஷீணிப்பதால் உடலெங்கும் அழற்சியும், அதனால் மூர்ச்சையும், நாவறட்சியும் கண்டு, குரல் தீனமாய், எவ்வேலையையும் செய்யத் திறமையிழந்து, தேஹமெல்லாம் வேதனையுடன் பிணியாளி ஸங்கடப்படுவான்.[2] 6.

மர்மாபிகாதஜ் தாஹம் :—மர்மஸ்த்தாநங்கள் தாக்கப்படுவதால் ஏழாவதாக ஓர் தாஹரோகம் காணும்; அது அஸாத்ய வியாதியாம். 6½.

தாஹரோகத்தில் அஸாத்யக்குறி:—உடலின் மேற்புறம் வெகு சீதளமாயிருந்தால், எந்த தாஹரோகமும் அஸாத்யமாகும். 7.

---

## 20. உந்மாத நிதாநம்*

உந்மாதம் ஆறுவிதம்:—(1) பிரகோபமடைந்த தோஷங்கள் மேல் நோக்கிச் சென்று[3] மனிதனுக்கு வெறியை யுண்டு பண்ணுகின்றன; மனதைப் பற்றியுண்டாகும் இவ்வியாதி உந்மாதம் எனப்படுகிறது. (2) மிகப் பிரகோப மடைந்த வாத-பித்த-கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு உந்மாதமும், ஸந்நிபாத தோஷத்தினுல் ஒரு உந்மாதமும், மனத்துயரத்தினுல் ஐந்தாம் உந்மாதமும், விஷப்பற்றுதலால் ஆருவது உந்மாதமும் உண்டாகின்றன. 1—2½.

மதம்:—அவ்வுந்மாதரோகம் விருத்தியாகாமல் மிருதுவான நிலைமையில் இருக்கையில், அதற்கு மதம் என்று பெயர். 3.

உந்மாதத்தின் காரணங்கள்:—விருத்த போஜநங்கள், கெட்டுப்போன உணவுகள், தேவதைகள்-குருமார்கள்-அந்தணர் இவர்களால் சபிக்கப்படுதல், அபரிமிதமான பயம்-ஸந்தோஷம் இவை முதலியதால் மனம் தாக்கப்படுதல், தகாதவிதமாய் வெவ்வேறு அவயவங்களைக் கொண்டு கடுமையான காரியங்களைச் செய்தல் ஆகியவை உந்மாதத்தின் பொதுக் காரணங்களாம். 4.

---

1. தேஹதாதுக்கள்—இரஸம், இரத்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்த்தி, மஜ்ஜை, சுக்ரம் என்பவை. இவை ஸப்த தாதுக்கள்.

2. 'ஸங்கடப்படுவான்' என்பதற்குப் பதிலாக 'இறந்து விடுவான்' என்றும் பொருள் கூறப்படுகிறது.

* உந்மாதம்-பித்துப் பிடித்தல் அல்லது பித்து.

3. நரம்புகளின் மூலமாய் மூளைக்குச் சென்று எனப் பொருள்.

உந்மாதத்தின் ஸம்ப்ராப்தி :— மனோதைரியம் குன்றியவனுக்கு, முன் காரணங்களால் கோளாறடைந்துள்ள தோஷங்கள் புத்தி ஸ்தாநத்தை விகாரப்படுத்தி, மனோவஹ ஸ்ரோதஸ்ஸுகள் என்கிற நரம்புகளையும் பற்றி மனிதனது மனதை உடனே மிகக் கலக்கிவிடுகின்றன. 5.

உந்மாதத்தின் ஸாமாந்ய லக்ஷணம்:—புத்தி மாறுட்டம், மனது சஞ்சலப்படுதல், திரள்மிரளாக விழித்துப் பார்த்தல், தைரியமின்மை, முன் பின் ஸம்பந்தமில்லாது பேசுதல், இருதயம் சூன்யமாதல் இவை உந்மாதத்தின் பொதுக்குறிகளாம். 6.

வாதோந்மாதம்:—ருக்ஷமாகவும், ஆறிக்குளிர்ந்ததாகவும், அளவிற் சொற்பமாகவுமுள்ள அன்னத்தை யுபயோகித்தல், அதேவிதமான விரேசநௌஷதத்தை யுட்கொள்ளல், தாதுக்கள் க்ஷீணித்தல், உபவாஸமிருத்தல் இக்காரணங்களால் வாததோஷம் பிரகோபித்து, சிந்தை முதலியதால் ஏற்கெனவே விகாரப்பட்டுள்ள மனதை இன்னும் அதிகமாகக் கெடுத்து, அப்பால் புத்தியையும், ஸ்ம்ருதியென்கிற ஞாபகச் சக்தியையும் சீக்கிரம் கோளாறடையச் செய்கின்றது. இதன் இலக்ஷணம்:—காரணமின்றி நகைத்தல், புன்சிரிப்புறுதல், நர்த்தநம் செய்தல், பாடுதல், வாயையும் வேறு அவயவங்களையும் விகாரமாக அசைத்தல், அழுகை, தேஹம் கடினமாதல், இளைத்தல், சிவப்பாதல் இவை வாதஸம்பந்தமான உந்மாதத்தின் குறிகள்; இவ்விகாரங்கள், உணவு ஜீர்ணித்ததும் பலப்படுவது வழக்கம். 7, 8.

பித்தோந்மாதம்:—ஜீர்ணிக்கக் கூடாதவையும், காரமானவையும், அதிக புளிப்பானவையும், விதாஹி குணமுள்ளவையும், அதிக சூடானவையுமான உணவுகளால் ஏற்கெனவே சயாவஸ்த்தையிலிருந்த பித்தமானது பின்னும் பிரகோபிக்க, தன் தேஹ நிலைமையை யுணராமல் தோன்றியவாறு நடக்கும் மனிதனுடைய மனதிற் சென்று, முன்போலவே [1] ஜடிதியில் கடுமையான உந்மாதத்தை யுண்டுபண்ணும். இலக்ஷணம் :— பொறுமையின்மை, பரபரப்பு, வஸ்திரங்களை விலக்குதல், விறட்டுதல், அதிகமாய் ஓடுதல், தேஹம் அதிக சூடாதல், அதிக கோபங்கொள்ளல், அதிக குளிர்ச்சி-குளிர்ந்த நிழல்-குளிர்ந்த உணவு-சீதளமான தண்ணீர் இவற்றை விரும்பல், பசுமை நிறமாதல், எதுவும் பசுமையாகத் தோற்றல் இவை பித்த ஸம்பந்தமான உந்மாதக் குறிகளாம். 9, 10.

கபோந்மாதம்:-தேஹவுழைப்பு ஒழிந்ததனாலும், மிதமிஞ்சி யுணவுகளைத் தின்பதனாலும், இருதய மர்மத்தில் உஷ்ணத்துடன் கபம் மிக வலுவாகப் பிரகோபமடைந்து [2] புத்தியையும் ஞாபகசக்தியையும்

---

1. சிந்தை முதலியதால் ஏற்கெனவே விகாரமடைந்த மனதைக் கெடுத்தல் என்பது 'முன்போலவே' என்பதால் குறிக்கப்படுகிறது.

2. உந்மாதத்தில் பொதுவாகவே பித்தம் பிரபலமாயிருக்குமாகையால், கபஸம்பந்தமான உந்மாதத்திலும் பித்ததோஷப்பற்று உண்டென்று கூறப்படுகிறது.

அழித்து, மனதையும் மழுங்கச் செய்து, பலவித விகாரங்களை உண்டுபண்ணும். இலக்ஷணம்:-இதில் பேச்சும் மற்றச் செயலும் மந்தப்படும்; அரோசகம், ஸ்த்ரீகளிடம் ஏகாந்தமாயிருப்பதில் விருப்பம், அதிக நித்திரை, வாந்தி, வாயில் உமிழ் நீரூறுதல், நகங்களும், சர்மம் முதலியவைகளும் வெண்ணிறமாதல் ஆகிய குறிகள் காணும். போஜநம் செய்தவுடனே வியாதி பலப்படும். 11, 12.

ஸந்நிபாதோந்மாதம் :— எல்லா உந்மாத ஹேதுக்களாலும் கோளாறடைந்த மூன்று தோஷங்களால் காணும் ஸந்நிபாதோந்மதம் மிகக் கடுமையானது. உந்மாதங்கள் அனைத்தின் லக்ஷணங்களும் இதில் தோன்றும். இதில் தோஷப்பிரத்யநீகமான சிகித்ஸை உதவாது [1]. ஆகவே இது மிகப் பிரபலமான வியாதி. 13.

சோகாதிஜோந்மாதம்:—கள்ளர், இராஜாதிகாரிகள், பகைவர், மற்றும் அவர் போன்றவர் விறட்டுவதாலும், பொருளையோ பந்துக்களையோ இழப்பதாலும், மனதுக்கினிய மனைவியோடு கூடவேண்டுமென்கிற அவா மிதமிஞ்சி யுண்டாவதாலும் மனது வெகு கடுமையாகத் தாக்கப்படுங்கால் பலமான மனக் கோளாறு உண்டாகும். இந்த ரோகி தன் மனதிலுள்ள இரஹஸ்ய விஷயங்களையும் தன்னையறியாமலே பலவாறு கூறுவான்; மேலும் அறிவின்றி பாடுவான், சிரிப்பான், புலம்புவான். 14, 14½.

விஷஜோந்மாதம்:—ஏதாவது விஷம் தேஹத்திற் பற்றியதால் உண்டாகும் உந்மாதத்தில் கண்கள் மிகச் சென்னிறமாகும்; தேஹ பலம், காந்தி, இந்த்ரியங்கள் இவை சீரழியும்; மிகவும் தீனத்தன்மையுடன் முகம் கறுக்கும்; அறிவிழக்கப்படும். 15.

உந்மாதத்தில் அஸாத்ய நிலைமை:—ரோகி எப்பொழுதும் தலை கவிழ்ந்த வண்ணமோ, நிமிர்ந்த வண்ணமோ நிலைத்திருப்பதும், தேஹத்தில் சதையையும் பலத்தையும் மிக்க இழப்பதும், முற்றிலும் நித்திரையின்றி விழித்த வண்ணம் இருப்பதும் உந்மாதத்தினால் ஐயமின்றி மரிப்பான் என்பதை அறிவிக்கின்றன. 16.

பூதோந்மாதத்தின் பொதுக் குறிகள்:—மிகப்பேசுவது, பராக்ரமம் கூறுவது, வீர்யமும் மற்றச் செயல்களும் மனித சுபாவத்தை மீறியதாயிருத்தல், தத்துவஞ்ஞானம்-சிற்பஞ்ஞானம் முதலியவற்றைப் பெறுதல், பித்துப் பிடிக்கும் காலம் நியமமின்றி யிருப்பது இக்குறிகள் கண்டால், அதை பிறகு கூறப்படும் பூதங்கள் என்னும் கிரஹங்களுடைய ஆவேசத்தால் உண்டான உந்மாதமாகக் கூறுக. 17.

தேவோந்மாதம்:—மனக்களிப்பு, நிர்மலமாயிருத்தல், உயர்ந்த தேவார்ஹமான மலருக்கொப்பான மணமுடையவனா யிருத்தல், சோம்பலின்மை, உண்மையும் சீர்திருந்தியவையுமான வார்த்தைகளைச் சொல்லுதல், மேலான சரீரகாந்தியைப் பெற்றிருத்தல், நேத்திரம் குறிப்பிட்ட லக்ஷயத்திலேயே நிலைத்திருத்தல், வரனளித்

1. தோஷப்பிரத்யநீக சிகித்ஸை—தோஷகுணங்களுக்கு எதிரிடையான குணங்களைச் செய்யும் சிகித்ஸா முறை.

தல், அந்தணரிடம் ஆதரவு அதிகரித்தல் இக்குறிகளுள்ளவன் தேவக் கிரஹத்தின் ஆவேசம் பெற்ற உந்மாத ரோகியாவான். 18.

அஸுரோந்மாதம்:—அஸுரர்களுடைய ஆவேசத்தைப் பெற்ற வன் அதிக வியர்வையுடையவனுவான்; அந்தணர்களையும் குரு மார்களையும் தைவங்களையும் நிந்திப்பான்; வக்கிரமாக பயங்கர மாகப் பார்ப்பான்; பயம் அறியான்; தகாத வழிகளில் நோக்க முள்ளவனுவான்; மிகுதியான அன்ன-பானங்களை யுட்கொண்டும் திருப்தியடையான்; துஷ்ட ஸ்வபாவமுடையவனு யிருப்பான். 19.

கந்தர்வோந்மாதம்:—கந்தர்வக்கிரஹத்தினுல் பீடிக்கப்படுபவன் மனத்தென்புடையவனுகவும், மணற்குன்றுகளிலும் வநாந்தரங் களிலும் சென்று பொழுதுபோக்குபவனுகவும், நெறிதவருத நடத்தை யுடையவனுகவும், ஸங்கீதம் ஸுகந்தங்கள் புஷ்பங்கள் இவற்றில் விருப்பமுள்ளவனுகவு மிருப்பான்; நர்த்தநம் செய்தவாறு சிறு குரலுடன் இனிது சிரிப்பான். 20.

யக்ஷோந்மாதம்:—யக்ஷக்கிரஹா வேசத்தால் துன்புறும் மனிதன் கண் சிவந்தவனுய், அழகாயும் மெல்லியதாயும் சிவப்பாகவுமுள்ள வஸ்திரமணிவதில் விருப்பமுள்ளவனு யிருப்பான்; கம்பீரமாகத் தோற்றுவான்; சுறுசுறுப்பாக நடப்பான்; மிக்க மிதமாகப் பேசு வான்; பொறுமையுள்ளவனுய் தேஜிஷ்டனுகக் காணப்படுவான்; 'எவருக்கு நான் எதைக் கொடுக்கட்டும்?' எனப் பேசுவான். 21.

பித்ருக் கிரஹோந்மாதம்: — பித்ருக்கிரஹத்தினுல் பற்றிக்கொள் ளப்பட்டவன், அத்தேவதையினிடம் பக்தி பாராட்டுவான்; தருப்பை முதலியதைப் பரப்பி அவற்றின்மீது பிண்டங்கள் அளித்துத் தர்ப் பணஜலமும் விடுவான்; வஸ்திரத்தை அப்பிரதக்ஷிணமாகவும் தரிப்பான்; மாம்ஸத்தில் விருப்பங்கொள்வான்; எள்ளு, வெல்லம், பாயஸம் இவற்றையும் அபேக்ஷிப்பான். 22.

நாகோந்மாதம்:—எவன் ஸர்ப்பம்போல் நிலத்தில் அடிக்கடி உடலால் ஊர்ந்து செல்லுகிருனே, நாக்கினுல் வாயின் இரு புறங்களை யும் அடிக்கடி நுணுவுகிருனே, மிகச் சினங்கொள்கிருனே, வெல்லம் தேன் பால் பாயஸம் இவற்றை விரும்புகிருனே அப்பிணியாளியி னிடம் நாகதேவதை ஆவேசம் செய்திருப்பதாய் அறிக. 23.

இராக்ஷஸோந்மாதம்:—இறைச்சி, இரத்தம், பலவகையான மதுக்கள் இவற்றை யுட்கொள்ள விரும்புதல், வெட்கமற்றுப் போதல், அதிக துஷ்டனுதல், மிகவும் சூரனுயிருத்தல், சினங்கொள் ளல், மிக உடல் வன்மை பெறுதல், இரவுகளில் வெளியில் ஸஞ்சரித் தல், சுத்தாசாரத்தை வெறுத்தல் ஆகிய இத்தன்மையுள்ளவன் இராக்ஷஸக் கிரஹத்தினுல் [1] பற்றப் பட்டவனுவான். 24.

---

1. இராக்ஷஸக்கிரஹம் என்பதால் பிரஹ்மராக்ஷஸ் முதலியவை களும் குறிக்கப்படுகின்றன. "பிரஹ்மராக்ஷஸ்ஸின்" ஆவேசத்தைப் பெற்றவன் தேவர்களையும் குருமார்களையும் அந்தணர்களையும் த்வேஷிப்பான்; வேத - வேதாங்கங்களை யறிந்திருப்பான்; பரிசுத்த

பிசாசோந்மாதம்:—பிசாசம் ஆவேசித்துள்ள மனிதன் கைகளைத் தூக்கிக்கொண்டு ஓடுவான்; மெலிந்தும் ரூக்ஷமுமான தேஹமுடையவனுவான்; சிறிது புலம்புவான்; துர்நாற்ற முடையவனுய் மிகவும் அசுத்தமா யிருப்பான்; எந்த உணவிலும் பேராவலுடன் அமிதமாகப் புஜிப்பான்; மனித ஸஞ்சாரமற்ற வனாந்தரங்களிற் சென்று திரிய விரும்புவான். 25.

உந்மாதத்தில் அஸாத்ய லக்ஷணங்கள்:—கண்கள் விரிந்து பருத்துப்போதல், துரிதமாய் நடந்துபோதல், நுரையை நக்கி யுண்ணல், நித்திரையுறுதல், விழுதல், நடுங்குதல், மலை யானை மரம் முதலியவற்றிலிருந்து விழுவதால் உந்மாதங் கொள்ளுதல் இவ்வித ரோகிகளுக்கு அக்கோளாறு தீருவதில்லை; பதின்மூன்றும் வயதில் ஸம்பவித்த உந்மாதமும் அஸாத்யமாம்.[1] 26.

தேவாதிக் கிரஹங்களின் ஆவேசத்திற்குரிய காலங்கள்:—தேவக்கிரஹங்கள் பௌர்ணமியிலும், அஸுரக்கிரஹங்கள் ஸந்தியா காலங்களிலும், கந்தர்வக்கிரஹங்கள் அஷ்டமியிலும், யக்ஷக்கிரஹங்கள் அஷ்டமி பிரதமை இவற்றிலும், பித்ருக்கிரஹங்கள் அமாவாஸ்யையிலும், நாகங்கள் பஞ்சமியிலும், இரக்ஷோக்கிரஹங்கள் இரவிலும், பிசாசங்கள் சதுர்த்தசியிலும் மனிதனிடம் பெரும்பாலும் ஆவேசம் செய்கின்றன. கண்ணுடி முதலியவற்றில் சாயை போலவும், பிராணிகளிடம் சீதம் அல்லது உஷ்ணம் போலவும், ஸூரிய காந்தமணியில் ஸூரியகிரணம் போலவும், கர்ப்பாசயத்தில் ஆத்மா போலவும், கிரஹங்கள் மனித சரீரத்தில் நமக்குப் புலப்படாமலே ஊடுருவிப் பிரவேசிக்கின்றன.[2] 27—29.

---

## 21. அபஸ்மார நிதாநம் *

அபஸ்மாரத்தின் நிதாந-ஸம்ப்ராப்திகள்:—(மனக்கவலை, துயரம் இவை முதலியவற்றுல், மனோ நாடிகளைப்பற்றிய தோஷங்கள் பிர

---

மாகவும் தன்னைத்தானே துன்பப்படுத்திக் கொள்பவனுகவும் இருப்பான்; அடிக்கடியும் சிரிப்பான்'' என்று விதேஹர்.

1. ''மர்மஸ்த்தாநத்திலிருந்து இரத்தம் வெளிவருதல், கண்களிலிருந்து இரத்தம் கசிதல், நாசியிலிருந்து சிலேஷ்மம் முதலிய தோஷம் க்சிதல், நாக்கு உலர்தல், வாய் வயிறு முதலியது துர்க்கந்தமாதல், வாய்ப்பேச்சு அடைபடுதல், அதிக துர்ப்பலத் தன்மை இவையும் அஸாத்யக் குறிகள்'' என்று விதேஹர்.

2. ''தேவர்கள் மனிதசரீரத்தில் ஸம்பந்திக்கமாட்டார்கள்; ஆகவே அவர்கள் மனிதரிடம் ஆவேசிப்பதில்லை; தேவாதிக் கிரஹங்கள் ஆவேசிப்பதாகக் கூறுபவர் பூதவித்யையில் பரிசயமில்லாதவர்'' என்று ஸுச்ருதர். ஆகவே பூதவித்யையில் பூதங்கள் என்கிற சில ஸூக்ஷ்மஜீவன்கள் அல்லது வாயுக்கள் குறிக்கப்படுகின்றனவே யன்றி தேவதைகள் என்று பொருளல்ல.

*அபஸ்மாரம்—கொருக்குவலி அல்லது காக்கைவலி. [ஸ்ம்ருதி என்கிற நினைவை இழக்கச்செய்யும் பிணி எனப் பொருள்.]

கோபமடைந்து, ஸ்ம்ருதி யென்கிற நினைவைப் போக்கி, அபஸ்மார ரோகத்தை யுண்டுபண்ணுகின்றன.)

அபஸ்மாரத்தின் பொது லக்ஷணம்:—தோஷங்கள் மிகப் பிரகோபமடைந்து ஞாபக சக்தியிழந்த இப்பிணியாளிக்குக் கண்கள் இருளடையும்; தேஹமெங்கும் இசிவுடன் பரபரப்புண்டாகும்; 'அபஸ்மாரம்' என்கிற கோரமான இவ்வியாதி நான்கு விதம். 1.

அபஸ்மாரத்தின் பூர்வரூபம்:—இருதயத்துடிப்பு, மனம் சூன்யமாதல், வியர்த்தல், மனம் கவலையுறுதல், மூர்ச்சையுண்டாதல், இந்திரியங்கள் மங்கிப்போதல், நித்திரையின்மை இக்குறிகள் அபஸ்மாரம் உண்டாவதற்கு முன்பு காணும். 2.

வாதாபஸ்மாரம்:—வாததோஷத்தினு லுண்டாகும் அபஸ்மாரத்தில் பிணியாளி உடல் நடுங்க, பற்களைக் கடிப்பான்; நுரை ததும்ப வாந்தி செய்வான்; பெருமூச்சு விடுவான்; குரூரமாகவும், சிவப்பாகவும், கறுப்பாகவுமுள்ள உருவங்களைக் காண்பான்.[1] 3.

பித்தாபஸ்மாரம்:—பித்தத்தினுலான அபஸ்மாரத்தில் பசுமையான நுரையைக் கக்குவான்; உடல், வாய், கண்கள் இவை மஞ்சள் நிறமாகும்; பார்க்கப்படுவதெல்லாம் மஞ்சளாகவோ இரத்தம் போலவோ தோன்றும்; உலகம் நாவறட்சியால் வருந்துவதாகவும், சூட்டாலும் அக்னியினுலும் வியாபிக்கப்பட்டது போலவும் புலப்படும். 4.

கபாபஸ்மாரம்:—கபதோஷத்தினு லுண்டாகும் அபஸ்மாரத்தில் வாயிலிருந்து வரும் நுரையும், தேஹமுழுமையும், முக்கியமாய் நேத்திரமும் வெண்மையாகும். சரீரம் மிகக் குளிர்ச்சி பெற்று, குருவாகவும ஆகும்; மயிர்கள் சிலிர்த்துக் கொள்ளும்; ஸகல உருவங்களும் வெண்மையாயிருக்கும்; சரீரம் மிகக் குளிர்ச்சி பெற்று, குருவாகவும் ஆகும்; மயிர்கள் சிலிர்த்துக் கொள்ளும்; ஸகல உருவங்களும் வெண்மையாகத் தோற்றும். இந்த அபஸ்மாரம் தெளிய வெகு நேரம் செல்லும்.[2] 5.

ஸந்நிபாதாபஸ்மாரமும் அஸாத்யாபஸ்மாரமும்:—வாத - பித்த-கபதோஷங்கள் ஒருமிக்கக் கோளாறடைந்துண்டாகும் அபஸ்மாரத்தில் முற்கூறிய மூன்று அபஸ்மாரங்களுக்குள்ள லக்ஷணங்கள் அனைத்தும் சேர்ந்துண்டாகும். இந்த அபஸ்மாரமும், மிக்க இளைத்துப் போனவனுக்குண்டாகும் அபஸ்மாரமும், வெகு நாட்பட்ட அபஸ்மாரமும் அஸாத்யங்களாம். வெகு அதிகமாய் துடிப்பை யுண்டு பண்ணுவதும், மிக்க பலஹீனனுக்குண்டாவதும், புருவநெறிப்பை

1. "வாதாபஸ்மாரத்தில் எங்கும் கருநிறம் தன்னைச் சூழ்ந்திருப்பதாகவும், பித்தாபஸ்மாரத்தில் எங்கும் மஞ்சள் நிறம் சூழ்ந்திருப்பது போலவும், கபாபஸ்மாரத்தில் வெண்மை நிறம் சூழ்ந்திருப்பது போலவும் பிணியாளிக்குத் தோற்றும்" என்று ஸுச்ருதர்.

2. இதனுல் வாதாபஸ்மாரமும், பித்தாபஸ்மாரமும் சீக்கிரம் தெளிவடையும் எனக் கருத்து.

யதிகமா யுண்டாக்குவதும், நேத்திரங்களை வக்கிரமாகச் செய்வது மான அபஸ்மாரமும் மரணத்தை யுண்டுபண்ணும். 6, 7,

அபஸ்மாரம் கிளம்புவதற்கான காலங்கள்: — அபஸ்மாரத்தை யுண்டுபண்ணும் தோஷங்கள் சற்றேறக் குறைய ஒரு பக்ஷத்திற்கு ஒரு முறையோ, பன்னிரண்டு நாட்களுக்கு ஒரு முறையோ, ஒரு மாஸத்திற்கு ஒரு தடவையோ முறையே அதனதன் வேகத்தைக் காட்டுகின்றன. இஃதெங்ஙனமெனில் மழை எக்காலத்திற் பொழிந்த போதிலும், சில வித்துகள் பூமியில் சரத்ருது முதலிய சில குறிப் பிட்ட பருவத்திலேயே முளைத்துப் பயிராகின்றனவல்லவா? அங்ஙு னமே வியாதிகளின் உற்பத்தியும் காலங்களைப் பொறுத்ததாகும்.8,9.

---

## 22. வாதவியாதி நிதாநம்*

வாதரோக ஸாமாந்ய நிதாந-ஸம்ப்ராப்திகள்:—ரூக்ஷமும்-சீதமும்-அளவில் சொற்பமும் - குணத்தில் இலகுவுமான உணவை யுபயோ கித்தல், அதிக புணர்ச்சி, அதிகமாய் கண்விழித்தல், விஷமமான உபசாரம், தோஷங்களையும் இரத்தத்தையும் மிதமின்றி வெளிப்படுத் தல், தாண்டுதல், நீஞ்சுதல், அதிகதூரம் வழி நடத்தல், அதிக வியாயா மம் செய்தல் இவை முதலிய செயல்களும், தாதுக்கள் மிக க்ஷீண மடைதல், மனக்கவலை, வேகங்களை அடக்குதல், ஆமதோஷம் சேரு தல், அபிகாதம், அமித போஜநம், மர்மங்கள் தாக்கப்படுதல், யானை-ஒட்டகம்-குதிரை இவற்றின்மீது வெகு வேகமாகச் செல்லுதல், உய ரத்திலிருந்து விழுதல் இக்காரணங்களால் தேஹத்தினுள் சூன்யமா யுள்ள ஸ்ரோதஸ்ஸுகள் என்கிற குழாய்களில் வெகு வலிவுடன் வாததோஷம் பிரவேசித்து, அவற்றை நிரப்பி ஸர்வாங்கங்களையோ

* வாத தோஷக் கோளாறால் உண்டாகும் அஸாதாரண வியாதி "வாதரோகம்" எனப்படுகிறது. திருஷ்டாந்தமாய் "வாயுவானது கப பித்தங்களோடு கூடியோ, சுயமாகவேயோ ஆக்ஷேபகவாதம் என்கிற வியாதியை யுண்டுபண்ணும்" என்கிற விடத்தில் வாயு அஸாதாரண மாய் சுயமாக அல்லது இதரதோஷங்களை ஒழுங்கீனப்படுத்தி ஆக்ஷே பக வியாதியை யுண்டுபண்ணுகிறது எனக் கருத்து."ஸாமாந்யங்கள்" என்றும். "ஏகதோஷ ஜங்கள்" என்றும் சரகத்தில் வாதரோகங் கள் இரண்டு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஜ்வராதிகள் ஸாமாந்ய வாத ரோகங்கள்; இவை மூன்று தோஷங்களுள் எதஞ் லும் ஏற்படலாம். ஆக்ஷேபகாதிகள் வாதத்தினுல் உண்டாகுபவை. பித்த-கபங்கள் அநுபந்தங்களாயேற்பட்டாலும் கேவல பித்தத்தினு லாவது, கேவல கபத்தினுலாவது ஆக்ஷேபக-க்ருத்ரஸீ-விச்வாசீ முத லியவை ஸம்பவிக்கமாட்டா. இங்ஙனமே அம்லபித்தாதிகள் பித்தத் தினுலேயே உண்டாகும் விசேஷ வியாதிகள்; அவை வாதத்தினுல் மாத்திரம் உண்டாகா. வாயு அதிக பலிஷ்டமான தோஷமாகையா லும், வெகு சீக்கிரத்தில் கோளாறுகளை யுண்டுபண்ணுவதாலும், எல்லாத்தோஷங்களுக்கும் மேலான சக்தியுடையதாலும், அதனுலுண் டாகும் வியாதிகள் மிகக் கடுமையானவை யானதாலும் வாதவியாதி கள் பிரத்தியேகமாகக் கூறப்படுகின்றன.

அல்லது ஒவ்வோர் அவயவத்தையோ பற்றிய பற்பல வகையான கோளாறுகளை யுண்டுபண்ணுகிறது. 1—4.

வாதரோகங்களின் பூர்வரூபம் முதலியன:—இனி கூறப் போகிற வாதரோகங்களின் விளங்கத்தோன்ருத குறிகளே இவற்றின் பூர்வ ரூபமாகும். அவையே விளங்கத்தோன்றினல் இலக்ஷணங்களாம். இக்குறிகள் எப்பொழுது மறைகின்றனவோ அப்பொழுது வியாதி நிவ்ருத்தியாயிருப்பதாகவும், தேஹம் காரியங்களைச் செய்யவல்லது போல் ஸௌகர்யம் ஏற்பட்டதாகவும் தோன்றும். 5.

வாதரோகஸாமாந்யலக்ஷணங்கள்: — அவயவங்கள் சுருங்குதல், கணுக்கள் அசைக்கமுடியாமற்போதல், எலும்புகளும் அவற்றின் பூட்டுகளும் ஒடிதல் அல்லது விலகுதல், மயிர்கள் சிலிர்த்தல், பிதற்று தல், கைகள்-ப்ருஷ்டபாகம்-சிரஸ் இவற்றில் பிடிப்புண்டாதல், நொண்டியாதல், முடமாதல், கூன்விழுதல், அவயவங்கள் உணர்ச்சி யற்றுப் போதல், சிரஸ்-நாசி-நேத்திரம்-பிடரி-கழுத்து இவை குறுகு தல், பிளக்கப்படுவது போன்ற வேதனை, குத்தல், வலி, அடிக்கடியும் இசிவு, அதிக சோர்வு இவ்வகையான விகாரங்களை பிரகோப மடைந்த வாயு உண்டுபண்ணுகின்றது. 6—8½.

வாதம் வெவ்வேறு ரோகங்களை யுண்டுபண்ணுதல்: — வாத தோஷம் தான் கோளாறடைவதற்கான காரணபேதங்களாலும், ஸ்த்தாநபேதங்களாலும்[1] அடியில் வருமாறு வெவ்வேறு விதமான வியாதிகளை யுண்டுபண்ணும். 9.

ஸ்த்தாநபேதங்களை அனுஸரித்த வாதரோகங்கள்:-அவற்றுள் (1) கோஷ்டத்தை[2] ஆச்ரயித்துள்ள வாததோஷம் கோளாறடைந்தால் மல-மூத்திரங்கள் கட்டப்படும்; பீஜவாதம், இருதய ரோகம், குல்மம், அர்சஸ், பக்க சூலை இவைகளும் உண்டாகும். (2) ஸர்வாங்கங்களை யும் ஆச்ரயித்த வாததோஷம் கோளாறடைந்தால் அவயவங்கள் துடித்தல், அவயவங்கள் ஒடிந்துவிட்டதுபோன்ற வேதனை, கணுக்கள் பிளக்கப்படுவது போன்றிருத்தல், மற்றும் பலவேறு வேதனைகள் தேஹமெங்கும் ஏற்படுதல் இவ்விகாரங்கள் தோன் றும். (3) குதத்தைப் பற்றிய வாதம் கோளாறடைந்திருக்கையில் மல - மூத்திரங்கள் கட்டிப்போதல், வயிற்று நோய், வயிற் றுப் பொருமல், அச்மரீ, நீர்த்தாரையில் மணல் மணலான பதார்த் தங்கள் வருதல், முழங்தாள் - இடுப்பு - கால்கள் - பிருஷ்ட பாகம் இவற்றில் வலி, அவயவங்கள் க்ஷீணித்தல் ஆகிய குறிகள் உண்டாகும். (4) ஆமாசயத்தைப் பற்றிய வாதம் கோளாறடைந்திருக் கையில் விலாப்பக்கங்களிலும், வயிற்றிலும், இருதயத்திலும், நாசி யிலும் வலியும், நாவறட்சி-தேக்கெரிவு-விஷூசி-காஸம்-தொண்டை

1. காரணபேதம் — ஆவரணவாதாதிகளாகிற ஹேதுக்கள். ஸ்த்தாநபேதம்—ஆமாசய பக்வாசயாதிகள்.

2. கோஷ்டம் - மத்தியசரீரமும் பொதுவாகக் குடலும்.

வரண்டுபோதல் - ச்வாஸம் இவையும் உண்டாகும். (5) பக்வாசயத்தைப்பற்றிய வாதம் கோளாறடைந்திருக்கையில் குடலிரைந்தல், வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், மல-மூத்திரங்கள் கஷ்டப்பட்டு வெளியாதல், இடுப்புவலி, செவி முதலிய இந்த்ரியங்கள் சக்தியற்றுப் போதல் இவை லக்ஷணங்களாம். 10—14½.

**தாதுக்களைப் பற்றிய வாதரோகங்கள்:**—அவற்றுள் (1) சர்மத்தைப் பற்றிய வாதம் கோளாறடைந்தால் சர்மம் ரூக்ஷமாகவும், வெடிப்புள்ளதாகவும், பரிசவுணர்ச்சியிற் குன்றியதாகவும், மெல்லிதாகவும், கருநிறமாகவும் மாறி குத்தலையும், சிவந்துபோய் அகன்று விறிந்து பொவது போன்ற துன்பத்தையு முண்டுபண்ணும்; கணுக்களில் நோவும் காணும்.[1] (2) இரத்தத்தைப் பற்றிய வாதம் [2] கோளாறடைந்தால் அழற்சியும் வலியும் கடுமையாகும்; தேஹம் கருநிறங்கொண்டு இளைக்கும்; அரோசகமும், உடம்பில் அரும்ஷிகா என்கிற புண்களும் காணும்; புஜித்தவுடனே தேஹம் விறைக்கும். (3) மாம்ஸம்-மேதஸ் இவற்றைப் பற்றிய வாதம் கோளாறடைந்திருக்கையில் தேஹம் குருவாகப்போய் தடியாலும் முஷ்டியாலும் அடிக்கப்பட்டதுபோல் மிகக் குத்தல் வலி யுண்டாகும்; அவ்வலி தாளாமல் பிணியாளி சோர்ந்து தவிப்பான். (4) மஜ்ஜாதாது - அஸ்த்தி இவற்றைப் பற்றிய வாதம் கோளாறடைந்தால் எலும்புகளிலும் கணுக்களிலும் பிளக்கப்படுவது போன்ற வேதனை, மாம்ஸாதிகளிலும் ஸந்திகளிலும் வலி, தசை நார்களின் வலிமை க்ஷயித்தல், நித்திரை யின்மை, இடைவிடாத வலி ஆகியவை குறிகளாம். (5) சுக்ரத்தைப் பற்றிய வாதம் விகார மடைந்திருக்கையில் சுக்ரதாது வெகு எளிதில் வெளியாய் விடும், அல்லது முற்றிலும் வராமலே கட்டப்பட்டுப் போம்; அல்லது அதனாலுண்டாகும் கர்ப்பம் விகாரப்படும். (6) ஸிரையைப் பற்றிய வாதம் கோளாறடைந்தால் அவ்வவயவத்தில் குத்தலுண்டாகும்; ஸிரையென்னும் இரத்தநாளம் தடித்துக் குறுகி இரத்தம் நிரம்பியதுபோலக் காணும்; இக்கோளாறுடன் பாஹ்யாயாமம், அந்தராயாமம் அல்லது கல்லி அல்லது கூன்விழுதல் ஆகிய விகாரங்களும் தோன்றும். (7) ஸ்நாயுவைப் பற்றிய வாதம் விகாரமடைந்திருக்கையில் ஸர்வாங்க வாதம் - ஏகாங்க வாதம் என்கிற கோளாறுகள் உண்டாகும். (8) ஸந்தியைப் பற்றிய வாதம் கோளாறடைந்திருக்கையில் ஸந்திகள் வேலையற்றவையாகும்; கடுமையான வலியும் உண்டாகும். 15—21.

---

1. சர்மம் ஏழு தாதுக்களில் ஒன்றல்ல; ஆனால் அது உப தாதுக்களில் ஒன்ருகக் கருதப்படுவதால் இங்கே குறிக்கப்பட்டது. த்வக் என்பதற்கு இரஸம் என்றும் பொருள் கூறுவதுண்டு.

2. இரத்தத்தைப்பற்றிய வாதத்தில், வாததோஷம் இரத்தத்தை ஆவரணம் செய்து வாதவிகாரங்களை யுண்டுபண்ணும்; ஆகவே வாத-ரக்த வியாதியினும் இது வேறுபட்டது; வாத-ரக்த ரோகத்தில் வாதமும் இரத்தமும் ஒரு மிக்கக் கோளாறடைகின்றன.

ஆவரண வாதங்கள் [1] :—(1) பிராணவாயு பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் வாந்தி, அழற்சி இவையும், அதுவே கபத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் பலஹீனம், ஜாடராக்னி மந்தப்படுதல், சோம்பல், அரோசகம் இவையும் குறிகளாம். (2) உதாநவாயு பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் உடலழற்சி, மூர்ச்சை, மயக்கம், உடல்வாட்டம் இவையும், கபத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் வியர்வையின்மை, மயிர்ச்சிலிர்க்கை, அக்னிமாந்த்யம், தேஹம் குளிர்ந்திருத்தல் ஆகிய இவையும் குறிகளாம். (3) ஸமாநவாயு பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால் அதிக வியர்வை, அழற்சி, மூர்ச்சை இவையும், கபத்தினுல் ஆவரணம் செய்யப்படுமானுல் மல-மூத்திரங்கள் கட்டிப்போதல், உடற்சிலிர்த்தல் இவையும் குறிகளாம். (4) அபாந வாயு பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் உடலில் அழற்சியும், சூடும் கண்டு, மூத்திரமும் இரத்த நிறமாகும். கபத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் வயிற்றுக்குக் கீழவயவங்கள் குருவாவும், சீதளமாகவும் ஆகும். (5) வியாந வாயு பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் தேஹ அழற்சி, உடலிசிவு, உடல் வாட்டம் ஆகியவையும், கபத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டால் உடல் விறைத்தல், தண்டகம் என்கிற விறைப்புடன் கூடிய இசிவு, வீக்கம் இக்கோளாறுகளும் தோன்றும். [2] 22—26.

## ஆக்ஷேபக வாதங்கள்

ஆக்ஷேபகம்: —(பொது விவரம்):—(1) வாயு பிரகோபமடைந்து எல்லாத் தமனிகளிலும் [3] ஊடுருவிச் சென்று உடலிற் பரவும்பொழுது அவயவங்களை ஜடிதியாக அடிக்கடியும் வலித்து இழுக்கும்; இது அடிக்கடியும் தேஹத்திற் பரவி, அவயவங்களை வலித்திழுக்குமாகையால் 'ஆக்ஷேபகம்' என்கிற பெயர் இதற்கு வந்தது. (2) அபதந்த்ரகம்; வாயுவானது தான் விருத்தியாவதற்கான காரணங்களால் [4] பிரகோப

---

1. ஆவரண வாதம்—பித்தம் கபம் இத்தோஷங்களால் வாத தோஷம் நாற்புறமும் சூழப்படும் கோளாறு. தேஹத்தில் ஆங்காங்கு அதனதன் இயற்கைச் செயல்களைச் செய்யமுடியாமல், பிராணுதி வாயுக்கள் முற்றிலும் மற்றத் தோஷத்தினுல் மறைக்கப்பட்டுப்போக, அப்பொழுது வாதஸம்பந்தமான விகாரங்கள் அதிகமாகும்; ஆவரணம் செய்யும் பித்தத்தின் அல்லது கபத்தின் விகாரம் சிறிதும் சேர்ந்து ஆவரண வாத ஸம்பந்தமான வியாதிகளை யுண்டுபண்ணும்.

2. பஞ்ச வாயுக்கள்—பிராண-அபாந-வியாந-உதாந-ஸமாந வாயுக்கள். ஒரேவிதமான வாயு தேஹத்தில் ஒவ்வொரு ஸ்தாநத்திற்கு ஏற்றவாறு வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுவதாகவும் சொல்வர்.

3. தமனிகள்—சுத்த ரத்தமோடும் குழாய்கள். வாதரோகப் பிரகரணமாகையால், நாடிகளென்கிற பொருளில் தமனி யென்கிற சொல் வழங்கப்படும்.

4. வாதத்தை விருத்தி செய்யக்கூடிய காரணங்கள்-ரூக்ஷ-லகு-சீதாதி குணமுள்ள பதார்த்தங்களை யுபயோகித்தல், தாண்டுவது ஓடுவது முதலிய சக்திக்கு மீறிய வேலைகளைச் செய்வது முதலியன,

மடைந்து, அதன் ஸ்தானத்திலிருந்து மேல்நோக்கிச் சென்று, இருதயத்தை யடைந்து, அவ்வவயவத்திலும் சிரஸ்ஸிலும் கன்னங்களிலும் வேதனை யுண்டுபண்ணி, உடலை வில்லைப்போல் வலித்து வளையச் செய்யும்; அடிக்கடி இசிவும், மூர்ச்சையும் காணும்; மூச்சுவிடுவதும் கஷ்டமாகும்; கண்கள் திறந்தவாறு அசைவற்றிருக்கும், அல்லது மூடிக்கொள்ளும்; கண் ஸ்தம்பித்துப் போய், ஞாபகமிழந்து தொண்டையினால் தன்னையறியாமலே கூவுவான்; இருதயத்தைப்பற்றிய தோஷம் விடுபட்டால் சிறிது சுகமுண்டாம்; மீண்டும் இருதயம் வாதத்தால் பற்றிக்கொள்ளப்பட்டு மூர்ச்சை யுண்டாகும். இது 'அபதந்த்ரகம்' எனப்படுகிறது. இதையே சிலர் தாருணம் என்றும், அபதாநகம் என்றும் கூறுவர்[1]. 27—31½.

தண்டாபதாநகம்:—வாததோஷம் கபத்துடன் கூடி, அத்தமனிகளையே விசேஷமாகப் பற்றி அவற்றை யடைந்திருந்தால், அதனால் தேஹம் ஓர் தடியைப்போல விறைத்துக்கொள்ளும்; அது 'தண்டாபதாநகம்' எனப்படும்.[2] 32½.

தநுஸ்தம்பம்:—தேஹம் வாதத்தினால் வில்லைப்போல் வளைக்கப்படுமானால் அந்த வியாதி 'தநுஸ்தம்பம்' [3] என்று வழங்கப்படும். இதில் விரல்கள், குதிகால், வயிறு, மார்பு, கழுத்து இவற்றைப் பற்றிய வாயு மிகவும் விரைந்து வேகமாய் ஸ்நாயுஜாலங்களை [4] வலித்திழுக்கையில், கண்கள் அசைவற்றுப் போய், முகவாய்க்கட்டை திறக்கவும் மூடவும் முடியாததாய்விட, விலாப்பக்கங்கள் ஒடிந்தவை போலாய்விடும்; கோழை கோழையாக மிக்க வாந்தியாகும்; ஆகவே தேஹத்தின் உட்புற மனைத்தும் முன்பக்கமாய் வில்லுபோல் வளையும். (1) வலிமையுடன் அவ்வாறு பிரகோபித்த வாயு அப்யந்தராயாமம் [5] என்கிற வாதரோகத்தை யுண்டுபண்ணும். (2) அங்ஙனமே வெளிப்புறத்து அவயவங்களின் தசைநார்ஜாலங்களைக் கடுமையாகப் பின்புறமாய் வளைத்து பாஹ்யாயாமம் என்கிற வாதரோகத்தை யுண்டு

1. தண்டாபதாநகம், அப்யந்தராயாமம், பஹிராயாமம், அபிகாதஜவாயு என்று ஆக்ஷேபகவாயு நான்கு வகைப்படும்.

2. கைகள், கால்கள், சிரஸ், ப்ருஷ்டம், இடைஇவ்வவயவங்களை வாதம் தடியைப்போல விறைக்கச் செய்வதால் தண்டாபதாநகம் என்று இதற்குப் பெயர்.

3. தநுஸ்தம்பம்—தநுர்வாதம் என்றும் கூறப்படும். அந்தராயாம-பஹிராயாமங்களுக்கு தநுஸ்தம்பம் என்பது பொதுப் பெயர். இவ்விரண்டிலும் தேஹம் முன்பக்கமாகவோ பின்புறமாகவோ தனுஸ்ஸைப்போல் வளைவது பொதுக் குறி.

4. ஸ்நாயுஜாலம்—மாம்ஸ பேசிகளென்கிற தசைநார்களின் முனைகளிலுள்ள வெண்மையான உரத்த நார்கள். ஸ்நாயுஜாலம் என்பது உபலக்ஷணம். இதனால் மாம்ஸபேசிகளும் குறிக்கப்படுகிறன.

5. அப்யந்தராயாமம்—வயிறு, மார்பு இவற்றின் பக்கம் இசிவு கண்டு வளையும் ஆக்ஷேபக வாயு. (அப்யந்தராயாமம் என்றால் உட்புறமாக வளைக்கப்படுவது எனப் பொருள்.)

பண்ணும்.[1] இதில் மார்பு, இடுப்பு, தொடைகள் ஆகிய அவயவங்கள் முறிவடையும்; இதை அஸாத்ய வியாதியென்பர். 33—36½.

அபிகாதஜ வாதம்:—[2] வாயுவானது சுயமாய் அல்லது கப-பித்தங்களுடைய சேர்க்கையைப் பெற்று கடுமையான மற்றொரு ஆக்ஷேபகவாதத்தை யுண்டுபண்ணும்; இந்நான்காம் ஆக்ஷேபகவாதம் அபிகாதத்தினால் உண்டாகின்றது. 37½.

அபதாநகத்தின்[3] அஸாத்யத்தன்மை:—கர்ப்ப பாதத்தினால் உண்டாவது, இரத்தம் அமிதமாய் வெளிப்படுவதால் காண்பது, அபிகாதத்தினால் ஸம்பவிப்பது ஆகிய அபதாநகங்கள் என்னும் ஆக்ஷேபக் வாதரோகங்கள் அஸாத்யமானவை. 38½.

பக்ஷ வாதம்:—வாத தோஷமானது சரீரத்தில் ஒரு பாரிசத்தை[4] நெடுகவும் பற்றி ஸிரைகள், ஸ்நாயுக்கள்[5] இவற்றைச் சுஷ்கமாக்கி, ஸந்திகளைத் தளர்த்தி[6], ஒரு பாரிசத்தை முற்றிலும் ஸ்வாதீனமற்றதாகச் செய்யும்; அப்பாரிசம் முழுமையும் செயலற்றதாகவும் உணர்ச்சியற்றதாகவும் ஆய்விடும். இதைச் சிலர் ஏகாங்க ரோகம்[7] என்றும், சிலர் பக்ஷவதம்[8] என்றும் வழங்குவர். 39—40½.

ஸர்வாங்க வாதம்:—அதே விதமாய் வாததோஷம் ஸர்வ அவயவங்களையும் பற்றியதாய் அக்குறிகளை யுண்டுபண்ணினால் அது 'ஸர்வாங்கவாதம்' என்ப்படுகிறது. 41.

வாதரோகங்களில் வேறு தோஷங்களின் ஸம்பந்தங்களாலான குறிகள்:—(1) வாததோஷம் பித்தத்துடன் கூடி வியாதியுண்டுபண்ணினால் தேஹ அழற்சி, மூர்ச்சை, நாவறட்சி இவை தோன்றும்.

1. பாஹ்யாயாமம்—முதுகின் பக்கம் இசிவு கண்டு வளைக்கும் கடுமையான ஆக்ஷேபகவாதம். (பாஹ்யாயாமம் என்றால் வெளிப்புறமாக இசிக்கப்படுவது எனப் பொருள்.)

2. அபிகாதஜம்—அடி முதலியது தாக்குவதால் அல்லது கர்ப்பம் திடீரென வெளிப்படுவதால் அல்லது வேறு அவ்வித காரணங்களால் உண்டாகும் ஆக்ஷேபகம்.

3. அபதாநகம், அபதந்த்ரகம், ஆக்ஷேபகம் என்பவை ஒரே வியாதியைக் கூறும் பர்யாய சப்தங்கள்.

4. ஒரு பாரிசம் என்றால் தேஹத்தின் வலது பாகமோ அல்லது இடது பாகமோ நெடுகவும் எனப் பொருள்.

5. ஸிரைகள்:—அசுத்தரத்தக் குழாய்கள்; இதனால் எல்லாவித இரத்தக்குழாய்களும் கிரஹிக்கப் படுவதாகவே சிலரது கருத்து. ஸ்நாயு வென்பாதல் வாத வியாதிக்கு ஆச்ரயமான நாடிகள் என்கிற நரம்புகள் குறிக்கப் படுவதாகக் கருதவேண்டும்.

6. 'ஒருவகை சிலேஷ்மகலை நிரம்பிய ஸ்நாயு ஜாலத்தினால் சூழப்பெற்ற ஸந்திபந்தங்கள் தளர்ச்சி யுறுகின்றன' என இதற்கு கதாதரன் பொருள் கூறுகிறார்.

7. ஒரு பக்கம் நெடுகச் சக்தி யிழந்ததாகச்செய்வதால் இதை 'ஏகாங்க ரோகம்' அல்லது ஏகாங்க வாதம் என்பார்கள்.

8. பக்ஷவதம்—இதையே பக்ஷவாதம் அல்லது பார்ச்வ வாயு என்பார்கள்.

(2) அதுவே கபத்துடன் கூடி வியாதியை உண்டாக்கினால் சைத்தியம், வீக்கம், குருத்துவம் ஆகியவை உண்டாம். 42.

**பக்ஷவாதத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:**—(1) கேவலம் வாத தோஷத்தினாலான பக்ஷவாதம் மிகவும் கஷ்டஸாத்யமாம். (2) வேறொரு தோஷத்துடன்[1] சேர்ந்த பக்ஷவாதம் எளிதில் சிகித்ஸிக்கக்கூடியது. (3) தாதுக்ஷீணத்தாலுண்டாவது அஸாத்யமாம். 43.

**அர்தித வாதம்:**—தொடர்ச்சியாக உரத்துப் பேசுவது, கடினமான வஸ்துக்களை மிகுதியாகக் கடிப்பது, மிதமின்றி சிரிப்பது, அதிகமாகக் கொட்டாவி விடுவது, அதிக பாரங்களைச் சுமப்பது, மேடு பள்ளங்களில் ஒழுங்கீனமாகப் படுப்பது, ஏதேனும் இவ்வித காரணத்தால் சிரஸ், நாசி, உதடு, முகவாய்க்கட்டை, நெற்றி, நேத்திரம் இவற்றின் ஸந்திகளைப்பற்றிய வாதம் முகத்தை ஒரு பக்கமாக இசித்து வலிக்கும்; இதில் வாயிற் பாதிபாகம் வக்ரித்துக்கொள்ளும்; கழுத்தும் ஒருவாறு சாய்ந்து திரும்பி நிற்கும்; தலை ஆடிப் போகும்; வாய் பேசமுடியாமற் போகும்; நேத்திரம் முதலிய அவயவங்களும் வக்ரமாகும்; அவ்விதம் வக்ரித்துள்ள பாகமாய் கழுத்து, மோவாய்க் கட்டை, பற்கள் இவற்றில் வேதனையுண்டாம். (இதற்குப் பூர்வ ரூபமாக மயிர்ச்சிலிர்க்கை, நடுக்கம், கண் குழம்புதல், ஊர்த்வச்வாஸம், சர்மத்தில் உணர்ச்சியின்மை, குடைத்தல், கழுத்துநரம்பிலும் மோவாய்க் கட்டையிலும் வலி ஆகிய இக்குறிகள் தோன்றும்.) வியாதிதத்துவமறிந்தவர் இதை 'அர்திதம்' என்பர். 44—46½.

**அர்திதத்தில் அஸாத்ய லக்ஷணம்:**—இவ்வியாதியில் மிகவும் உடல் க்ஷீணித்தல், கண்கள் அசைவற்றுப் போதல், வாய்ப்பிடிப்புண்டாய் குழகுழத்துப் பேசுதல், நடுக்கமுண்டாதல், மூன்று வருஷம் நீடித்து வருந்துதல் இவை அஸாத்யக்குறிகளாம்.[2] ஆக்ஷேபகம் முதலிய இவ்வாதரோகங்களில் வாதத்தினாலான கோளாறுகளின் வேகம் தணிந்ததும் சுகமுண்டாகும்[3]. 47, 48.

**ஹநுக்ரஹம்:**—நாக்கை பலமாக அடிக்கடியும் இழுத்து வழிப்பதாலும், சுஷ்கமான பதார்த்தங்களை அதிகமாய் மெல்லுவதாலும்,

---

1. வேறொரு தோஷம்—பித்தம் கபம் இவ்விரண்டிலொன்று.

2. முகத்தின் ஒருபாரிசம் வக்கிரமமாகப் போவதைப் போலவே தேஹத்தின் ஒரு பாரிசம் முடியவும் வக்கிரமானால் அதுவும் அர்திதம் என்று சிலர். ஆனால் ஸுச்ருதர் தேஹம் முடியவும் ஒரு பாரிசம் அசைவற்றுப் போவதை அர்த்தாங்க வாதம் என்றும், முகம் கோணலாவதை அர்திதம் என்றும் கூறுகிறார். வாய் முற்றிலும் பேசமுடியாமற்போவதும், விளக்கமின்றி பேசுவதும் தனித் தனியே, அஸாத்யக் குறிகளென்றும் கூறுவர்.

3. பாரத்தைச் சுமப்பவன் தன் சுமையை இறக்கியவுடனே சுகம் பெறுவதாக உணர்வது போலவே, இதிலும் வாதவேகம் தணிந்ததும் பிணியாளி சுகமடைந்ததாக உணர்வான்; என்றால் இயற்கைத் தன்மையைப் பெறுவான்.

அபிகாதத்தினுலும்[1] மோவாய்க்கட்டையின் மூல பாகத்தைச் சேர்ந்த வாதம் பிரகோபமடைந்து, இரண்டு பாரிசத்து மோவாய்க்கட்டையின் அள்ளுகளேயும் நழுவச் செய்து, வாயைத் திறந்த வண்ணம் அசைவற்றதாகச் செய்யும். இது 'ஹனுக்ரஹம்'[2] எனப்படுகிறது. இதனுல் மெல்லுவதும் பேசுவதும் மிகத் தடைபடும். 49, 50,

மந்யாஸ்தம்பம்:—ஹநுக்ரஹத்திற்குக் காரணமான அதே வாதமானது பகலில் தூங்குவது, மேடுபள்ளங்களிற் படுத்துறங்குவது, தேஹத்தைத் திறந்துகொண்டு திறந்த வெளியிற் படுத்திருப்பது, நெடுநேரம் மேல் நோக்கிப் பார்ப்பது இக்காரணங்களாலுண்டான கபதோஷத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டு 'மந்யாஸ்தம்பம்'என்கிற வாதரோகத்தை[3] யுண்டுபண்ணுகிறது. 51.

ஜிஹ்வாஸ்தம்பம்:—பேசுவது முதலிய வாக்கின் வேலையை நிறைவேற்றும் நரம்புகளே ஆச்ரயித்த வாயுவானது விகாரமடைந்து நாக்கை ஸ்தம்பிக்கச் செய்கிறது. அதனுல் உணவுண்பதிலும், பானங்களேப் பருகுவதிலும், பேசுவதிலும் மனிதன் திறமையற்றவனுவான். இது 'ஜிஹ்வாஸ்தம்பம்' எனப்படுகிறது. 52.

ஸிராக்ரஹம்:—வாயுவானது இரத்தத்தைப்பற்றியதாய் சிரஸ்ஸுக்குக் கீழே கழுத்தை ஆச்ரயித்துள்ள ஸிரைகள் என்கிற இரத்தக் குழாய்களே ரூக்ஷமாகவும், வலியுள்ளவையாகவும், கறுப்பாகவும் செய்யும்; இது 'ஸிராக்ரஹம்'[4] என்கிற அஸாத்ய வியாதியாம். 53.

க்ருத்ரஸீ வாதம்:—(1) ஸ்தம்பித்தல், வலி, குத்தல் ஆகிய கோளாறுகள் முதலில் கழுத்தின் கீழ்ப்புறத்திலும், அப்பால் இடுப்பிலும், ப்ருஷ்ட பாகங்களிலும், தொடையிலும், முழங்காலிலும், அதற்குக் கீழுள்ள காலிலும் கிரமமாகப் பற்றிப் பரவுவதோடு அவ்வவயங்களோடு அடிக்கடியும் துடிக்கும். இது கேவலம் வாதத்தால் உண்டான க்ருத்ரஸீ எனப்படுகிறது. (2) வாதமும் கபமும் ஒருமிக்கப் பிரகோபமடைந்துண்டாகும் க்ருத்ரஸீரோகத்தில் சோம்பலும், தேஹ குருத்துவமும் அரோசகமும் காணும்.[5] 54, 54½.

---

1. அபிகாதம்—அடிபடுவது, வீழ்வது முதலிய தாக்குதல்.

2. ஹநு என்றுல் மோவாய்க்கட்டை; க்ரஹம் என்றுல் பிடிப்பு.

3. ஹநுமூலம் என்கிற மோவாய்க்கட்டையின் அள்ளுகளேப் பற்றிய நரம்பும், மந்யா என்கிற கழுத்தின் பின்புறத்து அடியை அசைக்கச் செய்யும் நரம்பும் ஒரு மூல நரம்பின் முக்கியமான கிளேகளென்றும், அதனுல் அவற்றைப்பற்றிய வாதமும் ஒன்றென்றும் கூறப்படுகிறது.

4. சிரோக்ரஹம் என்றும் சிலர் இதைக் கூறுவர். சிரஸ்ஸுக்கு ஆதாரமான இரத்தநாளங்கள் கோளாறடைவதால் வேதனே யதிகரித்து, கழுத்துப் பிடிப்புண்டாகு மாகையால், இது சிரோக்ரஹம் என்றும் வழங்கப்படும்.

5. இதனுல் க்ருத்ரஸீவாதம் இரண்டு விதம் ஆம். ஒன்று கேவல் வாதத்தினுலான க்ருத்ரஸி, மற்ருென்று வாத-கப க்ருத்ரஸி.

**விச்வசீ:**—புயத்தின் பின்புற மிருந்து கரத்தின் மேற்புறமாகப் பரவியுள்ள மாம்ஸ கண்டரங்களைக் கோளாறடையச் செய்யும் வாத ரோகம் விச்வசீ [1] எனப்படுகிறது. இது புயங்களைச் செயலற்றதாகச் செய்யும். 55½.

**கிரோஷ்டுக சீர்ஷம்:**—வாதம் இரத்தம் இவ்விரண்டின் கோளாறால் முழங்காலில் வீக்கம் காணும்; கடுமையான நோவுண்டாகும்; நரியின் தலையைப் போன்றதாய் அவ்வீக்கம் பருமனாகத் தோன்றும்;[2] ஆகவே இந்த வியாதியை 'கிரோஷ்டுக சீர்ஷம்' என்றறிக. 56½.

**கஞ்ஜம் - பங்கு:**—(1) இடுப்பைப் பற்றிய வாதம் துடையின் கண்டரையை [3] வலித்திழுக்கையில் கால் நொண்டியாகும்; அந்த வியாதி 'கஞ்ஜம்' எனப்படும். (2) இரண்டு துடைகளும் அவ்விதம் ஸ்வாதீனமற்றுப் போனால் அது 'பங்கு' எனப்படுகிறது. 57½.

**கலாயகஞ்ஜம்:**—காலிலுள்ள பூட்டுகள் நெகிழ்வதால் எழுந்து நடக்கத் துவக்கும்போது கால் நடுக்கமுற்றால் கஞ்ஜத்தன்மையுண்டாம்; அது 'கலாயகஞ்ஜம்' எனப்படுகிறது. 58½.

**வாதகண்டகம்:**—ஒழுங்கினமாகப் பாதங்களை வைத்து நடப்பதால் அல்லது மேடுபள்ளமான பிரதேசங்களில் ஸஞ்சரிப்பதால் குதிகாலில் பிரகோபமடைந்தும், அல்லது சிரமம் அதிகரிப்பதால் குதிகாலில் சேர்ந்தும் கோளாறடைந்த வாயுவானது அவ்விடத்தில் வலியையுண்டு பண்ணும்; அதை 'வாதகண்டகம்' [4] என்பார்கள். 59½.

---

1. விச்வசீ — இதை விச்வாசீ என்றும் வழங்குவர். காலை முடக்கிப்போடுவதில் க்ருத்ரஸியும், கையை முடக்கிப்போடுவதில் விச்வசியும் ஒரே மாதிரியா யிருப்பதால் இவ்விரண்டும் கல்வீ என்கிற பொதுப்பெயராலும் அழைக்கப்படும். 'க்ருத்ரஸியும், விச்வாசியும் கல்வி யெனப்படும்; இரண்டும் கடுமையான நோவுண்டுபண்ணுகின்றன' என்று கயாதாஸன். சரகர் 'வாதம் முழங்காலுக்குக் கீழ்பாகம், துடை, கணுக்கை அல்லது புஜமூலம் இவற்றை முடமாகச் செய்கிறது; அது கல்வீ யெனப்படுகிறது' என்று விச்வசியைத் தவிர்த்துப் பிரத்தியோகமாய் கல்வி யென்னும் வியாதியை விவரிக்கிறார். பாண்டு ரோகத்திற்குக் காமாலையும், அஷ்டீலாவுக்குப் பிரத்யஷ்டீலாவும், அச்மரிக்கு சர்க்கரையும் இலக்ஷணஸம்பந்தத்தால் விவஹாரத்துக்கு ஒற்றுமை வருவதுபோல், க்ருத்ரஸீ விச்வசிகளுக்கு கல்வீ யென்கிற நாமாந்தரம் உண்டென்றும் கூறுவர். (அடுத்த பக்கமும் பார்க்க.)

2. வாத-ரக்தம் என்கிற வியாதியாலும் 'கிரோஷ்டுகசீர்ஷம்' என்கிற வியாதி காண்பதுண்டென்று கயாதாஸன். வாதம், இரத்தம் இவ்விரண்டாலும் உண்டவதாக ஜெஜ்ஜடன். நரியின் தலையைப் போன்று வீக்கங் காணுவதால் இப்பெயர் வந்தது. ஆகவே தமிழில் **நரித்தலை வாயு** என்று இதற்குச் சரியான மொழிபெயர்ப்புப் பெயர் வழங்கப்படுகிறது.

3. கண்டரை யென்றால் ஸ்நாயுக்களில் பெரிதாயிருப்பது; அது 'மஹாஸ்நாயு' என்றும் கூறப்படும்.

4. வாதகண்டகத்தை குடுகாவாதம் என்றும் வழங்குவர்.

பாததாஹம்:—வாத தோஷம் பித்தத்தோடும் இரத்தத் தோடும் கலந்து அவற்றைக் கோளாறடையச் செய்து, பாதங்களில் அழற்சியைத் தரும்; அதிகமாய் நடப்பவனுக்கு விசேஷமாகக் காணும் இக் கோளாறு 'பாததாஹம்' எனப்படும். 60½.

பாதஹர்ஷம்:—பாதங்கள் சிலிர்த்து, கூச்சங்கொண்டு, திமிர்த்துப் போய், உணர்ச்சியிற் குன்றியவையாகவும் ஆனால், அக்கோளாறை 'பாதஹர்ஷம்' என்றறிக [1]. அது கபம் வாதம் இவற்றின் பிரகோபத்தால் காண்கிறது. 61½.

அம்ஸ சோஷம்:—தோள்பாகத்தைப் பற்றிய வாதம் தோளின் உட்புற பந்தனத்தைச் [2] சுஷ்கமாக்கி, 'அம்ஸசோஷம்' என்கிற வாத ரோகத்தை யுண்டுபண்ணுகிறது. 62.

அபபாஹுகம்:—அம்ஸம் என்னும் தோளைப்பற்றிய வாயு அவ்விடத்திய நரம்புகளைச் சுருக்கி 'அப்பாஹுகம்' [3] என்கிற வாத ரோகத்தை யுண்டுபண்ணும். 62½.

மூகன்-மின்மினன் முதலியவர்:—வாயுவானது கபத்துடன் கூடி 'சப்தவாஹிகள்' என்கிற சொற்களை யுச்சரிப்பிக்கும் நரம்புகளைச் சூழ்ந்துகொண்டு, மனிதனை 'மூகன்' [4], 'மின்மினன்', [5] 'கத்கதன்' [6] என்கிற கோளாறுகளுள்ளவனைச் செய்கிறது. 63½.

தூநி:—வேதனையானது மலாசயம் மூத்திராசயம் இவற்றில் ஆரம்பித்து, கிரமமாகக் கீழ்நோக்கிச் செல்லும்; குதத்தையும் லிங்கம் அல்லது உபஸ்த்தத்தையும் பிளப்பதுபோல் வலியையும் உண்டு பண்ணும்; அந்த வியாதி, 'தூநி' எனப்படும். 64½.

பிரதிதூநி:—தூநியிற் காண்பதற்கு எதிரிடையாக வேதனை குதத்திலும் உபஸ்த்தம் அல்லது லிங்கத்திலும் ஆரம்பித்து, அதன் வேகம் பக்குவாசயத்தை நோக்கி மேற்பக்கமாகக் கிரமமாய் ஓடினால் அது 'பிரதிதூநி' என்று கூறப்படுகிறது. 65½.

ஆத்மாநம்:—வயிற்றில் மிகக் கடுமையான வலியும் சப்தமும் ஏற்பட்டு மிகப் பொருமலுண்டானால், அதை 'ஆத்மாநம்' என்றறிக; அது அபாநவாதத்தை அடிக்கடி அடக்குவதாலுண்டான கடுமையான வாதவியாதியாம். 66½.

---

1. பாதஹர்ஷம் என்பது 'கால் திமிர்த்தல் அல்லது மரத்துப் போதல்.' இந்தக் கோளாறு நீடித்திருப்பதில்லை.

2. தோளிலுள்ள ஸந்திகளைக் கட்டும் சிலேஷ்மகலை.

3. அபபாஹுகம்—கை ஸ்வாதீன மிழந்துபோதல். இதையும் வாத-கபங்களால் உண்டாவதாகச் சிலர். வேறு சிலர் அம்ஸ சோஷத்துக்கும் அபபாஹுகத்துக்குமுள்ள லக்ஷணங்களை ஒன்று கூட்டி இரண்டும் ஒரே வியாதியென்றும் விவஹரிப்பார்கள்.

4. மூகன்—ஊமை.

5. மின் மினன்—மூக்கால் முணுமுணுத்துப் பேசுபவன்.

6. கத்கதன்—தெற்றுவாயன்.

**ப்ரத்யாத்மாநம்:**—அதே நோய், விலாப்பக்கங்கள், இருதயம் இவற்றில் வேதனையை யுண்டுபண்ணுமல் ஆமாசயம் என்கிற இரைப் பையில் கபத்திஞல் கலக்கிக் கோளாறடைவிக்கப் பெற்ற வாத ஸம்பந்தத்தைப் பெற்ருல் 'ப்ரத்யாத்மாநம்' எனப்படும். 67½.

**வாதாஷ்டீலா:**—நாபிக்குக் கீழே அஷ்டீலை யென்னும் சிலையைப் போலே[1] மேற்புறமாகக் கிளம்பி திரண்டும், கனமாகவும், மற்றப் புறங்களிற் செறிந்து முண்டாகும் ஒரு கிரந்திபோன்ற வீக்கம் 'வாதாஷ்டீலையாம்.' இது அசைவுள்ளதாகவோ அசைவற்றதாகவோ இருந்து, குதம் முதலிய வெளி மார்க்கத்தை மூடிவிடும். 68, 69.

**ப்ரத்யஷ்டீலா:**—முற்கூறிய வாதாஷ்டீலையே வயிற்றிற் குறுக்கு வாட்டிலுண்டாய், அபாநவாதம்-மலம்-மூத்திரம் இவற்றைத் தடுத்து நோவுடன் கூடி யுண்டானல், அது 'ப்ரத்யஷ்டீலை' எனப்படும். 70.

**வஸ்தியைப்பற்றிய வாதம்:**—வஸ்தி யென்னும் மூத்திராசயத்தில் வாயுவானது கோளாறடையாம லிருக்கையில், மூர்த்திரம் நன்கு வெளியாகும்; அந்த வாயு கோளாறடைந்திருந்தால் பலவித விகாரங்கள்[2] அவ்வவயவத்தைப் பற்றியுண்டாகும். 71.

**வேபது:**—ஸர்வ அவயவங்களையும், முக்கியமாய் சிரஸ்ஸையும் பற்றிய வாயு அவ்வவயவங்களில் நடுக்க முண்டுபண்ணினல், அது 'வேபது' என்று வழங்கப்படும். 71½.

**கல்லீ:**—பாதங்கள், கணுக்காலுக்கு மேற்பட்ட அவயவங்கள், துடைகள், கைகளின் மூல பாகங்கள் இவற்றை முடங்கச் செய்யும் வாதம் 'கல்லீ' எனக் கூறப்படுகிறது. 72.

**ஊர்த்வ வாதம்:**—(வாதமானது கீழே குதம் முதலிய த்வாரங்களில் கபத்திஞல் அல்லது அபானவாயுவினல் தகையப்பட்டுப்போக, அது மேல் நோக்கியதாய் அதிக தேக்கெரிவை யுண்டுபண்ணும்; இவ் வியாதி ஊர்த்வவாதம் எனப்படுகிறது.)

**வாதரோக ஸங்கிரஹம்:**—வாத தோஷத்திஞலுண்டாகும் மற்றக் கோளாறுகளையும் அந்தந்த ஸ்த்தானத்திற்கு அநுரூபமாகக் காணும் இலக்ஷணங்களைக் கொண்டு அவற்றிற்கும் பெயர் முதலியதைக் குறிப்பிட்டு அறிக.[3] முற்கூறிய ஸகல வாதரோகங்களிலும் பித்தம் முதலியவற்ருேடு ஸம்பந்தங்களையும் ஊஹித்தறிக. 73.

---

1. வடதேசத்தில் உருண்டை வடிவமான கூழாங்கல்லை 'அஷ்டீலா' என்பார்கள் என ஜெஜ்ஜடனும், கார்த்திகனும் கூறுகிருர்கள். கருமான்கள் உபயோகிக்கும் உருண்டு நீண்ட ஒருவித உலோகச் சம்மட்டியென்று கயாதாஸன்.

2. அச்மரீ, மூத்திரக்ருச்சிரம் முதலிய விகாரங்கள்.

3. ஆமாசயாதிகளிலுண்டாகும் நோவை 'குக்ஷி சூலம்' என்றும், விரல்களின் முனைகளிலுண்டாவதை 'நகபேதம்' என்றும், தலையில்உண்டாகும் வாதநோயை 'சிரச்சூலம்' என்றும், இவ்வாருகவேறு வாதநோய்களையும் வழங்குவர். சூலத்திஞல் குத்தப்படுவதுபோன்ற வலி, பிளக்கப் படுவதுபோன்ற வலி, குடைச்சல், விறுவிறுத்தல் முதலியவைகள் வாயுவின் கோபத்தாற்காணும் பலவித நோவுகளாம்.

வாதரோகங்களில் ஸாத்யாஸாத்யங்கள்:— ஹநுஸ்தம்பம், அர்திதம், ஆக்ஷேபகம், பக்ஷவாதம், அபதாநகம் ஆகிய இவை சதுஷ்பாதங்களும்[1] பூர்ணமான பிணியாளிகளுக்கு பலமான சிகித்ஸைகளால் நீண்ட காலத்தில் நிவ்ருத்தியானாலும் ஆகும்; நிவாரணம் ஆகாமலும் போகும். 74.

வாதரோகத்தின் உபத்திரவங்கள்:—வாதரோகிகளில் உபத்திரவங்களைப் பெருமலிருப்பவர்களுக்குச் சிகித்ஸை செய்வது எளிது. விஸர்ப்பம், அழற்சி, வலி, ஸந்திபந்தங்களின் பிடிப்பு, மூர்ச்சை, அரோசகம், அக்னிமாந்த்யம் இவற்றால் தசைநார்களும் உடல் வலிமையும் க்ஷீணித்துப் போனால் பக்ஷவாதம் முதலிய வாதரோகங்கள் கொன்று விடும். மேலும் வீங்கிப்போதல், சர்மம் உணர்ச்சியற்றுப்போதல், கால் கை முதலிய அவயவங்கள் செயலற்று வீழ்தல், நடுக்கம் பொருமல் இவற்றால் பீடிக்கப்படுதல், நோவால் வருந்துதல் ஆகிய இவ் வுபத்திரவங்களோடு கூடிய பிணியாளியையும் வாதரோகம் மாய்த்துவிடும். 75, 76.

வாதம் இயற்கை நிலைமையிலிருத்தல்:—எவனுக்கு வாயுவானது, சரீரத்தில் ஆங்காங்கு அதற்கு இயற்கையிலுள்ள கதியில் தடையேற்படாமல் சுபாவஸ்திதியிலும், அதற்குற்ற ஸ்த்தாநத்திலும் இருந்து வருகிறதோ, அவன் வியாதியின்றி பூர்ணமான தீர்க்காயுளைப் பெற்று[2] சுகமாய் வாழ்வான். 77.

---

## 23. வாத-ரக்த நிதாநம்

வாத-ரக்தத்தின் காரணம்:— இலவணம், அம்லம், கார்ப்பு, க்ஷாரம் இவற்றையும், ஸ்நிக்த்தம், உஷ்ணம், எளிதில் ஜீர்ணமாகக் கூடாத தண்மை இக்குணமுள்ள உணவுகளையும், பழகிக் கசிவு பெற்ற அல்லது உலர்ந்துபோன தாமரைக்கிழங்குகளை அல்லது அவ்

---

1. சதுஷ்பாதங்கள்—42-ம்பக்கம் பார்க்க.

2. பூர்ணமான தீர்க்காயுள்— "மனிதருக்கும் யானைகளுக்கும் நூற்றிருபத்தைந்து வருஷங்கள் பூர்ணாயுளாகும்" என்று வராஹமிஹிரன்.

* வாத-ரக்தம் என்பது குஷ்டத்தினும் கடுமையான ஒரு வியாதி. (குஷ்டமென்று விவஹாரத்திலுள்ள வியாதிக்கே 'வாத-ரக்தம்' என்பது சரியான பெயரென்று கூறுவாருமுளர். அப்பொழுது குஷ்டம் ஸாதாரண சர்மவியாதிகளைச் சேர்ந்ததென்று அவர்களது கருத்து.) ஸுச்ருதத்தில் வாதரோகாத்தியாயத்திலேயே வாத-ரக்தமும் கூறப்படுகிறது. பொதுவான மற்ற வாதரோகங்களினும் நிதாநத்திலும் தோஷ தூஷ்யங்களிலும், ஸம்ப்ராப்தியிலும், சிகித்ஸை முதலிய மற்ற அம்சத்திலும் வாத-ரக்தம் வேறுபட்டது. ஆகவே வாதரோகத்திற்குப் பிறகு, பிரத்தியேகமாக வாத-ரக்தம் விவரிக்க நேர்ந்தது. 'வாதம் இரத்தத்தைப்பற்றி யிருக்கையில் கடுமையான வலி அழற்சி முதலியவை யுண்டாம் என்று வாதரோகத்திற் கூறியவிடித்து வாதம் ஒன்றே முதலிற் கோளாறடைந்து, அப்பால் இரத்தத்தைக்

விதமான ஆநூப மாம்ஸங்களையும்,[1] பிண்ணாக்கு-முள்ளங்கி முதலிய வற்றையும், கொள் - உளுந்து - நிஷ்பாவக்கீரை - இறைச்சி - கரும்பு இவற்றையும், தயிர் - அன்னம் ஊறிய நீர் . காடி - சுக்தமென்கிற மது-மோர் - கள் - மத்யவகைகள் ஆகியவற்றையும், விருத்தாசந-அத்யசநங்களையும் உண்பதாலும், கோபம் - பகலில் தூங்குவது - இரவிற் கண் விழிப்பது ஆகியவற்றாலும் வாதமும் இரத்தமும் பிரகோபிக்கும்; மித்யாஹார விஹாரங்களைச் செய்யும் ஸுகுமாரதேஹிகளுக்கும், ஸ்தூலதேஹிகளுக்கும், சுகபுருஷர்களுக்கும் முற்கூறிய காரணங்களால் பெரும்பாலும் வாதரக்தம் பிகோபிப்பது வழக்கம். 1—3.

**வாத-ரக்தத்தின் ஸம்ப்ராப்தி:**—யானை, குதிரை, ஒட்டகம் இவற்றின்மீது விசேஷமாகச் சவாரி செய்பவருக்கும், விதாஹி குணமுள்ள உணவையுண்பவருக்கும் குடலில் எவ்வுணவும் விதக்த்தமென்னும் தோஷத்தைப் பெறுவதால், அத்தோஷம் ஜடிதியில் தேஹத்திலுள்ள ஸகல இரத்தத்தையும் காந்தச் செய்கிறது. அங்ஙனம் கோளாறடைந்த இரத்தமானது சவாரி முதலியது செய்து தளர்ந்துள்ள பாதங்களின் ஸ்ரோதஸ்ஸுகளில் சேருகிறது; அதே ஸமயத்திற் கோளாறடைந்துள்ள வாயுவோடு அந்த இரத்தம் சேர்ந்து வியாதியுண்டாகிறது. இவ்விரண்டின் கோளாறால் முக்கியமாய் வாதத்தின் பலத்தினால் உண்டாகும் வியாதி 'வாத-ரக்தம்' எனப்படுகிறது. 4.

**வாத-ரக்தத்தின் பூர்வரூபம்:**—வாத-ரக்தம் உண்டாகு முன்பு தேஹத்தில் வியர்வை அதிகரிக்கும், அல்லது முற்றிலும் இல்லாமற் போகும்; உடல் கருத்து பரிசவுணர்ச்சி குறைந்துவரும்; முள் முதலியது குத்தினாலும் சிறிது அடி தாக்கினாலும் வலி கடுமையாயிருக்கும்; கணுக்கள் தளர்ச்சியடையும்; சோம்பல் அதிகரிக்கும்; உடல் இளைக்கும்; ஆங்காங்கு கட்டிகள் உண்டாகும்; முழங்கால் - கால் - துடை - இடுப்பு - தோள் - கரங்கள் - பாதங்கள் - இவற்றில் குடைத்தலும், துடிப்பும், பிளக்கப்படுவது போன்ற நோவும், கனமான உணர்ச்சியும் உண்டாகும்; அரிப்பு அதிகரிக்கும்; கணுக்களில் அடிக்கடியும் நோவுண்டாய் மறையும்; தேஹ நிறம் மாறி வட்டமான தடிப்புகள் காணும். 5—7.

**வாதாதிகமான வாத - ரக்தம்:**—வாத தோஷம் மிக்க அதிகரித்த வாத-ரக்த வியாதியில் குத்தல், துடிப்பு, பிளக்கப்படுவதுபோன்ற வேதனை இவையும், ரூக்ஷமாகவும், கரு நிறமான அல்லது வெண் கறுப்பான வீக்கமும் தோன்றும்; அவ்வீக்கம் அடிக்கடி விருத்தி

சிறிது விகாரமடையச் செய்கிறது. வாத-ரக்தத்தில் வாதம் இரத்தம் இரண்டும் ஆரம்பத்திலேயே கோளாறடைகின்றன என்பதே பரஸ்பரமுள்ள பேதமாம். வாத-ரக்தமே வாத சோணிதம் என்றும் கூறப்படும்.

1. ஆநூபமாம்ஸம்—நீர்ப்பாங்கான பிரதேசம் அநூபம்; அவ்விடத்திலுண்டான மிருகாதிகளின் மாம்ஸம் ஆநூபமாம்ஸம்.

யடைவதும் குறைவதுமா யிருக்கும்[1]; தமனிகளும், விரல்களும், கணுக்களும் குறுகும்; அவயவங்களிற் பிடிப்பும், அதிக வலியும் காணும்; சீதளமான வஸ்துக்களில் வெறுப்பும், அவ்வித வஸ்துவால் வியாதிக்கு அநுபசயமும் தோன்றும்; அவயவங்கள் ஸ்தம்பித்து, நடுக்கங்கொண்டு, பரிசவுணர்ச்சி யற்றவைகளாகும். 8, 9.

**இரக்தாதிகமான வாதரக்தம்:**—மிகக் கோளாறடைந்த இரத்தம் அதிகரித்த வாத-ரக்தத்தில்[2] வீக்கம் பலமாயிருக்கும்; அதிக வேதனையும், குத்தலும், சிமசிமா வென்கிற அரிப்பும், துர்நீர்க்கசிவும் காணும்; வீக்கம் சிவந்திருக்கும்; ஸ்நிக்த்தமும் ரூக்ஷமுமான சிகித்ஸையினால் குணமுண்டாகாது. 10.

**பித்தாதிகமான வாதரக்தம்:**—பித்தம் மிகப் பிரகோபமடைந்த வாத-ரக்தத்தில் அழற்சி, மிக்க புத்தி மாறாட்டம், வியர்வை, மூர்ச்சை, வெறி, நாவறட்சி, பரிசித்தலைத் தாங்கமுடியாமை, வலி, சிவப்பு, கருமையான வீக்கம், அவயவங்கள் சமைக்கப்பட்டதுபோல் பழுத்துப்போதல், வீக்கத்தில் அதிக உஷ்ணம் இக்குறிகள் காணும். 11.

**கபாதிகமான வாதரக்தம்:**—கபம் விசேஷமாகப் பிரகோபித்த வாத-ரக்தத்தில் அவயவங்கள் வீக்கங்கொண்டு ஸ்திமிதமாகவும், குருவாகவும், உணர்ச்சியற்றவையாகவும், ஸ்நிக்த்தமாகவும், சீதளமாகவும் ஆகும்; தினவும், சொற்ப நோவு மிருக்கும். 11½.

**த்வந்த்வ-ஸந்நிபாத வாதரக்தங்கள்:**—த்வந்த்வதோஷங்கள், ஸந்நிபாதம் இவற்றாலான வாத-ரக்தங்களில் அந்தந்த தோஷங்களின் கலப்பான குறிகளைக்கொண்டு பேதங்களைத் தெரிந்துகொள்க. 12.

**வாத-ரக்தத்தின் விசேஷலக்ஷணம் :** — வாத-ரக்ததோஷம் ஒரு ஸமயம் கால்களின் முனையைப்பற்றியும், சில ஸமயம் கைகளின் முனையைப்பற்றியும் ஆரம்பித்து,[3] பெருச்சாளி விஷம்போல் கிரமமாகப் பிரகோபித்து உடலெங்கும் பாயும்.[4] 13.

**வாத-ரக்தத்தில் உபத்திரவங்களும், அஸாத்யாதிநிலைமைகளும்:**—முழங்கால் வரையில் வெடித்திருப்பது, துர்நீர்க்கசிவுடன் கூடியது, பிராணதார மாம்ஸத்தை க்ஷீணிப்பிப்பது முதலிய குறிகளுள்ள

1. வாத-ரக்தலக்ஷணங்கள் அனைத்துமே அதிகமாவதும் குறைவதுமாயிருக்குமென்றும் சிலர்.

2. வாத-ரக்தத்தில் தேஹத்திலுள்ள இரத்தத்தில் எந்த பாகம் முதலில் விகாரமடைகிறதோ அதைத் தவிர மற்ற இரத்தமும் இதில் பிரகோபமடையுமென்று கருத்து.

3. பாதங்களிலாவது கரங்களிலாவது வாத-ரக்ததோஷம் ஆரம்பிக்க, அதற்குச் சிகித்ஸை செய்யாமலிருந்தால் அது தேஹமெங்கும் பரவும் எனக் கருத்து.

4. ஆழமான தாதுக்களைப்பற்றிப் பரவும் வாதரக்தம் கம்பீர வாதரக்தம் என்றும், மேற்புற தாதுக்களைப்பற்றியது 'உத்தாநவாதரக்தம்' என்றும் சரகர். ஸுச்ருதர் 'குஷ்டத்தைப் போலவே முதலில் உத்தாநமாக ஆரம்பித்து, வியாதி முதிர்ந்தபிறகு கம்பீர வாதரக்தமாக மாறுகிறது' என்கிறார்.

கொடிய வாத-ரக்தம் அஸாத்யமாகும். ஒரு வருஷமாக நிலைத்திருக்கும் வாத-ரக்தம் யாப்யமாம். நித்திரையின்மை, அரோசகம், ச்வாஸம், மாம்ஸதாதுக்கள் அழுகிப் பதன்கெடுதல், சிரஸ்ஸின் பிடிப்பு, மூர்ச்சை, அதிக வெறி, வலி, நாவறட்சி, ஜ்வரம், புத்திமாருட்டம், நடுக்கல், விக்கல், முடமாகப் போதல், அக்கி போன்ற விரணம் ஏற்படுதல், உடல் அழற்சி, தலைச்சுற்றல், உடல் வாட்டம், விரல்கள் வக்கிரமாதல், கொப்புளங்கள் உண்டாதல், மர்மஸ்த்தானங்களின் பிடிப்பு, அர்புதம் இவை உபத்திரவங்களாம். இவ் வுபத்திரவக் குறிகளோடு கூடிய அல்லது புத்திமாருட்டம் ஒன்றை மாத்திரம் பெற்ற வாத-ரக்தம் அஸாத்யமாம். எல்லா உபத்திரவங்களையும் பெருத வாத-ரக்தம் யாப்யம்; உபத்திரவங்களே காணுதது நிவ்ருத்திக்கக் கூடியாதாம். அதிலும் ஒரு தோஷத்திறைலுண்டானதும், சொற்ப நாட்களிலுண்டானதுமான வியாதி ஸுலபஸாத்யம்; இரண்டு தோஷங்கள் சேர்ந்துண்டான்து யாப்யம்; மூன்று தோஷங்களாலுண்டானதும், உபத்திரவங்களோடு கூடியதும் அஸாத்யமாம். 14—18.

---

## 24. ஊருஸ்தம்ப நிதானம்.*

ஊருஸ்தம்பத்தின் நிதாந-ஸம்ப்ராப்திகள் :—சீதமாகவும் உஷ்ணமாகவும், சுஷ்கமாகவும் திரவமாகவும்,குருவாகவும் ஸ்நிக்த்தமாகவும், ஜீர்ணிக்கக் கூடியவையாகவும் ஜீர்ணிக்க முடியாதனவாகவுமுள்ள[1] வஸ்துக்களைப் பலவாறு கலந்துண்பதாலும், அங்ஙனமே ஆயாஸம், அதிகமாய் அலைந்து திரிதல், அதிக தூக்கம், மிகக் கண் விழித்தல் இவைகளாலும் ஆமதோஷத்தைப் பெற்று மிகவும் அதிகரித்த பித்தத்தை சிலேஷ்மமும் மேதோ தாதுவும் வாயுவும் சேர்ந்து இன்னும் கோளாறடையச் செய்து, துடைகளிற் போய்ச் சேர்ந்து,துடையெலும்புகளின் உட்புறங்களில் அத்தோஷங்கள் நிரம்பிவிட, அங்கு நிலைத்துப்போன கபத்திறைலும் துடைகள் அசைக்க முடியாமல் திமிர்த்துப் போய், குளிர்ந்து உணர்ச்சியற்றவையாகவும் ஆகும். 1—3.

---

* ஊருஸ்தம்பம்:—துடையைக் கடுமையாகத் திமிர்க்கச் செய்து வீக்கம் முதலியதை யுண்டுபண்ணும் ஒரு ஆமதோஷ வியாதி.

1. சீதம் உஷ்ணம் என்பவை முதலியவைகளைக் குறிப்பிடுவதிலிருந்து, ஒன்றேடொன்று நேர் எதிரிடையான குணமுள்ள மற்ற வஸ்துக்களின் உபயோகத்தாலும் இந்த வியாதியுண்டாகும் எனக் கருதலாம். 'ஜீர்ணமாகக் கூடியவையும் எளிதில் ஜீர்ணமாகக் கூடாதவையுமான வஸ்துக்களைக் கலந்துபயோகிப்பதால் இவ்வியாதி யுண்டாகும்' என்று த்ருடபலன். வியாதிக்குக் காரணங்களாகக் கூறப்பட்டவைகளுள் சில வாதத்தையும், வேறுசில பித்தத்தையும், மற்றும் சில கபத்தையும் பிரகோபிக்கச் செய்யுமென்றறிக. இங்கே ஸம்ப்ராப்தியில் வாததோஷம் பிரதானமாகக் குறிக்கப்படுகிறது. 'கபமானது மேதஸ்ஸுடன் கூடி, வாத-பித்தங்களையும் கோளாறடையச் செய்து துடைகளிற் பரவி ஊருஸ்தம்பத்தை யுண்டாக்குகிறது' என்று சரகர் சிலேஷ்மத்துக்கு பிராதாந்யம் கூறுகின்றார்.

ஊருஸ்தம்பம் : — முற்கூறியபடி திமிர்த்து உணர்ச்சியற்றுப்போன துடைகள் மிகவும் கனத்துப் பிறரது அவயவங்கள் எனக் கூடியவாறு ஸ்வாதீன மற்றவையாகவும், கடுமையான நோவுள்ளவையாகவும் ஆகும் ; நோயாளிக்கு மனம் கவலையுறும் ; உடலெல்லாம் வேதனையோடு திமிர்த்துப் போய், சோம்பல், வாந்தி, அரோசகம், ஜ்வரம் இவையும் காணும் ; முழங்காலுக்குக் கீழ் பாகம் இளைத்தும், எடுத்து அடி வைக்க முடியாததாகவும், உணர்ச்சியற்றதாகவும் ஆகும். இதை 'ஊருஸ்தம்பம்' என்றும், ஆட்யவாதம் என்றும் கூறுவர். 4, 5.

ஊருஸ்தம்பத்தின் பூர்வ ரூபம்:—அதி நித்திரை, மிக மனக்கவலை, திமிர்ப்பு, ஜ்வரம், மயிர்ச்சிலிர்க்கை, அரோசகம், வாந்தி, கால் - துடைகள் இளைத்தல்; இவை ஊருஸ்தம்பம் உண்டாகுமுன் காணும் குறிகளாம். 6.

ஊருஸ்தம்பத்தின் இலக்ஷணாதிகளில் விசேஷம்:—முற்கூறிய விதம் பூர்வரூபாதிகள் உண்டாகையில், இதை வாதரோகமென்று பிரமித்து ஸ்நேஹம் முதலியதால் சிகித்ஸிக்க சிலர் முயன்றுவிடுவர். [1] அவ்விதம் செய்வதால் பாதங்கள் இளைத்து, உணர்ச்சியற்று, நடப்பதற்கு வெகு சிரமமாய் விடும். முழங்கால்களுக்குக் கீழ்பாகம், துடைகள் இவை மிகவும் சோர்ந்துவிடும்; அடிக்கடி அதிக அழற்சியும் வேதனையுமுண்டாகும்; பாதத்தைக் கீழே வைத்தால் மிகவும் நோவுண்டாகும்; குளிர்ச்சியான பரிசமும் உணரப்படாமற்போகும்; நிற்பதற்கும், நடப்பதற்கும், காலை அசைப்பதற்கும் திறமையற்றவனாவான்; அழுத்தினால் தாங்கவியலாத வலியுண்டாம்; துடைகளும் பாதங்களும் முறிவடைந்தவையெனத் தோன்றுமாறு ஸ்வாதீனமற்று, பிறருதவியின்றி அசைக்க வியலாதவையாக ஆகும்[2]. 7—9.

ஊருஸ்தம்பத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—அழற்சி, வலி, குத்தல், நடுக்கம் இவற்றால் பீடிக்கப்படுபவன் இவ் வியாதியால் கொல்லப்படுவான். இக்குறிகளில்லாமலிருந்தாலும் வியாதி நீடித்ததாக இல்லாதிருந்தாலும் அது சிகித்ஸிக்கக் கூடியதே. 10.

# 25. ஆமவாத நிதாநம்

ஆமவாதத்தின் நிதாநமும் ஸம்ப்ராப்தியும்:—விருத்தமான உணவுகளை உண்பது, அவ்வித செயல்களைச் செய்வது, ஜாடராக்னி மந்த

1. உணர்ச்சியற்றுப் போதல், தசைநார் முதலியது சுருங்குதல், நடுங்குதல் முதலிய வாதரோகத்திற்குச் சமமான குறிகள் தோன்றுவதால் ஊருஸ்தம்பத்தை வாதரோகமென்று பிரமிப்பது இயல்பு. வாதரோகமென்று பிரமித்து அறியாமையால் வாதஹரமான ஸ்நேஹாதி சிகித்ஸைகள் இதற்குச் செய்தால் அநுபசயம் தோன்றும்.

2. 'ஊருஸ்தம்பவியாதி முக்கியமாக சிலேஷ்மாதிக்யத்தால் உண்டாகிற தென்றாலும், ஸந்நிபாதக் கோளாறால் காண்கிறது. இது ஒரேவிதமானது.' என்கிறார் சரகர்.

மாவது, வேலையின்றி சும்மா யிருப்பது, ஸ்நிக்த்தமான உணவைட் புஜித்துவிட்டு வியாயாமம் செய்வது இவற்றால் வாயு கோளாறடைய அதனால் ஆமதோஷம் மிகத் தூண்டப் பெற்று, அது கபஸ்த்தானத்தை நோக்கி யோடுகிறது. அவ்வாதத்தின் சேர்க்கையால் ஆமதோஷம் மிகவும் தக்த்த பாகத்தைப் பெற்று தமனிகளிற் போய் சேருகின்றது. ஆமமாகப்போன அந்த அன்ன ரஸமானது[1] வாத-பித்த-கபங்களால் மீண்டும் தூஷிக்கப்பட்டு ஸ்ரோதோமார்க்கங்களை அதிக கசிவுப் பொருட்களுடன் கூடியதாகச் செய்கிறது. அந்த ஆமாரஸம் அப்பால் பலவித நிறங்களைப் பெற்று, அதிக பிசுபிசுப்பையு மடைந்து, எளிதில் இருதயத்துக்கு அதிக குருத்தன்மையையும் துர்ப்பலத்தையும் உண்டுபண்ணுகிறது. ஆமமெனப்படுகிற இத்தோஷம் வெகு கடுமையானது; பல வியாதிகளுக்கும் ஆதாரமானது; இதில் முக்கியமாய் வாதமும் கபமும் ஒருமிக்கப் பிரகோபித்து, இடுப்பிலும் இதர ஸந்திகளிலும் பிரவேசித்து, அப்பிரதேசங்களை ஸ்தம்பிக்கச் செய்கின்றன; அல்லது ஸகல அவயவங்களையும் ஸ்தம்பிக்கச் செய்வதுண்டு; அந்த வியாதி 'ஆமவாதம்' எனக் கூறப்படுகிறது. 1—5.

**ஆமவாதத்தின் ஸாமாந்ய லக்ஷணம்:**—உடலெங்கும் வலி, அரோசகம், நாவறட்சி, சோம்பல், குருத்வம், ஜ்வரம், உணவு ஜீர்ணமாகாமை, அவயவங்கள் வீக்கங்கொள்ளல் இவை ஆமவாதத்தின் பொதுக் குறிகளாம். அவ்வாமதோஷம் எப்பொழுது கைகள், பாதங்கள், சிரஸ், குதிகால், இடுப்பு, முழங்கால், தொடை, இதரகணுக்கள் இவற்றில் பிரகோபித்துப் பரவுகிறதோ அப்பொழுது அது மற்ற எல்லா ரோகங்களினும் வெகு கஷ்டஸாத்யமாய் விடுகிறது. இதில் ஆமதோஷம் எவ்விடத்திற் பற்றுகிறதோ அவ்விடத்தில் வலியும் வீக்கமும் உண்டாகும்; அந்த பாகத்தில் தேள்கள் கொட்டியது போல் கடுமையான வேதனையு முண்டாம். 6—8.

**ஆம வாதத்தில் உபத்திரவங்கள்:**—அந்த ஆமதோஷம் ஜாடராக்னியை மந்தப்படுத்தும்; உமிழ்நீரையும், அரோசகத்தையும், குருத்

1. அன்னரஸம் என்பதால் ஆமதோஷமே கிரஹிக்கப்படுகிறது. இரத்தாதி ரூபமாகப் பக்குவமடைய வேண்டிய அன்னரஸம் பக்குவமாகாமற் போனால் அதுவே "ஆமதோஷம்" எனப்படுகிறது. "ஜாடராக்னியின் தௌர்பல்யத்தால் ஆமாசயத்தில் அன்னரஸம் பக்குவமடையாமற் போக, அது ஆமதோஷமாக மாறுகிறது" எனப்படுகிறது. "பக்குவமாகாததும், ஸ்தூலத்திரவமான அம்சங்கள் ஒன்றோடொன்று சேராது துர்நாற்ற முள்ளதும், அதிக பிசுபிசுப்புள்ளதும், ஸகல அவயவங்களின் போஷணையையும் குறைத்துப் போடுவதுமான தோஷம் ஆமம்" என்று வேறு சிலர். "குடலில் ஆஹார ரஸமானது ஜாடராக்னியின் பலக்குறைவால் இறுதியிற் பக்குவமடையாமல், மிகுந்துள்ள ஆஹாரரஸம் ஆமதோஷம் எனப்படுகிறது" என்றும் வேறு சிலர். ஏற்றவாறு பக்குவமாகாத அன்ன ரஸத்தைச் சிலர் ஆமம் என்பார்கள். சிலர் தேஹத்திற் சேர்ந்து போன மலத்தை ஆமம் என்பார்கள்; தோஷங்கள் கோளாறடைகையில் அவற்றின் முதல் நிலைமையே ஆமம் என்றும் சிலர் கூறுவர்.

தன்மையையும் அதிகமா யுண்டுபண்ணும்; உத்ஸாஹத்தைப் போக்கும்; எவ்வஸ்துவினிடமும் வெறுப்பைத் தரும்; உடலில் தாபத்தை விருத்தி செய்யும்; மூத்திரத்தை அதிகப்படுத்தும்; வயிற்றில் கடினத் தன்மையையும், வலியையும் உண்டாக்கும்; நித்திரையைப் போக்கும்; நாவறட்சி, வாந்தி, தலைச் சுற்றல், மூர்ச்சை, இருதயத்திற் பிடிப்பு, மலபந்தம், தேஹத்தில் திமிர்ப்பு, குடலிரைத்தல், வயிற்றுப் பொருமல், மற்றும் பல கடுமையான உபத்திரவங்கள்[1] இவற்றை யுண்டுபண்ணும். 9, 10.

ஆமவாதத்தில் வாதாதிகளாலுண்டாகும் விசேஷங்கள்:—இந்த வியாதியில் (1) பித்தம் அதிகமாக ஸம்பந்தித்திருந்தால் அழற்சியோடு சென்னிறம் காணும். (2) வாதம் மிகுதியாகச் சேர்ந்திருந்தால் வலி அதிக மூண்டாகும். (3) கபம் மிகக் கோளாறடைந்திருந்தால் வீக்கம் முதலியது ஸ்திமிதப்பட்டு, குருவாகவும் தினவுடன் கூடியதாகவும் இருக்கும். 11.

ஆமவாதத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—ஒரு தோஷத்தினால் உண்டான ஆமவாதம் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியது. இரண்டு தோஷங்களின் கோளாறால் ஸம்பவிப்பது யாப்யமாம். ஸந்நிபாதத்தினாலுண்டாவதும், தேஹமெங்கும் வீக்கத்துடன் பரவுவதுமான ஆமவாதம் கஷ்டஸாத்யமாம். 12.

---

## 26. சூல - பரிணாமசூல - அன்னத்திரவசூல நிதானம் *

சூலை எட்டு விதம்:—வாத-பித்த-கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு சூலமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், ஆமதோஷத்தினால் ஒன்றும், த்வந்த்வ தோஷங்களால் மூன்றும் ஆக எட்டுவித சூலநோய்கள் பொதுவாயுண்டு. இவ்வனைத்திலும் பெரும்பாலும் வாததோஷத்திற்கே பிராபல்யம் அதிகம். 1.

வாதசூலை:—அதிக வியாயாமம், அதிக சவாரி, அதிக புணர்ச்சி, நித்திரையின்றி கண்விழித்தல், அதிக குளிர்ந்த ஜலபானம், காராமணி-பயறு-துவரை-வரகு-அதிக ரூக்ஷமான உணவுகள் - அதிக அளவான உணவுகள், துவர்ப்பும் கைப்புமான பதார்த்தங்கள்-அதிகமாக முளைத்த தானியங்களாலான அன்னம் - விருத்தமான வஸ்துக்கள் - உலர்ந்த மாம்ஸம்-உலர்ந்த சாகங்கள் இவற்றை யுட்கொள்வது, மலம், சுக்ரம், மூத்திரம், அபானவாயு இவற்றின் வேகங்களை அடக்குவது, துன்பமுறுவது, பட்டினியிருப்பது, அதிகமாய் சிரிப்பது, மிதமிஞ்சி பேசுவது இக்காரணங்களால் வாயு மிகவும் விருத்தியடைந்து இருதயம், விலாப்பக்கங்கள், ப்ருஷ்டபாகம், இடுப்பு, மூத்

1. அவயவங்கள் சுருங்கிப்போதல், மொண்டியாதல், முடமாதல் முதலிய வேறு கோளாறுகள் அவ்வித உபத்திரவங்களாம்.

* சூலம்—வயிற்றுவலி அல்லது வயிற்றுளைத்தல்.

ராசயம் இவற்றின் பக்கங்களில் வலி யுண்டுபண்ணும். உணவு ஜீர்ண மான பிறகும், மாலை நேரத்திலும், மாரிகாலத்திலும், குளிர்ச்சியான பதார்த்தங்களை யுபயோகிக்கையிலும், குளிர் காலத்திலும் இவ்வலி மிகவும் பலமாகும். அபானவாதம் அடைபடுதல், மலச்சிக்கல், குத்தல், பிளக்கப்படுவது போன்ற வேதனை இவற்றுடன் இந்த நோய் அடிக்கடி விருத்தியாவதும் குறைவதுமா யிருக்கும்; ஸ்வேத சிகித்ஸை, அப்யஞ்ஜநம், மர்தநம் முதலியவற்றாலும், ஸ்நிக்த்தமும், உஷ்ணமுமான உணவுகளாலும் இதற்கு உபசயமுண்டாகும். 2—5.

பித்தசூலை:—க்ஷாரம் என்னும் காரம்,[1] அதிக தீக்ஷ்ணம், அத்யுஷ்ணம்,[2] விதாஹி[3] இக்குணங்களைப் பெற்ற பதார்த்தங்கள், தைலம், சோளம், பிண்ணாக்கு, கொள்ளாலாகிய கஞ்சி, கார்ப்பும் புளிப்புமுள்ள வஸ்துக்கள், ஸௌவீரமென்கிற காடி, மதுஸம்பந்தமான இதர வஸ்துக்கள் இவற்றையுட்கொள்வதாலும், கோபம், அக்னி ஸமீபத்திலிருத்தல், சோர்வடைதல், வெயிலில் இருத்தல், சிற்றின்பத்தில் மிகப் பற்று, விதக்த்தமான உணவுகளை யுண்பது இவற்றால் பித்தம் ஜடிதியாகப் பிரகோபித்து சூலையை யுண்டுபண்ணுகிறது. இதில் நாவறட்சி, மூர்ச்சை, அழற்சி, நாபியில் அதிக வேதனை, அதிக வியர்வை, தலைச்சுற்றல், வேக்காடு இக்குறிகள் காணும்; பகலிலும், நள்ளிரவிலும், உஷ்ணகாலத்திலும, சரத்ருதுவிலும் வியாதி பலப்படும்; குளிர்காலத்திலும், குளிர்ச்சியான வஸ்துக்களாலும், மிகவுமினிப்பான குளிர்ந்த உணவுகளாலும் உபசயமடைகிறது. 6—8.

கபசூலை:—ஆநூபமாம்ஸம், நீரிலுண்டான சாகங்கள் அல்லது நீர்வாழும் பிராணிகளின் மாம்ஸம், மோர், பாலின் திரிபாகிய தயிர் முதலியவை, இதர மாம்ஸங்கள், கரும்பு, மாப்பண்டம், க்ருஸரா,[4] எள், முறுக்கு இவற்றை யுபயோகிப்பதாலும், கபத்தை விருத்தி செய்யும் வேறு காரணங்களாலும் சிலேஷ்மம் பிரகோபித்து சூலையை யுண்டுபண்ணும். இதில் இருதயத் துடிப்பு, இருமல், அக்னி மாந்தயம், அரோசகம், உமிழ் நீர் அதிகமா யூறுதல், இரைப்பை ஸ்திமிதமாதல், குடலும் சிரஸ்ஸும் பாரமாதல் இவை குறிகளாம். போஜனம் செய்ததும், சூரியோதயத்திலும், குளிர்ந்த காலங்களிலும், வஸந்தருதுவிலும் இது பலப்படும். 9, 10.

ஸந்நிபாத சூலை:—மூன்று தோஷங்களாலு முண்டாகும் சூலையில் முன் வாதாதி சூலைகளுக்குக் கூறிய லக்ஷணங்கள் யாவும் சேர்ந்

---

1. க்ஷாரம்—யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம் முதலியது.

2. தீக்ஷ்ணோஷ்ணங்கள்—மிளகு, கடுகு, அரத்தை முதலியவை.

3. விதாஹி—"மூங்கிற் குருத்து முதலியது இக்குணமுள்ளது. குடலில் அல்லது அக்னியாசயத்துக்கு அருகில் பித்தம் ஓடாமல் தங்கி நிற்குமானாலும் விதாஹமென்கிற அழற்சி காணும். அல்லது வேறு காந்தலையுண்டுபண்ணும் வஸ்து அவ்விடங்களில் தங்கினாலும் அவ்வுணவு தக்த்தபாகமாகிறது" என்று ஸுச்ருதர்.

4. க்ருஸரா—எள், அரிசி, உளுந்து இவற்றாலான கஞ்சி.

துண்டாகும். அவ்வித சூலை வெகு கடுமையானது; கொடிய விஷம் இடிவீழ்ச்சி இவற்றிற்கொப்பானது; விஷயமறிந்த வைத்தியர் இவ்வியாதியை அஸாத்யமென்பர். 11.

ஆமசூலை :—வயிறு இரைதல், இருதய வேதனை, வாந்தி, வயிறு முதலியது மிகவும் பாரமாதல், வயிறு ஸ்திமிதமாதல், பொருமல், கோழை அதிகமாக வாயிலிருந்து ஊறுதல், இக் குறிகளும், கபசூலையின் மற்றக்குறிகளும் 'ஆமசூலை'[1] என்பதில் உண்டாகும். 12.

த்வந்த்வ தோஷங்களாலான சூலைகள்:—(1) மூத்ராசயத்திலும், இருதயம் - விலாப்பக்கங்கள் - ப்ருஷ்டபாகம இவற்றிலும் வலியுண்டானால், அது கப - வாதங்களாலுண்டானதென்றும், (2) குக்ஷியிலும் இருதயம் - நாபி இவற்றிற்கு மத்தியிலும் வலியுண்டானால் அது கப-பித்தங்களாலுண்டான தென்றும், (3) விசேஷ தாபத்தையும் ஜ்வரத்தையுமுண்டுபண்ணும் கடுமையான சூலை வாத - பித்தங்களாலுண்டான தென்றும் அறிக. 13.

சூலையில் ஸாத்யாஸாத்யங்கள் :—(1) ஒரு தோஷத்தினால் உண்டாகும் சூலை எளிதில் தீர்க்கக் கூடியது. (2) த்வந்த்வ தோஷங்களாலான சூலைகள் கஷ்டஸாத்யமானவை. (3) ஸந்நிபாத சூலையும், அநேக உபத்திரவங்களோடு கூடியதும் அஸாத்யமாம். 14½.

பரிணாமசூலை :—வாயுவானது தனக்குற்ற காரணங்களால் பிரகோபித்து, அதற்கு அருகிலுள்ள பித்த - கபங்களையும் கவர்ந்து ஆவரணம் செய்து, புஜித்த உணவு ஜீர்ணமாகும்போது பலமானநோவையுண்டுபண்ணும். உணவின் பரிணாமஸமயத்திலுண்டாவதால் இது 'பரிணாமசூலை' எனப்படுகிறது.[2] இதன் இலக்ஷணங்களும் இங்கு

---

1. ஆம சூலை—வயிற்றில் ஆமதோஷம் சேர்ந்துண்டாகும் வலி.

2. பரிணாமசூலை பொதுவாக ஸந்நிபாதத்தினால் உண்டாவதாகவே சாஸ்திரஞர் கூறுவர். ஆகிலும் உணவு பக்குவமாகிற ஸமயத்திலேயே இவ்வலியுண்டாவதால் (அது பித்த காலமாகையால்) இவ்வியாதியில் பித்தத்திற்கு பிராபல்யம் கூறப்படுவதுண்டு. வேறோர் ஆசிரியர் பரிணாமசூலையைப் பின் வருமாறு விவரிக்கிறார்:—"கபம் அதன் ஸ்தானத்திலிருந்து நழுவி பித்தத்துடன் கூடி விருத்தியடைந்து, வாயுவோடும் கலந்துகொண்டு உணவு ஜீர்ணமாகும்பொழுது சூலையை யுண்டுபண்ணுகிறது. குக்ஷி, வயிற்றின் பக்கங்கள், நாபி, வஸ்தி, மார்பின் மத்தியபாகம், ப்ருஷ்ட பாகத்தின் அடிப்புறம் இவற்றுள் எதிலாகிலும் அல்லது எல்லாவிடங்களிலேனும் அவ்வலியுண்டாகும்: போஜனம் செய்தவுடனேயும், அல்லது புஜித்தவுணவு வாந்தியானதும், அல்லது நன்கு ஜீர்ணமாய்விட்டபிறகும் வேதனை தணிந்துவிடும். காரரிசி, சம்பா அரிசி இவற்றாலான அன்னத்தால் வலி அதிகரிக்கும். உணவு ஜீர்ணமாகிற ஸமயத்திற் காணும் கடுமையான இவ்வியாதி இரஸதாதுவோடுகிற ஸ்ரோதஸ்ஸுகளின் கோளாறைக் காரணமாயுடையதென்பார்கள். இதையே சிலர் அன்னத்திரவசூலை யென்றும், சிலர் ஜீர்ணதோஷத்தினால் உண்டாகும் வியாதியென்றும், சிலர் பக்திசூலை யென்றும், சிலர் உட்கொண்ட உணவு குடலிற் காந்துவதால் உண்டாகிறதென்றும் கூறுவர்."

சுருக்கமாகக் கூறப்படுகின்றன:—(1) வாதிக பரிணாமசூலை:—வயிற்றுப்பொருமல், வயிற்றில் இரைத்தல், மல மூத்திரங்கள் கட்டிப்போதல், அமைதியின்மை, நடுக்கம் இக்குறிகளும், ஸ்நிக்த்தமும் உஷ்ணமுமான சிகித்சையினால் வலி நிவ்ருத்தியாவதுபோல் தோற்றுவதும் வாததோஷ பலத்தினாலான பரிணாமசூலை யென்றறிக. (2) பைத்திக பரிணாம சூலை:—நாவறட்சி, தேஹ அழற்சி, அமைதியின்மை, அதிக வியர்வை, கடு-அம்லம்-இவணம் இவற்றால் வலி அதிகரித்தல், குளிர்ச்சியான வஸ்துக்களால் வேதனை பெரும்பாலும் நிவ்ருத்தியாவதாகத் தோற்றுதல் ஆகிய இக்குறிகளைக் கொண்டு பித்தத்தினால் பரிணாம சூலை யுண்டாயிருப்பதா யறிக. (3) ச்லேஷ்மிக பரிணாமசூலை:—வாந்தி, இருதயவேதனை, மூர்ச்சை, நீடித்த சொற்ப வலி, காரம் - கைப்பு இவற்றின் உபயோகத்தால் வலி ஒருவாறு தணிவடைதல் இக்குறிகளைக்கொண்டு கபஸம்பந்தமான பரிணாம சூலையை அறிக. (4) இவற்றுள் இரண்டிரண்டு தோஷங்களுடைய குறிகளின் சேர்க்கைகளிருந்தால் அவற்றை த்வந்த்வ தோஷஜ பரிணாம சூலைகளாகவும், (5) மூன்று தோஷங்களுடைய இலக்ஷணங்களும் சேர்ந்திருந்தால் அதை ஸந்நிபாத பரிணாமசூலை யென்று மறிக.[1] இவற்றில் ஸந்நிபாத பரிணாமசூலையும், தேஹபலம் சதைகள் ஜாடராக்னி இவை க்ஷீணித்தவனுக்குள்ள பரிணாம சூலையும் சிகித்ஸைக்கு வசப்படாதவை.[2] 15–20½.

அன்னத்திரவசூலை:—உணவு ஜீர்ணமான பிறகோ, ஜீர்ணமாகும் ஸமயத்திலோ, அல்லது ஜீர்ணமாகாம லிருக்கையிலேயோ யாதொரு சூலை யுண்டாகிறதோ, பத்தியமான உபசாரத்தினாலும் அபத்தியமான உபசாரத்தினாலும், புஜிப்பதாலும், புஜிக்காம லிருப்பதாலும் யாதொரு சூலை நியதமாகத் தணிவடைவ தில்லையோ அது 'அன்னத்திரவசூலை' எனப்படுகிறது. (அன்னத்திரவம் என்கிற சூலையில் பெரும்பாலும் எப்பொழுதுமே அமைதி யுண்டாவதில்லை; பழைய பித்தம் வாந்தியான வுடனே சூலை தணிந்து விடுவதுண்டு.) 21, 22.

---

# 27. உதாவர்த்தாநாஹ நிதாநம்*

உதாவர்த்தத்தின் காரணம்:—அபாநவாதம், மலம், மூத்திரம், கொட்டாவி, கண்ணீர், தும்மல், தேக்கெரிவு, வாந்தி, சுக்ரதாது, பசி,

---

1. "மூத்திராசயம் பக்கமாயுண்டாகும் வலி வாதசூலை யென்றும், நாபியின் பக்கமாயுண்டாவது பித்தசூலை யென்றும், இருதயம் விலாப்பக்கம் குக்ஷி இவற்றின் பக்கமாயுண்டாவது கப சூலை யென்றும், எல்லாக்குறிகளும் கண்டால் ஸந்நிபாத சூலை யென்றும் அறிக" என்று சரகர்.

2. வயிற்றிரைத்தல், நாவறட்சி, மூர்ச்சை, பொருமல், குருத்வம், அரோசகம், காஸம், ச்வாஸம், விக்கல் இவை சூலையின் உபத்திரவங்கள்.

* சரீரத்திலிருந்து இயற்கையில் வெளியாகவேண்டிய மல - மூத்திராதிகள் வெளிவருதற்கான இயற்கைப் பிரயத்தனமும், நித்திரை

நாவறட்சி, பெருமூச்சு, நித்திரை இவற்றை அடக்குவதால் உதாவர்த்தம் என்னும் நோய் உண்டாகிறது. 1.

அபானவாதஜோதாவர்த்தம் :—அபானவாதத்தை அடக்குவதால் மூத்திரம், மலம், அபான வாயு இவை வெளிவராமல் தடையுறும்; வயிறு விம்மிக்கொள்ளும்; உடல் சோர்வடையும்; வயிற்றில் வலியும், வாதஸம்பந்தமான வேறு பிணிகளும் காணும். 2.

மலஜோதாவர்த்தம்: — மலத்தை அடக்குவதால் வயிற்றில் இரைத்தல், வயிற்றுவலி, குதத்தில் கடுப்பு, குடலில் மலம் மேன் மேலும் சேர்ந்துபோதல், ஊர்த்வச்வாஸம் இத்கோளாறுகள் தோன்றும்; அல்லது வாயால் மலமும் ஒரு ஸமயம் வெளியாவதுண்டு. 3.

மூத்ரஜோதாவர்த்தம் :—மூத்திரத்தை அடக்குவதால் மூத்திரப் பையிலும் லிங்கத்திலும் குத்தலுண்டாகும்; நீர்ச்சுருக்கும், தலைவலியும், மூத்திர நாளம் முதலியதில் பந்தனம் செய்யப்பட்டது போன்ற வேதனையும், தொடையிடுக்குகளில் வீக்கமும் உண்டாகும். 4.

ஜ்ரும்பாஜோதாவர்த்தம்:—ஜ்ரும்பா என்கிற கொட்டாவியை அடக்குவதால் கழுத்தின் பார்ச்வங்களிலுள்ள மந்யா வென்னும் நரம்புகளிலும் தொண்டையிலும் பிடிப்பும், தலைநோயும், இதர வாத ஸம்பந்தமான கோளாறுகளும், நேத்திரங்கள், நாசி, முகம், செவி இவற்றைப்பற்றிய பல கடுமையான வியாதிகளும் உண்டாகும். 5.

அச்ருஜோதாவர்த்தம்[1] :— ஆனந்தத்தினாலாகிலும் துயரத்தாலாகிலும் உண்டாகிற கண்ணீரை அடக்குவதால் சிரஸ்ஸில் பாரமும், நேத்திர ரோகங்களும், பீனஸமும் கடுமையா யுண்டாகும். 6.

க்ஷவது ஜோதாவர்த்தம்:—க்ஷவது வென்கிற தும்மலை அடக்குவதால் மந்யாவென்கிற கழுத்தின் பாரிச நரம்புகளில் பிடிப்பும், தலைவலியும், அர்திதவாதமும், ஒற்றைத்தலை நோயும், இந்திரியங்களுக்கு பலக்குறைவும் உண்டாகும். 7.

உத்காரஜோதாவர்த்தம்: — உத்காரமென்கிற தேக்கெரிவை அடக்குவதால் தொண்டையும் வாயும் தோஷங்களால் நிரம்பியது போன்ற உணர்ச்சியும், வயிற்றில் அதிக குத்தலும், இரைத்தலும், மூச்சுவிடுவதில் கஷ்டமும் நேரிடும்; கடுமையான வேறு வாத விகாரங்களும் தோன்றும். 8.

---

முதலியதும் வேகம் எனப்படும். அவ்வேகத்தை அடக்குவது வேகதாரணம் அல்லது வேகநிக்கிரஹம் எனப்படுகிறது. வேகதாரணத்தினால் வாதம் பிரகோபமடைய, அது குடல் முதலிய அவயவங்களின் கீழ்நோக்கிய இயற்கைச் சலனத்தை மேல் நோக்கி அசைவிக்கும். அவ்விதம் இயற்கைக்கு மாறான கதி விசேஷம் உதாவர்த்தம் எனப்படுகிறது. 'உண்டான வேகத்தைத் தடுத்ததால் ஆவரணமடைந்த வாதத்தின் பிரகோபத்தாலான விகாரம் உதாவர்த்தம்' என்று கூறுவோருமுளர்.

1. அச்ருஜோதாவர்த்தம்: — கண்ணீரை அடக்குவதாலுண்டாகும் உதாவர்த்தம்.

வமநஜோதாவர்த்தம்:—வமநமென்கிற வாந்தியின் வேகத்தை அடக்குவதால் தேஹத்தில் அரிப்பு, கோடமென்கிற சர்மவியாதி, அரோசகம், வியங்கமென்கிற வங்கு, சோகை, பாண்டு, ஜ்வரம், குஷ்டம், விஸர்ப்பம், இருதய வேதனை இவ்வியாதிகள் ஸம்பவிக்கும். 9.

சுக்ரஜோதாவர்த்தம்:—சுக்ரதாதுவின் வேகத்தை அடக்குவதால் மூத்ராசயம், குதம், பீஜங்கள் இவற்றில் வீக்கமும் நோவுமுண்டாகும்; மூத்திரம் தடையுறும்; சுக்ரதாது மணல்களைப்போல மாறி சுக்ராச்மரி யென்கிற வியாதியும், சுக்ரதாதுவின் ஒழுக்கும், அவ்விதமான வேறு பல கோளாறுகளும் உண்டாகும். 10.

க்ஷுத்ஜோதாவர்த்தம்:—க்ஷுத் என்கிற பசியை அடக்குவதால், சோம்பல், உடலெங்கும் வலி, அரோசகம், சோர்வு, கண்பார்வை குறைதல் ஆகிய விகாரங்கள் தோன்றும். 10½.

த்ருஷ்ணஜோதாவர்த்தம்:—த்ருஷ்ணை யென்கிற நாவறட்சியை அடக்குவதால் தொண்டையும் வாயும் வற்றிப்போதல், செவி மந்தப்படுதல், இருதயத்தில் வேதனை ஆகிய கோளாறுகள் உண்டாகும். 11.

உச்சுவாஸஜோதாவர்த்தம்:— மிகவும் சிரமப்பட்டவன் மேலெழுந்து வரும் ச்வாஸத்தை அடக்குவதால் அவனுக்கு இருதய நோய், மூர்ச்சை இவையோ, அல்லது குல்மமோ உண்டாகும். 11½.

நித்ராஜோதாவர்த்தம்:—நித்திரையைத் தடுப்பதால் கொட்டாவி, உடல் வலி, கண்களிலும் சிரஸ்ஸிலும் அமித பாரம் இவையோ, அல்லது சோம்பலோ உண்டாகும். 12.

வாதஜோதாவர்த்தம்[1] :— கோஷ்டமென்கிற குடலை ஊடுருவியுள்ள வாயுவானது ரூக்ஷமும், துவர்ப்பு-கார்ப்பு-கைப்பு ஆகிய சுவைகளுமுள்ள உணவுகளால் பிரகோபமடைந்து, உடனே உதாவர்த்தத்தை யுண்டுபண்ணுகிறது. அப்பால் அவ்வாதம் அபான வாயு-மூத்திரம்-மலம்-இரத்தம்-சிலேஷ்மதாது-மேதஸ் இவற்றிற்கு ஆதாரமான ஸ்ரோதஸ்ஸுகளென்கிற குழல்களை இயற்கைக்கு எதிர்ப்பக்கமாகச் சலிப்பித்து உதாவர்த்தத்தை யுண்டுபண்ணுகிறது; [2] மலத்தையும் மிகுதியாக வெளிப்படுத்தும்; அதனால் இருதயம், வஸ்தி இவற்றில் சூலையுடன் இருதயவேதனையினாலும் துன்பமுண்டாம்

---

1. இதற்குமுன் கூறிய உதாவர்த்தங்கள் அபாநவாதாதி வேகங்களை வலிய அடக்குவதால் ஸம்பவிப்பவை. வாதஜோதாவர்த்தம் ரூக்ஷ - கஷாயாதிகளால் பிரகோபித்த வாததோஷத்தினால் காண்பது. இதுதான் முற்கூறிய 13-வித உதாவர்த்தங்களுக்கும் இவ் வாதஜோதாவர்த்தத்திற்குமுள்ள முக்கிய பேதம்.

2. தேஹத்தில் இரத்தம் முதலியது பரவுவதற்குப யோகமான ஸ்ரோதஸ்ஸுகள் (குழாய்கள்) அநேகமுண்டு; அவை இயற்கையாகவே இரத்தாதிகளைச் செலுத்துவதற்காக சலித்துக்கொண்டிருக்கும். அவற்றிற்கு எந்த முகமாகச் சலனம் இயற்கையோ அதற்கு எதிர்முகமாகச் சலனம் ஏற்படுவது அவற்றின் உதாவர்த்தமாகும்.

அபாந வாதம், மூத்திரம், மலம் இவை வெளியாவதும் கடினமாகும். ச்வாஸம், காஸம், ப்ரதிச்யாய மென்கிற நாஸா ரோகம், உடலழற்சி, மூர்ச்சை, நாவறட்சி, ஜ்வரம், வாந்தி, விக்கல், தலைநோய், மனக்கவலை, காதுகளில் சப்தம் இவையும், வாததோஷக் கோளாருலான வேறு பல விகாரங்களும் உண்டாகும்.[1] 13—16.

ஆநாஹம்[2]:—ஆமதோஷமோ, மலமோ இயற்கைக்கு மாருக மேல் நோக்கிய அபாநவாதத்தினுல் கட்டப்பட்டு, கிரமமாக மேன் மேலும் குடலிற் சேர்ந்துபோய் வெளிவராமற் போவதுண்டு. இக் கோளாறை 'ஆநாஹம்' என்பார்கள். (1) ஆமாசயத்தைப்பற்றி ஆநாஹம் உண்டாகையில் நாவறட்சி, ப்ரதிச்யாயம், சிரஸ்ஸில் அழற்சி, இரைப்பையில் சூலை, கீழ் வயிற்றில் பாரம், இருதயம் ஸ்தம்பித்திருப்பது போன்ற உணர்ச்சி, தேக்கெரிவு தடையுறுதல் ஆகிய விகாரங்கள் தோன்றும். (2) பக்வாசயத்தைப்பற்றி ஆநாஹம் உண்டானுல் இடுப்பிலும் ப்ருஷ்டபாகத்திலும் பிடிப்பு, மலமூத்திர பந்தநம், சூலை, மூர்ச்சை, மலம் கக்குதல், விக்கல் ஆகிய விகாரங்களும், அலஸகத்திற்குக் கூறிய மற்றக் குறிகளும் காணும். 17—19.

---

## 28. குல்ம நிதாநம்

**குல்மத்தின் காரணம்:**—வாதம் முதலிய தோஷங்கள் ஒழுங்கீனமான ஆஹார-விஹாரங்களால் மிகவும் கோளாறடைந்து, கோஷ்டத்திற்குள் கிரந்தி ரூபமான ஐந்துவித குல்மங்களை யுண்டுபண்ணும். அது கோஷ்டத்தினுள் இரண்டு விலாப்பக்கங்கள், இருதயம், நாபி வஸ்தி இவ்வைந்து ஸ்த்தாநங்களை ஆச்ரயித்துண்டாகும். 1, 1½.

**குல்மக்கிரந்தியின் ஸாமாந்ய ரூபம்:**—மார்பு நாபி[3] இவற்றிற்கு இடையில் அசைந்துழலுந் தன்மையதாகவோ, அசைவற்றதாகவோ, திரண்ட உருண்டை வடிவமா யுண்டாகும் ஒருவித கிரந்தி 'குல்மம்' எனப்படுகிறது. அது சில ஸமயம் விருத்தியடைவதாகவும், சில ஸமயங்களிற் குறைவடைவதாகவும்[4] காணப்படும். 2.

**ஐந்துவித குல்மங்கள்:**— குல்மத்தில் ப்ரகோபமடைந்த வாத-

---

1. "நாவறட்சியால் வருந்தல், மிகச் சோர்வுறல், க்ஷீணித்தல், சூலைகளால் வருந்தல், மலம் கக்குதல் ஆகிய குறிகளுள்ளது அஸாத்ய உதாவர்த்தம் ஆகும்" என்கிற விஷயத்தையும் இங்கே சிலர் படிக்கிருர்கள்.

2. உதாவர்த்தத்திலுண்டாவது போலவே 'ஆநாஹம்' என்கிற வியாதியிலும் வாதம் இயற்கைக்கு எதிரிடையான சலனத்தைப் பெற்று, கோளாறுகளை யுண்டுபண்ணுவதால் இதே ப்ரகரணத்தில் ஆநாஹமும் கூறப்பட்டது.

3. இங்கே 'நாபி' யென்பதால் நாபிக்குச் சமீபமான 'வஸ்தி' யென்னும் அவயவம் குறிக்கப்படுவதாய் விஜய ரக்ஷிதன். 'ஹ்ருத் வஸ்த்யோரந்தரா' என்று பாடமுண்டென்றும் சிலர்.

4. 'குல்மம் ஒவ்வொரு ஸமயம் விருத்தியாவதும் மற்றொரு ஸமயம் அளவிற் குறைவதும் பொதுவாகக் கூறப்பட்டதாயினும்

பித்த-கபங்களால் தனித் தனியாக மூன்றும், [1] ஸந்நிபாதத்தினுல் ஒன்றும் ஆக நான்கு வகை குல்மங்கள் புருஷர்களுக்கு உண்டாகும். இரத்த தோஷத்தினுல் குல்மம் மற்ருென்று ஸ்த்ரீகளுக்குண்டாவது வழக்கம். [2] 3.

குல்மத்தின் பூர்வரூபம்:— அதிக தேக்கெரிவு, மலபந்தம், எப்பொழுதும் வயிறு நிரம்பியிருப்பதுபோன்ற உணர்ச்சி, குடலிரைத்தல், வயிற்றுப் பொருமல், ஜீர்ண சக்தி குறைதல் இவை குல்மம் உண்டாகப் போவதற்கான முற்குறிகளாகும். 4.

குல்மத்தின் ஸாமாந்ய லக்ஷணம்:—அரோசகம், மல மூத்திரங்கள் கஷ்டப்பட்டு வெளியாதல், அபானவாயு தடையுறுதல், குடலிரைத்தல், வயிற்றுப் பொருமல், ஊர்த்வச்வாஸம் அல்லது மேல் மூச்சு வாங்குதல் இவை ஸர்வகுல்மங்களுக்கும் பொதுக் குறிகளாம் [3]. 5.

வாதகுல்மம்:—அளவில் விஷமமாகவும் குணத்தில் அதிக ரூக்ஷமாகவுமுள்ள அன்னபானங்கள், விஷமமாக வேலைகளை அல்லது வியாயாமங்களைச் செய்தல், வேகங்களை அடக்குதல், மனத்துயரம், அபிகாதம், அதிகமாக மலம் க்ஷீணித்தல், உணவின்மை ஆக இவை வாதகுல்மத்திற்குக் காரணங்களாம். இந்த குல்மம் உண்டாகிற விடமும், இதன் உருவமும், இதனுலுண்டாகக் கூடிய வலியும் பலவாறு

---

முக்கியமாக இக்குறிகள் வாத குல்மத்திலேயே காண்பது வழக்கம். 'குல்மரோகங்கள் அனைத்துமே பொதுவாக வாததோஷப் பிரதானமானவையாகையால், இது எல்லா குல்மங்களிலுமே பொதுவாகக் காணக்கூடிய குறி' என்று கதாதரன். 'சயாபசயவாந்' என்பதற்குப் பதிலாக 'சயோபசயவாந்' என்று ஒரு பாடமுண்டு. அதில் தோஷங்களின் விருத்தியால் கிரந்தி ரூபமான குல்மமும் கிரமமாக விருத்தியடையும் எனப் பொருள். 'குல்மம்' என்று கொடிமுதலியவை ஒன்ருேடொன்று சிக்கிக்கொண்டுள்ள புதருக்குப் பெயர். அதுபோலவே "தோஷங்களின் பிரகோபத்தால் சிக்குண்ட தாதுக்களின் திரண்ட உருவம் 'குல்மம்' என்று வைத்திய சாஸ்திரத்தில் வழங்கப்படுகிறது'' என்று வாப்ய சந்திரன்.

1. த்வந்த்வ தோஷங்களால் வேறு மூன்று குல்மங்கள் உண்டாவதாகவும் சிலர் கூறுவதுண்டு.

2. 'ஆர்த்தவ மென்கிற இரத்த ஸம்பந்தமான அக்குல்மம் ஸ்திரீகளுக்கே உண்டாகும்' என்று கூறப்படுகிறது. ''ஆர்த்தவ மென்கிற இரத்தத்தைப்பற்றிய குல்மம் ஸ்திரீகளுக்குண்டாகிறது; ஸாதாரண இரத்ததாது ஸம்பந்தமான குல்மம் ஸ்த்ரீகளுக்கும் புருஷர்களுக்கும் பொதுவாகக் காணும்'' என்று க்ஷாரபாணி.

3. ஜ்வரத்தில் வாதாதி இதரதோஷங்களின் ஸம்பந்தத்தினுல் வெவ்வேறு வகைகள் இருந்தபோதிலும், பொதுவாக ஜ்வரங்கள் அனைத்திலும் பித்ததோஷத்திற்கு பிராபல்ய மிருப்பதுபோல, பித்த கபாதிகளாலும் வெவ்வேறு குல்மங்கள் காண்பதுண்டாகிலும், "பிரகோபித்த வாததோஷத்தையே முக்கிய காரணமாயுடையது குல்மம்'' என்று ஸுச்ருதர்.

வித்தியாஸப்படும்; [1] அபாந வாதமும, மலமும் கட்டிக்கொள்ளும்; தொண்டை, வாய் இவை சோஷித்துப்போம்; தேஹநிறம் முதலியது ஒருவாறு கருவலாய் அல்லது செங்கறுப்பாகும்; குளிர் ஜ்வரம் காணும்; இருதயம், வயிறு, விலாப்பக்கங்கள், தோல்கள், சிரஸ் இவற்றில் வலியுண்டாகும். உண்ட உணவு ஜீர்ணமானபிறகு வியாதி அதிகரிக்கும்; போஜனம் செய்து வயிறு நிரம்பியிருக்கையில் வியாதியின் துர்க்குணங்கள் தணிவடையும். இவை வாதகுல்ம லக்ஷணங்களாம். இதில் ரூக்ஷமும், துவர்ப்பு கைப்பு காரம் ஆகிய இச்சுவைகளும் உபசயங்களாகமாட்டா [2]. 6—8.

பித்த குல்மம்:—கடுரஸம், அம்லரஸம், தீக்ஷ்ணகுணம், உஷ்ண வீர்யம்,விதாஹி, ரூக்ஷம் இக் குணங்களையுடைய வஸ்துக்களும், கோபமும், அதிக மதுவை யருந்துவதும், வெயிலிலும் நெருப்புக்கு அருகிலும் இருந்து வருவதும், ஆமதோஷ ஸம்பந்தமான கோளாறுகளும், இரத்தம் கோளாறடைவதும் பித்தகுல்மத்திற்குக் காரணமாம். ஜ்வரம், நாவறட்சி, முகம் உடல் இவை சென்னிறமடைதல், உணவு ஜீர்ணமாகையில் வயிற்றில் கடுமையான வலி, விசேஷமாக வியர்வை யுண்டாதல், வயிற்றில் அழற்சி, விரணத்தைப்போல் குல்மத்தில் பரிசிக்க முடியாத வலி இவை பித்த குல்ம லக்ஷணங்களாம். 9, 10.

கப குல்மம்:—சீதளமாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவுமுள்ள பதார்த்தங்களை யுபயோகித்தல், வேலையின்றிருத்தல், வயிறு நிரம்ப புஜித்தல், பகலில் நித்திரை யுறுதல் இவை கப குல்மத்திற்குக் காரணங்களாம். உடல் திமிர்த்தல், குளிர் ஜ்வரம் உண்டாதல், சரீரம் புஷ்டியடையாமை, இருதயம் மந்தமாதல், இருமல், அரோசகம், சரீரம் குருவாகப் போதல், உடல் குளிர்ந்துபோதல், உடம்பில் சொற்ப வலி, குல்மம் கடினமாகவும் மிகப் பருத்தும் காணுதல் ஆகியவை கப குல்ம லக்ஷணங்களாகும். 11, 12.

த்வந்த்வதோஷஜ குல்மங்கள் :— இரண்டிரண்டு தோஷங்களுக்குரிய காரணங்களையும், லக்ஷணங்களையும், அந்தந்த தோஷத்திற்குள்ள பலாபலன்களையும் கண்டறிந்து த்வந்த்வதோஷங்களாலான குல்மங்களைப் பகுத்தறியவும். தோஷங்களின் ஸம்பந்தத்திற்கேற்றவாறு சிகித்ஸைகளை நிர்ணயிக்கவேண்டி யிருப்பதால், இரண்டிரண்டு

1. குல்மத்திற்கு ஸ்த்தாநபேதம்:—ஒரு ஸமயம் நாபிக்கு ஸமீபம், ஒரு ஸமயம் விலாப்பக்கங்கள், ஒரு ஸமயம் வஸ்தி இவைகளில் காணும் ரூபபேதம்:—ஒரு ஸமயம் குல்மம் பெரிதாகவும், ஒரு ஸமயம் சிறியதாகவும், ஒரு ஸமயம் நீளமாகவும், ஒரு ஸமயம் குறுகியும் காணப்படுதல் வலியில் பேதம்:—ஒரு ஸமயம் கடுமையாயிருத்தல், ஒரு ஸமயம் மிருதுவாயிருத்தல், ஒரு ஸமயம் குத்தல் குடைத்தல் தோன்றுதல் முதலியன.

2. உபசயங்களாகமாட்டா—என்றால் அவற்றால் வியாதி நிவாரணமாகாது எனக் கருத்து.

தோஷங்களின் சேர்க்கைகளாலாகிய வேறு மூன்று த்வந்த்வ தோஷஜ குல்ம லக்ஷணங்களும் பகுத்தறியப்பட வேண்டும். 13.

**ஸந்நிபாத குல்மம்:**—ஸந்நிபாத ஸம்பந்தமான குல்மத்தில் மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோளாறடைகின்றன. இந்த குல்மம் கடுமையான வலியுண்டு பண்ணுவதாகவும், கல்லைப்போல் கெட்டியாகவும், பருத்துத் திரண்டதாகவும், விதாஹியென்கிற காந்தலைக் குடலில் எளிதிலுண்டு பண்ணுவதாகவும், மனோவலிமை தேஹ வலிமை ஜாடராக்னி ஆகியவற்றைப் பறிக்கக் கூடியதாகவும் இருக்கும். இக்குல்மம் அஸாத்ய வியாதியாம். 14.

**இரக்த குல்மம் :**— பிரஸவித்தவுடனேயும் ருது காலத்திலும் [1] தகாத போஜனங்களை யுண்ணுபவள், [2] அகாலத்தில் பிரஸவிப்பவள் இவர்களுடைய கருப்பையிலுள்ள இரத்தத்தை வாயுவானது ஆக்கிரமித்து வலியுடனும் அழற்சியுடனும் கூடிய குல்மத்தை யுண்டுபண்ணும். இதில் பித்த குல்மத்தின் இலக்ஷணங்கள் காணும். கர்ப்பாசயத்திலுண்டான இந்த குல்மம் கைகால் முதலிய அவயவங்களின் தோற்றத்தைப் பெறாது பிண்ட ரூபமாயிருந்துகொண்டு, வயிற்றில் வலியுண்டுபண்ணியவாறு, கர்ப்பத்தைப் போலவே துடிப்பது இதிலுள்ள விசேஷம்; அப்பொழுது கர்ப்பத்திற்கான இதர குறிகளும் தோன்றும் [3]. இரக்தகுல்மம் எனப்படுகிற இவ்வியாதி ஸ்த்ரீகளுக்கேயுண்டாகும். பத்து மாஸங்கள் சென்ற பின்பு இவ்வியாதிக்குச் சிகித்ஸை செய்வது முறை. [4] 15, 16.

---

1. ருது காலம்:—மாதவிடா யுண்டாகும் பருவம்.

2. அபத்தியமான உணவு என்பது உபலக்ஷணம். "ருதுகாலத்தில் ஆஹாரமின்மையினாலும், பயத்தினாலும், ரூக்ஷமான பதார்த்தங்களை உபயோகிப்பதாலும், மல மூத்திராதி வேகங்களை அடக்குவதாலும், ஸ்தம்பந லேகந குணங்களுள்ள திரவ்யங்களை யுபயோகிப்பதாலும், யோனி தோஷத்தாலும் ஸ்த்ரீக்கு இரத்த குல்மமுண்டாகிறது" என்கிற சரகர் வசனப்படி, அபத்தியமான உணவுமாத்திரமேயல்லாமல், அஹிதமான ஆஹார விஹாராதிகளும் இரக்த குல்மத்திற்குக் காரணமாம்.

3. ஆர்த்தவமென்கிற தீட்டு வெளிப்படாமை, வாயில் உமிழ்நீர் அதிகரித்தல், முலைக்காம்பு கருநிறமாதல், மசக்கை யென்கிற தோஹதம் தோன்றல் முதலியவை கர்ப்பத்திற்குச் சமானமான இரத்த குல்ம லக்ஷணங்களாம்.

4. பத்து மாஸங்கள் சென்றால் கர்ப்பமா, குல்மமா வென்பது வெளிப்படையாகத் தெரிந்துவிடும். ஆகையால் அப்பொழுது சிகித்ஸை செய்யலாமெனப்படுகின்றது. ஆனால் இரத்த குல்மம் பக்குவமடைவதற்கே பத்து மாஸங்கள் அவசியமென்றும், அதன் பிறகு சிகித்ஸை செய்வதால் அவ்வியாதி எளிதில் நிவர்த்திக்கப்படுமென்றும் க்ருதவேண்டும் எனப்படுகிறது. ஆகையினாலே "ரக்தகுல்மே புராணத்வம் ஸுகஸாத்யஸ்ய லக்ஷணம்." (இரக்தகுல்மம் நாட்பட்டதானால் எளிதில் நிவாரணம் செய்யப்படும் என்று சாஸ்திரஞ்ஞர் கூறுவர்.) "பத்து மாஸங்களுக்கு முன்பு இரக்தகுல்மத்தை உடைக்க

குல்மத்தில் அஸாத்ய லக்ஷணங்கள்:—குல்மம் கிரமமாக விருத்தியடைந்து, குடலில் விஸ்தாரமான இடத்திற் பரவி வேரூன்றியதாய், ஸிரைகளால் நாற்புறமும் சூழப்பட்டு நன்கு கட்டுண்டு, ஆமையுருவாகக் கிளம்பும்போது விசேஷ பலக்குறைவு, அரோசகம், இருதயத்தின் வேலை மிக மந்தப்படுதல், இருமல், வாந்தி, அமைதி யின்மை, ஜ்வரம், நாவறட்சி, சோம்பல், பிரதிச்யாயம் இவற்ருலும் தொடரப்படும்; அப்பொழுது அது அஸாத்ய குல்மமாம்.[1] 17, 18.

குல்மத்தில் உபத்திரவங்கள்:—ஜ்வரம், ச்வாஸம், வாந்தி, அதிஸாரம் இவற்ருல் பிடிக்கப்படும் குல்மரோகிக்கு மார்பிலும், நாபியிலும், கைகால்களிலும் வீக்கமுண்டாய் பிணியாளி மிகவும் சுஷ்கித்துப் போவான். மேலும் ச்வாஸம், வயிற்றுவலி, நாவறட்சி, அன்னத்வேஷம், குல்மம் திடீரென்று கறைந்து விடுதல், அதிக பலக்குறைவு இவை குல்ம ரோகிக்கு மரணேபத்திரவங்களாம். 19, 20.

---

## 29. ஹ்ருத் ரோக நிதாநம்*

ஹ்ருத்ரோகத்தின் காரணம் :—அதிக உஷ்ணமும், அதிக குருகுணமும், துவர்ப்பும், கைப்புமான பதார்த்தங்களை யுபயோகித்தல், அதிக சிரமமுண்டாகு மாறு வேலை செய்தல், அபிகாதம், உரத்துப் படித்தல், பலமாகப் பிரஸங்கம் செய்தல், விசேஷ மனக்கவலை, வேகங்களை யடக்குதல் ஆகிய இக்காரணங்களால் இருதய ரோகம் உண்டாகிறது. அது ஐந்து விதம். 1.

ஹ்ருத்ரோகத்தின் ஸம்ப்ராப்தி :—வாதாதி தோஷங்கள் கோளாறடைந்து, இரஸ தாதுவைத் தூஷிப்பித்து, இருதயத்தை யடைந்து அதில் வேதனை யுண்டுபண்ணுகின்றன. இருதயத்தைப்பற்றிய இவ்வியாதியை "ஹ்ருத்ரோகம்" என்பர். 2.

வாத ஹ்ருத் ரோகம் :—வாத தோஷத்தினு லுண்டாகும் ஹ்ருத்ரோகத்தில் இருதயம் இசிவுண்டது போலவும், குத்தப்படுவது போலவும், கடையப்படுவது போலவும், பிளக்கப்படுவது போவும், கிழிக்கப்படுவது போலவும் பலவித துன்பங்களைப் பெறும். 3.

பித்த ஹ்ருத் ரோகம் :— பித்த ஹ்ருத்ரோகத்தில் நாவறட்சி, அதிக தேஹச்சூடு, இருதயத்தில் அழற்சி, வாயில் சிமசிமா

---

முயன்ருல், கருப்பை சிதைந்து விடுமாகையால், பதினோராவது மாஸத்தில் அது பக்குவமா யிருக்கையில் சிகித்ஸை செய்வது உசிதம்" என்று ஜெஜ்ஜடரும் கூறுகிருர்.

1. குல்மத்திற்கும் அந்தர்வித்ரதிக்குமுள்ள பேதம் :— "குல்மம் முதலில் எந்த பாகத்தையும் ஸ்திரமாகப் பற்றி யுண்டாவதில்லை; வித்ரதியோ ஒரு பாகத்தை ஸ்திரமாக ஆச்ரயித் துண்டாம். மேலும் குல்மம் தோஷங்களை ஆச்ரயித்தும், வித்ரதி இரத்த மாம்ஸங்களை ஆச்ரயித்தும் நிற்கின்றன; ஆகவே வித்ரதி பக்குவமடையும்; குல்மமோ பக்குவமாவதில்லை." ஸுச்ருதர்.

* ஹ்ருத்ரோகம் — இருதயத்தைப் பற்றிய வியாதி.

வென்கிற உணர்ச்சி, இருதயம் சோர்வுறுதல், தொண்டை புகைதல், மூர்ச்சை, வியர்வை யதிகரித்தல் முதலிய குறிகள் காணும். 4.

கபஹ்ருத்ரோகம் :—கப தோஷத்தினால் நேரிடும் ஹ்ருத்ரோகத்தில் தேஹம் குருத்வ மடைதல், வாயில் கபம் ஸ்ரவித்தல், அரோசகம், இருதயத்தில் விறைப்பு தோன்றுதல், ஜாடராக்னி மந்தப்படுதல், வாய் இனிப்பாக ஆதல் ஆகிய குறிகள் காணும். 5.

ஸந்நிபாத ஹ்ருத்ரோகம் :—மூன்று தோஷங்களின் பிரகோபத்தாலான ஹ்ருத்ரோகத்தில் தனித்தனி தோஷத்தினலான ஒவ்வொரு ஹ்ருத்ரோகத்தினுடைய இலக்ஷணங்களும் ஒருமிக்கச் சேர்ந்துண்டாகும்; குத்தலும் வலியும் மிகக் கடுமையாயிருக்கும்.[1] 5½.

கிருமி ஹ்ருத்ரோகம் :—கிருமிகளால் ஹ்ருத் ரோகம் உண்டாகையில் உடலெங்கும் அரிப்பு, வாயில் அதிக உமிழ்நீர் ஊறுதல், கபத்தைத் துப்புவது, இருதயத்தில் குத்தல் வலி, இருதய சலனம் மந்தப்படுதல், கண் இருளடைதல், அரோசகம், கண்கள் கறுப்பாதல், வீக்கம் இவை குறிகளாம். 6.

ஹ்ருத்ரோகத்தின் உபத்திரவங்கள் :— சரீரம் சோர்வுறுதல், இளைத்தல், தலைச்சுற்றல், தாதுக்கள் க்ஷீணித்தல் இவை கிருமி ஹ்ருத்ரோகத்தின் உபத்திரவங்களாம். மேலும் கப ஸம்பந்தமான கிருமிரோகத்தில் உபத்திரவங்களாகக் கூறப்படுபவையும் இதில் உபத்திரவங்களா யுண்டாகும். 7.

---

## 30. மூத்ர க்ருச்சிர நிதாநம்*

மூத்ர க்ருச்சிரத்தின் காரணம் :—வியாயாமம், தீக்ஷ்ணமான ஔஷதங்களை யுண்ணல், ரூக்ஷ பதார்த்தங்களை யுபயோகித்தல், மதுவை அதிகமாய் அருந்துதல், தினந்தோறும் விரைவாக நடப்பது, குதிரை முதலியதின்மீது சவாரி செய்தல், ஆநூப மாம்ஸத்தை யுண்ணுதல், அமித போஜனம் செய்தல், அஜீர்ணம் இவற்றால் மனிதருக்கு எண்வகையான மூத்ரக்ருச்சிரங்கள் உண்டாகின்றன.[2] 1.

---

1. ஸந்நிபாத தோஷத்தினலுண்டாகும் ஹ்ருதய ரோகத்திற்குத் தகுந்தவாறு சிகித்ஸை செய்யாவிடில், அதில் கிரந்தியுண்டாய், அதன்பிறகு கிருமிகளும் உற்பத்தியாகும் என்பபடுகிறது. "மூன்று தோஷங்களாலான ஹ்ருத்ரோகத்தில் அவிவேகத்தினால் எள், பால், வெல்லம் முதலியவற்றை யுட்கொண்டால் அவனுக்கு இருதய மர்மத்தின் ஒரு பாரிசத்தில் கிரந்தி யுண்டாகிறது; அதன் பிறகு கிருமிகளும் உண்டாகின்றன" என்று சரகர்.

* மூத்ரக்ருச்சிரம்—மூத்திரம் வலியோடும் சிறுகச் சிறுகவும் கஷ்டத்துடன் வெளியாகும் வியாதி. இதை "நீர்ச்சுருக்கு" என்பர்.

2. தனித்தனி தோஷத்தினல் மூன்று, ஸந்நிபாதத்தினல் ஒன்று, சல்யத்தினல் ஒன்று, மலத்தினல் ஒன்று, சுக்ரத்தினல் ஒன்று, அச்மரியினல் ஒன்று ஆக மூத்ரக்ருச்சிரம் எட்டுவிதம். ஆனல் சர்க்கரையினல் ஒரு மூத்ரக்ருச்சிரம் உண்டாவதாக ஸுச்ருதர் கூறுகிறார். அப்

மூத்ரக்ருச்சிர ஸமப்ராப்தி :—ஒவ்வொரு தோஷமும் தனித்தனியாவது, அனைத்தும் ஒருமிக்கவாவது வஸ்தியென்னும் மூத்திரப் பையில் அததற்குற்ற காரணங்களால் பிரகோபமடைந்து, மூத்திர மார்க்கத்தைப் பிடிக்கும்பொழுது, வெகு ஸங்கடத்துடன் பிணியாளி மூத்திரத்தை வெளியிடுகிறான். 2.

வாதமூத்ரக்ருச்சிரம் :—வாததோஷக் கோளாறால் உண்டாகும் மூத்ரக்ருச்சிரத்தில், மூத்திரம் வெளியாகையில் துடையிடுக்குகள், மூத்திரப்பை, லிங்கம் இவற்றில் கடுமையான வலியுண்டாகும்; மூத்திரம் அடிக்கடி சொற்பம் சொற்பமாக வெளியாகும். 2½.

பித்த மூத்ரக்ருச்சிரம் :— பித்தத்தினாலான மூத்ரக்ருச்சிரத்தில் மூத்திரம் சிவப்பாகவும், வலியும் அழற்சியும் தருவதாகவும், வெகு கஷ்டத்துடன் அடிக்கடியும் வெளியாகும். 3.

கப மூத்ரக்ருச்சிரம் :—கப தோஷத்தினாலான மூத்ரக்ருச்சிரத்தில் வஸ்தியும் ஆண்குறியும் வீங்கி கனத்துப் போகும்; மூத்திரம் மிகப் பிசுபிசுப்பாயிருக்கும். 3½.

ஸந்நிபாத மூத்ரக்ருச்சிரம் :— மூன்று தோஷங்களும் கோளாறடைந்துண்டாகும் மூத்ரக்ருச்சிரத்தில் முன் தனித்தனி தோஷத்திற்கும் கூறிய ஸகல லக்ஷணங்களும் சேர்ந்துண்டாகும். இது கஷ்டஸாத்ய வியாதி. 4.

க்ஷதஜ மூத்ரக்ருச்சிரம் :— [1] மூத்திரம் இறங்குகிற நாளங்கள் முள் முதலியவற்றால் குத்தப்பட்டாலும் ஆயுதாதிகளால் தாக்கப்பட்டாலும் கடுமையான மூத்ரக்ருச்சிரம் உண்டாம்; இதில் வாதமூத்ரக்ருச்சிரத்தின் குறிகளும் தோன்றும். 5, 5½.

புரீஷஜ மூத்ரக்ருச்சிரம் :—இதில் மலம் உற்றவாறு வெளிவராது மிகவும் அடைபட்டுப்போம்; அதனால் வாதம் கோளாறடைந்து, வஸ்தியில் உப்புஸமும் வாதஸம்பந்தமான வலியும் உண்டாகும்; மூத்திரமும் தடையுண்டு வஸ்தியில் மேன்மேலும் சேர்ந்துவிடும். 6½.

அச்மரீஜமூத்ரக்ருச்சிரம் :—அச்மரி யென்னும் பருக்கைக் கற்கள் போன்ற வஸ்துக்கள் மூத்திர மார்க்கத்திற் சேருவதால் "அச்மரீ மூத்ரக்ருச்சிரம்" உண்டாகிறது. 7.

சுக்ரஜ் மூத்ரக்ருச்சிரம் :—தோஷங்களால் விகாரமடைந்த சுக்ர தாது மூத்திர மார்க்கத்திற் சென்று மூத்திரத்துடன் கலந்து வெளி

---

பொழுது அது ஒன்பதுவிதமாகிறது. ஆகிலும் "அச்மரியும், சர்க்கரையும் ஒரே காரணத்தாலுண்டாகும் ஒருமாதிரியான வியாதி." "அச்மரீ என்னும் மூத்திரக் கற்களே வாயுவினால் உடைக்கப்பட்டு மணலுருவங் கொண்டவைகளாய், சர்க்கரை யென்னும் பெயருடன் மூத்திரமார்க்கத்திலிருந்து வெளிவருகின்றன" என்று த்ருடபலன், ஆகையால் மூத்ரக்ருச்சிரம் எண்வகை என்று அறிக.

1. க்ஷதம்—காயம் அல்லது தாக்குதல். மூத்திர மார்க்கத்தில் அடி முதலியது படுவதாலுண்டாகும் நீர்க்கடுப்பு வியாதி க்ஷதஜ மூத்ரக்ருச்சிரம் எனப்படுகிறது.

யாகும்; அப்பொழுது முக்கியமாய் மூத்திரப்பையிலும், ஆண்குறியிலும் வலியுண்டாகும். 8.

அச்மரீ-சர்க்கரைகளுக்குள்ள ஸம்பந்தமும் பேதமும்[1] :—அச்மரி, சர்க்கரா என்கிற இரண்டுக்கும் காரணமும் இலக்ஷணமும் ஸமானமாயினும், அவற்றிற்குள் பேதமுண்டு. அச்மரியானது பித்தத்தினால் சமைக்கப்பட்டும் வாயுவினால் சோஷிப்பிக்கப்பட்டும் போகவே, கபத்தினால் அச்மரியின் பரமாணுக்களுக்கு இருந்த சேர்க்கை விடுபட்டுப்போக, பிறகு அச்மரியே பலவாறு சிறிய பொடிகளாகச் சிதறுண்டு வெளியாகின்றது. அப்பொடிகள் "சர்க்கரை" யெனப்படுகின்றன.[2] இந்த வியாதியில் இருதயவேதனை, உடல் நடுக்கம், வயிற்றுவலி, அக்னிமாந்தியம், மூர்ச்சை இவற்றோடு கடுமையான மூத்ரக்ருச்சிரமும் உண்டாகும். அப்பொடிகள் மூத்திரவேகத்தினால் வெளிப்பட்ட பிறகு, மீண்டும் அச்சர்க்கரைகள் மூத்திரநாளத்தின் முகத்தில் வந்து சேரும் வரையில் வேதனையின்றி அமைதி யுண்டாயிருக்கும். 9—12,

---

## 31. மூத்ராகாத நிதானம்.*

மூத்ராகாதத்தின் ஸங்க்யாஸம்ப்ராப்தி முதலியது :—மூத்திரத்தின் வேகத்தை அடக்குவது முதலியவற்றால் பிரகோபமடைந்த தோஷங்களால் 'வாதகுண்டலிகா' முதலாகிய பதின்மூன்று விதமான மூத்ராகாதரோகங்கள்[3] உண்டாகின்றன. 1.

---

1. மூத்ரக்ருச்சிரத்திற்கு அச்மரீ - சர்க்கரைகளும் காரணமென்றபடியால், இங்கு அவ்விரண்டின் விஷயமும் குறிக்கவேண்டிய தாயிற்று. ஆகிலும் இவை பிரத்தியேகமாக அடுத்த அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன.

2. மூத்திரம் உற்பத்தியாய் வஸ்திக்கு வருகையில், அச்மரி யென்று ஒருவித பருக்காங்கல் போன்ற வஸ்து உண்டாய் மூத்திர மார்க்கத்தில் தடையையும், அமித வேதனையையும் உண்டுபண்ணுவதுண்டு. 'அச்ம' என்றால் கல்; கல்லைப்போன்றிருப்பதால் அவ்வஸ்து "அச்மரி" யெனப்படுகிறது. சில ஸூக்ஷ்மமான வஸ்துக்கள் ஒன்றாகத் திரளும்போது, அவற்றை சேர்ப்பதற்கு கபதோஷம் ஒருவித சாந்துபோல் இடையில் உதவுகிறது. அந்த கபதோஷம் வாதபித்தங்களின் பிராபல்யத்தினால் சோஷிப்பிக்கப்பட்டுப் போனால், அச்மரியின் கனவஸ்துக்கள் பிளவுபட்டு, சிறிய மணல்களைப்போலச் சிதறிவிடுகின்றன. ஆகவே பெரியதா யிருந்தால் அச்மரி; அவையே சிதறிச் சிறியவையானால் சர்க்கரை யெனப்படுகின்றன.

* மூத்ராகாதம்—மூத்திரம் அடைபடும் வியாதி. மூத்ரக்ருச்சிரத்தில் நீர்க்கடுப்பும் வலியும் அதிகம், மூத்திரம் தடைபடுவது குறைவு; மூத்ராகாதத்தில் மூத்திரம் தடையுறுவது மிகவதிகம் என்பதே இவ்விரண்டுக்குமுள்ள பேதம்.

3. முதலியவற்றால் என்பதால் மலவேக - சுக்ரவேகங்களைத் தடுத்தல், ரூக்ஷபோஜனம் முதலியவை குறிக்கப்படுகின்றன.

வாதகுண்டலிகா :—மூத்திர வேகத்தைத் தடைசெய்வதாலோ ருக்ஷத்தன்மையினுலோ வஸ்தியில் பிரகோபித்த வாயுவானது, அதில் வேதனை யுண்டுபண்ணிக்கொண்டு, மூத்திரத்திலும் ஊடுருவிப் பாய்ந்து சுழன்று ஓட, மூத்திரம் சிறுகச் சிறுகவாவது, வலியுண்டு பண்ணிக்கொண்டாவது வெளியாகும். இது "வாதகுண்டலிகா" என்ற கடுமையான வியாதியாம். 2, 3.

அஷ்டீலா [1] :—வாததோஷம் வஸ்தியையும், குதத்தையும் அடைத்துப் பெர்ருமச்செய்து, "அஷ்டீலா" என்னும் கிரந்திபோன்ற வியாதியை உண்டுபண்ணும்; அவ்வஷ்டீலை அசைந்து கொண்டும், மேலுக்குப் புடைத்துக்கொண்டும், கடும் வலி யுண்டுபண்ணிக் கொண்டுமிருக்கும்; மூத்திர மலமார்க்கங்கள் இதனுல் அடைபடும். 4.

வாதவஸ்தி :—அவிவேகத்தினுல் மூத்திர வேகத்தை அடக்கி வருபவனுடைய மூத்திரவஸ்தியிலுள்ள வாயு வஸ்தி முகத்தை அடைத்துப் போட, அதனுல் மூத்திரம் தடையுண்டு வஸ்தியில் மேன்மேலும் சேர்ந்து போவதால் வஸ்தியிலும் குக்ஷியிலும் வலியுண்டாகும். அதை "வாத வஸ்தி" யென்றறிக; இது மிகவும் கஷ்டஸாத்யமானது. 5, 6.

மூத்ராதீதம் :—மூத்திரத்தை நெடுநேரம் அடக்கிக்கொண்டிருப்பவனுக்கு மூத்திரம் தாராளமாய் பிறகு வெளிவருவதில்லை; அல்லது அதை வெளியிட முயற்சிக்கையில் மூத்திரம் மிக்க மெதுவாக வெளியாகும். அந்த வியாதி "மூத்ராதீதம்" எனப்படுகிறது. 7.

மூத்ரஜடரம்:—மூத்திரவேகம் அடக்கப்பட்டால், அது உதாவர்த்தத்திற்குக் காரணமாய், அபாநவாதம் அதனுல் பிரகோபித்து உதரத்தை நிரப்பி, நாபிக்குக் கீழே விசேஷ பொருமலையும் கடும் வலியையும் உண்டுபண்ணி, வஸ்தியின் அடித்வாரம் அடைக்கப்படும். இவ் வியாதியை "மூத்ர ஜடரம்" என்றறிக. 8, 9.

மூத்ரோத்ஸங்கம் :—மூத்திரம் வெளிவருகையில், வஸ்தியிலாவது, கீழே லிங்கத்வாரத்திலாவது, லிங்க முனையிலாவது அது தடைபட்டால் அல்லது இரத்தம் கலந்து சிறுகச் சிறுக வலியுடனே வலியில்லாமலோ வெளியானுல் அது கோளாறடைந்த வாயுவினுலான "மூத்ரோத்ஸங்கம்" என்கிற வியாதியெனப்படுகிறது. 10, 11.

மூத்ரக்ஷயம் :—தேஹம் ருக்ஷமாகவும், சோர்வுற்று வாடியதாகவும் இருந்தால் வஸ்தியிலுள்ள பித்தமும் வாயுவும் மூத்திரத்தை க்ஷீணிக்கச் செய்யும்; இதில் வலியும் அழற்சியும் உண்டாகும். இதற்கு "மூத்ர க்ஷயம்" என்று பெயர். 12.

மூத்ரக்கிரந்தி [2] :—மூத்திர வஸ்தியின் வாய்ப்புறத்தில் அச்ம

---

1. அஷ்டீலை யென்னும் சிலைபோன்ற இது மூத்ராஷ்டீலா எனப்படும். வாதரோகப் பிரகரணத்தில் கூறப்பட்ட அஷ்டீலா வேறு.

2. வாத - கபங்களால் இரத்தம் விகாரமடைந்து, வஸ்தி முகத்தில் கடுமையான கிரந்தியை யுண்டுபண்ணி வஸ்திமுகம் மூடப்படவே மூத்திரம் வெளியாவது சிரமமாகும். அச்மரிக்குச் சமமான வலியும் தோன்றும். இதை ரக்தக்கிரந்தி என்பார்கள்.

ரிக்குச் சமமான ரோகவை யுண்டுபண்ணிக்கொண்டு, சிறிதும் கடின மும் உருண்டை வடிவமுமா யுண்டாகும் கிரந்தி "மூத்ரக்கிரந்தி" யெனப்படுகிறது. 13.

மூத்ரசுக்ரம் :—மூத்திர வேகத்தை அடக்கிக்கொண்டு ஸ்திரீ யுடன் புணர்பவனுக்கு சுக்ரதாது தன் ஸ்த்தாநத்திலிருந்து ஊறி நழுவிய பிறகு, மூத்திர விஸர்க்கம் செய்கையில், அதற்கு முன்பா வது பின்பாவது வெளியாகும் சுக்ரம் சாம்பல் கலந்த தண்ணீர் போலிருக்கும். இது "மூத்ர சுக்ரம்" எனப்படுகிறது. 14, 14½.

உஷ்ணவாதம் :—அதிக வியாயாமம், வழிநடத்தல், வெயில் இவற்ருல் பித்தம் வாயுவுடன் கூடி வஸ்தியை யடைந்து, அப்பால் வஸ்தி, ஆண்குறி, குதம் இவற்றில் அழற்சியை யுண்டுபண்ண, மூத் திரம் மஞ்சள் நிறமாகவோ, இரத்தம் கலந்ததாகவோ சொற்பம் சொற்பமாய் கஷ்டத்துடன் அடிக்கடியும் வேளியாகும்; அதை "உஷ்ணவாதம்" என்பர். 15—16½.

மூத்ர ஸாதம்:—வஸ்தியில் பித்தமாவது, கபமாவது, இரண்டுமா வது வாயுவினுல் திரட்டப்பட்டால் மூத்திரம் வெகு கஷ்டமாக வெளிவருவதோடு, பசுமையாகவும், வெண்மையாகவும், சிவப்பாக வும், அழற்சியோடும், கோரோசனை-சங்குப்பொடி இவற்றிற்குச் சமான நிறமுள்ளதாகவும் இருக்கும்; அல்லது சிறிதும் பசையற்று ஸகல நிறங்களும் கலந்ததாகவும் இருப்பதுண்டு. அதை "மூத்ர ஸாதம்" எனக் கூறுவர். 17—18½.

விட்விகாதம்:—ரூக்ஷமாகவும் துர்ப்பலமாகவுமுள்ளவருக்கு வாதத் தினுல் மலம் மேல் நோக்கித் தள்ளப்பட்டு, மூத்திரநாடியை நோக்கிப் பிரவேசித்தால் வெகு கஷ்டத்துடன் மூத்திரம் வெளியாகும்; மூத்திரமும் மலத்தின் நாற்ற முடையதா யிருக்கும். 19, 20.

வஸ்தி குண்டலம்:—வேகமாய் வழி நடத்தல், வெகு வேகமாய் தாண்டுதல், ஆயாஸமடைதல், அபிகாதம், பலமாக அழுத்துதல் இக் காரணங்களால் வஸ்தியானது தன் ஸ்த்தாநத்திலிருந்து விலகி மேல் முகமாகத் திரும்பி, பருத்துப்போய் கர்ப்பம்போல் நிற்கும். வலி, துடிப்பு, அழற்சி இவைகளால் பீடிக்கப்பட்டு மூத்திரம் துளித்துளி யாய் வெளியாகும். அந்தப் பாகத்தை அழுத்திஞல் முறுக்கிப் பிழிவதுபோன்ற வலியுண்டாய், தாரையாக மூத்திரம் வெளியாகும். அவ்வியாதியை "வஸ்தி குண்டலம்" என்பார்கள். இது தீக்ஷ்ண மான சஸ்திரம் போலவும், விஷம்போலவும் கடுந்துன்பம் விளைவிக் கும். இதில் வாததோஷம் பிரபலமாயிருக்கும்; இது ஸாதாரணமாய் நிவ்ருத்தியாகாது. இதே வியாதி பித்தத்துடன் கூடியதாயிருந்தால் அழற்சியும், வலியும் தோன்றி மூத்திரமும் கலங்கி நிறம் மாறும். இது கப தோஷத்துடன் கூடியதானுல் குருத்வம், வீக்கம் இவைக ளோடு மூத்திரம் ஸ்நிக்த்தமாகவும் கனமாகவும் வெளுப்பாகவும்

மாறி வஸ்தியின் முகம் அடைபடும். பித்தத்தினாலும் அவ் வியாதி தூண்டப்படுகையில் அஸாத்யமென்றறிக. மூத்திரத்வாரம் முறுக்கப்படாமலிருந்தால் வியாதி சிகித்ஸைக்கு வசப்படும்; முறுக்கிக் கொண்டால் அஸாத்யமாகும். வஸ்தியானது குண்டலாகாரமாக முறுக்கிக் கொண்டால் நாவறட்சியும், மூர்ச்சையும், மேல் ச்வாஸமும் அதிகமா யுண்டாகும். 21—25.

## 32. அச்மரீ நிதாநம்*

அச்மரீஸம்ப்ராப்தி:—வாத-பித்த-கபங்களால் தனித் தனியே ஒவ்வோர் அச்மரியும், சுக்ரதோஷத்தினால் ஓர் அச்மரியும் உண்டாகும்; எல்லா அச்மரீரோகங்களும் பெரும்பாலும் கபத்தைக் கொண்டு உண்டாவதோடு, பிராணனை ஹரிப்பதில் யமனுக் கொப்பானவையாம். வாயுவானது மூத்திரவஸ்தியில் சுக்ரதாதுவோடு மூத்திரத்தையும் பித்தத்தையும் அல்லது கபத்தையும் சோஷிப்பிப்பதால், கிரமமாகப் பசுவின் வயிற்றில் கோரோசனையைப்போல அச்மரி யென்னும் கடின வஸ்து உண்டாகிறது. 1, 2.

அச்மரீ பூர்வரூபம்:—எல்லா அச்மரிகளும் பெரும்பாலும் ஒரே தோஷத்தைப்பற்றியவையா யிருப்பதில்லை. மூத்திரவஸ்தியில் பொருமல், அதைச்சுற்றியுள்ள பிரதேசங்களில் அதிகவலி, மூத்திரம் ஆட்டு மூத்திரத்தைப் போன்ற நாற்ற மடைதல், நீர்ச் சுருக்கு, ஜ்வரம் இவை இதன் பூர்வரூபக்குறிகளாம். 3, 3½.

அச்மரியின் ஸாமாந்ய லக்ஷணம்:—அச்மரியினால் மூத்திர மார்க்கம் அடைக்கப்படுகையில் நாபி, ஸேவநி [1], வஸ்திசிரஸ் [2] இவற்றில் வலியுண்டாகும்; மூத்திரமும் சிதறிச் சிதறி வெளிப்படும்; அச்மரி விலகினால் சுகமாக கோமேதக நிறத்துடன் தெளிவாக நீர் வெளியாகும்; அச்மரியைப் பிசைந்து நசுக்கினால் மூத்திர மார்க்கத்தில் விரணமுண்டாய், இரத்தங் கலந்த மூத்திரம் நோவுடன் வெளிப்படும்; இவை அச்மரியின் பொதுக்குறிகளாம். 4—5½.

வாதாச்மரி:—அவற்றுள் வாததோஷத்தாலான அச்மரியில் ரோகி துன்புற்று பற்களைக் கடிப்பான்; துடிப்பான்; அடிக்கடி லிங்கத்தையும் நாபியையும் பிடித்துக்கொண்டு கூவுவான்; மலத்துடன் அபானவாயுவும் அடிக்கடி வெளியாகும்; மூத்திரம் அடிக்கடி துளித் துளியாக வெளியாம். இதில் அச்மரியானது கருஞ் சிவப்பாகவும், முள்போன்ற சுணைகள் நிரம்பியதாகவும் காணப்படும். 6—7½.

---

* மூத்திர மார்க்கத்தில் பருக்காங்கல் போன்ற பதார்த்தம் உண்டாய், அம்மார்க்கத்தை அடைக்கும் நோய்.

1. ஸேவநி—லிங்கத்தின் கீழ்ப் பாகத்தில் நெடுகவும் தையல் போன்றுள்ள ரேகை.

2. வஸ்திசிரஸ்—மூத்திரப்பையின் சிகரத்திலுள்ளதோர் கிரந்தி ரூபமான அவயவம்.

பித்தாச்மரி:—பித்தத்தினுலுண்டாகும் அச்மரியில் வஸ்தி மிகவும் சூடுண்டு சமைக்கப்படுவதுபோல் அழற்சி கொள்ளும்; இதில் அச்மரியானது சிவப்பு, மஞ்சள், கறுப்பு இந் நிறங்களைப் பெற்று, சேராங் கோட்டைக்குச் சமான ரூபமுள்ளதாகக் காணப்படும். 8½.

கபாச்மரி: — கபதோஷத்தால் உண்டாகும் அச்மரியில் வஸ்தியானது குளிர்ந்தும், குருவாகவும் இருக்கும்; அவ்விடத்தில் கடுமையாகக் குத்தலுண்டாகும்; இதில் அச்மரி பெரிதாகவும், வழவழப்பாகவும், தேன் நிறமாக அல்லது வெண்மையாகவும் இருக்கும். 9½.

அச்மரியும் பாலர்களும்:—முற்கூறிய மூன்று அச்மரிகளும் பெரும்பாலும் பாலர்களுக்கு உண்டாகின்றன: இவ்வியாதிக்கு ஆதாரமான வஸ்தி முதலிய அவயவங்களும், அச்மரிகளின் உருவளவும் குழந்தைகளுக்குச் சிறியவையா யிருப்பதால் அவற்றைக் கிரஹிப்பதும் வெளிப்படுத்துவதும் எளிது. 10½.

சுக்ராச்மரி:—சுக்ரதாதுவை அடக்குவதால் பெரியவர்களுககு "சுக்ராச்மரி" யென்கிற வியாதி யுண்டாகிறது. சுக்ரதாது அஃதுண்டாகும் ஸ்த்தானத்திலிருந்து விழுந்ததும் வெளிவிடப்படாமற் போக, வாயுவானது அதை பீஜத்திற்கும் லிங்கத்திற்கும் இடையில் தடுத்துப் போட்டு சுஷ்கமாக்குகிறது. அது "சுக்ராச்மரி" எனப்படுகிறது. இதில் வஸ்தியில் வலி, நீர்ச்சுருக்கு, பீஜத்தில் வீக்கம் இவையுண்டாகும். பீஜத்திற்கும் லிங்கத்திற்கும் இடையில் அச்மரியை அழுத்தினுல் சுக்ரம் வருகிறுப்போல் தோன்றி மறைந்துவிடும். 11—13½.

சர்க்கரா:—வாயுவினுல் அச்மரியே அணுவணுவாகச் சிதறடிக்கப்பட்டு சர்க்கரை யென்பதாக மாறுகிறது. அச்சர்க்கரைகள் மூத்திர மார்க்கத்தில் கீழ்நோக்கி மூத்திரத்துடன் எளிதில் வெளியாகும்; அவை மேல் நோக்கி எதிரிடையாயிருக்கையில், அம்மார்க்கம் அடைபட்டு பின் வரும் உபத்திரவங்களை யுண்டுபண்ணும். 14, 15.

அச்மரீ-சர்க்கரைகளின் உபத்திரவங்கள்:-பலக்குறைவு, சோர்வு, இளைத்தல், வயிற்றுவலி, அரோசகம், உடல் வெளிறிப்போதல், உஷ்ணவாதம், நாவறட்சி, இருதயவேதனை, வாந்தி இவை சர்க்கரையினுல் உண்டாகும் உபத்திரவங்களாம். 16.

அச்மரியில் அஸாத்ய லக்ஷணம்:—நாபி ஆண்குறி இவை வீக்கங் கொள்ளுதல், மூத்திரம் அடைபட்டுப்போதல், வலியினுல் மிகவும் துன்பப்படுதல் ஆகிய இவை அச்மரியின் அஸாத்ய லக்ஷணங்களாம். சர்க்கரை மேன்மேலும் சிறியவையாகப் போய் "ஸிகதா" [1] என்பதாக மாறினுல் அதுவும் அஸாத்யக் குறியாம். 17.

---

1. ஸிகதா—அச்மரி யென்பது கற்களைப்போன்ற உருவமுள்ளதாய் மூத்திர மார்க்கத்தில் உண்டாவது. பொடிப்பொடியாயுள்ள அச்மரியே சர்க்கரை யெனப் படுகிறது. சர்க்கரையே நுண்ணிய பொடிகளா யிருந்தால் "ஸிகதா" என்று வழங்கப்படுகிறது.

# 33. பிரமேஹ-பிரமேஹ பிடகா நிதாநம்*

## பிரமேஹம்

பிரமேஹ காரணம்:—உட்கார்ந்தவாறு சுகமனுபவித்தல், மித மிஞ்சி தூங்குதல், தயிர், அருவருக்கத்தக்க ஈன மிருகங்களுடையவும் ஆநூபப் பிரதேசங்களிலுண்டாகும் மிருகங்களுடையவும் மாம்ஸ ரஸங்கள், பால், புதிதான தானியங்களாலாகிய அன்னபானங்கள், வெல்லம் சேர்ந்த பண்டங்கள் [1] ஆகிய இவ்வித உணவுகளை யுண்பதும், மற்றும் கபத்தை விருத்தி செய்யக்கூடிய ஸகல பதார்த்தங்களும், செய்கைகளும் [2] பிரமேஹத்திற்குக் காரணமாம். 1.

பிரமேஹ ஸம்ப்ராப்தி:— (1) வஸ்தியைப் பற்றிய கபதோஷமானது மேதஸ், மாம்ஸம், சரீரத்திலுண்டாகும் மற்றும் கசிவுப் பொருள் இவற்றை மிகவும் தூஷிப்பித்து மேஹரோகங்களை யுண்டு பண்ணுகிறது. (2) பரிசத்திலும் வீர்யத்திலும் உஷ்ணமாயுள்ள பதார்த்தாதிகளால் மிகப் பிரகோபித்த பித்த தோஷம் மேதஸ் முதலிய தாதுக்களையே மிகவும் தூஷிப்பித்து, பித்த ஸம்பந்தமான பிரமேஹங்களையுண்டு பண்ணுகின்றது. (3) பித்தகபங்கள் க்ஷீணித்திருக்கையில்[3] தாதுக்களை [4] வஸ்தி மூலத்திற்கு ஆகர்ஷித்து, அவற்றைத் தூஷிக்கச் செய்து வாததோஷம் மேஹரோகங்களை யுண்டு பண்ணுகிறது. 2, 2½.

ஸாத்யாஸாத்ய பிரமேஹங்களும் அவற்றின் ஸங்க்யாஸம்ப்ராப்தியும்.—(1) கபதோஷக் கோளாறால் உண்டாகிற பிரமேஹம் பத்து; அவை ஸமக்ரியையால்[5] சிகித்ஸிக்கக்கூடியவை யாகையால், ஸாத்ய ரோகங்களாம். (2) பித்த தோஷத்தினால் உண்டாகும் பிரமே

---

* பிரமேஹம்—மூத்திரம் மிதமிஞ்சி அல்லது கோளாறடைந்து வெளியாகும் வியாதி. பிரமேஹரோகத்தில் ஸம்பவிக்கும் உபத்திரவ ரூபமான கட்டிகள் ''பிரமேஹ பிடகைகள்'' எனப்படுகின்றன.

1. சர்க்கரை, கற்கண்டு, வெல்லம் முதலியவைகளும், இவற்றைச் சேர்த்து செய்யப்படும் பண்டங்களும்.

2. பிரமேஹத்தில் முக்கியமாய் கபதோஷமே கோளாறடைவதாய் இதனால் அறிக.

3. பித்தமும் கபமும் முதலில் பிரகோபித்திருந்து திடீரென அவை குறைவடையும் நிலைமை ''க்ஷீணித்தல்'' எனப்படுகிறதேயன்றி, இயற்கை நிலைமையிலிருந்து க்ஷீணித்தல் அன்று.

4. வஸை, மஜ்ஜை, ஓஜஸ், லஸீகை யென்னும் நிணநீர் என்பவை இங்கே தாதுக்களாம்.

5. ஸமக்ரியை யென்றால் ஸமசிகித்ஸை யெனப் பொருள்; ஆதாவது வாதாதி தோஷங்களுக்கும் இரஸாதிதாதுக்களுக்கும் ஒன்றேடொன்று வித்தியாஸப்படாமல் ஒரு சீராகச் செய்யப்படும் சிகித்ஸை. உதாரணமாக கபஸம்பந்தமான பிரமேஹங்களில் கப தோஷமும், மேதஸ் லஸீகை முதலிய தாதுக்களும் குணத்தில் ஒரே சீரானவை; ஆகவே இவற்றில் தோஷத்திற்கும் தாதுக்களுக்கும் காரம் கைப்பு ஆகிய சுவை முதலியவை குணத்தில் எதிரிடையானவை; அவ்விதம் எதிரிடையான குணமுள்ள ஔஷதாதிகளால்

ஹங்கள் ஆறு; அவை விஷமக்ரியையால்[1] சிகித்ஸிக்கக்கூடியவை யாகையால் யாப்யங்கள். (3) வாத தோஷக்கோளாருல் உண்டாகும் நான்கு பிரமேஹங்களும் மிகவும் அபாயகரமானவையாகை யால்[2] அவை அஸாத்யங்களாம். ஆக பிரமேஹங்கள் இருபது விதங்களாகும். 3, 3½.

ஸர்வ மேஹங்களுடையவும் தோஷ-தூஷ்ய ஸங்கிரஹம்:—பிரமே ஹங்களில் கோளாறடைந்து அவ்வியாதியை யுண்டுபண்ணுபவை கபம், பித்தம், வாயு இத்தோஷங்களும், மேதஸ், இரத்தம், சுக்ரம், இரஸம், வஸா[3], லஸீகையென்னும் நிணநீர்[4], மஜ்ஜை, ஓஜஸ்[5], மாம்ஸம் ஆகிய தாதுக்களுமேயாம். 4.

---

கபத்தினுடையவும், மேதஸ் முதலிய தாதுக்களுடையவும், கோளாறு களை எளிதில் ஒரு மிக்க நிவ்ருத்தி செய்யலாம். தோஷ-தாதுக்கள் இரண்டுக்கும் சிகித்ஸை இங்கு ஸமானமாயிருப்பதால் இது "ஸமக் ரியை" எனப்படும். ஆனால் பொதுவாக ஒருவியாதியில் தோஷங்களும் தூஷ்யங்களும் (தாதுக்களும்) குணத்தில் ஒரே வகையாயிருந்தால் அந்த வியாதி கஷ்ட ஸாத்யம் அல்லது அஸாத்யமாகும். "ந ச துல்ய குணோ தூஷ்ய:" என்கிற அவ்வித விஷயம் ஸாமாந்ய விதியாம். ஜ்வ ரத்தில் தோஷதாதுக்கள் ஸமானமாகவும், பிரமேஹத்தில் தூஷ்யம் துல்யமாகவும், இரத்த குல்மம் நாட்பட்டதாகவும் இருந்தால் "ஸுக ஸாத்யம்" என்பது விசேஷ விதியாம். இதரரோகங்களில் இந்நிலைமை கள் அஸாத்யமானவை.

1. விஷமக்ரியை யென்ருல் விஷம சிகித்ஸை யெனப் பொருள். பிரமேஹத்தில் பிரதான தூஷ்யங்களான மேதஸ் முதலியதற்கும் பித்தத்திற்கும் குணங்களில் வித்தியாஸமிருப்பதால், சிகித்ஸை செய் வது இதில் கடினம். ஏனெனில் பித்தஹரமான மதுராதி சுவையுள்ள பதார்த்தக்கள் மேதஸ் முதலிய தாதுக்களை விருத்தி செய்பவை ; மேதோஹரமான கடுரஸாதிகள் பித்தத்தை விருத்தி செய்கின்றன. ஆகவே பித்தப்பிரமேஹத்தில் விஷமசிகித்ஸை செய்யவேண்டி யிருப்பதால் அவை யாபயங்கள் ஆகும்.

2. வாத தோஷம் மஜ்ஜை முதலிய வெகு ஆழமான தாதுக் களைக் கவர்ந்து கோளாறடையச் செய்வதால், வாதப் பிரமேஹம் விசேஷ ஆபத்தை விளைவிப்பதாம். இதில் சிகித்ஸையும் விஷமக்கிரி யையாயுள்ளது; இத்யாதி காரணங்களால் இவ்வியாதி "மிகவும் அபாயகரமானது" எனப்படுகிறது.

3. வஸா—மாம்ஸ நீர்; தேஹம் முழுவதும் வியாபித்துள்ள ஒரு வித ஸ்நேஹம்.

4. லஸீகை—மாம்ஸத்துக்கும் அதற்கு ஆவரணமாயுள்ள சர்மத்துக்கும் இடையிலுள்ள நீர்ப்பொருள்.

5. ஓஜஸ் சரீரத்தில் ஸர்வதாதுக்களுடையவும் ஸத்துவரூபமாய் ஜீவாதாரமாக வியாபித்துள்ள வஸ்து. இதன் சராசரி அளவு அரை அஞ்ஜலி (4 பலம்) என்று கூறப்படுகிறது. பொதுவாக மேஹரோ கங்களில் மூன்று தோஷங்களும், மேதஸ்முதலிய தாதுக்களும், ஓஜோ தாதுவும் விகாரமடைவதாக அல்லது அழிவதாகக் கூறப்படு கிறதாயினும், மதுமேஹத்திலேயே முக்கியமாய் ஓஜோ தாதுவும் த்ரிதோஷங்களும் விசேஷமாகக் கோளாறடைகின்றன.

பிரமேஹ பூர்வரூபம்:—பிரமேஹம் உண்டாவதற்கு முன்பு பற்கள் முதலியவை[1] மிகவும் அழுக்கடையும்[2]; உள்ளங்கை பாதங்கள் இவற்றில் அழற்சி யுண்டாம்; தேஹம் பிசுபிசுப்பு கொள்ளும்; நாவறட்சி யுண்டாம்[3]; வாய் இனிப்பாகும். 5.

பிரமேஹத்தின் பொதுலக்ஷணம் :—பிரமேஹ ரோகங்களில் மூத்திரமானது அளவில் மிக்க அதிகமாகவும், கலங்கியதாகவும் இருப்பது பொது லக்ஷணமாம். 5½.

பிரமேஹ பேதங்கள் :—தோஷங்களிலும் தாதுக்களிலும் விசேஷமில்லாமலிருப்பினும், அத் தோஷ தூஷ்யங்களுடைய சேர்க்கைகளின் விசேஷங்களால் மூத்திரத்திற்கு நிறம் முதலியவற்றில் பேதங்கள் ஏற்படுகின்றன[4]; அந்த பேதங்களைக்கொண்டு மேஹங்களிலும் பேதங்கள் கூறப்படுகின்றன. 6½.

சிலேஷ்ம மேஹங்கள்[5]:—(1) உதகமேஹம்: இதில் மூத்திரம் தெளிவாகவும், அளவில் அதிகமாகவும், குளிர்ச்சியாகவும், எவ்வித நாற்றமில்லாததாகவும், ஆகவே தண்ணீர் போன்றதாயும், சில ஸமயம் சிறிது கலக்கமாகவும், சொற்பம் பிசுபிசுப்பாகவும் இறங்கும். (2) இக்ஷுமேஹம்: இதில் இறங்கும் நீர் கருப்பஞ்சாறு போன்று இனிப்பாயிருக்கும். (3) ஸாந்த்ரமேஹம்: இதில் மூத்திரம் பழகப் பழக ஒருவாறு இறுகிக்கொள்ளும். (4) ஸுராமேஹம்: இதில் மூத்திரம் ஸுரையென்னும் மத்யம் போல் மேலே தெளிவாகவும், அடியில் கனமாகவும் இருக்கும். (5) பிஷ்டமேஹம்: இதில் மூத்திரம் நீரில் மாகரைத்தாற் போலவும், அதிக அளவாகவும் வெளியாகும்; அப்பொழுது ஒருவாறு மயிர்ச்சிலிர்க்கை யுண்டாகும். (6) சுக்ரமேஹம்: இதில் மூத்திரம் சுக்ர தாதுவைப் போன்றதாகவாவது, சுக்ரம் கலந்தாவது வெளியாகும். (7) ஸிகதாமேஹம்: இதில்

---

1. 'பற்கள் முதலிய' என்பதால் நேத்திரம், தவடைகள், நாக்கு, செவிகள் முதலியவற்றிலும் விசேஷமாக மலம் சேரும் என்பது குறிக்கப்படுகிறது.

2. மேதோ தோஷத்தினல் அழுக்கடைதல்.

3. கபமும் மேதஸ்ஸும் கோளாறடைந்து தேஹத்திற் பிசுபிசுப்பை யுண்டாக்குகின்றன.

4. "ஐந்து தனித் தனி வர்ணங்கள் ஏற்றக்குறைவான அளவில் ஒன்றோடொன்று சேருவதால் கபிலம் முதலிய பல வேறுவகையான நிறங்கள் உண்டாவதுபோல, தோஷாதிகளின் அன்யோன்ய சேர்க்கைகளால் ஒவ்வொரு தோஷஸம்பந்தமான மேஹத்திலும் பலவேறு பேதங்கள் ஸம்பவிக்கின்றன" என்று ஸுச்ருதர்.

5. கபத்திற்கு வெண்மை, சீதளம், கடினத்தன்மை, பிசுபிசுப்பு, நிர்மலத்தன்மை, ஸ்நிக்தத்தன்மை, குருத்வம், இனிப்பு, இறுகுதல், மந்தத்தன்மை ஆகிய இக்குணங்கள் உண்டு. இக்குணங்களில் சில கபஸம்பந்தமான பத்துவித மேஹங்களிலும் காணும். அவ்விஷயம் பிறகு ஒவ்வொரு கபமேஹ விவரணத்திலும் குறிக்கப்படும். சிலர், கபத்திற்குக் கூறிய பத்து குணங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு

கடினமாகவும், மிகஸூக்ஷ்மமாகவுமுள்ள சிறு மணல்களைப் போன்ற வஸ்துக்கள் மூத்திரத்துடன் வெளியாகும். (8) சீதமேஹம்: இதில் மூத்திரம் அதிக அளவாகவும், இனிப்பாகவும், மிகக் குளிர்ந்ததாகவும் இருக்கும். (9) சனைர்மேஹம்: இதில் மூத்திரம் சொற்பமாகவும், அடிக்கடி மெதுவாகவும் வெளியாகும். (10) லாலாமேஹம்: இதில் மூத்திரம் குழந்தைகளுடைய சொள்ளுநீர்போல நூல் நூலாகவும் பசையுள்ளதாகவும் இருக்கும்[1]. 7—12.

பித்த மேஹங்கள்:—(1) க்ஷாரமேஹம்: இந்த மேஹத்தில் சிறுநீரானது வாஸனை-நிறம்-சுவை-பரிசம் அனைத்திலும் க்ஷாரம் போன்று வெளியாகும். (2) நீலமேஹம்: சிறுநீர் இந்த மேஹத்தில் நீலநிறமாயிருக்கும். (3) அஞ்ஜனம்போல் நீர் கறுப்பாயிருந்தால் காலமேஹம் எனக் கூறப்படுகிறது. (4) மூத்திரம் கடுரஸமாகவும், அழற்சியுண்டு பண்ணுவதாகவும், மஞ்சள் நிறமுமா யிருந்தால் அது ஹாரித்ர மேஹம் எனப்படும். (5) மஞ்ஜிஷ்டி யென்னும் சரக்கு கலந்த தண்ணீரைப் போன்றதும், ஒருவித துர் நாற்றமுள்ளதுமாய் மூத்திரம் வெளியானால் அது மாஞ்ஜிஷ்ட மேஹம் எனப்படும். (6) சிறுநீர், ஒருவித சவர் நாற்றமும், உஷ்ணமும், உப்புச்சுவையும், இரத்தநிறமாகவுமிருந்தால் அதை இரக்த மேஹம் என்பர். 13—14½.

வாதமேஹங்கள்:[2]—(1) வஸாமேஹம்: இதில் சிறுநீரானது கொழுப்பு நீரோடு கலந்தாவது வஸையாகவேயாவது அடிக்கடியும் வெளியாகும். (2) மஜ்ஜாமேஹம் உள்ளவன் மஜ்ஜை யென்னும் தாதுவைப்போன்ற அல்லது மஜ்ஜையோடு கூடிய நீரை அடிக்கடியும் வெளியிடுவான். (3) மூத்திரம் சிறிது துவர்ப்பும் இனிப்புமாய் ரூக்ஷ குணமும் உள்ளதாயிருந்தால் அதை க்ஷௌத்ரமேஹம் என்பர். (4) மதங்கொண்ட யானைக்கு வருவதுபோல எப்பொழுதும் நிண

---

மேஹத்தை யுண்டுபண்ணும் என்கின்றனர். ஆனால் சிற்சில குணங்களின் சேர்க்கையினாலேயே இவை யுண்டாகின்றன வென்றும் கூறுவதுண்டு. அதாவது:—(1) வெண்மை, நிர்மலத்வம், குளிர்ச்சி இவற்றால் உதகமேஹம். (2) மதுரம், சீதளம் இவற்றால் இக்ஷு மேஹம். (3) இறுகுந்தன்மை, பிசுபிசுப்பு இவற்றால் ஸாந்த்ரமேஹம். (4) நிர்மலத்தன்மை, ஸூக்ஷ்மமான பித்தாம்சக் கலப்பு இவற்றால் ஸுராமேஹம். (5) வெண்மையினால் பிஷ்டமேஹம். (6) வெண்மை, ஸ்நிக்தத்தன்மை இவற்றால் சுக்ரமேஹம். (7) இறுகுந்தன்மை, கடினத்தன்மை, இவற்றால் ஸிகதாமேஹம். (8) குருத்வம், இனிப்பு, குளிர்ச்சி இவற்றால் சீதமேஹம். (9) மந்தத்தன்மை, கடினத்தன்மை இவற்றால் சனைர்மேஹம். (10) பிசுபிசுப்புத் தன்மையினால் லாலா மேஹம் என்றவாறு.

1. சரக ஸம்ஹிதையில் ஸுராமேஹ ஸ்தானத்தில் ஸாந்த்ரப் பிரஸாதமேஹம் கூறப்படுகிறது. சரகரும் மாதவகரனும் கூறுகிற சீதமேஹ-லாலா மேஹங்களுக்குப் பதிலாக முறையே பேநமேஹமும், இலவணமேஹமும் ஸுச்ருதரால் மொழியப்படுகின்றன.

2. வாதமேஹங்கள் நான்கும் முறையே வஸை, மஜ்ஜை, ஓஜஸ், லஸீகா இத் தாதுக்களின் கோளாறுலுண்டாகின்றன.

நீரோடு அதிக வேகமில்லாமல் மூத்திரம் வெளியானால் அது ஹஸ்தி மேஹம் எனப்படுகிறது ; ஆனால் இடையிடையே இதில் மூத்திரம் தடுக்கப்பட்டதுபோல் தாரையாயில்லாமல் வெளியாகும். 15—17.

மேஹங்களில் உபத்திரவங்கள்: —உணவு ஜீர்ணமாகாமை, அரோசகம், வாந்தி, நித்திரை யதிகரித்தல், பீநஸத்துடன் கூடிய காஸம் ஆகிய இவை கபமேஹங்களின் உபத்திரவங்களாம். [1] மூத்திரவஸ்தியிலும் ஆண்குறியிலும் குத்தல், பீஜம் வெடித்தல், ஜ்வரம், உடலழற்சி, நாவறட்சி, புளித்த தேகக் கெரிவு, மூர்ச்சை, பேதி ஆகிய இவை பித்தமேஹங்களின் உபத்திரவங்களாம். உதாவர்த்தம், உடல்நடுக்கம், இருதயத்துபுடிப்பு, நிற்கமுடியாமை, வயிற்றுவலி, நித்திரையின்மை, க்ஷயம், இருமல்,[2] ச்வாஸம் ஆகிய இவை வாத மேஹங்களின் உபத்திரவங்களாம். 18—20.

மேஹங்களில் அஸாத்ய நிலைமை:—முற்கூறிய உபத்திரவங்கள்,[3] அரிஷ்டங்கள்[4] இவற்றுடன் கூடியது, அமித மூத்திரப்பெருக்கையும் நீர்த்துப்போன தாதுக்களையும் பெற்றிருப்பது, பிடகைகளால் பீடிக்கப்படுவது[5], அதிக நீடித்திருப்பதுமான பிரமேஹம் அஸாத்ய நிலையை யடைந்து மனிதனைக் கொன்றுவிடும். மேலும் பிறவி முதற் கொண்டே பிரமேஹத்துடன் கூடியவன் அல்லது மதுமேஹ ரோகிக்குப் பிறந்தவன் அவ்வியாதியிலிருந்து நிவ்ருத்தியடைய மாட்டான். அங்ஙனமே பீஜதோஷத்தினால் குலக்கிரமமாக வரும் வேறு எந்த வியாதியுமே அஸாத்யம் எனக் கூறப்படுகிறது. 21, 22.

மதுமேஹம்:—எல்லாப் பிரமேஹங்களும்[6] தகுந்த பரிஹாரமின்மையினால் காலக்கிரமத்தில் மதுமேஹமாக மாறி, அப்பால்

---

1. கப ஸம்பந்தமான உபத்திரவத்தில் உண்டாகும் காஸம் சிலேஷ்மத்துடன் கூடியது.

2. வாதஸம்பந்தமான உபத்திரவத்தில் உண்டாகும் காஸம் வறண்ட இருமலாயிருக்கும்.

3. முற்கூறிய உபத்திரவங்கள்—கபமேஹாதிகளுக்குக் கூறிய உபத்திரவங்கள்.

4. அரிஷ்டம்—மரணம் உண்டாவதை முன்னதாகக் குறிப்பிடுவதான சகுனம், ஸ்வப்னம் அல்லது லக்ஷணம்.

5. பிடகைகள் பிரமேஹோபத்திரவத்தில் அடங்கியவை. "நாவறட்சி, அதிஸாரம், ஜ்வரம், அழற்சி, துர்ப்பலம், அரோசகம், அஜீர்ணம், மாம்ஸம் துர்நாற்றங்கொள்ளல், பிடகை, அலஜீ, வித்ரதி இவை பிரமேஹங்களின் உபத்திரவங்கள்" என்று சரகர் கூறுகிறார். ஆகவே பிடகையைப் பிரத்தியேகமாய் இங்கு அஸாத்ய லக்ஷணங்களில் ஒன்றாகக் குறிப்பிடுவதேன்? என்றால் இப்பிடகைகள் பிரமேஹமில்லாமலே மேதஸ் விகாரமடைந்தவனுக்குக் காண்பதுண்டு என்கிற சரகரது வசனத்தின்படி இவை தனியாகவும் உண்டாகின்றனவென்பதைக் கருதி இங்ஙனம் கூறப்பட்டது.

6. மதுமேஹத்தில் வாததோஷம் பிரபலமாயினும் பித்த-கப மேஹங்களும் வாதமேஹத்தைப் போல காலக்கிரமத்தில் மதுமேஹமாக மாறுமென்பது "எல்லாப் பிரமேஹங்களும்" என்பதன் கருத்து.

அஸாத்யத் தன்மையையும் பெறும்; மூத்திரம் இதில் தேன் போன்ற தாய் விடும்; அம் மதுமேஹம் இரண்டுவிதம்: அவற்றுள் ஒன்று (1) தாதுக்கள் க்ஷீணிப்பதால் வாயு பிரகோபித்து உண்டாவது. மற்றொன்று (2) இதர தோஷங்களால் வாதத்தின் மார்க்கம் தடைபடுவதால் வாயு பிரகோபித்துக் காண்பது; இவ் விரண்டில் ஏதேனும் ஒரு காரணத்தினால் மதுமேஹம் உண்டாகலாம்.[1] இதரதோஷங்களால் வாயு ஆவரணம் செய்யப்பட, திடீரென்று அவ்விதர தோஷங்களின் குறிகளைக் காட்டிக்கொண்டு, ஒரு க்ஷணத்தில் க்ஷீணித்திருப்பதாகவும், அடுத்த க்ஷணத்தில் பூர்ணமாயிருப்பதாகவும் தோன்றும். இந்த நிலைமை க்ருச்சிரஸாத்ய மெனப்படுகிறது. மேஹங்களில் சிறுநீர் பெரும்பாலும் தேனைப்போல் இனிப்பாகப் போவதாலும், உடல் முடியவும் ஒருவாறு இனிய சுவையேற்படுவதாலும் இவ்வியாதி 'மதுமேஹம்' எனக்கூறப்படுகிறது. 23—26.

## பிரமேஹ பிடகைகள்.

பத்துவித பிரமேஹ பிடகைகள்:—பிரமேஹங்களுக்கு ஏற்ற சிகித்ஸை செய்யாது உபேக்ஷித்து வந்தால் ஸந்திகளின் மர்மஸ்த்தானங்களிலும், சதை பருத்த விடங்களிலும் சராவிகா, கச்சபிகா, ஜாலினி, விநதா, அலஜி, மஸூரிகா, ஸர்ஷபிகா, புத்ரிணி, விதாரிகா, வித்ரதி என்று பத்துவித பிடகைகள் என்னும் பிளவைகள் உண்டாகின்றன.[2] அவற்

1. தேஹத்தில் தாதுக்கள் க்ஷீணித்து வந்தால், வாததோஷம் பிரகோபிப்பது இயல்பு. வாததோஷம் தேஹத்தில் ஸஞ்சரிக்கும் மார்க்கங்கள் வேறு தோஷம் முதலியவற்றால் மறைக்கப்படுமானால் அப்பொழுதும் வாதம் பிரகோபமடையும். இதே விஷயம் 'வாயோர் தாதுக்ஷயாத் கோபோ மார்கஸ் யாவரணேநச' என்கிற பிரமாணத்தினால் குறிப்பிடப்படுகிறது. மதுமேஹம் ஆவரண வாதத்தினாலுண்டாாவதாகவே கதாதரன். "இதர தோஷாதிகளால் ஆவரணம் செய்யப்பட்ட வாயுவானது ஜீவாதாரமான ஓஜோ தாதுவைக் கிரஹித்து வஸ்தியை யடைய, அப்பொழுது க்ருச்சிர ஸாத்யமான மதுமேஹம் உண்டாகிறது" என்று சரகரும் கூறுகிறார். அதியோகமான வமந-விரேசநாதிகளால் உண்டான தாது க்ஷயத்திலிருந்து ஸம்பவிக்கும் பிரமேஹ வியாதிகளில் வாத தோஷத்திற்கு ஆவரணம் இல்லை யென்று இதனால் அறியவும்.

2. இங்கே பத்துவித பிடகைகள் கூறப்படுகின்றன. ஆனால் போஜன் கொள்கைப்படி பிரமேஹ பிடகைகள் ஒன்பது விதம். அதாவது—"சராவிகா, ஸர்ஷபிகா, கூர்மிகா, கச்சபிகா, ஜாலினி, குளுத்திகா (இதுவே மஸூரிகா,) அலஜி, புத்ரி, (இதுவே புத்ரிணீ) வித்ரதி" என்பவையாம். சரகர் கூறியது ஏழு பிரமேஹ பிடகைகளே—"சராவிகா, கச்சபிகா, ஜாலினி, ஸர்ஷபி, அலஜி, விநதா, வித்ரதி" என்பனவாம். பிரமேஹ பிடகைகள் எனப்படுகிற பத்துவிதமான இப்பிளவைகள் முக்கியமான மதுமேஹரோகிகளுக்கும், ஸாதாரணமாய் இதர மேஹரோகிகளுக்கும், அரிதாக மேஹரோகிகளல்லாதவருக்கும் உண்டாவதாக "விநாப்ரமேஹமப்யேதா: ஜாயந்தே துஷ்ட மேதஸ:" என்பதைக்கொண்டு அறியவேண்டும்.

றுள் (1) ஓரங்களில் உயர்ந்தும், மத்தியப் பிரதேசத்தில் சிறிது குழி விழுந்தும், சராவமென்கிற கலத்தைப் போன்றது மாயுள்ள பிளவை சராவிகா எனப்படுகிறது. (2) குறியிலும் அளவிலும் வெண் கடுகு கள் போன்ற பல சிறிய கொப்புளங்களால் சூழப்பட்ட பிளவைக்கு ஸர்ஷபிகா என்று பெயர். (3) ஆமை போன்ற உருவ முடையதாய் அதிக அழற்சியை யுண்டுபண்ணும் பிளவையை கச்சபிகா என்பர். (4) ஜாலிநீ என்கிற பிளவை கொடிகொடியாக எழும்பிய ஸிராஜா லங்கள் அல்லது தசை நார்களால் சூழப்பட்டதாகவும், கடுமையான எரித்தலை யுண்டுபண்ணுவதாகவு மிருக்கும். (5) ஆழமான பிரதேசத் தில் தோன்றி, அதிக வலியோடும் துர்நீர்க்கசிவோடும் கூடியதாக வும், கரு நிறமாகவும், பூசினிற்போல் தாழ்ந்தும், வெகு அகன்ற தாகவும், முதுகிலாவது வயிற்றுப் பக்கத்திலாவது உண்டாகும் பிடகை விநதா எனப்படும். (6) சின்னஞ்சிறிய அநேகம் சிலந்தி களால் சூழப்பட்ட பெரிய பிளவை புத்ரிணீ எனப்படுகிறது. (7) அளவினாலும், உருவத்தினாலும் கடலைக்குத் துல்யமா யிருக்கும் பிளவை மஸூரிகா எனப்படும். (8) அநேக கொப்புளங்களுடன் கூடி, வெண்சிவப்புநிறமுடைய, கடுந்துன்பமளிக்கும் பிளவை அலஜீ யாம். (9) அமுக்கிருங்கிழங்கு போல் திரண்டும், கறடுகட்டிப் பருத்தும், கடினமாகவுமுள்ள பிளவைக்கு விதாரிகா எனப் பெயர். (10) வித்ரதிக்குச் சமமான குறிகளைப் பெற்ற பிளவையை வித்ரதி யென்றறிக.[1] 27—33½.

பிடகைகளின் ஆரம்ப-காரணாதிகள்:—(1) எந்தெந்த மேஹங்கள் எவ்வெவ்விதம் உண்டாகின்றனவோ, அவற்றைப்பற்றிய பிடகை களும் அவ்வவ்விதமாகவே இருக்கும்.[2] (2) மேலும் இப் பிடகை கள் மேதஸ் என்னும் தாது விகாரமடைந்திருந்தால் பிரமேஹ மில்லாமலும் காணப்படுதுண்டு. (3) அன்றியும் இப் பிளவைகள் ஓரிடத் தில் நன்குகப் பற்றி வெளிப்படையாகக் கிளம்பும்வரையில் இவை யுண்டாவதாகத் தெரியவருவதில்லை. 34, 35.

பிரமேஹ பிடகைகளில் அஸாத்யங்கள்:—குதம், மார்பு, சிரஸ், தோள், முதுகு, மர்மஸ்த்தாநங்கள்[3] இவற்றில் பிடகைகள் உண்டா

---

1. வித்ரதியைப்பற்றி 40-வது அத்தியாயத்தில் விவரம் காண்க.

2. எந்த மேஹமானது எந்த தோஷத்தின் பலத்தினால் உண்டா கிறதோ, அதே தோஷத்தினால் பிடகைகளும் உண்டாம்; அத்தோஷக் குறிகளையும் அப்பிடகைகள் அடையும் என்பது கருத்து.

3. மர்மங்கள்:—தேஹத்தில் ஜீவாதாரமாய் மிகவும் கூர்மை யான உணர்ச்சியைப் பெற்றுள்ள அவயவாம்சங்கள். அவ்விடங் களில் ஸாதாரணமாய் அபிகாதாதிகளால் அதிகமாகவோ சொற்ப மாகவோ தேஹத்திற்கோ பிராணனுக்கோ சிதைவு அல்லது அபா யம் நேரிடும். "தேஹத்தில் எவ்விடம் சிறிய அபிகாதாதிகளாலும் விஷமமாகத் துடிக்குமோ, எவ்விடம் அமுத்தப்படுவதால் தீக்ஷ்ண மான வலியுண்டாகிறதோ அது மர்மஸ்த்தாநம்" என்று

ஞலும், உபத்திரவங்களோடு கூடியவையாளுலும்,[1] துர்பலமான ஜாடராக்னியுள்ளவனுக்குக் கண்டாலும் அவை சிகித்ஸைக்கு வசப் படாத வையாம்,[2] 36.

---

## 34. மேதோ ரோக நிதாநம்.*

மேதோரோகத்தின் காரண - ஸம்ப்ராப்திகள்:—வியாயாம மின்மை, பகலில் நித்திரையுறுதல், கபத்தை விருத்திசெய்யும் உணவுகளைப் புஜித்தல் ஆகியவற்ருல் இரஸதாது மிகவும் மதுர மாகப்போய்,[3] ஸ்நேஹப்பசையையும் விசேஷமாகப் பெற்று, மேதோதாதுவை அபரிமிதமாய் விருத்தி செய்துவிடும். கொழுப்பி ஞல் ஸ்ரோதோமார்க்கங்களெல்லாம் மூடப்படுவதால் இதர தாதுக்

---

வாக்படர். "ஸிரைகள், தமனிகள், நாடிகள் முதலியவற்றின் முக்கிய மான பாகங்கள் ஒன்றுகூடும் ஸ்த்தலம் மர்மம்" என்று ஸுச்ருதர். "மனித தேஹத்தில் நூற்றேழு மர்மங்கள்உண்டு. அவற்றுள் ஒவ்வொரு காலிலும் பதிஞென்று; ஒவ்வொரு கையிலும் பதிஞென்று; கோஷ் டத்தில் மூன்று; மார்பில் ஒன்பது; முதுகில் பதிஞன்கு; தோளுக்கு மேலுள்ள அவயவங்களில் முப்பத்தேழு" என்று வாக்படர்.

1. "பிரமேஹ பிடகைகளில் நாவறட்சி, இருமல், மாம்ஸபேசி கள் சுருங்குதல், மயக்கம், விக்கல், வெறி, ஜ்வரம், விஸர்ப்பம், மர்மஸ்த்தாநங்களின் நிரோதம் ஆகியவை உபத்திரவங்களாகக் காணும்" என்று சரகர். தோஷங்களும் தூஷ்யங்களும் பெரும் பாலும் கீழ் நோக்கிப் பரவுமியல்புடையவை யாகையால்,பிடகைகள் பெரும்பாலும் கீழ் அவயவங்களிலே உண்டாவ தியல்பு.

2. ஸ்த்ரீகளுக்குப் பிரமேஹமும் பிரமேஹ பிடகைகளும்:—"ரஜ: ப்ரஸேகாந் நாரீணாம் மாஸி மாஸி விசுத்யதி. ஸர்வம் சரீரம் தோஷாச் ச ந ப்ரமேஹந்த்யத: ஸ்த்ரிய:" (ஸ்த்ரீகளுக்கு மாதந் தோறும் இரஜஸ் என்கிற மாதவிடாய் வெளியாய், தேஹமுழுமை யும், வாதாதி தோஷங்களும் சுத்தியடைவதால், அவர்களுக்குப் பிர மேஹமுண்டாவதில்லை) என்று கூறப்படுகிறது. "இக்கொள்கை முற்றிலும் சரியெனக் கருதப்படுவதில்லை; பிரமேஹரோகம் ஸ்த்ரீ களுக்கும் உண்டாவது அனுபவத்திற் கண்ட விஷயம், ஆகவே ஸ்த்ரீ களுக்கு இவ்வியாதி அரிதாய் உண்டாவதாக இதன் தாத்பரியம்" என்று ஸ்ரீ கண்டதத்தர். ஆகவே பிரமேஹ பிடகைகளும் ஸ்திரீகளுக் குக் காண்பதரிதென்று கூறப்படுகிறது.

* மேதோரோகம்—தேஹத்தில் மிதமிஞ்சி கொழுப்பு விருத்தியாய் உடல் ஸ்தூலித்துப் போதல். இதுவே அதிஸ்த்தூலரோகம்.

3. "இங்நிலைமையில் அன்னரஸமானது ஆமதோஷ ஸம்பந்த முடையதுபோல மிகவும் இனிப்பாக மாறுகிறது" என்று ஸுச்ருதர். மேதோரோகத்தில் ஜாடராக்னி தீக்ஷ்ணமாயிருக்கு மென்று பிறகு கூறப்படுகிறது; ஆமதோஷத்திஞல் ஜாடராக்னி மிகவும் மந்தமாய் விடுவது இயல்பாயிற்றே; என்ருல் மிக மதுரமான அன்னரஸம் நிரம்பிய ஸ்ரோதஸ்ஸுகளில் அந்த தாது இருக்கும் வரையில், அது மிக்க மதுரமாயிருப்பதைக் கொண்டு ஆமதோஷப்பற்றுள்ள இரஸதாதுவுக்கு அது ஒப்பிடப்பட்டது.

கள் போஷணையைப் பெறுமல், மேதோதாது தேஹத்திற் பெரிதும் விருத்தியடைந்துவிடும். 1, 2.

மேதோ ரோகம்:—முற்கூறியவாறு மேதோதாது அமிதமாய் அதிகரிப்பதால் அம்மனிதன் எக்காரியத்தைச் செய்யவும் சக்தியற்ற வனுகிருன்: மேலும் ச்வாஸம் குறுகுதல், நாவறளுதல், மயக்கங் காணல், எப்பொழுது முறக்கமுண்டாதல், உடற்சக்தி குன்றுதல், அதிக பசியுண்டாதல், வியர்வை யதிகரித்தல், உடலில் துர்நாற்றம் தோன்றுதல் இக்குறிகளுடன் கூடியவனுய், பலமிழந்து ஸ்த்ரீக ளிடம் பிரவ்ருத்திக்கவும் திறமையொழிந்து வருந்துவான். அனே வருக்குமே கொழுப்பு உதரத்தில் மிகுதியாகத் தங்கி நிற்கும்; ஆகை யினுலேயே மேதோரோகிக்குப் பெரும்பாலும் வயிறு மிகவும் ஸ்தூலித்துத் தொங்கியாகிறது. 3. 4.

மேதோரோகத்தில் பசியதிகரித்தல்: — மேதஸ்ஸினுல் மார்க்கங் கள் அடைபட்டுப்போகவே வாயுவானது குடலில் விசேஷமாகப் பெருகி ஜாடராக்னியைத் தூண்டுகிறது; உணவும் சீக்கிரம் சோஷிப் பிக்கப்படுகிறது. ஆகையினுல் மேதோரோகிக்கு உணவு துரிதமாக ஜீர்ணமாய், மேன் மேலும் அவன் உணவை விரும்புகிருன்; போஜனகாலம் சிறிது தவறினுலும் பலமான விகாரங்களும்[1] காணும்; இவ்வாயுவும், ஜாடராக்னியும் விசேஷமாக உபத்திரவங் களை [2] யுண்டு பண்ணி, காற்றும் காட்டுத்தீயும் சேர்ந்து வனத்தைத் தஹித்துவருவதுபோல ஸ்தூலதேஹியை அழித்துவிடும். 5—7.

மேதோவிருத்தியாலுண்டாகும் கேடு:—கொழுப்பு அமிதமாய் விருத்தியடைந்தால் வாதம் முதலியவை ஜடிதியில் மிக உக்கிரமாகப் போய், உபத்திரவ ரூபமான கடுங்கோளாறுகளைக் கிளப்பி, ஆயுளை யும் சீக்கிரம் அழித்துப் போடுகின்றன. 8.

அதிஸ்த்தூலன்:—இந்த ரோகத்தில் கொழுப்பும்,மாம்ஸமும்அமித மாக விருத்தியடைவதால் பிருஷ்டங்களும், வயிறும், ஸ்தநம் முதலிய வைகளும் மிகப் பருத்துக் குலுங்கும்; சரீரத்தின் இயற்கைப் போஷணை தடைபட்டு, உத்ஸாஹம் குன்றி, உடலெல்லாம் இயற் கைக்கு மாறுன பருமனைப் பெறுகிறது. ஆகவே இந்த வியாதி 'அதிஸ்த்தூலரோகம்' எனப்படுகிறது. 9.

---

# 35 உதரரோக நிதாநம்.*

உதர ரோகங்களின் காரணங்கள்:—ஜாடராக்னி மந்தமாவுல்

---

1. பலமான விகாரங்கள்—வாதக் கோளாறுகள்.

2. ஜ்வரம், பகந்தரம், வித்ரதி, பிரமேஹ பிடகைபோன்ற பிள வைகள் முதலியவை மேதோரோக உபத்திரவங்கள்.

*வயிறுவது வயிற்றிலடங்கிய ப்லீஹம் முதலிய அவயவங்களா வது கோய் கொண்டு நீரேற்றத்துடன் அல்லது வேறு விதமாய் விம்மி வீக்கங் கொள்ளும் வியாதிகள் உதர ரோகங்கள்.

ஸாதாரணமாய் ஸகல வியாதிகளுக்கும்[1], முக்கியமாய் உதர ரோகங்களுக்கு அது காரணமாகிறது. பொதுவாக அஜீர்ணத்தினுலும், மலினமான உணவுகளை யுண்பதாலும்;[2] பழைய மலங்கள் மேன்மெலும் சேர்ந்து விடுதாலும் உதர ரோகங்கள் உண்டாகின்றன. 1.

உதரரோகஸம்ப்ராப்தி:—மிகவும் விருத்தியடைந்த வாதாதி தோஷங்கள் தேஹத்திலுள்ள (முக்கியமாய் வயிற்றிலுள்ள) ஸ்வேதவஹஸ்ரோதஸ்ஸுகளையும்,[3] அம்புவஹஸ்ரோதஸ்ஸுகளையும்[4] அடைத்துப் போட்டு, பிராணவாயுவையும் அபாநவாயுவையும் ஜாடராக்னியையும் மிகவும் தூஷிப்பித்து, உதரரோகத்தைப் பொதுவா யுண்டுபண்ணுகின்றன. 2,

உதர ரோகங்களின் பொதுக் குறிகள்:—வயிற்றுப் பொருமல், நடக்கச் சக்தியின்மை, சரீரபலம் குன்றுதல், ஜாடராக்னி மந்தப்படுதல், வீக்கங்காணுதல், உடலிளைத்தல், அபாநவாயுவும் மலமும் அடைபடுதல், உடலழற்சி காணுதல், திமிர்த்துப் போதல் இவை உதர ரோகங்களின் பொது லக்ஷணங்களாம். 3, 3½.

உதர ரோகங்கள் எட்டுவிதம்:—வாத-பித்த கபங்களால் மூன்று விதம், ஸந்நிபாத்தினுல் ஒன்று, ப்லீஹ வீக்கத்தினுல் ஒன்று, மலம் முதலியவை கட்டிப் போவதால் ஸம்பவிக்கும் பத்தோதரம் என்பதொன்று, குடலில் த்வாரம் விழுவதாலுண்டாகும் க்ஷதோதரம் ஒன்று, வயிற்றில் நீரேற்றமுண்டாவதால் உதகோதரம் என்பதொன்று; ஆக உதர ரோகங்கள் எட்டு[5]. அவற்றின் ஒவ்வொன்றின் லக்ஷணமும் இதனடியிற் கூறப்படும். 4½,

---

1. "தோஷா அக்நிபலே ஹீநே குப்யந்தி பவநாதய:"-ஜாடராக்னி க்ஷீணித்தால் வாதம் முதலிய எல்லாத் தோஷங்களும் பிரகோபமடையும்—என்பது பிரமாணம்.

2. அழுக்குகளும், கிருமி முதலிய ஜந்துக்களும் சேர்ந்தவை, ஊசிப்பதனழிந்தவை, ஏற்றக்குறைவானவை, அபத்தியமானவை ஆகிய இவ்வித உணவுகள்.

3. ஸ்வேதவஹ ஸ்ரோதஸ்ஸுகள்—வியர்வைநீர்க்குழாய்கள். "ஸ்வேதஸ்துபாஹ்யேஷு ஸ்ரோதஸ்ஸு ப்ரதிஹதகதிஸ் திர்யகவஸ்திஷ்டமாநஸ் ததேவோதகமாப்யாயயதி"—தேஹத்தின் வெளிப்புறக் குழாய்களில் வியர்வை தடைபட்டு மேன்மேலும் துர்நீரை விருத்தி செய்கிறது—என்று சரகர். ஸ்வேதம் மேதோதாதுவிலிருந்தும் சர்மத்திற்குள்ளடங்கிய ரோம கூபங்களென்கிற உரோமக் குழிகளிலிருந்தும் உண்டாகிறது—"—ஸ்வேதவஹாநாம் மேதோ மூலம், ரோம கூபாச் ச"—என்றும் கூறப்படுகிறது.

4. அம்புவஹஸ்ரோதஸ்ஸுகள்—உமிழ்நீர், பித்தநீர், நிணநீர் முதலிய திரவப் பொருட்கள் ஓடும் குழல்கள். இவை சரீரத்தின் உட்புறத்தைச் சேர்ந்தவை. ஆகவே உதரரோகத்தில் தேஹத்தின் வெளிப்புறத்து நீர்களும் உட்புறத்து நீர்களும் மார்க்கங்கள் அடைபட்டு ஊறிச் சேர்ந்து விடுவதாய் அறியவேண்டும்.

5. யக்ருத் என்கிற கல்லீரலைப்பற்றிய உதரரோகத்தையும் சேர்த்து ஒன்பது உதரங்களென்றே கூறவேண்டும். கல்லீரலின் வீக்கமே யக்ருதுதரம் அல்லது யக்ருத்தாலீ எனப்படும்.

வாதோதரம்:—கைகள், பாதங்கள், கீழ் வயிறு இவற்றில் வீக்கம், இரைப்பை, விலாப்பக்கங்கள், வயிறு, இடுப்பு, முதுகு இவற்றில் வேதனை, பூட்டுகளில் ஆங்காங்கு பிளக்கப்படுவது போன்ற வலி, வறட்டு இருமல், தேஹமெங்கும் நசுக்கப்படுவதுபோன்ற வலி, கீழுடலில் பாரம் அதிகரிப்பது, மலச்சிக்கல், சர்மம் முதலியது சிவப்பாக அல்லது கருஞ் சிவப்பாக மாறுதல், திடீரென்று வயிற்றுவீக்கம் அதிகரிப்பது அல்லது குறைவது, வயிற்றிலும் குதத்திலும் பிளக்கப்படுவதுபோன்ற உணர்ச்சி, மெல்லிய கருநிறமான ஸிரைகள் வயிற்றின்மீது படர்தல், வயிற்றைத் தட்டினுல் காற்று நிரம்பிய துருத்தி போல் சப்தித்தல், வாயு வயிற்றில் வலியையும் சப்தத்தையும் உண்டு பண்ணிக்கொண்டு உள்ளேயே ஓடியுலாவுதல் ஆகியவை வாத தோஷத்தினுலான உதரரோகத்தின் குறிகளாம். 5—8.

பித்தோதரம்:—பித்தக்கோளாருலாகிய உதரரோகத்தில் ஜ்வரம், மூர்ச்சை, அழற்சி,[1] நாவறட்சி, வாயில் ஒருவாறு காரமான உணர்ச்சி, தலைச்சுற்றல், அதிஸாரம், சர்மம் முதலியவை பசுமை நிறங்கொள்ளல் இக்குறிகள் காணும்; மேலும் வயிற்றில் பசுமையான அல்லது சிவப்பான ஸிரைகள் பரவியிருக்கும்; வியர்வை அதிகமாகும்; சூட்டினுல் தேஹம் அழற்சிகொள்ளும்; வெப்பம் விசேஷித்துக் காணும்; உதரம் பரிசிப்பதற்கு மிருதுவாகவும், சீக்கிரம் முதிர்ந்து பக்குவமடையக் கூடியதாகவும், அழற்சியைப் பெற்று[2] மிகத் துன்பமளிக்கும். 9, 10.

கபோதரம்:—கபதோஷக் கோளாருலாகிய உதர ரோகத்தில் உடல் ஒருவாறு வலிவிற் குன்றும்; தேஹத்திலுணர்ச்சி குறையும்; வீக்கமும் உடலின் பாரமும் அதிகப்படும்; நித்திரை அதிகரிக்கும்; குமட்டுவதுடன் வாயில் நீரூறும்; அரோசகமுண்டாகும்; ச்வாஸம், காஸம் இவையுண்டாம்; சர்மம் முதலியது வெண்மையாகும்; வயிறு ஸ்திமிதப்பட்டு மழ மழப்பாய், வெண் ஸிரைகளால் வியாபிக்கப்பட்டதாய் மிகப் பெரியதாகக் காணும். இவ்வுதரரோகம் காலகிரமத்தில் விருத்தியாகும்; வயிறு கடினமாகவும், குளிர்ந்ததாகவும், குருவாகவும், அசைவற்றதாகவும் காணப்படும். 11, 12.

ஸந்நிபாதோதரம்:—நன்னெறி த்வறிய ஸ்த்ரீகள் தமது நகங்களையும், உரோமங்களையும், மலமூத்திரங்களையும், இரஜஸ்ஸையும்[3] அன்னபானங்களிற் கலந்து எவனுக்குக் கொடுத்து விடுகிருர்களோ, அல்லது

1. பிறகு உடலெங்கும் அழற்சியுண்டாகுமென்கிறபடியால், வயிற்றில் மாத்திரம் விசேஷ அழற்சியுண்டாமெனக் கருத்து.

2. இவ்விதம் பக்குவமடைவதால் சீக்கிரத்தில் இதுவே "ஜலோதரம்" என்னும் வியாதியாக மாறும் என்று ஸ்ரீ கண்டதத்தன்.

3. இரஜஸ்—ஸ்த்ரீகளுக்கு மாதவிடாயிற் காணும் உதிரத்திலடங்கிய கர்ப்பத்திற்குக் காரணமான ஸ்த்ரீபீஜம். இதுவே ஆர்த்தவம் எனப்படும்.

பகைவர் எவனுக்கு கரவிஷங்களைக்[1] கொடுக்கிறார்களோ, அல்லது எவன் கெட்டுப் போன ஜலத்தையும் தூஷீ விஷத்தையும்[2] அறியாமையால் உட்கொள்கிறானோ அவனுக்கு ஜடிதியில் இரத்தம் கெட்டுப் போய், தோஷங்களும் பிரகோப மடைந்து[3], மிகக் கொடிய ஸந்நிபாத ஸம்பந்தமான உதரரோக முண்டாகிறது. அது சீத காலங்களிலும், விசேஷமாய் வாயு வீசுகையிலும், மழை பெய்யும் ஸமயங்களிலும் மிகவும் அதிகமாய் விருத்தியடைகிறது; அப்பிணியாளி அடிக்கடியும் மூர்ச்சை யடைவான்; உடல் வெளுத்து, இளைத்து, நாவறட்சியினால் சுஷ்கித்து வருந்துவான். ஸந்நிபாதோதரத்திற்கே தூஷ்யோதரம் என்றும் பெயர். 13—14½.

ப்லீஹோதரம்:—ப்லீஹம் என்கிற அவயவம் வீங்குவதால் காணும் உதர ரோகம் இனி கூறப்படுகிறது. விதாஹி, அபிஷ்யந்தி என்னும் குணமுள்ள திரவ்யங்களை அமிதமா யுபயோகிப்பதால் இரத்தமும் கபதோஷமும் மிகவும் தூஷிப்பிக்கப்பட்டு, அவற்றால் ப்லீஹம் வீங்கி, 'ப்லீஹோதரம்' உண்டாகிறது. இது வயிற்றினுள் இடது புறத்திற் பருத்துக் காணும். இவ் வியாதியில் எப்பொழுதும் மந்த ஜ்வரமும் அக்னிமாந்த்யமும் தொடர்ந்திருக்கும்; கப - பித்தங்களுடைய குறிகள் மேலெழுந்து காணும்; பலம் க்ஷீணிக்கும்; உடல் மிக வெளிறும்; இவற்றால் பிணியாளி மிகத் துன்புறுவான். 15—17.

யக்ருதுதரம்:—வயிற்றில் ப்லீஹத்தைப்போல வலது புறத்தில் யக்ருத் என்கிற அவயவம் வீங்கினால் அதை யக்ருத்தால்யுதரம் என்றறிக. இதில் (1) உதாவர்த்தம், வீங்கிய பாகத்தில் வலிப்பு, வயிற்றுப் பொருமல் இவை யுண்டாயிருந்தால் வாததோஷத்தினால் வியாதியுண்டாயிருப்பதாகவும், (2) மூர்ச்சை, நாவறட்சி, அழற்சி, ஜ்வரம் இவை யுண்டானால் பித்தம் அதிகரித்து வியாதியுண்டாயிருப்பதாகவும், (3) வயிற்றிலும் தேஹத்திலும் குருத்வம், அரோசகம், கடினத்தன்மை இக்குறிகளுண்டாயிருந்தால் கபதோஷம் அதிகரித்து இஃது உண்டாயிருப்பதாகவும் அறிய வேண்டும். 18.

பத்தகுதோதரம்: — குடலானது, ஒட்டிக்கொள்ளுந் தன்மையுள்ள உணவுகளாலும், உணவுடன் கலந்து உட்செல்லும் உரோமங்கள் கற்கள் முதலியவற்றாலும் மிகுதியாய் அடைபட்டுப் போக, குடலில் மலமும் தோஷங்களும்[4] சிறுகச் சிறுகக் குப்பைகளைப்

---

1. கரவிஷம்—சுயம் விஷத்தன்மையற்ற சில பதார்த்தங்களை ஒன்றோடொன்று சேர்ப்பதால் அச்சேர்க்கை விஷ பதார்த்தமாகும்; அது 'கரவிஷம்' எனப்படும்.

2. தூஷீ விஷம்—விஷ நிதாநம் பார்க்க.

3. விஷங்கள் ஸாதாரணமாய் மூன்று தோஷங்களையும் பிரகோபிக்கச் செய்வதியல்பு.

4. தோஷங்கள்—மூன்று தோஷங்களும் இதில் கோளாறடைவதாகக் கருதப்படுகிறது. ஆகவே இதுவும் ஸந்நிபாததோஷமுள்ள வியாதி யெனக்கூறப்படும்.

போல் குவிகின்றன; அவனது குதத்தில் மலம் அடைபட்டு, மிகச் சொற்பம் சொற்பமாய் அதிக கஷ்டத்துடன் வெளியாகும்; அதனால் வயிறு நாபிக்கும் மார்புக்கும் இடையில் ஊதிப் பருத்துப் போம்; இதை "பத்தகுதோதரம்" [1] என்பார்கள். 19, 20.

க்ஷதோதரம்:—அங்ஙனமே ஏதேனும் சல்யம்[2] உணவுடன் கலந்து குடலுக்குட் சென்று குடலைக் குத்தி விடுவதால், அல்லது வேறு எக்காரணத்தினாலாவது [3] குடல் சிதைவதால் அக்குடலின் த்வாரத்திலிருந்து ஒருவித கசிவு வெளியாய், விசேஷமாய் குதம் வழியாக அது வெளிப்படும். அதில் நாபிக்குக் கீழே வயிறு பருத்துப் போம்; அதிகமான குத்தல், கிழிக்கப்படுவது போன்ற வலி இவை யுண்டாம்; இதுவே பரிஸ்ராவ்யுதரம் எனப் படுகிறது. [4] 21, 22.

உதகோதரம்:—ஸ்நேஹபானம் [5] செய்து கொண்டாகிலும், அநுவாஸநவஸ்தி [6] செய்து கொண்டாகிலும், வமனமாவது விரேசனமாவது [7] செய்துகொண்டாகிலும், நிரூஹவஸ்தி செய்துகொண்டாகிலும், உடனே குளிர்ந்த ஜலத்தை மிகுதியாகக் குடித்தால் நிணநீர்த்தாரைகள்[8] தூஷிப்பிக்கப்படுகின்றன; அல்லது அந்த ஸ்ரோதஸ்ஸுகளே எண்ணெய்ப்பசையுள்ள பதார்த்தங்களால் பூசப்பட்டு அடைபட்டுப்போனால் அப்பொழுதும் முன்போலவே வயிறு விம்மி தகோதரம் காண்கிறது. இவ்வியாதியில் வயிறு நிகிநிகிப்பாகவும், மிகப் பெரிதாகவும், சுரந்து வட்டமாகப் பருத்த நாபியுடன் கூடியதாதவும், வலித்து இழுக்கப்பட்டு நாற்புறமும் விசாலித்து நீர் நிரம்பி

1. குதத்திற்கு மேலே குடல் (மலாசயத்தில்) அடைக்கப் படுவதால் இப்பெயர் வந்தது. கீழே குதத்தில் அடைப்புண்டாவதால் மார்புக்கும் நாபிக்கும் மத்தியில் ஊதலுண்டாம்.

2. சல்யம் — உடலுக்குட் சிதைவையுண்டுபண்ணும் முள், கூரிய ஆணி முதலிய வஸ்துக்கள் சல்யம் எனப்படுகின்றன.

3. அதிகமாய் வயிறு ஊதும்படி சிரித்தல், கொட்டாவி விடுதல், அமிதமாயுண்ணுதல் முதலியவை வேறு காரணங்களாம். "கூரிய கற்கள், ஓடுகள், எலும்புகள், முள் இவை உணவுடன் உட்செல்வதாலும், கொட்டாவியாலும், அமிதமாகச் சிரிப்பதாலும், அளவுமீறி யுண்பதாலும் குடல் சிதைவுறும்" என்று சரகர்.

4. "க்ஷதோதரம்" என்றும், "பரிஸ்ராவ்யுதரம்" என்றும் ஒரே வியாதியின் நாமபேதங்கள்.

5. ஸ்நேஹபானம்—தைலம் கிருதம் முதலிய ஔஷதங்களை உட்கொள்ளும் சிகித்ஸை.

6. அநுவாஸந வஸ்தி—தைலம் கிருதம் முதலிய ஸ்நேஹங்களைக் கொண்டு குதத்வாரத்தின் மூலமாய் குடலிற் பிரயோகித்து செய்யப்படும் சிகித்ஸை.

7. வமன-விரேசனங்கள் — வாந்திரூபமாகவும் பேதி ரூபமாகவும் முறையே தேஹத்திலிருந்து தோஷங்களை வெளிப்படுத்தும் சிகித்ஸா முறைகள்.

8. நிணநீர்த்தாரைகள்—உதகவஹஸ்ரோதஸ்ஸுகள் அல்லது இரஸாயனிகள்.

யிருப்பது போன்றதாகவும் இருக்கும்; வயிறு தண்ணீர் நிரம்பி ஒரு தோல் துருத்தியைப் போல் தத்தளித்து அசையும்[1]; அவ்விதமே சப்தமும் உண்டாகும்; இது "தகோதரம்" எனப்படும்.[2] 23, 24.

உதரரோகத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்[3]:—உதரரோகம் உண்டாய்விட்டால் அது எவ்வித உதரமாயினும் பெரும்பாலும் கஷ்டஸாத்யமென்று கருதப்படுகிறது. நல்ல திடகாத்திரமுள்ளவனுக்கு உண்டாவதும், நீர் சேராததும், சொற்பகாலத்திற் குள்ளாண்டானதுமான உதரரோகம் ஒருவாறு பெருமுயற்சியினால் நிவாரணம் செய்யத்தக்கது. பத்த குதோதரமும், விசேஷமாக நீர் சேர்ந்துள்ள உதகோதரமும், க்ஷதோதரமும் அவை தோன்றின ஒரு பக்ஷத்திற்குப் பிறகு பெரும்பாலும் அஸாத்ய மாகும். கண்கள் வீங்கியும், உபஸ்தம் அல்லது லிங்கம் வக்ரித்தும், சர்மம் மெல்லிதாய் கசிவடைந்தும், இரத்தம் மாம்ஸம் ஜாடராக்னி தேஹவன்மை இவை க்ஷீணித்துமுள்ள நிலைமைகளும் அஸாத்யக் குறிகளாகும். மேலும் விலாப் பக்கங்கள் வலிவற்றுப்போதல், உணவில் வெறுப்பு, வீக்கம், அதிஸாரம் இக்குறிகளைப்பெற்ற உதரரோகமும், விரேசநம் செய்வித்து நீர்களை வடித்தும் உடனே நீர் சுரந்து வயிறு நிரம்பும் நிலைமையைப் பெற்ற உதரரோகமும் சிகித்ஸைக்கு வசப்படா. 25—28.

---

1. க்ஷதோதரத்தில் குடலிலிருந்து நீர் வகைகள் கசிவது போலவே இவ்வியாதியிலும் நீர்க்கசிவு குடலுக்குள் ஏற்பட்டு வயிறு விம்மிக்கொள்ளு மெனக் கருத்து. "சித்ரோதரத்தில் நாபிக்குக் கீழே எப்படி வயிறு பருத்து, குதத்திலிருந்தும் நீரும் வடிகிறதோ அவ்விதமே தகோதரத்திலும் காண்கிறது" என்று கதாதரன். ஆனால் சித்ரோதரத்தில் நீர்க் கசிவுடன் இதர கனபதார்த்தங்களும் குடலிலிருந்து வெளியாகக் கூடும். உதகோதரத்தில் விசேஷமான நீர்க் கசிவுமாத்திரமே காணும்.

2. தகோதரம் என்பது நீர் மிகுதியாகக் குடலுக்கு வெளிப்புறத்திற் சேர்ந்துள்ள வயிற்றுக் கோளாறு. தகோதரம் என்றும், ஜலோதரம் என்றும், மஹோதரம் என்றும், நீர்க்கோவை யென்றும் உதகோதரத்திற்கே பெயர்.

3. உதரரோகத்தில் நீர் சேராத நிலைமைக்குள்ள லக்ஷணம் சரகரால்இங்ஙனம் விவரிக்கப்படுகிறது:—"வயிற்றில் சப்தமுண்டாம்; வயிறு ஒருவாறு சிவந்திருக்கும்; வீக்கம் அதிகமாகத் தோன்றாது; வயிறு விசேஷ பாரமுள்ளதாகாது; ஸிரைகளென்கிற இரத்தக் குழாய்கள் வயிற்றின் மீது கொடிகொடியாகப் புலப்படும்; வயிற்றில் வாயு சேர்ந்து நாபியை விம்மச்செய்து, குதத்தின் மூலமாய் வேகத்துடன் வெளிவந்து தணிவடையும்; இருதயம், துடையிடுக்குகள், இடுப்பு, நாபி, குதம் இவற்றில் விசேஷ வலியுண்டாம்; ஜாடராக்னி ஒருவாறு மந்தமாகும்; வாய் உமிழ் நீரால் அருவருப்பு கொள்ளும்; மூத்திரம் குறைந்து போகும்."

# 36. சோத நிதாநம்.*

சோதையின் ஸம்ப்ராப்தி:-ஏதேனும் காரணத்தால் கோளாறடைந்த வாயுவானது அங்ஙனமே விகாரமடைந்த பித்தத்தையும் இரத்தத்தையும் கபத்தையும் ஸிரைகளிலும் ஸிரைகளுக்கு வெளியிலும் மிகுதியாகப் பரவச் செய்து, அவற்றால் இவ்வாயுவின் மார்க்கம் அடைபட்டுப்போக, சர்மத்தையும் மாம்ஸபேசிகளையும் பற்றிய தான பெரிய வீக்கத்தை யுண்டுபண்ணும்; ஆகவே எல்லாச் சோதையையும் ஸந்நிபாதத்தினாலான வியாதி யென்று[1] கூறுவர். 1½.

சோதை ஒன்பது விதம்:—வெவ்வேறு காரணங்களால் இவ்வியாதியில் வெவ்வேறுவித குறிகள் தோன்றுமாகையால், அவற்றைக் கொண்டு இவ்வியாதி ஒன்பது விதமாய் பிரிக்கப்படுகிறது:—வாத - பித்த - கபங்களில் ஒவவொன்றால் ஒவ்வொரு சோதையுண்டாம்; இரட்டைத் தோஷங்களால் த்வந்த்வ சோதைகள் மூன்று; ஸந்நிபாதத்தினால் ஒன்று; அடி முதலியது தாக்குவதால் ஒன்று; விஷ ஸம்பந்தத்தினால் ஒன்று; ஆக இவை ஒன்பது விதங்கள். 2½.

சோதைகளின் பூர்வ ரூபங்கள்:—ஓர் குறிப்பிட்ட விடத்தில் அழற்சி, ஸிரைகளென்கிற இரத்தக் குழாய்கள் வலித்து விறிக்கப்படுவது போன்ற வேதனை, உடல் பாரமா யுணரப்படுதல் ஆகியவை சோதையின் பூர்வ ரூபங்களாம். 3.

சோதைகளுக்குப் பொதுக்காரணங்கள்:—பலமான சோதந சிகித்ஸைகளாலும்[2], கடுமையான இதர வியாதிகளாலும், தகாத போஜனங்களாலும், அல்லது போஜன மின்மையாலும் இளைத்தும் துர்பலமாகவு முள்ளவர் க்ஷாரங்களையும், அம்லபதார்த்தங்களையும், மற்றும் தீக்ஷ்ணமும் உஷ்ணமுமான திரவ்யங்களையும், குரு குணமான வஸ்துக்களையும் உபயோகிப்பது, தயிர்-பக்குவமாகாத பண்டங்கள்-அத்தகைய சாகங்கள் - மண் - ஒன்றுக்கொன்று சேருவதால்

---

*சோதை யென்பதே தமிழில் சோகை யெனப்படுகிறது. இதற்குச் சோபை அல்லது சோபம், வீக்கம் என்றும் பெயர். சோதை சர்மத்தையும் மாம்ஸத்தையும் பற்றி தேஹத்தில் எப் பாகத்திலுமுண்டாகலாம்; உதரவியாதி வயிற்றையும், வயிற்றிலடங்கிய யக்ருத் முதலிய அவயவங்களையும் ஆச்ரயித்தே காணும். இது உதர ரோகத்துக்கும் சோதைக்குமுள்ள முக்கிய பேதம்.

1. சர்மத்தையும், மாம்ஸங்களையும் பற்றியுண்டாவதாகக் கூறுவதால், விரணசோதையினும் இது வேறுபட்டதென்று அறிக. "விரண சோதையானது சர்மம், மாம்ஸம், ஸிரைகள், ஸ்நாயுக்கள், அஸ்திகள், ஸந்திகள், கோஷ்டங்கள், மர்மங்கள் என்கிற எட்டு ஸ்தாநங்களை ஆச்ரயித்துண்டாகிறது'' என்று ஸுச்ருதர்.

2. சோதந சிகித்ஸைகள்:—வமநம் (வாந்திசெய்வித்தல்), விரேசநம் (மலம் கழியச் செய்தல்), வஸ்தி (குதம் அல்லது மூத்திர த்வாரங்களில் திரவௌஷதங்களைச் செலுத்தி தோஷ சோதனம் செய்வித்தல்), ஸ்வேதநம் (வியர்வை சுரக்குமாறு செய்வித்தல்) முதலியவை இங்ஙயே தோஷஹர சிகித்ஸைகள்.

விரோத குண மூண்டு பண்ணும் வஸ்துக்கள் [1].பதனழிந்த பதார்த்தங்கள்-கரமென்கிற விஷம் இவை ஸம்பந்தித்த அன்னத்தைப் புஜிப்பது, அர்சஸ் என்கிற மூலரோகம், எவ்வித வேலையுமின்றி உட்கார்ந்திருத்தல், சோதந சிகிச்சைகளுக்கு அவச்யமான நிலைமைகளில் அவற்றைச் செய்துகொள்ளாமலிருத்தல், மர்மஸ்த்தாநங்கள் [2] தாக்கப்படுதல், ஒழுங்கினப் பிரஸவம், வமநவிரேசநாதி சிகித்ஸைகளை முறை தவருகப் பிரயோகித்தல் இவை நிஜசோதைகளுக்குக் [3] காரணங்களாம். 4, 5.

சோதைகளின் ஸாமாந்யலக்ஷணம்:—சோதையென்கிற வீக்கங்கொண்ட அவயவம் ஒரு ஸமயம் அதிக பாரமுள்ளதாகவும், மற்ருெரு ஸமயம் ஸாதாரணமாகவும் இருக்கும்; அவ்விடம் இயற்கையினும் மிகப் பருத்தும் சூடாகவுமிருக்கும்; ஸிரைகள் வீக்கத்தில் வரி வரியாகத் தோன்றும்; ரோமங்கள் சிலிர்த்துக் கொள்ளும்; சர்மத்தின் நிறம் ஒருவாறு கருநிறமாகும். இவை சோதையின் ஸாமாந்ய லக்ஷணங்களாகும். 6.

வாதசோதை:—வீக்கமானது ஒரு பாரிசத்திற் பரிசிக்க மற்ருெரு பாரிசத்தில் அசைந்தோடும்; அவ்விடத்தில் சர்மம் மெல்லியதாகும்; ரூக்ஷத்தன்மையும், கருஞ் சிவப்பான நிறமும், திமிர்ப்பும், மயிர்ச்சிலிர்க்கையும், வலியும் அவ்விடத்திற் காணும்; இதெல்லாம் திடீரென்று அப்போதைக்கப்போது தோன்றி மறையும்;[4] அவ்விடத்தை அழுத்தினுல் குழியைப்போல் அழுந்தி மீண்டும் உயர்ந்து அக்குழி மறையும்; இவ்வீக்கம் பகலில் அதிக தொந்தரவளிக்கும். இவை வாததோஷத்தினுலான சோதையின் இலக்ஷணங்களாம். 7.

பித்த சோதை:—வீங்கிய பாகம் ஒருவித நாற்றத்தோடு கறுப்பும்

---

1. தேன், நெய், கொழுப்புகள், எண்ணெய், ஜலம் இவை தனித்தனி யுபயோகிக்கப் பட்டால் கெடுதியுண்டு பண்ணுபவை யல்லவாயினும், இவற்றைச் சம அளவில் அனைத்தையுமோ சிலவற்றையோ சேர்த்துட் கொண்டால் விஷ குணத்தைக் காட்டுமெனக் கூறப்படுகிறது. இவை ஒன்ருேடொன்று குணத்தில் விரோதமானவை. அவ்வித பதார்த்தங்கள் விருத்த திரவியங்கள் எனப்படும்.

2. மர்மஸ்த்தாநங்கள்:—ஸாதாரணமாய் அடி முதலியது தாக்குவதால் பிராணனுக்கோ சில அவயவங்களுக்கோ ஹானியைத் தரக்கூடிய வெகு நுட்பமான ஜீவாதாரமாயுள்ள ஸத்தாநங்கள். மாம்ஸ மர்மங்கள், அஸ்த்தி மர்மங்கள், ஸ்நாயு மர்மங்கள், தமனீமர்மங்கள், ஸிரா மர்மங்கள், ஸந்தி மர்மங்கள் என்று மர்மங்கள் ஸங்கிரஹமாக ஆறுவிதம். வேறு விவரங்களை மேதோரோகடிப்பணியிற் காண்க.

3. தோஷங்களாலுண்டாவது நிஜசோதையாம்; அடி முதலியது தாக்குவதாலுண்டாவது ஆகந்து சோதையாகும்.

4. வாததோஷம் எப்பொழுதும் சலநஸ்வபாவமுள்ளதாகையால், அதன் தன்மைக் கேற்றவாறு அதனுலான சோதையும் திடீரென்றுண்டாய் திடீரென்று மறையுந் தன்மையதாயிருக்கும்;

பசுமையும் கலந்து, மிருதுவாயிருக்கும்; தலைச்சுற்றல், ஜ்வரம், அமித மாய் வியர்த்தல், நாவறட்சி, வெறி இவை தோன்றும்; வீக்கத்தில் கடுமையான அழற்சியும், வலியும் உண்டாம். கண்கள் சிவக்கும்; வீக்கம் பக்குவமாகையில் அழற்சி தாங்கக்கூடாததாகும். இவை பித்த சோதையின் குறிகளாம். 8.

கப சோதை:—வீக்கம் குருவாகவும், அசைவற்றதாகவும், வெண்மையாகவுமிருக்கும்; அரோசகமுண்டாகும்; வாயில் உமிழ்நீரும், நித்திரையும், வாந்தியும், அக்னிமாந்த்யமும் அதிகமாய் உண்டாகும்; அழுத்தினால் பள்ளம் விழுந்து மீண்டும் அது மேலெழாமல் நெடு நேரம் நிற்கும்; இரவில் இதன் தொந்தரவு அதிகமாகும்[1]. மிகவும் மெதுவாக சரீரத்திலுற்பத்தியாய் மிக்க மெதுவாகவே நிவாரணமாகும். இவை கப தோஷத்தினாலான சோதையின் குறிகளாம். 9.

த்வந்த்வ ஸந்நிபாத சோதைகள்:—வாத-பித்த சோதை, வாத-கப சோதை, பித்த-கப சோதை யென்கிற த்வந்த்வ தோஷ ஸம்பந்தமான மூன்றுவித சோதைகளிலும் இரண்டிரண்டு தோஷங்களின் குறிகளும், ஸந்நிபாத சோதையில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் சேர்ந்து தோன்றும். 10.

அபிகாதஜ சோதை:—சஸ்திரம் முதலியவற்றால் அவயவம் அறுபடுவது, பிளவுறுவது, மற்றும் காயம் முதலியது தாக்குவது, கடுமையான பனிச்சாரல் - கடலிலிருந்து கிளம்பும் விஷக்காற்று - சேராங் கொட்டையின் சாறு-காஞ்சோறி முதலியதின் சுணை இவற்றால் தாக்கப்படுவது ஆகிய காரணங்களால் விஸர்ப்பத்துடன் கூடிய சோதை யுண்டாகும்; இது அபிகாதத்தினாலான சோபையாம். இந்த சோதை மிகவும் உஷ்ணமாகவும், செந்நிறமாகவும், பெரும்பாலும் பித்ததோஷக் குறிகளுள்ளதாகவு மிருக்கும். 11, 12.

விஷஜசோதை:—விஷமுள்ள பிராணிகள்[2] மேலே ஊர்ந்து போவதாலும், அவை மூத்திரம் விடுவதாலும், கோரப்பற்கள் நகங்கள் இவற்றால் தீண்டப்படுவதாலும், விஷமில்லாத பிராணிகளுடைய கோரப்பற்களும் நகங்களும் தாக்குவதாலும், மல-மூத்திரங்களும்-சுக்ரம் முதலியவற்றால் மலினமாய் தோஷப்பற்றடைந்த வஸ்திராதிகளின் ஸம்பந்தத்தாலும், விஷ விருக்ஷங்களிலிருந்து வரும் வாயுவின் பரிசத்தாலும், கிருத்ரிம விஷங்களாலான சூர்ணங்களின் ஸம்பந்தத்தினாலும் சோதை யுண்டாகும். இது மிருதுவாகவும், தொங்கி அசையுந்தன்மையதாகவும், சீக்கிரம் உற்பத்தியாய் மிக்க அழற்சியையும் வலியையும் உண்டு பண்ணுவதாகவு மிருக்கும். 13—14½.

தோஷஸ்த்தாநங்களும் சோதை யுண்டாகுமிடங்களும்:—தோஷங்கள் ஆமாசயத்தைப் பற்றியிருந்தால் அவை தேஹத்தின்

---

1. இரவில் ஸ்ரோதஸ்ஸுகள் அதிக சுருசுருப்பில்லாமல், தேஹத்திலுள்ள நீர்கள் வெளிவராமல், கபமும் சுபாவமாகவே அதிகப்படும்; ஆகவே அதனாலான வீக்கமும் இரவில் கடுமையாகும்.

2. சையான், பூரான், தேள், சிலந்திகள், பாம்புகள் முதலியன.

மேற்புறத்திலும் [1], பக்குவாசயத்தைப் பற்றியிருந்தால் [2] சரீரத்தின் நடுப்புறத்திலும், மலாசயத்தைப் பற்றியவையானுல் கிழவயவங்களிலும் சோதையுண்டு பண்ணும். சரீர முழுமையும் பற்றியிருந்தால் வீக்கம் தேஹமெங்கும் பரவித் தோன்றும். 15, 16.

சோதைகளில் ஸாத்யாஸாத்யங்களும் உபத்திரவங்களும்: — (1) தேஹத்தின் மத்தியில் [3] உண்டானதும், ஸர்வ சரீரத்தையும் பற்றியதும், தேஹத்தில் நெடுகவும் அர்த்த பாகத்தைப் பற்றி ரிஷ்டரூபமாயுண்டானதும்,[4] கீழிருந்து மேலே பரவிச் செல்லுவதுமான வீக்கங்கள் கஷ்ட ஸாத்யமானவை. (2) ச்வாஸம் அதிகரித்தல், நாவறட்சி, வாந்தி, அதிகபலஹீனம், ஜ்வரம், உணவில் விருப்ப மின்மை இவ் வுபத்திரவங்களைப் [5] பெற்ற சோதை அஸாத்ய வியாதியாம், (3) வேறு உபத்திரவங்களா லுண்டாகாததும், [6] பாதங்களில் மாத்திரம் ஆரம்பித்ததுமான வீக்கம் புருஷரையும், முகத்தில் தோன்றியது ஸ்த்ரீகளையும், குஹ்யஸ்த்தாநத்தி லுண்டான [7] வீக்கம் இரு பாலரையும் கொன்றுவிடும். [8] (4) புதிதாகத் தோன்றியுள்ள சோதையும், உபத்திரவங்களைப்பெறாத சோதையும் எளிதில் நிவாரணம் செய்யத் தகுந்தனவாம். இவற்றைத் தவிர முற்கூறிய மற்ற சோதைகள் அஸாத்யங்களாம். (5) மேலும் வயிற்றிலும், தொண்டையிலும், மர்மஸ்த்தாநத்திலும் உண்டாகும் வீக்கமும், மிகவும் பருத்து கடினமாயுள்ள வீக்கமும், குழந்தைகளுக்கும் கிழவருக்கும் உண்டாகும் வீக்கமும் அஸாத்யமாம். 17—20.

---

1. மேற்புறம்—மார்பு, தோள், கழுத்து முதலிய வயிற்றுக்கு மேலேயுள்ள அவயவங்கள்.

2. பக்குவாசயம்—ஆமாசயத்திற்குக் கீழுள்ள குடல்.

3. இடுப்புக்கு மேலே மார்புக்குக் கீழ்ப்பட்டுள்ள பாகம்.

4. ரிஷ்டம்—துர்ஸ்வப்னங்களும், உருவம், நிறம், இந்த்ரியங்கள், குரல், சாயை, ப்ரதிச்சாயை யென்னும் ப்ரதிபிம்பம், செய்கை இவற்றிலும், மற்றுமுள்ள இயற்கைத் தன்மைகளிலும் காரணமறிய முடியாமலே உண்டாகும் விகாரம் ரிஷ்டம் எனப்படும்.

5. "ச்வாஸம், நாவறட்சி, துர்ப்பலத்தன்மை, ஜ்வரம், வாந்தி, அரோசகம், விக்கல், அதிஸாரம், காஸம் இவை சோதையில் பிணியாளியை யொழிக்கும் உபத்திரவங்கள்" என்று ஸுச்ருதர்.

6. இதர வியாதிகளின் உபத்திரவங்களோடு கூடியதாகாத சோதை யெனப் பொருள்.

7. குஹ்யம் என்பது பொதுவாக ஸ்த்ரீ புருஷர்களுடைய பெண்குறி ஆண்குறிகளுக்கே பெயர். ஆனல் இங்கே இவற்றிற்கு வஸ்தி என்று வியாக்யாதா பொருள் கூறுகிறார்.

8. புருஷருக்கு முதலில் வீக்கம் பாதங்களில் தோன்றி, க்ரமமாக மேலே முகத்தை நோக்கிப் பரவினுலும், ஸ்திரீகளுக்கு அதற்கு நேர்மாருக முகத்தில் வீக்கம் தோன்றிப் பாதங்களை நோக்கி இறங்கினுலும் அவை அஸாத்யக் குறிகளாம். மூத்திராசயத்தைப் பற்றிய வீக்கம் இருவருக்கும் அஸாத்யமாம்.

# 37. வ்ருத்தி நிதாநம்.*

வ்ருத்தியின் ஸம்ப்ராப்தி:—ப்ரகோபமடைந்த வாயு வயிற்றில் மேலே செல்ல முடியாது வழி தடுக்கப்பட, அதனால் மீண்டும் பலமாக அது வ்ருத்தியடைந்து, வீக்கத்தையும் வலியையும் உண்டுபண்ணிக் கொண்டு, அசைந்து வங்க்ஷணம் என்கிற துடையிடுக்கின் உட்புற வழியாய் பீஜகோசங்களென்கிற விதைப்பைக்குள் இறங்கி, அங்குள்ள வித்துகளுக்குச்[1] செல்லும் தமனிகளை அழுத்தி, அக்கோசங்களில் வலியுடன் வ்ருத்தியை யுண்டுபண்ணும். 1, 1½.

ஏழுவித வ்ருத்திகள்:—மூன்று தோஷங்களால் தனித் தனியாக ஒவ்வொரு வ்ருத்தியும், இரத்த தோஷத்தினால் ஒன்றும், மேதஸ்ஸினால் ஒன்றும், மூத்திரத்தினால் ஒன்றும், அந்த்ரம் என்கிற குடல் கீழிறங்குவதால் ஒன்றும் ஆக ஏழுவித வ்ருத்திகள் காணும். மூத்திரவ்ருத்தியும் அந்த்ரவிருத்தியுங் கூட வாதகோபத்தினாலேயே உண்டாகின்றன வாயினும், ஸாதாரணமான மேற்புற லக்ஷணங்களைக் கொண்டு அவை வேறு நோய்களென்று உபலக்ஷணமாகக் கூறப்பட்டது.[2] 2½.

வாதஜ வ்ருத்தி:—வாததோஷத்தாலான வ்ருத்தியில் பீஜகோசங்கள் பரிசிக்கக் காற்று நிரம்பிய துருத்தி போலிருக்கும்; அது ரூக்ஷமாகவும், திடீரென்று வலியைத் தருவதாகவு மிருக்கும். 3.

பித்தஜ வ்ருத்தி:—பித்தஸம்பந்தமான வ்ருத்தியில் பீஜகோசம் கனிந்த அத்திப்பழம் போன்றதாய் அழற்சியோடும் சூட்டோடுங் கூடி சமைக்கப்படுவது போல் வேதனையைப் பெறும். 3½.

கபஜ வ்ருத்தி:—கபத்தினாலான வ்ருத்தியில் பீஜகோசம் அதிக குளிர்ச்சியாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், தினவுள்ளதாகவும், கடினமாகவும், சிறிது நோவுள்ளதாகவும் இருக்கும். 4.

இரக்தஜ வ்ருத்தி:—இரத்த தோஷத்தினாலான வ்ருத்தியில் பீஜகோசத்தில் கறுத்த கொப்புளங்கள் பரவியிருக்க, பித்தஜ வ்ருத்தியின் இலக்ஷணங்களும் அதிற் காணும். 4½.

மேதோஜ வ்ருத்தி:—மேதஸ் அதிகரிப்பதால் உண்டாகும் வ்ருத்

---

*அண்டம் என்கிற பீஜகோசம் பலவகைகளில் பருத்து அல்லது வீங்கிப்போகும் வியாதி பொதுவாக "வ்ருத்தி" எனப்படுகிறது.

1. இவ் வித்துகளுக்கு பலங்கள் என்றும், அவற்றிற்கு ஆவரணமாயுள்ள பாகங்களுக்கு பல கோசங்கள் என்றும் பெயர். பலம் என்பதற்கே பீஜம் என்றும் பெயர். அது சுக்ரரூபமான பீஜத்திற்கு முக்கியமான உற்பத்தி ஸ்த்தானமாகையால் பல கோசம் எனப்படும். கர்ப்பாசயத்திற்கு இரு புறங்களிலும் ஸ்திரீகளுக்கும் இவ்வித பலகோசங்கள் உண்டு. அவை ஆர்த்தவ ரூபமான சோணித பீஜங்களை யுற்பத்திசெய்யும்.

2. ஒரே வியாதி நிமித்தபேதங்களுக்கு ஏற்றவாறு பலவிதமாகப் பகுக்கப்படுகிறது. தோஷதாதுக்களுடைய சேர்க்கைகள், ஸ்த்தாந பேதங்கள் முதலிய முகாந்தரங்களை யனுஸரித்து ஒவ்வொரு வியாதியிலும் பேதங்கள் கூறப்படுகின்றன.

தியில் கபஜ வ்ருத்தியின் குறிகள் காணப்படுவதோடு, மிருதுவாகவும், பனம்பழம் போன்றதாகவும் பீஜகோசம் பருத்துக் காணும். 5.

மூத்திரஜ வ்ருத்தி:—மூத்திரத்தை அடக்கும் வழக்கமுள்ளவனுக்கு மூத்திர வ்ருத்தி யென்னும் வியாதியுண்டாகிறது[1]. இதில் பீஜகோசம் நடக்கும்போது ஜலம் நிரம்பிய துருத்திபோல் குலுங்கியசையும்; மிருதுவாகும்; வலியுடையதாயிருக்கும்; நீர்ச்சுருக்கும் தோன்றும். 6, 6½.

அந்த்ர வ்ருத்தி:—வாததோஷத்தைப் பிரகோபிக்கச் செய்யும் உணவுகளாலும், குளிர்ந்த ஜலத்தில் ஓடியாடி முழுகி விளையாடுவதாலும், வேகங்களை அடக்குவது அல்லது பலாத்காரமாய் அவற்றை ஏவுவதென்னும் இயற்கைக்கு ஒவ்வாத காரியங்களாலும், பெருஞ்சுமைகளைச் சுமப்பதாலும், நெடுந்தூரம் ஓய்வின்றி நடப்பதாலும், விஷமமாக அங்கங்களை யுபயோகித்து வேலை செய்வதாலும், தேஹத்துக்கு அதிறசி யுண்டுபண்ணும் மற்ற வேலைகளாலும்[2] விருத்தியான வாயுவானது பீஜகொசத்தில் விம்மலையும், வலியையும், பிடிப்பையுமுண்டுபண்ணும்; பீஜகோசத்தை மெதுவாக அழுத்தினுல் ஒருவித சப்தத்தோடு மேல் நோக்கிக் குடல் உட்சென்று, விட்டவுடனே பீஜகோசத்தைப் பெருக்கச்செய்து கொண்டு மறுபடியும் குடல் கீழே இறங்கிவிடும். வாத வ்ருத்தியின் குறிகளையுடைய இந்த அந்த்ர வ்ருத்தி ஸாதாரண சிகித்ஸைக்கு வசப்படாதது.[3] 7—10½.

## 38. களகண்ட-கண்டமாலா அபசீ-கிரந்தி அற்புத நிதாநம்

### களகண்டம்[4]

களகண்டத்தின் ஸம்ப்ராப்திகள்:—(1) கழுத்தில் பீஜகோசம் போன்றதாய் பெரிதாகவோ சிறிதாகவோ எழும்பித் தொங்கும் வீக்

1. மூத்திரப்பைக்கும் பீஜகோசத்துக்கும் நேராக ஸம்பந்தமில்லாமற் போனுலும், மூத்திரநாளாதிகளின் மூலமாய் தோஷம் கலைகளென்கிற மிக்க மெல்லிய இதர சர்மங்களினூடே கசிந்து, அவற்றிற் கிரமமாகச் சேருவதுண்டென்று கருதப்படுகிறது.

2. மற்ற வேலைகள் என்பதால் அதிக பலவானுடன் த்வந்த்வ யுத்தம் செய்தல், விற்பிடித்து பலமாக இழுத்து வேலை செய்தல், குதித்தல் முதலியவை குறிக்கப்படுகின்றன.

3. அந்த்ரவ்ருத்திக்கே ப்ரத்நம் என்று வேறு பெயர் உண்டு; ஆனுல் சிலர் அது வேறு வியாதியென்று பின்வருமாறு இலக்ஷணமும் மொழிவர்:—"அதிக குருவாகவும் அபிஷ்யந்தியாகவுமுள்ள உணவுகளை யுண்பதால் மேன்மேலும் சேர்ந்த தோஷம் வங்க்ஷணஸந்திகளில் கிரந்தியைப்போன்ற வீக்கமுண்டுபண்ணும்; அதினுலுண்டான ஜ்வரம், சூலை, உடலிளைப்பு இவற்றுடன் கூடிய வியாதியை ப்ரத்நம் என்றறிக."

4. களகண்டம்.—"மோவாய்க்கட்டை, கழுத்தின் விலாப்புறம்,

கம் களகண்டம் எனப்படும். (2) வாதம், கபம், மேதஸ் இவை பிரத்தியேகமாதக் கழுத்திலும்; மந்யாவென்கிற கழுத்தின் பார்சுத்திலும் சேர்ந்து பிரகோபித்து, அதனதன் குறிகளை வெளிப்படுத்தி, களகண்ட வியாதியை யுண்டுபண்ணுகின்றன. 1, 2.

வாதஜ களகண்டம்:—வாததோஷக் கோளாறுலான களகண்டத்தில் வீக்கம் அதிக குடைத்தலுள்ளதாகவும், கருநிறமான ஸிரைகளென்கிற இரத்தக் குழாய்கள் சூழ்ந்ததாகவும், கறுப்பு அல்லது சிவப்பான நிறமுள்ளதாகவும், சுரசுரப்பாகவும், நீடித்துப் பருத்து வளருந்தன்மையதாகவும், பழுக்காததாகவு மிருக்கும்; ஒருக்கால் தற்செயலாய் எப்பொழுதேனும் அரிதாகப் பழுக்கும்; அப்பிணியாளிக்கு வாய் மிகவும் அரோசகங்கொள்ளும்; தவடைகளும் தொண்டையும் மிகவும் வறண்டுபோம். 3, 3½.

சிலேஷ்மஜ களகண்டம்:—கபதோஷக் கோளாறுலான களகண்டம் கடினமாகவும், சர்மத்திற்கு இயற்கையான நிறத்தைப் பெற்றதாகவும், கனமாகவும், வெகு தினவுண்டு பண்ணுவதாகவும், குளிர்ந்ததாகவும், பெரிதாகவும் இருக்கும். அது மிக்க மெதுவாக வளர்ந்து மெதுவாகவே பக்குவமடையும்; சில ஸமயம் மிருதுவான வலி யுண்டுபண்ணும்; அப்பிணியாளிக்கு வாய் இனிப்பாகவும், தவடைகள் தொண்டை இவை பசைபோன்ற கபத்தினுல் பூசப்பட்டு பிசுபிசுப்புள்ளவையாகவும் ஆகும். 4, 5.

மேதோஜ களகண்டம்:—கொழுப்பு ஸம்பந்தமான களகண்டம் ஸ்நிக்த்தமாகவும், பாரமுள்ளதாகவும், வெண்ணிறமாகவும், அருவருப்பான நாற்றமுள்ளதாகவும், தினவு சொற்ப வலி இவைகளோடு கூடியதாகவும், சுரைக்காயைப்போல வளர்ந்து அடி சிறுத்து தேஹம் இளைப்பது செழிப்பது இவற்றிற்குத் தகுந்தவாறு குறைவதும் பருப்பதுமாகவும் இருக்கும். பிணியாளியின் வாய் ஸ்நிக்த்தமாகவும், தொண்டையின் தொனியை அனுஸரித்தாற்போன்று இக் களகண்டத்திலிருந்தும் ஒருவித சப்தமுண்டாகும். 6, 6½.

களகண்டத்தில் அஸாத்ய நிலைமைகள் :— களகண்டரோகி சிரமப்பட்டு மூச்சு விட்டாலும், உடல் அவனுக்கு மிக்க மிருதுவாகப் போனுலும், வியாதி ஒரு வருஷத்திற்கு மேற்பட்டதானுலும், அரோசகமுண்டானுலும், மிகவும் இளைத்துப் போனுலும், ஸ்வரபேதம் உண்டானுலும்[1] அவ்வியாதி அஸாத்யமாம். 7½.

### கண்டமாலா.[2]

கண்டமாலையின் லக்ஷணம்:—முக்கியமாகக் கொழுப்பு கபம்

---

கழுத்தின் முன்புறம் இவற்றை யாச்ரயித்துப் பெரிதாகவோ சிறிதாகவோ கிளம்பி அண்டம்போல் தொங்கும் வீக்கம் களகண்டம் எனப்படுகிறது'' என்று போஜன்.

1. ஸ்வரபேதம்—13-வது அத்தியாயம் பார்க்க.

2. மாலைபோன்று வரிசையாக அநேகம் கிரந்திகள் தோன்றுவதால் இப் பெயர்.

இவ்விரண்டின் கோளாறால் [1] அக்குள், தோள், மந்யாப் பிரதேசம், கழுத்து, துடையிடுக்கு இவ்விடங்களில் இலந்தங்கனி - நெல்லிக்கனி இவற்றின் அளவாக உண்டாய், மிக்க மெதுவாகப் பருத்துப் பக்குவமடையு மியல்புடைய அநேக உருண்டை வடிவமான கழலைகளின் தொகுதி "கண்டமாலா" எனப்படும். [2] 8½.

## அபசி.

அபசியின் லக்ஷணாதிகள்:—அக் கிரந்திகளிற் சில [3] காலக்கிரமத்திற் பக்குவமாய் உடைந்து, அவற்றிலடங்கிய தோஷங்கள் வெளியிற் கசிந்து மறைந்துவிட, வேறு கிரந்திகள் புதிதாகக் கிளம்புவதுண்டு; அவை நீடித்துத் தொடர்ந்து நிற்கும்; அவற்றிற்கே அபசி யென்று [4] பெயர். இது ஸாதாரணமாய் எளிதிற் சிகித்ஸிக்கக்கூடியது. இந்த கிரந்தியுடன் பீநஸம், பக்கசூலை, காஸம், ஜ்வரம், வாந்தி இவையுமுண்டாயிருந்தால் அந்த அபசி அஸாத்யமாம். 9, 10.

## கிரந்தி.

கிரந்தியின் ஸம்ப்ராப்தி :—வாதாதி தோஷங்கள் கோளாறடைந்து, மாம்ஸம், இரத்தம், மேதஸ், ஸிரைகளென்கிற இரத்த நாளங்கள் இவற்றைத் தூஷிப்பித்து திரண்டுயர்ந்தும், கடினமான முடிச்சுபோன்றதுமான ஒருவித வீக்கத்தை யுண்டுபண்ணுகின்றன; இவ்வீக்கம் கிரந்தி யெனப்படுகிறது. 11.

வாதக்கிரந்தி:—வாத தோஷத்தினாலான கிரந்தி கருநிறமாகவும், மிருதுவாகவும், வஸ்தியைப்போல அகன்றதாகவும் கிளம்பும்; இதில் இழுக்கப்படுவது, அறுத்து எறியப்படுவது, கடையப்படுவது, பிளக்கப்படுவது போன்ற கடும் வலிகளும், குத்தலும் தோன்றும். இஃது உடைகையில் இரத்தமும் வெளியாம். 12.

பித்தக்கிரந்தி:—பித்தத்தினாலான கிரந்தியில் அக்னியினால் எரிக்கப்படுதல், அறுக்கப்படுதல், சமைக்கப்படுதல், ஜ்வலித்தெழும்புதல்

---

1. மேதோதாது, கபம் இவ்விரண்டும் ஒருவாறு பிரதானமான தோஷ தாதுக்கள் எனக் கருத்து. "வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று தோஷங்களும், மேதோதாதுவும் இவ்வியாதியை யுண்டுபண்ணுவதிற் காரணமாகும்" என்று போஜன்.

2. கண்டமாலை இங்கே கழுத்தைத் தவிர வேறு அவயவங்களிலும் உண்டாவதாகக் கூறப்படுகிறது. ஆனால் சரகர் "மேதஸ் கபம் இவற்றின் கோளாறால் இரத்தம் சயமடைந்து, கழுத்தில் பெரிய கழலையை யுண்டுபண்ணும்; அது களகண்டம் எனப்படும்; அவ்வித கழலைகளே அநேகம் வரிசையாக உண்டானால் அது கண்டமாலா யெனப்படும்" என்கிறார்.

3. கண்டமாலைக்கும் அபசிக்கும் காரணமான தோஷங்களில் பேதமில்லையாகையால் அந்த கண்டமாலை யுருவமான கிரந்திகளும், அபசியும் பெரும்பாலும் ஒரேவிதமாம். ஆனால் அபசியில் ஒன்று ஆறியபிறகு மற்றொன்று தோன்றும். கண்டமாலையில் ஏககாலத்தில் அநேக கழலைகள் அல்லது கிரந்திகள் உண்டாகும்.

4. ஒன்று நிவாரணமாய் மற்றொன்று புதிதாக உண்டாவதால் (அப்ராப்ரோபசியமாநத்வாத்) "அபசி" யெனப்படுகிறது.

இவைபோன்ற வேதனைகள் பலமாயுண்டாகும். இது உடைகையில் இரத்தம் சிறிது பசுமையான செந்நிறமாக அல்லது மிகச் செந்நிறமாகவும், அதிக சூடாகவும் வெளியாகும். 13.

கபக்கிரந்தி:—கபத்தினாலான கிரந்தி பரிசிப்பதற்குச் சீதளமாகவும், நிறமாறுபாடில்லாததாகவும், சொற்ப நோவுள்ளதாகவும், அதிக தினவுள்ளதாகவும், கல்லைப்போல கடினமாகவும், வெகு நீடித்துப் பருத்துப் பக்குவமாகக் கூடியதாகவுமிருக்கும். உடைந்த பிறகு இதிலிருந்து வெளுத்தும் கனமுமான சீழ் வெளியாகும். 14.

மேதோக்கிரந்தி :— மேதோதாதுவின் கோளாறுலுண்டாகும் கிரந்தியானது தேஹத்தின் விருத்தி - க்ஷயங்களுக்கு ஏற்றவாறு விருத்தி-க்ஷயங்களடையும்; இது ஸ்நிக்த்தமாகவும், மிகப் பெரிதாய் அரிப்புள்ளதாகவும், விசேஷ வலியில்லாதாகவும் இருக்கும். இது உடைந்தால் பிண்ணாக்கு, நெய் இவற்றைப்போன்ற மேதோதோஷம் இதிலிருந்து வெளியாகும். [1] 15.

ஸிராக் கிரந்தி:—துர்ப்பலமான மனிதன் பலவித கடின வியாயாமங்களைச் செய்வதால், வாயுவானது ஸிராஜாலங்களை வலித்து இழுத்துச் சுருக்கியும், ஓரிடத்தில் பிண்டமாகச் செய்தும், சோஷிப்பித்தும் சீக்கிரத்தில் கிரந்தியை யுண்டுபண்ணுகிறது; பருத்தும் உருட்சியாகவுமுள்ள அந்தக் கிரந்தி வலியுள்ளதாகவும், திரண்டு அசைந்தாடக்கூடியதாகவு மிருந்தால் கஷ்ட ஸாத்யமாம்; அதுவே வலியில்லாமலும், அசைந்தாடாமலும், மிகப் பெரிதாகவும், மர்மஸ்தாநங்களி லுண்டானதாகவு மிருந்தால் அஸாத்யமாகும். 16, 17.

## அர்புதம் [2]

அர்புத ஸம்ப்ராப்தி:—சரீரத்தில் ஏதேனு மோரிடத்தில் தோஷங்கள் அபிவிருத்தியடைந்து, மாம்ஸத்தையும் இரத்தத்தையும் மிகவும் தூஷிப்பித்து [3], மிக்க ஆழமான தாதுக்களில் ஊடுருவி மாம்ஸ வளர்ச்சியை யுண்டுபண்ணும்; [4] அது உருட்சியாகவும், அசைவற்றதாகவும், அதிக வலி யுண்டுபண்ணாததாகவும், உருவத்திற் பெரிதாகவும், அகன்ற அடிப்புறமுடையதாகவும், நீடித்த காலம் பருத்து வளரக் கூடியதாகவும், பக்குவமடையாததாகவும் இருக்கும்; அதை "அர்புதம்" என்பார்கள். அது வாதத்தினாலும், பித்தத்தினாலும், கபத்தினாலும், இரத்தத்தினாலும், மாம்ஸத்தினாலும், மேதஸ்ஸாலும் தனித்

---

1. "வாயுவானது கொழுப்பை மாம்ஸத்தில் அல்லது சர்மத்தில் சேர்ப்பித்தால் மேதோக்கிரந்தி யுண்டாகும்; அது கறுப்பாகவும், வெண்மையாகவும், தேஹம் இளைத்தால் சிறுப்பதும், பெருத்தால் பெருப்பதுமாயுமிருக்கும்." என்று போஜன்.

2. அர்புதம்—புரைகுழல்; புரையுடன் கூடிய ஒருவித கழலை.

3. எல்லா அர்புதத்துக்குமே மாம்ஸமும் இரத்தமும் தூஷ்யங்களாம்; ஆகையால் மாம்ஸார்புத-மேதோர்புதங்களில் அவ்விரண்டு தாதுக்களும் விசேஷமாகக் கோளாறடைகின்றன.

4. மாம்ஸவளர்ச்சியைப்போல் தோன்றுவது எனக் கருத்து.

தனியுண்டாகலாம். அதற்குத் தனித் தனியே கிரந்திக்குச் சமான குறிகளேயுண்டாகும். 18—19½.

இரக்தார்புதம்:—தோஷமானது மிகக் கோளாறடைந்து, ஸிரைகளேயும் இரத்தத்தையும் குறுக்கி, ஒருவித மாம்ஸ பிண்டாகாரமான வீக்கத்தை யுண்டு பண்ணும்; அது சிறிதளவு பக்குவமடைந்து, ஊனீர்க்கசிவுள்ளதாய், சிறிய மாம்ஸாங்குரங்கள் அடர்ந்ததாகவுமிருக்கும். இதுவே ஐடிதியில் பருத்து எப்பொழுதும் இரத்தக் கசிவையுண்டு பண்ணும்; இதை அஸாத்ய வியாதி யென்பார்கள். இதனுல் பீடிக்கப்படுபவன் இரத்தக்ஷீணரூபமான உபத்திரவத்தினுல் பாண்டுரோகியைப் போலவும் ஆவதுண்டு. 20—21½.

மாம்ஸார்புதம்:—முஷ்டியினுல் குத்துவது முதலிய காரணங்களால் ஏதேனும் அவயவம் நசுக்கப்பட்டு, கோளாறடைந்து மாம்ஸத்தில் வீக்கங்கொள்ளும்; அவ்வீக்கம் வேதனையற்றதாகவும், ஸ்நிக்த்தமாகவும், சர்மத்தின் இயற்கை நிறத்தைப் பெற்றதாகவும், பக்குவமடையாததாகவும், கல்லேப்போல் கடினமாகவும், அசைவற்றதாகவும் இருக்கும். மாம்ஸ தாது கோளாறடைந்தவனுக்கும், நியதமாக மாம்ஸபோஜனம் சேய்பவனுக்கும் இது பலமாயுண்டாகும். மாம்ஸார்புதம் எனப்படும் இது அஸாத்ய வியாதியாம்.[1] 22—23½.

அர்புதத்தில் அஸாத்ய நிலைமைகள்:—ஸாத்யமென்று குறிக்கப்பட்ட வியாதிகளிலும் துர்நீர்ப்பெருக்குடன் கூடியதும், மர்மஸ்த்தானத்திலுற்பத்தியானதும், ஸ்ரோதஸ்ஸுகளிலுண்டானதும், அசைக்கக்கூடாததுமான அர்புதம் சிகித்ஸைக்கு வசப்படாததாம். 24.

அத்யர்புதம்:—(1) முதலிற் கிளம்பிய அர்புதத்தின்மீது மற்றோர் அர்புதம் தோன்றினுல் அதை "அத்யர்புதம்" என்றறிக. (2) ஓர் அர்புதத்தின் பக்கத்திலேயே மற்றோர் அர்புதம் ஒரே தடவையில் அல்லது ஒன்றன்பின் மற்றொன்ருக உண்டானுல் அது த்விரார்புதம் எனப்படும். இவ்விரண்டும் அஸாத்ய வியாதிகளாம்.[2] 25.

அர்புதங்கள் பாகமடையாக் காரணம்:—எல்லா அர்புதங்களும் தோஷத்தின் மிகுதியாலும், மேதோதாது அதிகமாயிருப்பதாலும்,

---

1. இரக்தார்புத—மாம்ஸார்புதங்களில் இரத்தமும் மாம்ஸமும் முறையே விருத்தியடைந்து அவ்வியாதிகள் உண்டாவதாகக் கூறிய போதிலும், (க்ருதத்தினுல் சுடப்பட்டதென்னும்போது காய்ந்த க்ருதத்தில் ஸூக்ஷ்மமாயடங்கிய அக்னியம்சமான சூட்டினுல் சுடப்பட்டதென்கிற தத்துவார்த்தம் தோன்றுவதுபோல) மாம்ஸஜமான அர்புதத்தில் வாதமும், இரக்தஜமான அர்புதத்தில் பித்தமும் அந்த வியாதிகளுக்குக் காரணங்களாம்.

2. அத்யர்புதம்—என்றுல் அதிகமான அர்புதம் எனப் பொருள். இங்கு த்விரார்புதம் என்று மற்றோர் அர்புதம் கூறப்படினும், அத்யர்புதம் அதிகார்புதம் இரண்டும் ஒன்றே. ஒரே ஸமயத்தில் ஒன்றன் பக்கத்தில் மற்றொன்ருக உண்டானுலும், அல்லது ஒன்றுண்டான பிறகு அதன் பக்கத்திலோ அதன் மேலோ மற்றோர் அர்புதம் தோன்றினுலும் அதை அத்யர்புதம் அல்லது த்விரார்புதம் என்பர்.

தோஷங்கள் ஸ்த்திரமாயிருப்பதாலும், கிரந்தி ஸ்வபாவமுடையன வாயிருப்பதாலும் சுபாவமாகவே பக்குவமடைவதில்லை. 26.

---

## 39. ச்லீபத நிதானம்.*

ச்லீபத ஸம்ப்ராப்தி:—வங்க்ஷணமென்கிற துடையிடுக்கில் அதிக வலியையுண்டுபண்ணிக்கொண்டு ஜ்வரத்துடன் தோன்றும் வீக்கம் கிரமமாகப் பாதத்தை நோக்கிச் செல்லும்; அது "ச்லீபதம்" எனப்படுகிறது. இதே விதமான வீக்கம் கைகள், செவி, நேத்திரம், பீஜகோசம், உதடு, நாசி இவற்றிலும் உண்டாகுமென்றும், அதுவும் ச்லீபதமெனப்படுவதாகவும் சிலர் கூறுவர். 1.

வாதஜ ச்லீபதம்:—வாத ஸம்பந்தமான ச்லீபதத்தில் வீக்கம் கறுத்தும், ருக்ஷமாகவும், வெடிப்புள்ளதாகவும் இருக்கும். கடும் வேதனை யுண்டுபண்ணும்; திடீர் திடீரென்று வலிக்கும்; இதில் ஜ்வரம் அதிகமாகத் தொந்தரவளிக்கும். 2.

பித்தஜ ச்லீபதம்:—பித்தத்தினலான ச்லீபத வியாதியில் வீங்கிய பாகம் பசுமையாகவும், மிருதுவாகவுமிருக்கும்; தாபஜ்வரமும் தொடரும். 2½.

சிலேஷ்மஜ ச்லீபதம்:—கப தோஷத்தினலாகும் ச்லீபதத்தில் வீக்கமானது பளபளப்புடன் வெண்ணிறமாகவும், கனமாகவும், கடினமாகவும், புற்றைப்போல் கிளம்பி, முட்கள்போன்ற முனைகளடர்ந்ததாகவுமிருக்கும்; இது மிகப் பெரிதாகவும் ஒரு வருஷத்திற்கு மேற்பட்டு முதிர்ந்ததாகவுமானல் சிகித்ஸிக்க முடியாததாய்விடும். 3, 4.

ச்லீபதத்தில் கபத்திற்குப் பிராதான்யம்:—இம் மூன்றுவித ச்லீபதங்களும் கப தோஷத்தின் மேலீட்டினல் காண்பதாயறிக; குருத்தன்மையென்கிற கனத்வமும், பருமனும் கபத்தினலன்றி ஏற்படுவதில்லையல்லவா [1] ? 5.

ச்லீபதோற்பத்திக்கு ஏற்ற பிரதேசங்கள்:—மிகப் பழைய தண்ணீரடர்ந்த விடங்களும், எல்லா ருதுக்களிலும் மிகக் குளிருள்ள பிரதேசங்களும் ச்லீபதம் விசேஷமாயுண்டாவதற்கு ஏற்றவையாம். 6.

ச்லீபதத்தில் அஸாத்யம்:—கபத்தை விருத்தி செய்யக் கூடிய ஆஹார விஹாரங்களா லுண்டானதும், கபப் பிரக்ருதியான மனிதனுக்குண்டானதும், துர்நீர்ப்பெருக்குள்ளதும், ஸகல லக்ஷணங்

---

*ச்லீபதம்—யானைக்கால் வியாதி. இந்த வியாதிக்கு இப்பெயர் நிருபாதிகம் (காரணப்பெயரல்லாதது) என்பர் சிலர். வேறு சிலர் சிலையைப்போல் பாதம் விகாரப்படுவதால் (சிலாவத் பதம்) ச்லீபதம் என்கிற காரணப் பெயர் வந்ததாகக் கூறுவர்.

1. எல்லா ச்லீபதத்திலும் கபம் மேலிட்டிருக்கு மென்பதால், வாதஜ - பித்தஜ ச்லீபதங்களில் கபதோஷம் அநுபந்தமாயிருக்கும்—என்ருல் வாத பித்தங்கள் பிரதானமாயும், கபம் அவற்றிற்குப் பின்பலமாயும் இருக்கும் என்றறிக.

களையும் மிகுதியாகப் பெற்றதும், அதிக அரிப்புள்ளதும், மிகக் கபதோஷமுள்ளதுமான ச்லீபதம் அஸாத்யமாம். 7.

---

# 40. வித்ரதி நிதாநம்*

வித்ரதி ஸம்ப்ராப்தி:—தோஷங்கள் சர்மம், இரத்தம், மாம்ஸம், மேதஸ், இவற்றைத் தூஷிக்கச் செய்து, அப்பால் கிரமமாக அஸ்த்தியைப்பற்றி[1] மிக்க விருத்தியடைந்து, கடுமையான வீக்கத்தை யுண்டு பண்ணுகின்றன; அவ்வீக்கம் மிக்க ஆழமுள்ளதாகவும்[2], வலியுண்டு பண்ணுவதாகவும், வர்த்துளமாய் அல்லது அகன்றதாகவும்[3] காணப்படும்; "வித்ரதி" யெனப்படும் இது மூன்று தோஷங்களால் தனித் தனியே ஒவ்வொன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும், காயத்தினுல் ஒன்றும், இரத்தக் கோளாறுல் ஒன்றுமாக ஆறுவிதமாம். அவற்றிற்கு அடியில் இலக்ஷணங்கள் கூறப்படும். 1—3.

வாத வித்ரதி:—வாததோஷத்தினுலான வித்ரதி நிறத்தில் கறுப்பாகவும் சிவப்பாகவும், சில ஸமயம் பெரிதாகவும், சில ஸமயம் சிறிதாகவும், அதிக வேதனை யளிப்பதாகவுமிருக்கும்; இது உற்பத்தியாகும் வகையும், பக்குவமடையும் விதமும் பல வகைப்படும். 4.

பித்த வித்ரதி:—பித்ததோஷத்தினுலுண்டாகும் வித்ரதியானது பழுத்த அத்திப்பழம் போன்றதாக அல்லது ஒருவாறு மங்கல் நிறமுள்ளதாகவும், ஜ்வரம் அழற்சி இவற்றை யுண்டுபண்ணுவதாகவும், வெகு சீக்கிரத்தில் உண்டாய் சீக்கிரம் பக்குவமடையும் தன்மையதாகவுமிருக்கும். 5.

கப வித்ரதி:—சிலேஷ்மதோஷத்தினு லுண்டாகும் வித்ரதியானது அகன்ற அகல் போன்றதாகவும், வெண்மையாகவும், பரிசிப்பதற்குக் குளிர்ந்ததாகவும், ஸ்நிக்த்தமாகவும், சொற்பவேதனை யுள்ளதாகவும், வெகு மெதுவாக உற்பத்தியாய் பக்குவமடையுந் தன்மையதாகவுமிருக்கும். 6.

மூன்று வித்ரதிகளிலும் வெளிவரும் துர்நீரின் தன்மை:—வாத வித்ரதியிலிருந்து சொற்பமாகவும் அதிக தடிப்பில்லாததுமான சீழும், பித்த வித்ரதியிலிருந்து பசுமை நிறமான சீழும், கப வித்ரதியிலிருந்து வெண்மையான சீழும் வெளிவரும். 6½.

ஸந்நிபாத வித்ரதி:—மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோளா

---

* வித்ரதி—சீழ்க்கட்டி. "சீக்கிரத்தில் தாதுக்களை அழிக்குந்தன்மையதாகையால் வித்ரதி எனப்படுகிறது" என்று சரகர்.

1. சில ஸமயம் அஸ்த்தியைப்பற்றியதாயினும், பெரும்பாலும் ஆழமான தாதுக்களை ஆச்ரயித்துண்டாவதால், இங்கு அஸ்த்தி யென்பதற்கு ஆழமான தாதுவெனக் கருத்து.

2. ஆழமுள்ளது—ஆழமான தாதுக்களைப் பற்றியது.

3. இதனுல் கிரந்தி, அர்புதம் முதலியவற்றைப்போல் திரட்சியாயுருண்டிராதெனக் கருதப்படுகிறது.

றடைந்துண்டாகும் வித்ரதியானது பல நிறமுள்ளதாகவும், பல வகையான வலி யுண்டுபண்ணுவதாகவும், பலவாறான சீழையுடையதாகவும், திரண்டு கூர்மையான முகம் முதலியதைப் பெறுமல் ஒருவாறு அகன்று பரவியதாகவும், விஷமஸ்வரூபமாகவும்[1], மிகப் பெரிதாகவும் இருக்கும். பக்குவமடைவதிலும் இது விஷமமானது.[2] $7\frac{1}{2}$.

அபிகாதஜ வித்ரதி:—[3] அந்தந்த பதார்த்தங்களால் அடி தாக்கப்பட்டு, அதன்பிறகு அபத்தியம் செய்தவனுக்கு உண்டான வெப்பம் வாயுவால் பரவச் செய்யப்பட்டு, இரத்தத்துடன் கூட பித்தத்தையும் அதிகரிக்கச் செய்து கோளாறை யுண்டுபண்ணும்; ஜ்வரமும், நாவறட்சியும், உடலழற்சியும் இதில் தோன்றும். ஆகந்துகவித்ரதியான இதில் பித்த வித்ரதியின் இலக்ஷணங்கள் தோன்றும். $8-9\frac{1}{2}$.

இரத்தஜ வித்ரதி:—இரத்ததோஷத்தினலான வித்ரதி சிறு கருங் கொப்புளங்களால் சூழப்பட்டு, பொதுவில் மங்கலான கருநிறமுள்ளதாகும்; கடுமையான அழற்சியும் வலியுமுண்டுபண்ணும்; இது பித்த வித்ரதியின் மற்றக் குறிகளுள்ளதாகவும் இருக்கும்.[4] $10\frac{1}{2}$.

அந்தர் வித்ரதி:—தோஷங்கள் தனித் தனி யாகவோ ஒருமிக்கச் சேர்ந்தோ பிரகோப மடைந்து குல்மரூபமாகவும், புற்றைப் போன்றதாகவும், நாற்புறமும் படர்ந்து கிளம்புவதுமான வித்ரதியை உட்புற அவயவங்களில் எங்கேயாவது உண்டுபண்ணும். அதாவது வஸ்தியின் வாய், நாபியின் உட்புறம், குக்ஷி, துடையிடுக்குகளின் உட்புறங்கள், வ்ருக்கங்கள்[5], ப்லீஹம், கல்லீரல், இருதயம், க்லோமா இவற்றில் அஃதுண்டாகலாம். அவை பொதுவாக பாஹ்யவித்ரதிகளுக்குச் சமமான இலக்ஷணங்களைப் பெற்றவை. உட்புற

---

1. விஷமஸ்வரூபமாயிருப்பதாலே அஸாத்யம் எனப்படுகிறது.

2. சில ஸமயம் சீக்கிரமாகவும், சில ஸமயம் மெதுவாகவும் பக்குவமடையும்; மேலும் ஒருக்கால் ஆழமான பிரதேசங்களிலும், ஒரு ஸமயம் மேற்புறத்திலும் வியாபித்து பக்குவமடையும். ஆகவே விஷம பாகம் எனப்படுகிறது. (வாத தோஷ ஸம்பந்தமான வித்ரதியில் பக்குவமடைவதில் மாத்திரம் விஷமத்தன்மை; ஸந்நிபாத வித்ரதியில் பக்குவமடைவதிலும், உருவத்திலும், கம்பீரமான பிரதேசங்களில் வியாபிப்பது முதலியதிலும் ஆகப் பலவகையில் விஷமத் தன்மை யேற்படுகிறது. இவை வாத வித்ரதி-ஸந்நிபாத வித்ரதிகளுக்குப் பக்குவ விஷயத்திலுள்ள பேதம்.)

3. வெளிக்காரணத்தினல் உண்டாவதால் இது "ஆகந்துக வித்ரதி" யென்றும், காயத்தினலேற்பட்டால் "க்ஷதஜ வித்ரதி" யென்றும் கூறப்படும்.

4. இங்கு ஸப்த தாதுக்களில் ஒன்றான இரத்த தாதுவினல் வித்ரதியுண்டாகும் எனக் கூறப்படுகிறது. ஆனல் ஸ்த்ரீகளுக்கு மாத விடாய் (ஆர்த்தவ ஸம்பந்தமான) அல்லது பிரஸவதோஷ ஸம்பந்தமான கோளாருகிற மக்கல்லம் என்கிற கட்டியும் இரத்த வித்ரதியைச் சேர்ந்தது என்று ஸுச்ருதாதிகள்.

5. வ்ருக்கங்கள்—மூத்திர முற்பத்தியாகும் அவயவங்கள்.

அவயவங்களைப்பற்றி யுண்டாகும் வித்ரதிகளுக்குக் காணும் விசேஷ லக்ஷணங்கள் பின்வருமாறு:—(1) குதத்திலுண்டாகும் வித்ரதியினால் அபாநவாதம் அடைபடும். (2) வஸ்தியில் வித்ரதியுண்டானால் மூத்திரம் வெகு கஷ்டப்பட்டும் சொற்பமாகவும் வெளியாகும். (3) நாபியிலுண்டானால் விக்கலும், (4) வயிற்றிலுண்டானால் வலியுடன்கூடிய குழப்பமும், அபாநவாத விருத்தியும் மிகுதியாயுண்டாகும். (5) வங்க்ஷணங்களைப்பற்றிய வித்ரதியில் இடையிலும் ப்ருஷ்ட பாகங்களிலும் கடுமையான பிடிப்பும் வலியும் தோன்றும். (6) வ்ருக்கங்களில் உண்டானால் விலாப்பக்கங்கள் சுருங்கி வலியுண்டாம். (7) ப்லீஹத்தியிலுண்டானால் ச்வாஸ முறிஞ்சுவது தடையுறும். (8) இருதயத்தைப் பற்றியுண்டானால் எல்லா அவயவங்களிலும் பிடிபபுண்டாய், கடுமையான வலியும், இருமலும் உண்டாகும். (9) யக்ருத்தில் உண்டானால் பெருமூச்சும் விக்கலும் அதிகமாகத் தோன்றும். (10) க்லோமாவில்[1] உண்டானால் நாவறட்சி மிகுதியாயுண்டாம். 11—16½.

அந்தர் வித்ரதிகளிலிருந்து தோஷம் வெளிவரும் மார்க்கம்:—நாபிக்கு மேற்புறத்திலுண்டாகும் அந்தர்வித்ரதிகள் பக்குவமடைந்து உடைந்தால், அவற்றின் தோஷம் வாயால் மேற்புறமாயும், நாபிக்குக் கீழுள்ள அவயவங்களின் வித்ரதிகள் உடைந்தால் அவற்றிலிருந்து குதத்தினுல் கீழ்ப்புறமாயும் வெளியாகும். 17.

பாஹ்யாந்தர் வித்ரதிகளில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—அந்தர் வித்ரதிகளில் தோஷங்கள் கீழ்நோக்கி வெளிவந்தால் பிணியாளி ஜீவிப்பான்; அவை மேல் நோக்கினுல் ஜீவிக்கமாட்டான். அவ்விதமே இருதயம், நாபி, வஸ்தி இவற்றில் வித்ரதியுண்டானாலும் பிணியாளி பிழைக்கமாட்டான். மற்ற விடங்களிலுண்டாகும் பாஹ்யவித்ரதிகள் உடைவதால் மரணம் உண்டாவது அரிது. 18½.

நாபியிலுண்டாகும் அந்தர்வித்ரதியிலிருந்து தோஷம் வெளிவரும் வழி:—நாபிக்கு நேராக உட்புறத்தில் வித்ரதியுண்டானால், அது பக்குவமாய் உடைகையில், தோஷம் மேலே வாயின் மூலமாகவாவது, கீழே குதத்தின் மூலமாகவாவது வெளிவரும். 19.

எல்லா வித்ரதிகளுக்கும் ஸாத்யா ஸாத்யாதி குறிகள்:—(1) முதலிற் கூறிய ஆறு வித்ரதிகளுள் ஐந்து வித்ரதிகள்[2] சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக் கூடியவை. (2) ஸந்நிபாத வித்ரதி அஸாத்யமாம். (3) இவ் வித்ரதிகளில் ஆமநிலைமை, பக்குவ நிலைமை, விதக்த்த நிலை

1. க்லோமா—ப்லீஹத்துக்கும் கிரஹணி என்கிற குடலின் ஆரம்ப பாகத்துக்கும் இடையே குறுக்காக நீண்டிருக்கும் ஒரு கிரந்தி. ஆனல் ஸ்ரீகண்ட தத்தன் முதலானோர் "வ்ருக்கத்துக்கு மேற்புறமுள்ளதும், நாவறட்சிக்கு முக்கிய ஹேதுவா யிருப்பதுமான ஓர் அவயவம் க்லோம எனப்படுகிறது'' என்கிறார்கள்.

2. ஸாத்யமான ஐந்து வித்ரதிகள்—வாதவித்ரதி, பித்தவித்ரதி, கபவித்ரதி, அபிகாதஜ வித்ரதி, ஆகந்து வித்ரதி.

மை ஆகிய [1] இவற்றிற்குக் குறிமுதலியன சோதைக்குக் கூறியிருப்பவைபோலவேயாம். (4) வித்ரதியுள்ள பிணியாளி வயிற்று விம்மல், மல மூத்திர-ஸ்வேதாதிகள் வெளிவராமை, வாந்தி, விக்கல், நாவறட்சி, வலி, ச்வாஸம் இவற்றால் வருந்தினால் பிழையான். 19½, 20.

---

## 41. விரணசோத நிதாநம்*

விரண சோதையின் பூர்வ ரூபம்:—சரீரத்தில் ஏதேனும் ஓர் அவயவத்தைப்பற்றி யுண்டாகும் வீக்கம் விரணங்களின் பூர்வரூபமாம். ½.

விரண சோதை ஆறு விதம்:—விரண சோதையானது வாத-பித்த கபங்களால் தனித் தனியே ஒவ்வொருவிதமாகவும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரத்ததோஷத்தினால் ஒன்றும், ஆகந்துக காரணத்தினால் ஒன்றுமாக அறு வகைப்படும். இவ்விரணங்களில் பக்குவமானவை இன்னவை யென்றும், ஆமமானவை இவ்விதமானவையென்றும், பகுத்தறியும் பொருட்டு அவற்றின் விசேஷங்கள் இங்கு குறிக்கப்படுகின்றன. 1, 2,

வாதாதி விரண சோதைகளின் விசேஷம்:—வாததோஷத்தினாலான விரண சோதை விஷமமாகவும், [2] பித்தத்தினாலுண்டாவது சீக்கிரத்திலும், கபதோஷத்தினாலுண்டாவது வெகு மெதுவாகவும் பக்குவமாகும். இரத்த தோஷத்தினாலும், ஆகந்துக காரணங்களாலும் உண்டாகும் விரணசோதைகள் பித்தவிரணசோதையின் இலக்ஷணங்களைப் பெற்றிருக்கும். 3.

ஆமவிரண சோதை:—சூடு மந்தமாயிருத்தல், சொற்ப வீக்கம், கடினத்தன்மை, வீக்கத்தில் சர்மத்திற்குச் சமமான நிறம், சொற்ப வேதனை இவை சோதைகள் ஆமமாயிருப்பதன் குறிகளாம். 4.

பக்குவமாகும் விரண சோதை:—[3] விரண சோதையின் இந்த நிலைமையில் அக்னியினால் தஹிக்கப்படுவதுபோலவும், க்ஷாரமிட்டுச் சமைக்கப்படுவது போலவும், கொள்ளியெறும்புக் கூட்டத்தினால் கடிக்கப்படுவது போலவும், அறுக்கப்படுவது போலவும், சஸ்திரத்தினால் வெட்டப்படுவது போலவும், தடியினால் அடிக்கப்படுவது பேலேவும், கை

---

1. (1) வித்ரதியில் ஆமநிலைமை—தோஷங்கள் பக்குவமாகாத நிலைமை. (2) பக்குவ நிலைமை—தோஷாதிகள் பக்குவமடைந்து உடையும் நிலைமை. (3) விதக்த்த நிலைமை—தோஷங்கள் முதிர்ந்து தீஞ்சுபோய் அருகிலுள்ள தாதுக்களை அழிக்க முயலும் நிலைமை.

2. ஒரு ஸமயம் சீக்கிரமாகவும், மற்றொரு ஸமயம் வெகு மெதுவாகவும் பலவேறு மாதிரியில் பக்குவமாகும் தன்மையுடையது.

*விரணத்தை (அல்லது புண்ணை) உண்டாக்குவதான வீக்கம் விரணசோதை எனப்படுகிறது.

3. பித்த தோஷப்பிராபல்யத்தினால் வீக்கம் பக்குவமடையும் நிலைமை பச்சியமாநம் எனப்படும். பச்சியமாநம் என்றால் சமைக்கப்படுதல் என்று பொருள்.

களால் கடுமையாக மர்த்தநம் செய்யப்படுவது போலவும், உட்புறத்தில் ஊசிகளால் குத்தப்படுவது போலவும், விரல்களிட்டு நசுக்குவது போலவுமிருக்கும்; மேலும் வீக்கம் கடுமையான அழற்சியுள்ளதாகவும் நிறமாறுபாடடைந்ததாகவும் இருக்கும்; இப்பிணியாளி ஆஸனத்திலாவது, படுக்கையிலாவது, உட்கார்ந்திருப்பதிலாவது தேள் கொட்டியவனைப் போலச் சிறிதும் அமைதி பெறமாட்டான். வீக்கம் அகன்றும், பொருமலடைந்து, 'வஸ்தி யென்னும் பைபோன்றதாகவும் இருக்கும். ஜ்வரமும், மிக நாவறட்சியும், அரோசகமும் காணும். இவை விரணசோதை பக்குவமாவதற்கான குறிகளாம் 5—8.

பக்குவ விரணசோதை:—சோதைகள் என்கிற வீக்கங்கள் நன்கு முதிர்ந்து பக்குவமாய் விட்ட நிலைமையில் அழற்சி, வலி, சிவப்பு முதலியன தணிந்து, [1] புடைப்பு குறைந்து சிறுத்திருக்கும்; வீக்கத்தின் மீது மடிப்புகள் தோன்றும்; குத்தலும் தினவும் அடிக்கடி யுண்டாகும்; [2] உபத்திவங்களெல்லாம் [3] குறையும்; வீக்கமுள்ள விடத்தில் குழி விழும்; சர்மம் வெடிக்கும்; வீக்கத்தின் ஏதேனும் ஒரு பாரிசத்தை விரலால் அழுத்தினால் உட்புறமுள்ள சீழ் ஒரு புறமிருந்து மற்றொரு புறம் நெகிழ்வதால், நீர் நிரம்பிய பையைப் போல அதனுள் துர்நீர் அசைவது தோன்றும்; உணவில் விருப்பமுண்டாகும். 9—11.

விரணசோதை பக்குவமடைகையில் த்ரிதோஷ ஸம்பந்தம்:—வாத தோஷ ஸம்பந்த மின்றி வலியிராது; பித்த ஸம்பந்தமில்லாமல் பக்குவமடைவதில்லை; கபத்தின் ஸம்பந்தமின்றி சீழுண்டாகாது; ஆகவே எல்லா வீக்கங்களும் பக்குவமடைகையில் ஒருமிக்க மூன்று தோஷங்களாலும் சமைக்கப்படுகின்றன. [4]. 12.

---

1. இந்த நிலைமையில் பித்த பலம் குன்றிவிடுவதால் அழற்சி முதலியவை தணிவடைவது இயல்பு.

2. குத்தல் தினவு முதலியவை வாத தோஷக் குறிகளாம்.

3. பித்ததோஷப் பிராபல்யத்தினாலான அழற்சி, வேக்காடு, அமித நாவறட்சி, அரோசகம் முதலியவை விரணசோதையின் உபத்திரவங்களாகும்.

4. "பக்குவ விரண சோதையைப்" பற்றி முன்கூறப்பட்ட விஷயம் மேதோ தோஷத்தைப் பிரதானமாகக்கொண்டு பூயம் (சீழ்) உற்பத்தியாகிற தென்பதாகவும், 'பக்குவமடைகையில் த்ரிதோஷ ஸம்பந்தம்,' என்பதால் இரத்த தோஷத்தைப் பிரதானமாகக் கொண்டு பூயம் உண்டாவதாகவும் குறிக்கப்படுவதாய் அறிக. விரணசோதைகளுக்கு இரண்டு பாகங்கள் உண்டு. முதலில் கபதோஷத்தினால் ஒரு வித பாகமும், பிறகு இரத்த தோஷத்தினால் ஒன்றும் ஆக இரண்டு பாகங்களாம். "காலாந்தரேணப்யுதிதந்து பித்தம் க்ருத்வாவசே வாத - கபௌ ப்ரஸஹ்ய. பசத்யதச் சோணிதமேஷ பாகோ மத: பரேஷாம் விதுஷாம் த்விதிய:" என்கிறபடி சிலேஷ்ம தோஷத்தினால் பூயம் உற்பத்தியாய் வீககம் பக்குவமடைந்ததும், பிறகு மேலோங்கிய பித்த தோஷம் வாத கபங்களை ஆக்கிரமித்துத் தன் வசமாக்கி இரத்தத்தைப் பசநம் செய்து சீழாக விகாரப்படுத்துகிறது.

விரண சோதையிலிருந்து சீழை வெளிப்படுத்தாவிடில் நேரிடும் கெடுதி:—ஓர் புதரிற் பற்றிய தீயானது வாயுவினால் தூண்டப்பெற்று, அப்புதரை ஆக்கிரமித்து எரித்து விடுமாப்போலே, பக்குவமான விரணசோதையிலிருந்து வெளிப்படுத்தப்படாத சீழானது ஸிரைகளில் வியாபித்து அவற்றையும், மாம்ஸத்தையும், ஸ்நாயுவென்கிற மாம்ஸபந்தநதாதுக்களையும் தின்றழித்து விடும். எவனொருவன் பக்குவமாகாத (ஆம) விரண சோதையை அறுக்கின்றானோ, எவன் பக்குவமான சோதையிலிருந்து சீழை வெளிப்படுத்தாமல் உபேக்ஷிக்கின்றானோ இவ்விருவரும் செய்வதறியாப் பேதையராவர். ஆகவே விரண சோதையில் ஆமம், பக்குவமடைதல், நன்கு பக்குவமானது என்கிற நிலைமைகளை நன்கறிந்து சிகித்ஸை செய்பவனே வைத்தியனாவான். [1] 13—15.

## 42. சாரீரவிரண நிதானம்.*

விரணம் இரண்டு விதம்:—சாரீரமென்றும், ஆகந்துகமென்றும்[2] விரணம் பொதுவாக இருவகைப்படும். அவற்றுள் முந்தியது கோளாறடைந்த தோஷங்களாலும், பிந்தியது சல்யம் முதலியது தாக்குவதாலும் உண்டாகின்றன. 1.

வாதவிரணம்:—வாத தோஷக் கோளாறாலான விரணம் பரிசிப்பதற்குக் கடினமாயிருக்கும்; ஸ்தம்பித்தும், சொற்ப துர்நீர்க் கசிவுடன் அதிக வலியுமுண்டுபண்ணும்; கருநிறம் பெற்றுக் குத்தலும் துடிப்பும் அதில் காணும். 2.

பித்த விரணம்:—நாவறட்சி, மயக்கம், ஜ்வரம், துர்நீர்க் கசிவு அழற்சி, விரணத்தில் அதிக தோஷமும் வெடிப்புமுண்டாதல், துர்நாற்றமுள்ள சீழ் முதலியன கசிதல் இவற்றால் விரணம் பித்தத்தினாலுண்டானதாய் அறிக. 3.

கபவிரணம்:—அதிக பசையுடன் கூடியிருத்தல், குருத்வம், ஸ்நிக்தத்தன்மை, அதிக வலி முதலிய தொந்தரவுகளை யுண்டுபண்ணுமை,

1. சோதைகளில் ஆமாவஸ்தை, பச்யமாநாவஸ்த்தை, பக்வாவஸ்த்தை, விதாஹாவஸ்த்தை என்று நான்கு நிலைமைகள் உண்டு. (1) ஆமாவஸ்த்தை—பசுமை அல்லது பக்குவமாகாத நிலைமை. (2) பச்யமாநாவஸ்த்தை—பக்குவமடைந்து வருகிற நிலைமை. (3) பக்வாவஸ்தை—கனிந்த அல்லது பக்குவமடைந்த நிலைமை. (4) விதாஹாவஸ்த்தை—சீழ் முதலியவற்றால் சோதையைச் சேர்ந்த அல்லது மற்றுமுள்ள பாகம் கோளாறடைவிக்கப்பட்டு அழிக்கப்படும் நிலைமை.

* சரீரத்திலுள்ள தோஷங்கள் கோளாறடைந்துண்டாகும் புண்கள் சாரீர விரணங்களாம். "சரீரம் சிதைவுறுவதாலும், விரணம் ஆறிய பிறகும் சிதைவடைந்த இடத்தில் மறுவானது நீடித்திருப்பதாலும் இது விரணம் எனப்படுகிறது" என்று ஸுச்ருதர்.

2. ஆகந்துகவிரணம்—வெளிக்காரணங்களால் உண்டாகும் விரணம். இவ்விஷயம் அடுத்த நிதானத்தில் விவரிக்கப்படும்.

வெண்மை, சொற்ப துர்நீர்க் கசிவு, மெதுவாகப் பக்குவமடைதல் ஆகியவை சிலேஷ்ம தோஷத்தாலான விரணத்தின் குறிகளாம். 4.

இரக்தாதிகளாலான விரணங்கள்:—(1) இரத்ததோஷத்தினாலான விரணம் சென்னிறமாகவும், இரத்தக் கசிவுள்ளதாகவுமிருக்கும். (2) இரண்டிரண்டு தோஷங்களின் சேர்க்கைகளாலாகிய விரணங்களில் இரு தோஷங்களின் இலக்ஷணங்களையும், (3) ஸந்நிபாத விரணத்தில் த்ரிதோஷ ஸம்பந்தமான ஸகலக்குறிகளையும் காணலாம். 4½.

விரணங்களின் ஸாத்யாஸாத்யாதி நிலைமைகள்:—(1) சர்மம், மாம்ஸம் இவற்றைப்பற்றிய விரணமும், எளிதில் ஔஷதாதிகள் பிரயோகிக்கக்கூடிய விடத்திலுண்டான விரணமும்,[1] வாலிபருக்கும் புத்திமானுன பிணியாளிக்குமுண்டான விரணமும், உபத்திரவங்களைப் பெறுததும் அப்பொழுதே யுண்டானதும், ஸாகமான காலத்தில்[2] தோன்றியதுமான விரணமும் எளிதிற் சிகித்ஸிக்கக் கூடியனவாம். (2) முற்கூறிய அம்சங்களில் ஏதாவது குறை யிருந்தால் அவ்வித விரணங்கள் கஷ்டஸாத்யங்களாகும். (3) முற்கூறிய அம்சங்கள் அனைத்தும் இல்லாமலிருந்தாலும், விரணம் அநேக உபத்திரவங்களோடு கூடியிருந்தாலும் அஸாத்யமாகும். 5—6½.

அசுத்த விரணம்:—விரணத்தைச் சுத்தமாக வைக்காவிட்டால் அதில் துர்நாற்றமுண்டாகும்; சீழ் சேர்ந்து மிகவும் கெட்டுப்போன இரத்தம் பெருகும்; அதில் ஆழமாகப் புரையோடும்; குணமடையாமல் அது நீடித்துத் தொந்தரவளிக்கும்.[3] இவ்விதம் அதி துர்க்கந்தாதி விகாரங்களுள்ள விரணம் துஷ்டவிரணம் எனப்படும். 7½.

சுத்த விரணம்:—நாக்கின் மேற்புறம் போன்று சிவந்த நிறம் பெற்றதாகவும், அதிக மிருதுவாகவும், அதிக வேதனை யுண்டுபண்ணததாகவும், வரம்புகட்டி ஆறிவரக்கூடிய மேற்புரணி யுள்ளதாகவும், கசிவுகளில்லாததாகவுமிருந்தால் அது "சுத்த விரணம்" எனக்[4] கருதப்படும். 8½.

---

1. "எளிதில் ஔஷாதிகள் பிரயோகிக்கக்கூடிய விடம்" என்பது "ஸாகே தேசே" என்கிற மூலவாக்கியத்தின் பொருள். ஆனல் "ஸாகே தேசே" என்றால் மர்மஸ்தாநம் நீங்கிய மற்றப் பிரதேசம் என்று ஸ்ரீகண்டதத்தன்.

2. "ஸாகமான காலம்" — இங்கே ஹேமந்த-சிசிரருதுக்கள் குறிக்கப்படுகின்றன.

3. "ரோகி அவிவேகியாயிருந்தாலும், சிகித்ஸை செய்பவன் மூடனுயிருந்தாலும் விரணங்கள் கெட்டுப் போகின்றன" என்று கூறப்படுகிறது.

4. "விரணம் மிகச் சிவப்பாகவோ மிக வெண்மையாகவோ இல்லாமை, அதிக கசிவற்றிருத்தல், அதிக வேதனையில்லாமை, மேடுபள்ள மில்லாமை, புடைவைக்காமை ஆகியவை சுத்த விரணிக் குறிகள்; அதை ஆற்றிவிடவேணும்" என்று சரகர்.

விரண ரோஹணம்:—[1] விரணத்தின் சுற்றுப்புறமெல்லாம் புறு வின் உடல் நிறம்போன்றும், சின்னஞ்சிறிய பொரிகள் போன்ற குமிழ்களைப் பெற்றுமிருந்தால் அந்த விரணம் ஆறி வருவதாகக் கூற வேண்டும். 9½.

ரூடவிரண லக்ஷணம்:—விரணமிருந்த பாகத்தில் இயற்கையான மேற்புரணி வளர்ந்து அதை மூடிவரும்; அதன்மேல் கிரந்திபோன்ற புடைப்புகளாவது, வீக்கமாவது, வலியாவது தோன்றமாட்டா; சர் மத்திற்கு இயல்பான நிறமுண்டாகும்; விரணமுண்டானவிடம் அவயவத்தின் மேற்புறத்துக்குச் சமபரப்பைப் பெற்று, இயற்கை நிலைமையைப் பெறும். இவை விரணம் நன்கு ஆறியதன் குறி களாம். 10½.

வேறு வியாதிகளால் வருந்துபவருக்கு விரணம் கஷ்டஸாத்யம்:— குஷ்டரோகிகள், விஷம் தேஹத்திற் பற்றியவர்கள், க்ஷயரோகிகள், மதுமேஹமுள்ளவர்கள் ஆகிய இவர்களுக்கு விரணங்கள் உண்டா னாலும், முன்பு விரண முண்டாயிருந்த விடத்தின்மீதே வேறு விர ணங்கள் உண்டானபோதிலும் அவ்விரணங்கள் கஷ்ட ஸாத்யங் களாம். விரணத்திலிருந்து மாம்ஸம், கொழுப்பு, மஜ்ஜை, மூளை போன்ற தோஷம் இவை வெளியானல் அதுவும் கஷ்டஸாத்ய மானதே. 11, 12.

அஸாத்ய விரணங்கள்:—ஆகந்துக விரணத்தைத் தவிர்த்து அடி யிற் குறிக்கப்படுபவை யெல்லாம் அஸாத்யங்களாகும்: (1) தோஷங் களின் கோளாறைக் காரணமாகக் கொண்டு உண்டாகும் விரணம் அஸாத்யம். (2) சாராயம், அகில், நெய், மூல்லைப்பூ, தாமரைப்பூ, செண்பகம் இவற்றிற்குச் சமமான வாஸனையுடைய விரணமும், வேறு வித நறுமணம்[2] வீசும் விரணமும் சீக்கிரத்தில் மரணமுண் டாவதற்கு ஸூசகங்களாம். (3) மர்மஸ்த்தானங்களைப் பற்றிய வைகளாயில்லாதிருந்தும் எவை மிகவும் கடுமையான வேதனை யுண்டுபண்ணுகின்றனவோ, (4) எவை மேலே பரிசிக்கக் குளிர்ந் திருந்தும் உட்புறத்தில் பலமான எரித்தலைக் கொடுக்கின்றனவோ, (5) மேற்புறத்தில் அதிக அழற்சி யிருந்தும் உட்புறத்தில் எவை சீதள மாயிருக்கின்றனவோ, (6) ஜீவசக்தியிழந்து, மாம்ஸம் க்ஷீணித்து, ச்வாஸ-காஸமும் அரோசகமும் உண்டாய் எவை கடுமையான அவஸ்த்தை யளிக்கின்றனவோ, (7) எந்த விரணம் மிதமிஞ்சிய சீழால் கெட்டுப்போகும் இரத்தம் நிரம்பி யிருக்கின்றதோ, (8) எவை மர்மஸ்த்தானங்களைப் பற்றி யுண்டாகின்றனவோ, (9) ஏற்ற சிகித் ஸைகளால் முறைப்படி பரிஹாரம் செய்யப்பட்டும் எவை குண மாவதில்லையோ அவையெல்லாம் அஸாத்யமென்றறிக. 13—17.

---

1. ரோஹணம் என்றால் ஆறுவது.

2. சாராயம் முதலியவற்றின் வாஸனை விரணங்களிலுண்டா வதை "ரிஷ்ட லக்ஷணம்" என்று கூறுவர்.

# 43. ஸத்யோவிரண நிதாநம். *

**ஆறுவித ஸத்யோ விரணங்கள்:**—பலவகையான கருக்குகளை யும் முனைகளையுமுடைய ஆயுதங்கள் பல வேறு வகையான அவ யவங்களின் மீது தாக்குவதால் உருவத்திற் பலவிதமான விரணங் கள் உண்டாகின்றன. அவையாவன:—சிந்நம், பிந்நம், வித்தம், க்ஷதம், பிச்சிதம், க்ருஷ்டம் என்பனவாம். இவற்றிற்குப் பிரத்தி யேகமாய் இனி லக்ஷணங்கள் கூறப்படுகின்றன. 1, 2.

**சிந்நம்:**—குறுக்காகவோ நேராய் நெடுகவோ அறுக்கப்பட்டு விரணம் உண்டாய், ஒருவாறு அகன்றிருக்கும். அதில் ஏதேனும் அவயவபாகம் துண்டாகச் சிதைக்கப்பட்டுமிருக்கும்; அந்த விரணம் "சிந்நம"[1] என்று கூறப்படுகிறது. 3.

**பிந்நம்:**—[2] ஈட்டி, தந்தம், அம்பு, கத்திமுனை, மாடு முதலியதின் கொம்பு ஆகியவற்றால் ஏதேனும் ஓர் 'ஆசயம்'[3] தாக்கிக் குழப்பட் பட்டு, அதிலடங்கிய ஏதேனும் வஸ்து[4] வெளியிற் பெருகிவருமானால் அது பிந்ந லக்ஷணமாகக் கூறப்படுகிறது. 4.

**ஆசயங்களும் அவற்றின் பிந்ந லக்ஷணங்களும்:**—ஆமமான[5] உணவு குடலில் தங்குமிடம்,[6] ஜாடராக்னி என்னும் பாசகபித்தம் சேருமிடம்,[7] ஜாடாராக்னியினால் பக்குவம் செய்யப்பட்ட உணவ நிற்குமிடம்,[8] மூத்திரம் தங்குமிடம்,[9] இரத்தம் சேருமிடம்,[10] இருத

---

* அடி முதலியது தாக்குவதால், அல்லது விழுவதால் உடனே தோஷாதிகளின் கோளாறை யெதிர்பார்க்காமல் உண்டாகும் விர ணம் (அல்லது காயம்) ஸத்யோ விரணம் எனப்படுகிறது. அதுவே ஆகந்து விரணமாம்.

1. சிந்நம்—அறுக்கப்பட்டது. அல்லது துண்டிக்கப்பட்டது.

2. பிந்நம்—பிளக்கப்பட்டது. ஆழமாகப் பாயும்படி குத்தப் பட்டது. இவ்விடத்தில் பிந்நம் என்கிற சொல் ஏதாவது ஆசயம் என் கிற கோசரூபமான உருப்பில் த்வாரமுண்டாகும்படி தாக்கப்படு வதைக் குறிப்பிடும் பரிபாஷையாம். இதர அவயவங்கள் குத்தப்பட் டால் அதற்கு வியதநம் (அல்லது வித்தம்) என்று பெயர்.

3. ஆசயம்—கோசம் அல்லது கோஷ்டம். ஏதேனும் வஸ்து தங்கியிருக்கக் கூடிய பைபோன்ற உட்புற அவயவம்.

4. ஆசயத்திலிருந்து வெளிவரும் ஏதேனும் வஸ்து என்பத னால்—வஸ்தி உடைந்தால் மூத்திரம், இருதயம் பிளந்தால் இரத்தம் குடல் குத்தப்பட்டால் உணவுப் பொருள் ஆக இவ்வாறு அந்தந்த ஆசயத்துக்குத் தகுந்தவாறு வெளிப்படும் பதார்த்தம் எனப் பொருள்.

5. ஆமம்—இரைப்பையில் சேர்ந்த இரஸமாக மாறாத உணவு

6. ஆமாசயம் அல்லது இரைப்பை.

7. பித்தாசயம் என்று பொருள்.

8. பக்குவாசயம் எனப் பொருள். இது ஸூக்ஷ்மாந்த்ரம் என்கிற சிறு குடலிலுள்ள ஒரு பாகம்.

9. மூத்திராசயம் அல்லது மூத்திர வஸ்தி.

10. இருதயத்தையே இரத்தாசயம் என்று வழங்குகிறார்கள் ஆனால் இரஞ்ஜகபித்த முண்டாகுமிடமான யக்ருத் என்கிற கல்லீ,

யம், [1] உண்டுகம், [2] புப்புஸம், [3] ஆகிய ஒவ்வொன்றும் "கோஷ்டம்" [4] என்று கூறப்படும். இக்கோஷ்டங்களில் ஏதாவது பிந்நமானல் அதில் இரத்தம் நிரம்பிவிடும்; ஜ்வரமும் அழற்சியும் காணும்; மூத்திர மார்க்கம், குதம், வாய் இவற்றிலிருந்தும், நாசியிலிருந்தும் இரத்தம் வெளியாகும்; மூர்ச்சை, பெருமூச்சு, நாவறட்சி, பொருமல், அன்னத்வேஷம் இவையுண்டாம்; மல-மூத்திர-அபாநவாயுக்கள் வெளிவரா; வியர்வை ஸ்தம்பிக்கும்; [5] கண் சிவக்கும்; வாயில் அயத்தின் வாஸனை யேற்படும்; உடலில் துர்நாற்றம் தோன்றும; இருதயத்திலும் விலாப்பக்கங்களிலும் வலியுண்டாம்; பிரத்தியேகமான ஆசயங்களிலுண்டாகும் குறிகள் என்னவென்றால், ஆமாசயம் பிந்நமாய் அதில் இரத்தம் தங்கினல் இரத்தம் கக்கப்படும்; வயிறு மிகவும் விம்மிக்கொள்ளும்; வலியும் மிகக் கடுமையாயிருக்கும். இக்கோளாறு பக்வாயசத்தைப் பற்றியிருந்தால் வலியும், வயிற்றில் பாரமும், அடிவயிற்றில் விசேஷமாகக் குளிர்ந்த உணர்ச்சியும் உண்டாடாகும். 5—10.

வித்தம்:—கூரிய முனையுள்ள சல்யம் ஏதேனும் ஆசயத்தைத் தவிர்த்து வேறு எவ்வவயவத்தையாவது குத்துமானல் "அதை வித்தம்" [6] என்றறிக. அவ்விதம் பொத்துக்கொண்ட சல்யம் ஒடிந்தும் தங்கிவிடலாம், அல்லது வெளியிலும் வந்து விடலாம். [7] 11.

க்ஷதம்:—அதிகம் சிந்நமாகாமலும், அதிகம் பிந்நமாகாமலும் இவ்விரண்டுவித விரணங்களின் குறிகளையும் ஒருவாறு பொதுவாகப்

---

வின் ஸம்பந்தத்தால் இரஸதாது இரத்தமாவதாகவும், ப்லீஹம் என்கிற அவயவத்தில் அவ்விரத்தம் விருத்தியாவதாகவும் ஆயுர்வேத நூல்கள் கூறுவதால் இங்கு இரத்தாசயம் என்று யக்ருத், ப்லீஹம் ஆகிய இவ்விரண்டு அவயவங்களும் குறிக்கப்படுகின்றன.

1. இருதயம்—ஜீவதாரமான இரத்தத்தை உடலெங்கும் பரப்பும் அவயவம்.

2. உண்டுகம் அல்லது உந்துகம்—குடலின் ஒரு பகுதியான மலம் தங்கும் ஸ்தாநம்; அதாவது மலாசயம்.

3. புப்புஸம்—ச்வாஸாசயம்.

4. கோஷ்டம் என்றால் ஆசயமே. [ஸாதாரணமாய் ஒவ்வொரு ஆசயத்துக்கும் கோஷ்டம் என்பது பொதுப் பெயராகும். ஆனல் குடலே கோஷ்டம் என்று முக்கியமாக வழங்கப்படும்.]

5. "ஸ்வேதாஸ்ராவ:" என்கிற மூலத்தில் உள்ள பதத்துக்கு வியர்வை கசியாமை என்பது ஒழுங்கான அர்த்தம். ஆனல் ஸ்வேதஸ்ய—ஆஸ்ராவ:—வியர்வை அதிகமாகக் கசிதல் என்று ஸ்ரீகண்டதத்தனது வியாக்கியாநம்.

6. வித்தம்—பொத்துக் கொள்ளல்.

7. இதனல் "வித்தம் என்கிற விரணம் இரண்டு விதம். உள்ளே சல்யம் ஒடித்துக்கொண்டு வெளிவராமலே நின்றால் அது "உத்துண்டிதம்" என்றும், சரீரத்திற் பொத்து விரணமுண்டாக்கி வெளியாய்விட்டால் அது "அநுத்துண்டிதம்" என்றும் கூறப்படும்.

பெற்று, [1] அவயவத்திற்கு ஒழுங்கீன முண்டுபண்ணும் விரணம் "க்ஷதம்" [2] என்று கூறப்படுகிறது. 12.

பிச்சிதம்:—பலமான அடி தாக்குவதாலும், அழுத்தி நசுக்கப் படுவதாலும் ஏதேனும் அவயவம் ஒருவாறு அகன்று எலும்புடன் தட்டையாய்விடுவதோடு, மஜ்ஜையும் இரத்தமும் குழம்பித் ததும்பி னுல் அந்த விரணத்தை "பிச்சிதம்" [3] என்றறிக. 13.

க்ருஷ்டம்:—கடின வஸ்துக்களால் தேய்க்கப்படுவதாலாவது, அடி முதலியது தாக்குவதாலாவது ஏதேனும் அவயவத்தில் சர்மம் வழுன்றுபோய், அழற்சியோடும் சிறிது இரத்தக் கசிவோடும் விரண முண்டானுல் அது "க்ருஷ்டம்" [4] எனப்படுகிறது. 14.

ஸசல்ய விரணம்:—கபிலநிறமாகவும், வீக்கமுள்ளதாகவும், சிறு கொப்புளங்களடர்ந்ததாகவும், அடிக்கடி இரத்தத்தைப் பொசிப்ப தாகவும், மிருதுவாக மேலே கிளம்பிய மாம்ஸக் குமிழியுடன் கூடிய தாகவும், வலியால் வருந்துவதாகவுமுள்ள விரணத்தில் சல்யம் உள்ளே தங்கியிருப்பதாய் அறிக. ஆகவே அது "ஸசல்யவிரணம்" [5] எனப்படுகிறது. 15

கோஷ்டத்திற் சல்யம் பாய்ந்ததன் லக்ஷணம்:—ஒரு சல்யமானது சர்மத்தினுள் பாய்ந்து, மத்தியிலுள்ள ஸிரை முதலியவற்றைக் [6] கிழித் துக்கொண்டோ அல்லது அவற்றைப் பரிஹரித்தோ குடலுக்குள் பிரவேசித்து அங்கே தங்கிவிட்டால், சல்யசாஸ்திரத்திற் கூறப்படும் உபத்திரவங்களை [7] அஃதுண்டுபண்ணும். 16.

கோஷ்டம் சிதைந்திருப்பதில் அஸாத்ய லக்ஷணம்:—கோஷ்டம் பிந்நமடைந்து, அதனுள் இரத்தம் சேர்ந்துவிடுமானுல், அதனுல் பாதங் களும் - கைகளும் - முகமும் வெளுத்துப்போனுல், வெளிவரும் ச்வா ஸம் குளிர்ந்து, கண்களும் சிவந்து, வயிறும் விம்மிப்போனுல் அப் பிணியாளிக்கு சிகித்ஸை பயனற்றதாகும். [8] 17.

பஞ்ச மர்ம ஸாமாந்ய க்ஷத லக்ஷணம் [9]:—தலைச்சுற்றல், அழுதல்

---

1. சிறிது சேதமும் சிறிது ஆசயத்தில் தாக்குதலும் ஏற்பட்ட மிச்ரலக்ஷணமுள்ள விரணம் எனக் கருத்து.
2. க்ஷதம்—வெட்டுக்காயம் என்னும் விரணம்.
3. பிச்சிதம்—உளைய நசுங்குதல்.
4. க்ருஷ்டம்—தோல் வழுண்டு போதல்.
5. ஸசல்ய விரணம்—உள்ளே சல்யம் அடங்கியுள்ள விரணம்.
6. நரம்புகள், தமனிகள் முதலானவைகளும் "முதலியவற்றை" என்பதால் குறிக்கப்படுகின்றன.
7. "கோஷ்டத்தில் சல்யம் தங்கியிருந்தால் வயிற்றுப் பொருமா லும், இரைத்தலும், வலியும், உணவு-மலம் முதலியவை வெளிப்படு வதும் ஆக இவ்வுபத்திரயக்குறிகள் தோன்றும்" என்று ஸுச்ருதர்.
8. இரத்தம் அதிகமாய் சேதமடைவதால் முகம் முதலியவை வெளுத்து விடுகின்றன; குடலில் இரத்தம் அதிகமாகச் சேருவதால் வயிறு விம்முதல் முதலியவை யுண்டாகின்றன.
9. பஞ்ச மர்மங்கள்—மாம்ஸமர்மம், ஸிராமர்ம், ஸ்நாயுமர்மம், அஸ்த்திமர்மம், ஸந்திமர்மம் என்பவை.

அல்லது பிதற்றல், விழுதல், அதிக மூர்ச்சை, வலித்திழுத்தல், பலம் குன்றிப்போதல், உடலில் உஷ்ணம் அதிகரித்தல், அவயவங்கள் துவண்டுபோதல், மேல் மூச்சு அதிகரித்தல், கடுமையாக வாத ஸம்பந்தமான வலிகள் தோன்றுதல் இவையும், மாம்ஸம் கழுவிய நீர் போன்று இரத்தம் வெளியாவதும், எல்லா இந்த்ரியங்களுக்கும் அததற்குரித்தான விஷயங்களில் பிரவ்ருத்தி ஒடுங்கிப்போவதும், ஆக இவை ஐந்துவித மர்மங்களில் அபிகாதாதிகளால் விரணமுண்டாவதாலாகும் பொதுக் குறிகளாம். 18, 19.

வெவ்வேறு ஸ்த்தாநங்களின் வித்த லக்ஷணங்கள்:—(1)ஸிரைகள் என்கிற இரத்தக் குழாய்கள் தாக்கப்பட்டாலும், அல்லது குத்தப்பட்டாலும் இந்திர கோபமென்கிற பட்டுப் பூச்சி போன்று சிவந்துள்ள இரத்தம் மிகுதியாக வெளிப்படும்; ஸிராவித்த விரணம் என்கிற இதில் [1] விரணத்தினுலுண்டான வாயுவானது ஸுச்ருதர் கூறிய பல வித வாதரோகங்களை யுண்டு பண்ணும். [2] (2) ஸ்நாயுவித்தவிரணம்:— உடல் வளைவுறுதல், தாக்குண்ட அவயவம் கிருசமாதல், வேலைகளைச் செய்வதிற் சக்தியில்லாமற் போதல்,வலி கடுமையாயுண்டாதல் ஆகிய குறிகளோடு விரணம் நெடு நாளளவும் தொந்தரவளித்து ஆறுமானுல் அதை "ஸ்நாயுவித்த விரணம்" [3] என்று நிச்சயிக்கவும். (3) ஸந்தி வித்த விரணம்:—சல ஸந்திகளாவது [4] அசல ஸந்திகளாவது [5] தாக்கப்பட்டு விரணமடைந்தால் வீக்கமும், வலிகளும் கடுமையாய் அதிகரிக்கும்; பலம் க்ஷீணிக்கும்; வீக்கமும் நாற்புறமும் விரைவிற் பரவும்; எவ்வேலையும் செய்வதில் விருப்பமின்மையும், ஸௌகர்யமின்மையும் ஏற்படும். (4) அஸ்த்தி வித்த விரணம்:—விரணத்தினுல் வருந்துபவனுக்கு இராக் காலங்களில் வெகு கடுமையாக வலியுண்டா

---

1. ஸிரை யென்றுல் ஸாதாரணமாய் காரிரத்தக் குழாய்களுக்கே பெயராம். ஆனுல் இங்கு விவரிக்கப்பட்டுள்ள (இரத்தம் அதிக சென்னிறமாயிருத்தல், அதி வேகமாகவும் அதிக அளவாகவும் வெளிவருதல் முதலிய) குறிகளைக்கொண்டு "தமநீ" என்கிற சுத்தரத்தக்குழாய் குறிக்கப்படுவதாய் அறிக. இரத்தக் குழாய் தாக்கப்படுவதாலான குறிகள் என்று பொதுவாகக் கருத்து.

2. "இரத்தம் அமிதமாக வெளிப்பட்டால் சிரஸ்ஸில் தாபம், கண் தெரியாமை, கை கால் இசிவு இத்யாதிகள் இலக்ஷணங்களாம்" என்று சோணித வர்ண நீயாத்தியாயத்தில் ஸுச்ருதர்.

3. ஸ்நாயுவித்தம்—மாம்ஸ பேசிகளின் முனைகளில் பேசிகளை எலும்புகளோடு சேர்த்துக் கட்டுவதற்கு உபயோகமாயுள்ள நல்ல வலிமையுள்ள வெண்மையான பந்தந வஸ்து ஸ்நாயு எனப்படுகிறது; ஸ்நாயு வென்பதை உணர்ச்சி நரம்புகள் என்று சொல்வாருமுண்டு; அந்த ஸ்நாயு தாக்கப்படுவது ஸ்நாயுவித்தம் எனப்படும்.

4. சலஸந்திகள் — தோள், முழங்கால், முழங்கை, கழுத்து முதலான ஸ்த்தாநங்களின் அசைந்துழலக் கூடிய பூட்டுகள்.

5. அசல ஸந்திகள்: — அசையாப்பூட்டுகள்; சிரஸ், இடுப்பு முதலியதிலுள்ள கபால ஸந்திகள் முதலியன.

கும் ; எல்லா நிலைமைகளிலுமே நோவு தணிவடையாது ; அப்பிணி யாளிக்கு எலும்பு தாக்கப்பட்டு விரணமடைந் திருப்பதாகத் தத்துவ முணர்ந்த வைத்தியர் தீர்மானிப்பர். (5) மர்மவித்தம்:—மர்மஸ்தா நம் ஏதாவது தாக்கப்பட்டிருந்தால் ஸிரா-ஸ்நாயு முதலியவற்றின் விரணலக்ஷணங்கள் தனித் தனியே அந்த மர்மத்தில் ஏற்படுவதோடு, மர்மஸாமாந்யங்களுக்கு முற்கூறிய குறிகளும் கலந்துண்டாகும். மேலும் மாம்ஸமர்மம் தாக்கப்பட்டிருந்தால் ரோகி உடல் வெளுத்தும், நிறமாறுபாடு அடைந்தும், பரிச வுணர்ச்சியற்று மிருப்பான். 20—24.

விரணோ பத்திரவங்கள்:—விஸர்ப்பம், பக்ஷ வாயு, ஸிராஸ் தம்பம், அபதாநகம், மூர்ச்சை, உந்மாதம், விரணவேதனை, ஜ்வரம், நாவறட்சி, ஹநுக்கிரஹம், காஸம், சர்தி, அதிஸாரம், விக்கல், ச்வாஸம், நடுக்கம் இப்பதினாறும் விரணங்களுக்கு உபத்திரவ மாகக் காண்பதாய் விரணதத்துவம் அறிந்தவர் கூறுவர். 25, 26.

## 44. பக்ந நிதாநம். *

பக்நத்தில் இரண்டு பொது பேதம்:—பக்நம் என்கிற எலும்புச் சிதைவு "ஸந்தி பக்நம்" [1] என்றும், "காண்டபக்நம்" [2] என்றும் சுருக்கமாய் இருவகைப்படும். ½.

ஸந்திபக்நம்:—அவற்றுள் "ஸந்தி பக்நம்" என்பது உத்பிஷ்டம், விச்லிஷ்டம், விவர்த்திதம், திர்யக்கதம், ஊர்த்வக்ஷிப்தம், அதக்ஷிப் தம் என்று அறுவகையாம். ஏதாவது அவயவத்தின் பூட்டானது சிதைவுற்றுக் கழன்று போகுமானால் அந்த அவயவத்தை நீட்டும் போதும், மடக்கும்போதும், திருப்பும்போதும், அல்லது ஒரே நிலைமையில் வைத்திருக்கும்போதும் வலி மிகக் கடுமையாயிருக்கும்; அவ்விடத்தைப் பரிசிப்பதும் ஸஹிக்கவியலாது. இவை ஸந்திபக்நத் தின் பொதுக் குறிகளாம். (1) எந்த அஸ்த்திஸந்தியில் எலும்பு களின் முனைகளுக்கு ஒன்றோடொன்று உத்பிஷ்டம் என்கிற உரைதல் அல்லது தேய்வு உண்டாகின்றதோ அந்த ஸந்தியைச் சுற்றிலும்

---

* 'பக்நம்' என்றால் ஒடிதல் அல்லது முறிதல் என்று பொருள். எலும்பு முறிவது, அதனாலுண்டாகும் வேறு கோளாறுகள் ஆகிய வற்றைப்பற்றி விவரிக்கும் அத்தியாயம்.

1. ஸந்தி பக்நம்—பூட்டுகளில் உண்டாகும் முறிவு. இரண்டு எலும்புகளோ அவற்றிற்கு மேற்பட்ட எலும்புகளோ ஒன்றோ டொன்று இணையும் பாகம் "ஸந்தி" எனப்படும். விலகி விச்லே ஷம் (கழலுதல்) உண்டாகுமேயன்றி, பக்நம் (ஒடிதல்) உண்டாக மாட்டாது எனினும், விச்லேஷம் என்கிற அர்த்தத்தில் பக்நம் என்கிற சொல் இங்கே பிரயோகிக்கப்பட்டதாய் அறிக.

2. காண்ட பக்நம்—எலும்பின் தண்டில் உண்டாகும் முறிவு. நீண்ட அல்லது குட்டையான எலும்பின் மத்தியபாகத்திலோ முனை முதலிய மற்றப் பாகத்திலோ முறிவு அல்லது சிதைவு ஏற்பட்டால் அதை காண்டபக்நம் என்பார்கள்.

வீக்கம் காணும்; இராத்திரி காலத்தில் வலி அதிகமாகும்.[1] (2) எலும்புகளுடைய இணைப்பு அல்லது பூட்டு விலகிப் போதல் 'விச்லேஷம்'[2] அல்லது விச்லிஷ்டம் எனப்படுகிறது. இதில் உத்பிஷ்டத்திற்குக் கூறிய விதமாய் வீக்கமும், இடைவிடாத வலியும், இராத்திரி நேரத்தில் விசேஷ வலியும் தோன்றும். (3) எலும்புகள் கீழ்மேலாய் புறண்டுவிடும் நிலைமை விவர்திதம்[3] எனப்படுகிறது. இதில் எலும்புகளின் அல்லது அவ்வவயவத்தின் பக்கவாட்டில் வலி கடுமையாயுண்டாகும். (4) எலும்பின் ஸந்தி முனை விலகி தேஹத்திற் குறுக்காகப் பாய்ந்திருக்கும் நிலைமை திர்யக்கதம் எனப்படுகிறது.[4] இதிலும் தீவ்ரமான நோவுண்டாகும். (5) ஊர்த்வக்ஷிப்தம்[5] என்பதில் எலும்பு தன் ஸ்த்தாநத்தை விட்டு விலகி மேலே தூக்கிக்கொண்டு நிற்கும்; வலி அதிக கடுமையாகவும் எலும்பின் இரண்டு முனைகளும் ஒழுங்கீனமாய் ஒன்று மேற்புறம் தூக்கிக்கொண்டும், மற்றொன்று கீழே தாழ்ந்து மிருக்கக் காணப்படும். (6) அதஃக்ஷிப்தம்:—ஒரு எலும்பு தன் ஸந்திஸ்த்தாநத்தை விட்டு கீழே நழுவிப் போனால், அதில் வலி அதிகமா யிருப்பதோடு, இரண்டு எலும்புகளும் ஒன்று சேராமல் நிற்கும். 1—3½.

காண்டபக்நம்:—எலும்புத் தண்டிலுண்டாகும் சிதைவு கர்க்கடகம்,[6] அச்வகர்ணம்,[7] விசூர்ணிதம்,[8] பிச்சிதம்,[9] அஸ்த்திச்

---

1. பகல் வேளையில் அயிகாதம் அல்லது அசைவு முதலியதால் சயமடைந்த வாயு, இரவில் சைத்தியம் அதிகமாவதால் பிரகோபித்து அதிக வேகத்தைப் பெற்று கடும் வலியை யுண்டுபண்ணுகிறது.

2. விச்லேஷம் என்பதற்கு ஸந்தியில் இரண்டு எலும்புகளும் வெகு சொற்பம் விலகுதல் என்று பொருள். அதிகம் விலகினால் அது "அதஃக்ஷிப்தம்" எனப்படும். இதில் எலும்புகளில் தேய்தல் ஏற்படுவதில்லை யாகையால் வீக்கம் மிதமாயிருக்கும். இணைப்பிலிருந்து பிரிந்து இரண்டு எலும்புகளும் சிறிது விலகி நிற்குமாகையால், இவ்விரண்டுக்கு மிடையில் அவயவம் ஒருவாறு துவண்டு பள்ளம் விழக்கூடியதாயிருக்கும்.

3. விவர்திதம் என்பதில் எலும்புகள் இரண்டும் திருகிக்கொண்டதுபோல் புறண்டு நிற்கும்.

4. திர்யக்கதம் என்பதில் ஸந்தியைவிட்டுப் பிரிந்த எலும்பு அது அடங்கியுள்ள அவயவத்தைக் குத்திக்கொண்டு குறுக்காக நிற்கும் என்று பொருள்.

5. ஊர்த்வக்ஷிப்தம் என்பதில் ஸந்தியிலிருந்து கீழெலும்புவிலகி, மேலுள்ள எலும்புடன் ஏறி நிற்கும். இதில் இரண்டு எலும்புகளுடைய முனைகளும் ஒன்றன் மேலொன்றாகப் பாய்ந்து நிற்கும்.

6. கர்க்கடகம்—எலும்பின் இரு பாரிசங்களில் பலமான தாக்குதலால் பள்ளம் விழுந்து, மத்தியில் மேலெழுந்து பிதுக்கங்கொண்டிருப்பதால், ஒருவாறு அக்கோளாறு நண்டைப்போல் தோற்றுமாகையால், இச்சிதைவுக்கு கர்க்கடகம் எனப் பெயரிடப்பட்டது.

7. இதில் எலும்பானது ஒருவாறு தட்டையாகச் சிதைவடைந்து குதிரையின் காதுபோலத் தூக்கி நிற்கும்.

8. விசூர்ணிதம்—எலும்பு பொடியாக உடைதல். (பரிசிப்பதாலும், அவ்விடத்திலுண்டாகும் சப்த உணர்ச்சியாலும் இதையறியலாம்.)

9. பிச்சிதம்—எலும்பு நசுக்கப்படுவதா லுண்டாகும் கோளாறு.

சல்லிகா,[1] காண்டபக்நம்,[2] அதிபாதிதம்,[3] மஜ்ஜாகதம்,[4] ஸ்ப்புடிதம்,[5] வக்கிரம்,[6] இரண்டுவகையான சிந்நங்கள்[7] ஆக காண்டபக்நம் பன்னிரண்டு விதமாகும். இவற்றில் அவயவம் துவளுதல், வீக்கமும் வலியும் மிகவும் அதிகரித்தல், மெதுவாக அழுத்திப் பரிசிக்கையில் நற நற வென்று சப்தமுண்டாதல், பரிசிப்பதைத் தாங்கவியலா திருத்தல், துடித்தல், குத்தல், வலி, எந்த நிலைமையிலும் அமைதி யின்மை ஆகியவை பொதுக் குறிகளாம். எலும்பு அதன் தண்டில் சிதைவுறும் வகையில் இன்னும் பல வேறு பேதங்கள் உண்டு. ஆனல் அதனதன் குறிகளைக்கொண்டு அதததற்கேற்ற பெயரை வழங்கலாம். 4—7.

அஸ்த்திபக்நத்தில் கஷ்டஸாத்யாதி நிலைமைகள்:—(1) போதிய உணவெடுத்துக் கொள்ளாதவன், தன் நிலைமை யாறியாது தோன்றிய வாறு நடப்பவன், வாதப் பிரக்ருதியானவன், உபத்திரவங்களோடு கூடியவன்[8] ஆகியவர்களுக்கு எலும்புமுறிவு கஷ்டஸாத்யமாம். (2)கடிகபால மென்கிற இடையெலும்பு பிந்நமாவதும்,[9] ஸந்திமோக்ஷ மென்கிற பூட்டு விலகுதலும்,[10] முன் குறிப்பிட்ட அதஃக்ஷிப்தமென் கிற கோளாறும், பிருஷ்டபாகத்திலுள்ள எலும்பு உத்பிஷ்டம் என் கிற முற்கூறிய முறிவை யடைவதும் இவை யாவும் அஸாத்யமான வையாம். மேலும் ஒன்றோடொன்று இணைக்கப்படாத கபாலாஸ்த்தி, நெற்றியிலுள்ள கபாலாஸ்த்தி இவை நொறுங்கிப் போனலும், மார்பி

1. அஸ்த்திச்சல்லிகா—எலும்பைச் சூழ்ந்துள்ள ஒருவித சவ்வுப் போர்வையின் சிதைவு.

2. காண்டம் என்றால் எலும்புத் தண்டு. கர்க்கடகம் முதலியதும் காண்டபக்நத்தைச் சேர்ந்ததாயினும், அவை ஏகதேசச் சிதைவா யிருப்பவை. எலும்புத்தண்டு இரண்டு துண்டுகளாக முறிவது முக் கியமாக "காண்ட பக்நம்" என்று கூறப்படுகிறது.

3. எலும்பு ஏதாவது சிதைவடைந்து அதன் இடத்தை விட்டு முற்றிலும் வெளிப்பட்டுப் போவது அதிபாதிதம் எனப்படும்.

4. எலும்புக்குள் மஜ்ஜையென்கிற தாதுவில் பாய்ந்து அதைச் சிதைத்தல் மஜ்ஜாகதம் எனப்படும்.

5. ஸ்ப்புடிதம்—எலும்பில் ஒரு சிறிது பிளவுண்டாய் எலும்புச் சில்வி பெயர்தல்.

6. எலும்பு வளைந்துபோதல் வக்கிரம் எனப்படுகிறது.

7. சிந்நம் — நெடுகப் பிளவுறுதல். இது அணுவிதீர்ணம் (சிறு பிளவு), பஹுவிதீர்ணம் (பெரிய பிளவு) என்று இரண்டு விதம்.

8. ஜ்வரம், ஆத்மாநம், மூத்திரம் கட்டிப்போதல், மலபந்தம் முதலியவை அஸத்திபக்நத்தின் உபத்திரவங்களாம்.

9. பிந்நம் என்பது கபாலமென்கிற பலகைபோன்ற எலும்பு உடைவதைக் குறிப்பிடும் பெயர். (சிரஸ், கன்னம், நெற்றி, தவடை, செவிகளின் பக்கம், மார்பு, இடுப்பு, தோள்பட்டை முதலான விடங் களிலுள்ள அகன்ற எலும்புகள் கபாலாஸ்த்திகள் எனப்படும்.)

10. இடுப்பு முதலியவிடத்தில் ஸந்திகளில் எலும்பு நழுவிவிடு வது சிகித் ஸிக்கக் கூடிய தென்றும் சிலரது கொள்கை.

லுள்ள உரோஸ்த்தி, இடுப்பிலுள்ள ப்ருஷ்டாஸ்த்தி, சங்காஸ்த்தி யென்கிற கன்னத்தெலும்பு, தலையிலுள்ள கபாலாஸ்த்தி இவை உடைந்தாலும் சிகித்ஸை அஸாத்யமாகும்.[1] (3) விலகிப்போன அல்லது முறிந்துபோன அஸ்த்திகள் ஒன்றேடொன்று சேர்ப்பித்த பிறகு நன்றாகக் கூடிவிட்டபோதிலும், அவற்றைச் சேர்ப்பித்த வகையும் பந்தநம் செய்த முறையும் ஒழுங்கீனமா யிருந்தாலும், அவை அதிர்ச்சி முதலியவற்ருல் பலவாறு அசைந்து விகாரமடைந்தாலும் அவையும் ஒழுங்கீனமாகவே நின்றுவிடும். 8—11.

பலவித எலும்புக்குண்டாகும் கோளாறுகள்:—தருணாஸ்த்திக ளென்கிற முருந் தெலும்புகள்[2] அபிகாதாதிகளால் வளையும். நளக மென்கிற நீண்ட எலும்புகள் ஒடியும்[3]. கபலாஸ்த்திகள் என்கிற பலகைபோன்ற அஸ்த்திகள் பிந்நமாகும் அல்லது பிளந்துபோம்[4]. ருசகங்களென்கிற சிறிய எலும்புகள்[5] உடையும். 12.

---

## 45. நாடீவிரண நிதானம்*

நாடீவிரண நிதாந ஸம்ப்ராப்திகள்:—ஒருவன் தனக்குண்டான விரணசோதை ஆமநிலைமையிலிருந்து முதிர்ந்து மிகப் பக்குவ மடைந்த பின்பும் அறியாமையால் ஏற்ற சிகித்ஸை செய்யாமல் அதை அலக்ஷ்யம் செய்தாலும், அமிதமாகச் சீழ் முதலியது சேர்ந் துள்ள விரணத்தைச் சுத்தம் செய்யாமல் தகாதனவற்றையும் உபயோகித்து உபேக்ஷித்து வந்தாலும், அவனுக்கு அச்சீழ் முதலிய தோஷம், சரீர உட்புறங்களின் தாதுக்களைச் சிரழித்துக்கொண்டு,

1. "சங்காஸ்த்தி (கன்னத் தெலும்பு), சிரஸ்ஸின் எலும்பு, மார்பிலுள்ள மத்திய எலும்பு இவை உடைந்தால் மரணமுண்டா கும்" என்று பாலுகி.

2. நாசி, தொண்டை, விலாவெலும்புகள் சேருமிடம் முதலியவற்றிலுள்ள மிருதுவான எலும்புகள் தருணாஸ்த்திகள் எனப்படும். இளங்குழந்தைகளுடைய எலும்பும் தருணாஸ்த்தி போலவே மிருதுவாயிருக்கும். இந்த விதமான எலும்புகள் அபிகாதத்திஞல் முறிவடையாமல் வளைவது இயல்பு. அவ்வித வளை வுக்கு அஸ்த்திநமநம் என்று பெயர்.

3. கை, கால், விலாப்பக்கம், விரல்கள் முதலிய அவயவங் களின் நீண்ட எலும்புகள் நளகங்கள் எனப்படும். அவ்வித எலும்பு கள் முறிவது இயல்பு. அம்முறிவுக்கு அஸ்த்திபங்கம் அல்லது அஸ்த்திபேதம் எனப் பெயர்.

4. சிரஸ்ஸு, கன்னம், இடை முதலியவிடத்து எலும்புகள் கபாலாஸ்த்திகள். அவை உடைவதற்கு பிந்நம் என்று பெயர்.

5. வம்சாஸ்த்திகள் என்கிற முதுகெலும்புகள், பற்கள், கணுக்கை, கணுக்கால் முதலியவிடத்திலுள்ள சிறிய உருண்டைவடிவ மான எலும்புகள் ருசகங்கள் எனப்படுகின்றன; அவை உடையும் வகைக்கு ஸ்ப்புடநம் என்று பெயர்.

*நாடீவிரணம்—சீழ்முதலியது சேர்ந்து புரையோடும அழிப்புண்.

அப்பால் விரணஸ் ராவவிஞ்ஞானீயாயத்திற்கூறிய ஸ்த்தானங்களிலும்[1] பிரவேசிக்கின்றது;[2] அந்தச் சீழ் நெடுந்தூரம் புடைவைத்துக் கொண்டு தொடர்ந்து த்வாரமுண்டுபண்ணிவிடுவதாலும், நெடுகவும் ஒரு குழாயைப்போல் செல்லுவதாலும் இது "நாடீவிரணம்" எனப்படுகிறது. 1½.

நாடீவிரணம் ஐந்து விதம்[3]:—வாத-பித்த-கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு நாடீவிரணமும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும் சல்யத்தைக் காரணமாகக்கொண்டு மற்றொன்றுமாக[4] இத்த விரணம் ஐந்து வகைப்படும். 2.

வாதஜ நாடீவிரணம்:—அவற்றுள் வாததோஷக் கோளாறைப் பெற்ற நாடீவிரணம் அதிக கடுமையாகவும், நுண்ணிய முகமுள்ள தாகவும், குத்தலுண்டுபண்ணுவதாகவும், நுரைத்துக்கொண்டு[5] இரவில் விசேஷமாக சீழ் முதலிய துர்நீரைப் பெருக்குந்தன்மைய தாகவுமிருக்கும்.[6] 2, 2½.

பித்தஜ நாடீவிரணம்: — பித்ததோஷக்கோளாறுடைய நாடீ விரணத்தில் நாவறட்சியும், ஜ்வரமும், அதிக தாபமும் உண்டாகும் ; இதில் பொசியும் சீழ் முதலிய துர்நீர் பசுமை நிறமாகவும், ஒருவாறு சூடாகவும், பகல் வேளையில் அதிகமாகவுமிருக்கும்.[7] 3.

கபஜ நாடீவிரணம்:—மிகத் தோய்ந்தும், மிகவும் வெளுத்துப் பிசு பிசுப்புடன் கூடிய இரத்தம் கலந்தும், ஸ்ரவித்தோடக் கூடாமல் தடித்தும், தினவுடன் கூடிய வலியைக் கொடுத்தும், இரவில் விருத்தியாய்க்கொண்டு மிருக்கும்[8] துர்நீர் நிரம்பிய நாடீவிரணத்தைக் கபதோஷ ஸம்பந்தமானதென்று அறிக. 3½.

ஸந்நிபாதஜ நாடீவிரணம்:—அதிகமான தாபஜ்வரம், அதிக ஊர்த்வச்வாஸம், மூர்ச்சை, வாய் சுஷ்கித்தல் ஆகிய இக்குறிகளும்,

1. ஸுச்ருதஸம்ஹிதையில் ஸூத்திரஸ்த்தானத்தைச் சேர்ந்ததோர் அத்தியாயம். சர்மம், மாம்ஸம், ஸிரைகள், ஸ்நாயுக்கள், ஸந்திகள், அஸ்த்திகள், கோஷ்டம், மர்மங்கள் முதலியவை அங்கு கூறப்படும் நாடீவிரணம் பரவக்கூடிய ஸ்த்தானங்களாகும்,

2. அஸ்த்தி பக்நம் (எலும்பு முறிவு) முதலியது உபேக்ஷிக்கப் பட்டாலும் நாடீவிரணம் உண்டாகுமென்று ஸ்ரீகண்டதத்தன்.

3. நாடீவிரணத்திற்கு முதலில் விரணம் அல்லது விரணசோதை காரணமானுலும், புரையோடும் ஸமயத்தில் ஸம்பவிக்கிற தோஷங் களின் கோளாறுகளால், தோஷ ஸம்பந்தம் இங்கு குறிக்கப்படுகிது.

4. சல்யத்தினுல் உண்டாவது ஆகந்துக நாடீ விரணமாகும்.

5. வாயு சேருவதால் துர்நீர் நுரைத்து வெளியாம்.

6. இரவில் சைத்தியம் விருத்தியாவதால் வாதப் பிரகோபத் துக்கு பலம் அதிகமாயுண்டாவது இயல்பு.

7. பகல் வேளையில் உஷ்ணம் அதிகப்படுவதால் பித்த தோஷக் கோளாறு பலப்படும்.

8. இரவில் இவ்வியாதியும், இதில் துர்நீர்க்கசிவும் அதிகரிப்ப தற்கு கபதோஷம் இரவில் பிராபல்ய மடைவதே காரணமாம்.

வாதஜாதி நாடீவிரணங்களுக்குத் தனித் தனியே கூறியுள்ள மற்ற லக்ஷணங்களும் எந்த நாடீவிரணத்தில் காண்கின்றனவோ, அதைப் பிராணனைச் சிதைக்கும் காளராத்திரியெனத் தகும் கொடியதான ஸந்நிபாத நாடீவிரணம் என்றறிக. 4½.

சல்யஜநாடீவிரணம்:—சரீரத்திற் பிரவேசித்து எங்ஙனமோ மறைந்துள்ள சல்யமென்கிற ஏதேனும் முள்முதலிய வஸ்துவானது தான் ஸம்பந்தித்துள்ள விடத்திலும், அதை யனுஸரித்த மற்றப் பிரதேசங்களிலும், புரையை யுண்டுபண்ணும்; அந்த விரணம் கடையப்பட்டதுபோல் நுரைத்துக்கொண்டு உஷ்ணமாகவும், இரத்தத்துடன் திடீரென்று ஒருவித துர்நீரைப் பெருக்கும்; அப்பொழுது வலி அதிகப்படும்; இதிலிருந்து சீழ் தொடர்ச்சியாகப் பெருகும்.[1] 5½.

நாடீவிரணத்தில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள்:—ஸந்நிபாத ஸம்பந்தமான நாடீவிரணம் அஸாத்யம்; மற்ற நான்கு நாடீவிரணங்களும் கஷ்ட ஸாத்யங்களாம். 6.

---

## 46. பகந்தர நிதாநம்.*

பகந்தரமுண்டாகும் வகை:—குதமென்கிற ஆஸனத்வாரத்திற்குள் இரண்டு அங்குலம் மேலே பக்கவாட்டில் பிளவையுண்டாகும்; அது அதிக வலியைத் தரும். அக்கட்டியே உடைந்துவிடுமானால் அதற்கு "பகந்தரம்" என்று பெயர்;[2] அது ஐந்து வகைப்படும். 1.

சதபோநகம்:—துவர்ப்பும் ரூக்ஷமுமான பதார்த்தங்களை யுபயோகிப்பது முதலியதால் பிரகோபமடைந்த வாயுவானது அபாநமென்கிற குதப்பிரதேசத்தில் ஒரு வித பிடகையை உண்டு பண்ணும். அப்பிளவையைத் தகுந்தவாறு சிகித்ஸிக்காமல் உபேக்ஷித்தால் அது மிகக் கடுமையான வேதனையோடு பழுத்து உடையும்; அப்பொழுது சிவந்த நுரை அதிற் கிளம்புகிறது; அதிலிருந்து மூத்திரம், மலம், சுக்ரம் ஆகியவைகளும் வெளியாகும்;[3] அநேகம் விரணங்கள்

---

1. சல்யமோ, சல்யம் அடங்கியுள்ளவிடமோ அசைக்கப்படுவதால் இக்குறிகள் விசேஷமாகத் தோன்றும்.

* பகந்தரம்—குதத்தில் அல்லது குதத்துக்கு அருகில் உண்டாகும் பிளவை. இதைப் பவுத்திரம் என்கிறார்கள்.

2. "குதம் என்கிற ஆஸனத்வாரம், யோனி பாகம், மூத்திரப்பை இவற்றை தாரணம் செய்வதால் 'பகந்தரம்' என்று பெயர்" என்று ஸுச்ருதர். பகம் என்கிற சொல் அதற்கருகிலுள்ள மற்ற குதாதி அவயவங்களையும் குறிப்பிடுகிறது. "பகந்தரத்திற்கு கடீகபாலங்களில்-அதாவது இடுப்பிலுள்ள கூபகாஸ்த்திகளில்-வேதனை, குதத்தில் அரிப்பு, அழற்சி, வீக்கம் இவை பூர்வரூபங்களா யுண்டாகின்றன" என்று ஸுச்ருதர்.

3. குதம், மூத்திரவஸ்தி, லிங்கத்வாரம் இவற்றில் விரணம் பரவி, ஒன்றோடொன்று கலந்துவிடும்படியாய் த்வாரங்கள் ஏற்படுவதால் இந்த பகந்தரத்திலிருந்து மல மூத்திரங்கள் வருகின்றன.

அதைச் சூழ்ந்திருக்கும். வாததோஷக் கோளாருலான இப்பிள வையை "சதபோநகம்" [1] என்பார்கள். 2½.

உஷ்ட்ரக்ரீவம்:—பித்த தோஷமானது, அதைப் பிரகோபிக்கச் செய்யும் பதார்த்தாதிகளையுபயோகிப்பதால் மிகவும் விருத்தி யடைந்து, ஓர் சென்னிறக் கட்டியை உண்டுபண்ணுகிறது. அது சீக்கிரத்திற் பக்குவமடைந்து சூடான சீழுடன் உடையும். இந்த [2] பகந்தரத்தை "உஷ்ட்ரக்ரீவம்" என்று கூறுவர். 3,4.

பரிஸ்ராவி:—கபதோஷக்கோளாருல் உண்டாகும் பகந்தரம் அதிக அரிப்பையுண்டுபண்ணும்; அதிலிருந்து வெளியாகும் சீழ் கட்டியாயிருக்கும்; இந்த பகந்தரம் கடினமாகவும், சொற்ப வேதனை யுண்டுபண்ணுவதாகவும், வெண்மையாகவும் இருக்கும்; இதற்குப் "பரிஸ்ராவி" [3] என்று பெயர். 5.

சம்பூகாவர்த்தம்:—அநேக வகையான நிறங்களையும், பலவித வேதனைகளையும், வேவ்வேறுவித துர் நீர்க்கசிவுகளையும் பெற்று, பசுவின் ஸ்தனம் போன்ற உருவமுள்ளதும், சம்பூகாவர்த்த மென் கிற நத்தைச் சுழிபோன்ற சுரையை யுடையதுமான பிளவை "சம் பூகா வர்த்தகம்" என்று [4] கூறப்படும். 6.

உந்மார்கீ:—முள் முதலியது பொத்துவதால் குதத்தில் விரண முண்டாய், அதில் கிரமமாக த்வாரம் வளர்ந்து வரும்; அதற்குச் சிகித்ஸை செய்யாமல் உபேக்ஷித்தால் அதில் கிருமிகள் உண்டாய், அந்த த்வாரத்தைத் துளைத்து அநேகம் முகங்கள் உண்டாய்விடும். இவ்விதம் அநேகம் த்வாரக்களைப் பெற்றிருப்பதால் இது "உந்மார்கி பகந்தரம்" என்று கூறப்படுகிறது.[5] 7.

---

1. "சதபோநகம்" என்ருல் நூற்றுக்கணக்கான த்வாரங் களைப் பெற்ற தட்டு அல்லது சல்லடை யென்பார்கள்.

2. இப்பிளவை உருவத்தில் ஒட்டகத்தின் கழுத்துபோன்று நீண்டு வளைந்திருப்பதால் "உஷ்ட்ரக்ரீவம்" எனப்படுகிறது.

3. சிலேஷ்ம தோஷத்தின் இயல்பின்படி இதில் சீழ் முதலியது கசிந்துகொண்டிருக்கு மாகையால் "பரிஸ்ராவி" எனப்படுகிறது.

4. சம்பூகம் என்று நத்தைக்குப் பெயர். நத்தைச் சுழிபோன்ற த்வாரமுடைய பகந்தரம் "சம்பூகாவர்த்தம்" எனப்படுகிறது. முன்பு ஒவ்வொரு தோஷத்தினுலுண்டாகும் பகந்தரத்திற்கும் எக்குறிகள் தோன்றினவோ அவை யாவும் பெரும்பாலும சம்பூகாவர்த்தத்திலும் காணும். ஆகவே இப்பகத்தரம் ஸந்நிபாத ஸம்பந்தமுள்ளது.

5. உந்மார்கி பகந்தரம் ஆகந்துக காரணத்தினுல் உண்டாவது. அர்சோபகந்தரம் என்பது மூலத்தைப்பற்றிய பகந்தரம். அதன் இல க்ஷணங்கள் முதலில் விருத்தியான கப-பித்தங்கள் அர்சஸ்ஸைப்பற்றி மீண்டும் பிரகோபிக்க, அரர்சஸ்ஸின் அடியில் ஒரு வீக்கம் காணும்; அதில் அரிப்பும், அழற்சியும், வலிப்பும் அதிகமாயுண்டாகும்; அவ்வீக் கம் சீக்கிரத்தில் பக்குவமடைந்து உடைந்து அர்சஸ்ஸின் அடிபுறத்தில் துர்நீர்க் கசிவையுண்டுபண்ணும்; நடந்து செல்லும்போதெல்லாம் அதிலிருந்து துர்நீர் கசிந்து வரும்.

பகந்தரத்தில் அஸாத்யாதி நிலைமைகள்:—(1) எல்லாப் பகந்தரங் களுமே கடுமையான வேதனையளிப்பவை; அவை அதிக சிரமப்பட்டு சிகித்ஸிக்கச்கூடியவை. (2) அவற்றுள் விசேஷமாக ஸந்நிபாத பகந்தரமும், க்ஷதஜம் அல்லது ஆகந்துகமான பகந்தரமும் அஸாத்ய மானவை. (3) பகந்தரத்திலிருந்து வாயு, மூத்திரம், மலம், கிருமிகள், சுக்ரம் இவை வெளியானால் பிணியாளி பிழைக்கமாட்டான். 8, 9.

## 47. உபதம்ச நிதானம்.*

உபதம்சத்தின் காரணங்கள்: — மனிதன் தனது லிங்கத்தை நன்கு அலம்பாமலிருத்தல், கையினால் அதைப் பிடித்தல், நகங்கள் அல்லது பற்கள் தாக்குதல், யோனி தோஷம் பற்றுதல் இவற்றாலும், வேறு பல தகாத காரியங்களாலும் ஆண்குறியில் ஐந்து வகையான உபதம் சங்கள் உண்டாகின்றன. 1.

வாதஜோபதம்சம்:—ஆண்குறியில் குத்தல்-வலி-வெடித்தல் இத் தொந்தரவுகளை யுண்டுபண்ணுபவையும், கருநிறமானவையுமான கொப்புளங்கள் உண்டாயிருந்தால் அதை வாததோஷத்தினாலான உபதம்சமென்று அறிக. 1½.

பித்தஜோபதம்ச:—பித்ததோஷக்கோளாறால் உண்டாகும் உபதம்சத்தில் கொப்புளங்கள் பசுமையாகவும், அதிக துர்நீர்க் கசிவுள்ளனவாகவும், அதிக அழற்சியுண்டுபண்ணுபவையாகவு மிருக்கும். 1¾.

இரக்தஜோபதம்சம்:—இரத்த தோஷத்தினாலான உபதம்சத்தில் கொப்புளங்கள் மாம்ஸங்களைப் போன்றவையாகவும், கருநிற மானவையாகவும், இரக்தக் கசிவுள்ளவையாகவுமிருக்கும். மேலும் இவ்வுபதம்சம் பித்தோபதம்சத்திற்குச் சமானமான மற்றக் குறிகளை யும் உடையதாயிருக்கும். 2½.

கபஜோபதம்சம்:—கபதோஷத்தினாலான உபதம்சக் கொப்புளங் கள் அரிப்பை யுண்டுபண்ணும்; வீங்கிப்பருத்திருக்கும்; வெண்மை யாகவும் கனத்துமிருக்கும்; துர்நீர் அவற்றிலிருந்து கசியும். 3.

ஸந்நிபாத ஜோபதம்சம்:—மூன்று தோஷங்களாலு முண்டாகும் உபதம்சக் கொப்புளங்கள் பலவித துர்நீர்க் கசிவையும்,[1] கடுமையான வலியையும் உண்டுபண்ணும். இது அஸாத்ய வியாதியாம். 3½.

உபதம்சத்தில் அஸாத்யலக்ஷணம் முதலியது:—லிங்கத்தின் மாம் ஸம் கிருமிகளால் அரிக்கப்பட்டுச் சிதைவடைந்து, பீஜகோசம் மாத்

* உபதம்சம் என்பது லிங்கத்தில் விஷநீர் சேர்ந்துண்டாகும் சிறிய கொப்புளங்கள் நிரம்பிய விரணம். இதை லிங்கப்புற்று என்றும், கொறுக்கு என்றும் வழங்குவர்.

1. ''பலவித'' என்பதால் வாத-பித்த-கபங்கள் மூன்றின் தனித் தனிக் குறிகளும் ஒருமிக்கச் சேருவதால் அநேகவித கசிவுகளும், பலவித வலிமுதலியவைகளும் ஏற்படுவதாய் கருத்து.

திரம் மிகும்; இந்நிலைமையில் உபதம்சவியாதி அஸாத்யமாம். சிற்றின்பத்திற் பெரிதும் பற்றுதலால் உபதம்சம் உண்டாக, மூடத்தனமாய் அதற்குத் தகுந்த பரிஹாரம் செய்துகொள்ளாவிடில், அவனுடைய ஆண்குறி கிரமமாக வீங்கிப்போய், கிருமிகளாலும் அழற்சியாலும், வேக்காட்டாலும் சிதைந்துபோய், அவன் மரித்தும் போவான். 4, 5.

லிங்கவர்த்தி:—ஒருமிக்க - லிங்கத்தில் அநேக முளைகள் கிளம்பி, ஒன்றன்மேலொன்ருகச் சேர்ந்து வளர்ந்து, கிரமமாகக் கோழியின் சிரஸ்ஸிலுள்ள சிகையைப்போல் விருத்தி யடைந்து வர்த்தியாகப் பரிணமிப்பதுண்டு; இவ்வர்த்தி பீஜகோசத்திற்கு அடியிலாவது, லிங்கமும் பீஜகோசமும் சேர்ந்துள்ள பிரதேசத்திலாவது, அல்லது லிங்கத்தின் மற்ற இடுக்கான உட்புற வெளிப்புறங்களிலாவது உண்டாகும். (வேதனையும், துர்நீர்க்கசிவும் ஏற்படும்; ஸந்நிபாத ஸம்பந்தமான இவ்வியாதியைச் சிகித்ஸிப்பது மிகக் கடினம்.) இதை "லிங்கவர்த்தி" அல்லது "லிங்கார்சஸ்" என்றும் கூறுவர்.[1] 6, 7.

## 48. சூகதோஷ நிதாநம்*

சூக்ரோகத்தின் காரணம்:—முறைதவருக மூடத்தனமாய் ஒருவன் ஆண்குறியைப் பெருக்கச் செய்ய விரும்பி, சூகங்களைப் பிரயோகித்துகொண்டால்[2] அதனல் அவனுக்குப் பதினெட்டு வித சூகதோஷ வியாதிகள் உண்டாகின்றன. 1.

---

1. முற்கூறிய விஷயங்களைக்கொண்டு உபதம்சவியாதி புருஷர்களுக்கு மாத்திரம் உண்டாகுமென்று தெரியவரும். ஆனல்:—"உபதம்ச விரணங்களில் சில மேட்ரத்தின் ஸந்திகளிலும், சில மேட்ரத்தின் எல்லாப்பாகங்களைப் பற்றியுமுண்டாம். அவற்றுள் சில கொள்தானியங்களைப் போன்றவை; சில தாமரைப்பூவின் இதழ்களைப்போன்றவை; வலி, அழற்சி இத்தொந்தரவுகள் மிகுதியாயிருக்கும்; அவை கருநிறமாகவும், குத்தலுண்டுபண்ணுபவையாகவுமிருக்கும்; இவற்றுள் சில துரிதமாகப் பரவுகின்றன. வேறு சில மிக மெதுவாகப்பரவிக் கடுந்தொந்தரவளிக்கும்; இவ்வுபதம்சங்கள் ஸ்த்ரீகளுக்கும் புருஷர்களுக்கும் உண்டாகின்றன" என்று ஸுச்ருதர்.

* முற்காலத்தில் லிங்கத்தை விருத்தி செய்வதற்காகச் சூகங்கள் என்கிற சுணையுள்ள சில முளைகளை அவ்வவயவத்தில் தேய்ப்பது அல்லது பூசுவது வழக்கம். அச்சூகங்களை முறைதவரு யுபயோகிப்பதாலுண்டாகும் லிங்கத்தைப்பற்றிய வியாதிகள் சூகதோஷங்கள் எனப்படுகின்றன. மேலும் துர்நடத்தைகளால் உண்டாகும் இவ்வித வியாதிகளும் சூகதோஷம் என்று பொதுவாக வழங்கப்படும்.

2. சூகம் என்பது ஜலத்திலும் கச்மலமான பிரதேசத்திலுமுண்டாகும் சுணையை யுண்டுபண்ணக் கூடிய விஷ ஜந்துவென்றும், அதை லிங்கத்திற் பிரயோகிப்பதினலுண்டாகும் தவறுதல்களின் பலனைய் ஸம்பவிக்கும் வியாதி சூகதோஷம் என்றும் கருதப்படுகிறது. "சேங்கொட்டை, ஜலசூகம் என்கிற ஜலத்திலுண்டாகும்

ஸர்ஷபிகா:—சூகமென்கிற முட்சுணை ஒழுங்குத் தவறுகப் பிர யோகிக்கப்பட்டு ஆண்குறியிற் பொத்துக்கொள்வதால் வாத-கபங்கள் கோளாறடைய, அப்பால் வெண்கடுகைப்போன்ற சிறு கட்டி கிளம்புகிறது; இதை "ஸர்ஷபிகை" என்றறிக.[1] 2.

அஷ்டீலிகா:—விஷமமாகவும் வக்கிரகங்களாகவுமுள்ள சூகங் களால் கடினமான "அஷ்டீலிகை" யென்கிற சிறு பிளவை கிளம் பும்; இது வாததோஷக் கோளாருல் விருத்தியடைகிறது.[2] 2½.

கிரந்திதம்:—லிங்கத்தில் சூகங்களென்கிற சுணையுள்ள சிறு முளைகள் அடிக்கடியும் கிளம்பி, கபதோஷத்திஞல் கிரந்தியுருவமான பிளவையுண்டாகும்; இது "கிரந்திதம்" எனப்படும். 3.

கும்பிகா:—நாவற் கொட்டையைப்போல் கருநிறமாய் லிங்கத் தில் இரத்தம்-பித்தம் இவற்றின் கோளாருல் உண்டாகும் சிறு பிளவை "கும்பிகா" எனப்படுகிறது.[3] 3½.

அலஜி:—லிங்கத்திலுண்டாகும் அலஜி என்கிற பிளவை முன் சொல்லிய அலஜியைப்போலவே[4] உற்பத்தியாவதாய் அறிக. 4.

ம்ருதிதம்:—சூகாதிசுணை முதலியதின் ஸம்பந்தத்திஞல் அரிப் புண்டாக, அதை அதிகமாக நசுக்கித் தேய்ப்பதால் வாதம் பிர கோபித்து வீக்கம் காணும். இது "ம்ருதிதம்" என்று[5] கூறப்படும். 4½.

ஸம்மூடபிடகா:—கைகளால் மிகவும் பலமாக லிங்கத்தைத் தேய்த்து வளைத்துப் பிசைவதால் உண்டாகும் வீக்கத்துடன் கூடிய லிங்கவியாதி "ஸம்மூட பிடகை" யாம்.[6] 5.

அதிமந்தம்:—கட்டிகள் உருவத்தில் நீண்டும், எண்ணிக்கையில் அதிகமாகவும், அவயவத்தின் மத்தியப் பிரதேசத்திலிருந்து உடை

---

ஒருவகை விஷ ஜந்து, தாமரையிலை, இந்துப்பு இவற்றை ஒரு பாத் திரத்திலிட்டு நன்ருகக் கறுகச்செய்து, பிறகு முளைத்த தானியம் கண் டங்கத்தரிக்காய் இவற்றின் ஸ்வரஸத்திஞல் அரைத்து, கல்கமாகச் செய்து லிங்கத்தில் லேபநம் செய்துவந்தால் அவ்வவயவம் மிகவும் ஸ்தூலமாகப் பருத்துவிடும்" என்று வாத்ஸ்யாயநாதிகள்.

1. "சூகதுர்புக்நஹேதுகா" என்கிற பாடத்திற்குப் பதிலாக "சூதகதுர்ப்பகஹேதுகா" என்று வேறுபாடம் உண்டு. அப்பொழுது சூகத்திஞலும், துஷ்டயோனி ஸம்யோகத்நாலும் "ஸர்ஷபிகா" உண்டாகும் என்று பொருள்.

2. கருமாணிட்முள்ள ஒருவித கனத்த உருண்ட கருவிக்கு "அஷ் டீலிகா" என்று பெயர். அதைப்போன்ற பிளவை "அஷ்டீலிகா".

3, சுண்டைக்காய் போன்ற ஒருவித காய் கும்பிகா; அது போன்ற பருவுக்கு "கும்பிகா" என்று பெயர்.

4. பிரமேஹ பிடகைகளில் ஒன்ருன அலஜி யென்கிற வியாதி போன்றது. பிரமேஹம் இல்லாமல்கூட இவ்விரணம் சூகதோஷம் காரணமாக லிங்கத்தில் மாத்திரம் தோன்றுவதுண்டு.

5. தினவைப்போக்கிக் கொள்ள விரல்களால் நசுக்குவதா லுண்டாவது என்று "ம்ருதிதம்" என்பதன் பொருள்.

6. ஸம்மூட பிடகையும் வாததோஷத்திஞல் உண்டாவது.

யுந் தன்மையனவாகவும் இருந்தால் அது "அதிமந்தம்" எனப்படு கிறது. கபம் - இரத்தம் இவை கோளாறடைந்து காணும் இவ்வியாதி வேதனையையும் மயிர்ச்சிலிர்க்கையையும் உண்டுபண்ணும். 6.

புஷ்கரிகா :—அநேக சிறு கொப்புளங்களடர்ந்து, தாமரைப்பூ வின் மத்தியிலுள்ள தாதுபோன்றுண்டாகும் பிடகை பித்தம்-இரத்தம் இவற்றின் தோஷத்தால் உண்டாகிறது; இதற்கு 'புஷ்கரிகை' எனப் பெயர். 7.

ஸ்பர்சஹானி :—சூகதோஷத்தினால் விகாரமடைந்த இரத்தம் லிங் கத்திற் பரிசவுணர்ச்சியைக் குறைத்து "ஸ்பர்சஹானி" என்கிற வியாதியை யுண்டுபண்ணும். 7½.

உத்தமா :—சூகமென்கிற சுணையை மேன்மேலும் அதிகமாய்ப் பிரயோகிப்பதால் அவயவத்தில் அது தகுந்தவாறு ஏற்றுக்கொள்ளப் படாமல், இரத்தமும்-பித்தமும் கோளாறடைந்து, பயறு உழுந்து இவற் றைப்போன்ற கொப்புளங்களோடு உண்டாகும் வியாதி "உத்தமா" எனப்படுகிறது. 8½.

சதபோநகம்:—லிங்கம் நுண்ணியத்துவாரங்களால் நாற்புறமும் வியாபிக்கப்பட்டால் அதை "சதபோநகம்" என்று அறிக. இதுவாதம்-இரத்தம் இவற்றின் கோளாறால் உண்டாகிறது.[1] 9½.

த்வக்பாகம்:—ஜ்வரம், அதிக அழற்சி இவற்றைத் தருவதான "த்வக்பாகம்" என்கிற வியாதி வாத-பித்தங்களின் கோளாறால் உண்டாகிறது. 10.

சோணிதார்புதம்:—லிங்கமானது கறுப்பான கொப்புளங்களா லும் அதிக துஷ்ட இரத்தம் சேர்ந்த கட்டிகளாலும் சூழப்பட்டு பிடிக்கப்பட்டால், வலி முதலிய வேதனைகளும் அதில் கடுமையா யிருந்தால்[2] அதை "சோணிதார்புதம்" என்கிற வியாதியாய் அறிக. 11.

மாம்ஸார்புதம்:—லிங்கத்தின் மாம்ஸத்திற் பற்றிய தோஷத்தினால் மாம்ஸத்தில் அர்புதம் உண்டாகிறது. அதை மாம்ஸார்புதம் என்றறிக. 11½.

மாம்ஸபாகம்:—லிங்கத்தின் தசைகள் சிதைந்து, வாதபித்த-கபங்கள் ஸம்பந்தமான ஸகல வேதனைகளும் தோன்றினால் அதை "மாம்ஸபாகம்" என்னும் வியாதியென்றறியவும். இது ஸந்நிபாதத் தினால் உண்டாகிறது. 12½.

வித்ரதி :— சூகதோஷ ஸம்பந்தமாய் லிங்கத்திலுண்டாகும்

---

1. சதபோநகம் — அநேகம் த்வாரங்களைப் பெற்ற சல்லடை போன்றிருப்பதால் இதற்கு இப்பெயர்.

2. "வஸ்தியில் வலிமுதலிய வேதனைகள் கடுமையாயிருக்கின் றனவோ" என்றும் பாடமுண்டு. இந்த வியாதியில் இரத்ததோஷம் பலமாயிருக்கும்.

"வித்ரதி" ஸந்நிபாதத்தினுல் உண்டாகிறது; முற்கூறிய வித்ரதிக்குச் சமமான குறிகளே இதிலும் தோன்றும்.[1] 13.

திலகாலகம்:—கருநிறமான அல்லது பலவேறு நிறமான அல்லது விஷப்பற்றுள்ளவையான சூகங்களைப் பிரயோகிப்பதால், அவை ஆண்குறியை முற்றிலும் சீக்கிரத்தில் எரித்துப் போடும். அவனுடைய அவயவத்தின் மாம்ஸங்கள் கருநிறமாகப் போய் சிதைந்து விழும்; "திலகாலகங்கள்" [2] என்கிற இவை ஸந்நிபாதத்தினுல் உண்டாகின்றன. 14. 15.

சூக தோஷங்களில் அஸாத்யமானவை:—இவற்றுள் மாம்ஸார்புதமும், மாம்ஸபாகமும், வித்ரதியும், திலகாலகமும் அஸாத்ய வியாதிகளாம். 16.

---

# 49. குஷ்டரோக நிதாநம்

குஷ்டத்தின் காரணங்கள்:—ஒன்றோடொன்று சேருவதால் விரோத குணமுண்டு பண்ணும் அன்ன பானங்களையும்,[3] திரவமும் ஸ்நிக்த்தமும் குருவுமான பதார்த்தாதிகளையும் உபயோகிப்பவருக்கும், மேலெழுந்து வரும் வாந்தியையும் இதர வேகங்களையும்[4] அடக்குபவருக்கும், போஜனம் செய்ததும் வியயாமம் செய்வது அதிக வெயிலில் இருத்தல் முதலியதைச் செய்பவருக்கும், வெயிலில் ஸஞ்சரிப்பது - சிரமம் - பயம் இவற்ருல் வருந்தி பிறகு உடனே குளிர்ந்த ஜல முபயோகிப்பவருக்கும், பக்குவமாகாத உணவை யுண்பவருக்கும், முன்பு புஜித்த உணவு ஜீர்ணமாகாமலிருக்கையிலேயே மீண்டும் புஜிப்பவருக்கும், பஞ்சகர்மங்கள்[5] செய்துவருகையில் தகாதனவற்றை யுபயோகிப்பவருக்கும், புதிய தானியங்களாலாகிய அன்னம் - தயிர் - மத்ஸியம் - அதிகலவணம்-புளி இவற்றை

1. முன்பு 40-வது வித்ரதி நிதாநத்தில் ஸந்நிபாத வித்ரதிக்குக் கூறிய இலக்ஷணங்கள் இதிலும் உண்டாகும் என்று கருத்து.

2. கறுப்பான எள்ளுகளைப் போன்றிருத்தலால் "திலகாலகம்" என்று பெயர்.

3. தனித்தனி யுபயோகிப்பதால் எவ்வித தீங்கும் செய்யாத சில வெவ்வேறு வஸ்துக்களை ஒன்றோடொன்று சேர்ப்பதால் அவையே விஷகுண முள்ளவையாகும்; உதாரணமாய் மத்ஸியத்தைத் தனியாகப் புஜிப்பதால் தீங்கில்லை; பாலைத் தனியே பருகுவது சிறந்தது; இவ்விரண்டையும் ஒரு மிக்கச் சேர்த்துச் சமைத்தால் அவையே விஷ குணத்தைக் காட்டும். ஒன்று சேருவதால் பதார்த்தங்கட்குள்ள இக்குணந்தான் "விருத்தகுணம்" எனப்படுகிறது. (29-ம் பக்கமும் பார்க்க)

4. இதர வேகங்கள்—மல மூத்திராதிகளின் வேகங்கள்.

5. ஸ்நேஹநம், ஸ்வேதநம், வமநம், விரேசநம், வஸ்தி என்கிற ஐந்து வித சிகிஸாக்கிரமங்கள் "பஞ்ச கர்மங்கள்" எனப்படும். [வமநம், விரேசநம், நிருஹவஸ்தி, அநுவாஸநவஸ்தி, நஸ்யம் என்பவற்றை பஞ்சகர்மங்கள் என்றும் சிலர் கூறுவர்.]

மிதமிஞ்சியுண்பவருக்கும், உளுந்து-முளைத்த தானியங்கள்-மாப்பண்டங்கள்-எள்-பால்-வெல்லம் இவற்றைத் தின்பவருக்கும், பகலில் நித்திரை செய்பவருக்கும், குருமார்களையும் மற்றுமுள்ள பூஜ்யர்களையும் விரட்டுபவருக்கும், பாவச்செய்கைகளைச் செய்பவருக்கும் வாதாதிமூன்று தோஷங்களும் விகாரமடைந்து சர்மம், இரத்தம், மாம்ஸம், நிணநீர் இவற்றைத் தூஷிப்பிக்கின்றன; ஆக இவ்வேழு தாதுக்களும் குஷ்டத்தை யுண்டுபண்ணுகின்றன; இதனால் ஏழு மஹாகுஷ்டங்களும், பதினொரு க்ஷுத்ர குஷ்டங்களுமாகப் பதினெட்டு வித குஷ்டங்கள் உண்டாகின்றன.[1] 1—6.

தோஷ பேதத்தினால் குஷ்டம் ஏழு விதம்:—வாத-பித்த-கபங்களால் தனித்தனியே ஒவ்வொரு குஷ்டமும், த்வந்த்வ தோஷங்களால் ஒவ்வொரு குஷ்டமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும் ஆக தோஷங்களால் ஏழுவித குஷ்டங்கள் உண்டு. குஷ்டங்கள் அனைத்தும் மூன்று தோஷங்களின் சேர்க்கையினால் உண்டாவதாகப் பொதுவாகக் கருதப்பட்டபோதிலும், ஒவ்வொரு குஷ்டத்திலும் சேர்ந்துள்ள தோஷங்களின் ஏற்றத் தாழ்வான நிலைமைகளை யனுஸரித்து வாதகுஷ்டம், பித்தகுஷ்டம், கபகுஷ்டம் முதலிய பேதங்கள் வழங்கப்படுகின்றன. 7.

குஷ்டங்களின் பூர்வ ரூபங்கள்:—சர்மம் பரிசிக்க அதிக வழுவழுப்பாகவும் கடினமாகவுமாதல், அதிக வியர்வையோ சிறிதும் வியர்வையின்மையோ ஏற்படுதல், சர்மம் கருநிறம் அல்லது இயற்கைக்கு மாறுபட்ட நிறம் பெறுதல், சர்மத்தில் அழற்சியும், அரிப்பும், பரிசவுணர்ச்சியின்மையும் ஸம்பவித்தல், சரீரத்தில் குத்தலும் அதைப்புள்ள படைகளும் தோன்றல், தலைச்சுற்றல், விரணங்களில் கடுமையான வலியுண்டாவதோடு அவை எளிதில் உண்டாய் நீடித்து நிலைத்திருத்தல், அவை ஆறிய பிறகும் அந்த பாகங்கள் ரூக்ஷமாயிருத்தல், சொற்ப காரணத்தினாலும் வியாதி பலமாதல்[2], மயிர்கள் சிலிர்த்திக் கொள்ளுதல், இரத்தம் கருநிறம் பெறுதல் ஆகியவை குஷ்டத்திற்குப் பூர்வ ரூபங்களாம். 8—9½.

---

1. மூன்று தோஷங்களும் நான்கு தாதுக்களும் இங்கு ஒருமிக்க ஏழு தாதுக்கள் என்று வழங்கப்படுகின்றன. விஸர்ப்பங்களுக்கும் இதே ஏழு தாதுக்கள் ஆதாரமாயிருப்பதால் குஷ்டத்துக்கும் விஸர்ப்பத்துக்கும் பேதமில்லையென்று தோன்றும்; ஆனால் குஷ்டத்தில் தோஷங்கள் கிரமமாக மெதுவாய் கோளாறடைந்து ஸ்திரமான விகாரங்களை யுண்டுபண்ணும்; இரத்தமும் பித்தமும் கடுமையாக விகாரப்படுவதில்லை; விஸர்ப்பத்திலோ தோஷங்கள் துரிதமாகக் கோளாறடைந்து, சீக்கிரத்தில் வியாதியுண்டுபண்ணும். வியாதியும் ஸ்திரமாயிராது.

2. இரத்தம் மிகவும் தூஷிப்பிக்கப் பட்டிருக்குமாகையால் சொற்ப காரணமும் வியாதிக்கு அல்லது தோஷத்திற்கு பலமான பிரகோபத்தையுண்டுபண்ணும்.

## மஹா குஷ்டங்கள்[1].

காபாலம்:—சர்மம் கறுஞ்சிவப்பான கபாலம் போன்றதாகவும், ருக்ஷமாகவும், பரிசிப்பதற்குக் கடினமாகவும், மெல்லியதாகவும், அதிக கடுப்பை யுண்டுபண்ணுவதாகவும் மாறினுல் அது க்ருச்சிரஸாத்யமான "காபாலம்" என்கிற குஷ்டமாம். 10½.

ஔதும்பரம்:—வலி, அழற்சி, சென்னிறம், தினவு இவற்றுடன் கூடியதும், செம்பட்டை மயிர்களுண்டாய் அவற்றினுல் சிவந்ததும், அத்திப்பழம் போன்ற புறணியை யுடையதுமான குஷ்டம் 'ஔதும்பரம்" எனப்படும். 11½.

மண்டல குஷ்டம்:—வெண் சிவப்பு நிறமுடையதாகவும், திரண்டு கடினமாகவும், ஸ்நிக்த்தமாகவும், படையின் சுற்றுப்புறமெல்லாம் வரம்பு கட்டியதுபோல் உயர்ந்ததாகவும், அநேகம் படைகள் ஒன்றோடொன்று சேர்ந்ததாகவுமுள்ள குஷ்டம் "மண்டலம்" எனப்படுகிறது. இதுவும் க்ருச்சிரஸாத்யமாகும். 12½.

ருஷ்ய ஜிஹ்வம்:—இந்தப் பெயருள்ள குஷ்டம் கண்டால் சர்மம் கடினமாகவும், படையைச் சுற்றிலும் சிவப்பான வரம்புடையதாகவும், உட்புறம் ஒருவாறு கறுப்பாகவும், வேதனையுண்டு பண்ணுவதாகவும், ருஷ்யம் என்கிற மானின்[2] நாக்குக்குச் சமமான ரூபமுள்ளதாகவும் இருக்கும். 13½.

புண்டரீகம்:—ஒருவாறு வெண்மையாகவும், சிவந்த ஓரங்களை யுடையதாகவும், தாமரையிதழுக்குச் சமானமான ரூபமுள்ளதாகவும், சிறிது தடித்துச் சிவந்து வெண்மை நிறமுள்ளதுமான குஷ்டம் "புண்டரீகம்" எனப்படுகிறது. 14½.

ஸித்மம்:—பெரும்பாலும் மார்பிலுண்டாகிற "ஸித்மம்" என்கிற இக்குஷ்டம் வெளிறியும், ஒருவாறு சிவந்தும், தடிப்பில்லாததாகவும், சொறிந்தால் பொடிப்பொடியான புறணி யுதிர்ப்பதாகவும், உருவத்திற் சுரைப்பூபோன்றதாகவும் இருக்கும். 15½.

காகணம்:—குன்றுமணிபோன்ற நிறமுள்ளதாகவும்[3], அதிக வேக்காட்டையும் வேதனையையு முண்டுபண்ணுவதாகவும், மூன்று தோஷங்களுடைய குறிகளையும் பெற்றதாகவுமுள்ள குஷ்டம் "காகணம்" எனப்படுகிறது. இது அஸாத்ய வியாதி. 16½.

---

1. காபாலம் முதலான மஹா குஷ்டங்கள் ஏழும் முறையே வாதம், பித்தம், சிலேஷ்மம், வாத - பித்தம், வாத-கபம், பித்த - கபம், ஸந்நிபாதம் ஆகிய தோஷங்களின் ஸம்பந்தத்தைப் பெற்றவை.

2. இதையே ருக்ஷஜிஹ்வ மென்றும் கூறுவர்,

3. குன்றுமணிபோலே மத்தியில் கறுத்தும், சுற்றுப்புறம் சிவந்து மிருக்கும் சர்மவியாதி. ருஷ்யஜிஹ்வத்தில் அதிகமாக மத்திய பாகம் சிவந்து சுற்றுப்புறமெல்லாம் கறுத்துமிருக்குமெனக் கருத்து

## க்ஷுத்ர குஷ்டங்கள் [1].

ஏககுஷ்டம்: — வியர்வையற்றதாய், விசாலமாகப் பரவுந் தன்மையதாய், மத்ஸியத்தின் செதிள்போன்றதாயுமுள்ள வியாதி "ஏககுஷ்டம்" எனப்படும். 17.

சர்மகுஷ்டம்:—சரீரத்திற் பெரும்பான்மையான பாகத்திற் பரவி, யானைத் தோல்போன்றுள்ளது 'சர்ம குஷ்டம்' என்று கூறப்படும். 17½.

கிடிமம்:—ஒருவாறு கருநிறமாகவும், காய்காய்த்தது போல் பரிசிக்கச் சுரசுரப்பாகவும், ருக்ஷமாகவுமுள்ள குஷ்டம் "கிடிமம்"[2] எனப்படும். 18.

வைபாதிகம்:—பாதத்திலும் உள்ளங்கையிலும் வெடிப்பையும், கடுமையான வேதனையையு முண்டுபண்ணும் குஷ்டம் "வைபாதிகம்" எனப்படுகிறது. 18½.

அலஸகம்:—அரிப்பையும் செந்நிறத்தையும் பெற்ற கட்டிகள் அடர்ந்த குஷ்டம் "அலஸகம்" எனப்படும். 19.

தத்ரு மண்டலம்:—அரிப்பு, செந்நிறம், பொரிபொரியான கொப்புளங்கள் இவற்றுடன் சர்மத்துக்குமேலே தடித்துக் கிளம்பிய சர்மரோகம் "தத்ரு மண்டலம்"[3] எனப்படும். 19½.

சர்மதளம்:—செந்நிறமாய், வலியுண்டு பண்ணுவதாய், தினவுள்ளதாய், கொப்புளங்களோடு கூடியதாய், சிதைந்து உதிர்வதாயுள்ள குஷ்டம் "சர்மதளம்" எனப்படுகிறது; இதைப் பரிசித்தாலும் கடுமையான நோவுண்டாகும். 20.

பாமா:—உருவத்திற் சிறியவையாகவும், எண்ணிக்கையிற் பலவாகவும், துர்நீர்க்கசிவுள்ளவையாகவும், அரிப்பும் அழற்சியுமுண்டுபண்ணுபவையுமான சிரங்குகள் "பாமா" என்று வழங்கப்படும். 20½.

கச்சூ;—அதே பாமாவானது மிக்க அதிகமான அழற்சியைத் தரும் கொப்புளங்களோடு கூடியதாய், கைகளிலும் பிருஷ்டாபாகங்

1. சொறி, சிரங்கு, தழும்புகள் முதலிய ஸாதாரண சர்ம வியாதிகள் இவ்வகுப்பைச் சேர்ந்தவை.

2. இதுவே "கிடிபம்" என்றும் வழங்கப்படும்.

3. வட்டவடிவமாயுண்டாவதால் இந்தப் படைக்கு "தத்ருமண்டலம்" என்று பெயர். [சரகத்திற் கூறியபடி இங்கே தத்ரு க்ஷுத்ர குஷ்டங்களில் ஒன்றாகக் கூறப்படுகிறது. ஆனால் ஸுச்ருதத்தில் உள்ளபடி இது மஹா குஷ்டங்களில் ஒன்று. அங்ஙனமே சரகரை அனுஸரித்து ஸித்மம் என்பது இங்கே மஹாகுஷ்டத்திற் சேர்க்கப்பட்டிருக்க, ஸுச்ருதத்தில் க்ஷுத்ரகுஷ்டங்களில் சேர்க்கப்பட்டிருக்கிறது. குஷ்டத்தின் விஷயங்கள் சரகத்திலும் ஸுச்ருதத்திலும் வெகுவாக வித்தியாஸப்படுகின்றன. சரகருடைய கொள்கைப்படி குஷ்டம் ஏழுவிதம், அல்லது பதினெட்டுவிதம், அல்லது எண்ணிறந்த வகையாம்,

களிலும் கடுமையாகத் தோன்றினால் அதை "கச்சூ" என்று கூறுவர். 21.

விஸ்ப்போடங்கள்:—கருஞ்சிவப்பாய், மெல்லிய புரணியைப் பெற்ற கொப்புளங்கள் "விஸ்ப்போடங்கள்" எனப்படும். 21½.

சதாரு:—சிவப்பும் கறுப்பும் கலந்து, அழற்சியையும் வலியையும் உண்டுபண்ணும் அநேக விரணங்கள் சூழ்ந்த சர்மவியாதி "சதாரு" எனப்படும். 22.

விசர்ச்சிகா:—கபிலநிறமாயும், அரிப்புள்ளதாயும், அதிக துர்நீர்க்கசிவுடன் கூடியதுமான கட்டி விசர்ச்சிகா எனப்படும்[1]. 22½.

குஷ்டத்தில் தோஷ லக்ஷணங்கள்:—(1) சுரசுரப்புடன் கெட்டியாகவும், கறுப்பாக அல்லது செந்நிறமாகவும், ரூக்ஷமாகவும், வேதனையோடு கூடியதாகவுமுள்ள குஷ்டம் வாதகுஷ்டம். (2) பித்தத்தினாலான குஷ்டம் மிகவும் அழுகியதாகவும், அழற்சி-சிவப்பு-துர்நீர்க்கசிவு இவற்றைப் பெற்றதாகவும் காணப்படும். (3) சிலேஷ்ம தோஷத்தினாலான குஷ்டம் கனத்ததாகவும், ஸ்நிக்த்தமாகவும், குருவாகவும், பரிசிப்பதற்குச் சீதளமாகவும், அரிப்புண்டாக்குவதுமாயிருக்கும். (4) த்வத்த்வஜ ஸந்நிபாதஜ குஷ்டங்கள்:—இரட்டைத் தோஷங்களாலான குஷ்டங்களில் இரண்டிரண்டு தோஷங்களுக்குரிய குறிகளும், மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோபமடைந்துண்டாகும் குஷ்டங்களில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் உண்டாகின்றன. 23—24½.

தாதுக்களைப்பற்றிய குஷ்டங்கள்:—(1) சர்மத்தைப்பற்றிய குஷ்டத்தில் அவயவங்களில் ஆங்காங்கு நிறமாறுபாடும், ரூக்ஷத்தன்மையும், சர்மத்திற் பரிசவுணர்ச்சியின்மையும், மயிர்ச்சிலிகையும், அதிக வியர்வை பொசிவும் ஆக இக்குறிகள் தோன்றும்[2]. (2) இரத்

1. 'விசர்ச்சிகா' என்ற இவ்வியாதியில் கபிலநிறம் வாத தோஷத்தினுடையவும், அரித்தல் கபத்தினுடையவும், துர்நீர்க்கசிவு பித்தத்தினுடையவும் குறிகள். இவ்விதமே மற்ற குஷ்டவிகாரங்களிலும் ஸந்நிபாத தோஷ லக்ஷணங்களைப் பகுத்தறிக. [க்ஷுத்ர குஷ்டங்கள் பதினொன்று எனக் கூறப்பட்டது. ஆனால் ஏக குஷ்டம் முதல் விசர்ச்சிகாவரையிலும் 12 க்ஷுத்ர குஷ்டங்கள் கூறப்பட்டிருக்கின்றனவே. என்றால்—விசர்ச்சிகா என்கிற வியாதியே பாதங்களில் உண்டானால், பாதங்களில் வெடிப்பை யுண்டுபண்ணுகிற காரணத்தைக்கொண்டு 'வைபாதிகம்' (அல்லது விபாதிகா) எனப்படுகிறது. ஆகையால் விசர்ச்சிகா-வைபாதிகங்களை ஒரே வியாதியாகக் கருதினால் க்ஷுத்ர குஷ்டங்கள் பதினொன்றே. வேறு சிலர் "அதே பாமாவானது அதிகமான அழற்சியைத் தரும் கொப்புளங்களோடு கூடியதாய்" என்று கூறியிருப்பதைக் கொண்டு பாமாவும், கச்சூவும் ஒரே வியாதி யென்று கருதுகின்றனர்.]

2. பரிசவுணர்ச்சி யின்மை, மயிர்ச்சிலிர்க்கை, வியர்வை மிகுதியாகப் பொசிதல் ஆகிய குறிகள் இரத்தத்தைப்பற்றிய குஷ்டத்தைச் சேர்ந்தன வென்று சிலரும், இரஸதாதுவைப்பற்றிய குஷ்டத்தைச்

தத்தைப்பற்றிய குஷ்டத்தில் அரித்தலும், விரணங்களில் விசேஷமாகச் சீழும் ஏற்படும். (3) மாம்ஸத்தைப்பற்றிய குஷ்டத்தில் குஷ்ட விரணம் வெகு அதிகமாதல், வாய் வறளுதல், குஷ்டமுண்டான விடம் கடினமாதல், கட்டிகள் தோன்றுதல், குத்தல் கொப்புள முண்டாதல், குஷ்டம் ஸ்த்திரமாக வேரூன்றிப்போதல் ஆகிய குறிகள் காணப்படும். (4) மேதஸ்ஸைப்பற்றிய குஷ்டத்தில் கை மொண்டியாதல், கால் நடை தடையுறுதல், இதர அவயவங்களிற் பிளக்கப்படுவது போன்ற வேதனையுண்டாதல், ஓரிடத்திலுண்டான விரணம் மற்றவிடங்களுக்கும் பரவுதல் ஆகிய இவையும், முற்கூறிய மற்றக் குறிகளும்[1] காணும். (5) அஸ்தியையும் (6) மஜ்ஜையையும் பற்றிய குஷ்டங்களில் நாசி சொட்டையாதல், கண் சிவத்தல், விரணங்களில் கிருமிகள் உண்டாதல், குரல் கம்மிப் போய் தடையுறுதல் ஆகியவை குறிகள். (7) சுக்ரத்தைப் பற்றிய குஷ்டத்தில்[2] குஷ்டரோகமுள்ள ஸ்திரீ புருஷர்களுடைய சுக்ரதாதுவும் சோணிததாதுவும்[3] அவ்வியாதியின் தோஷத்தைப் பெற்றிருக்க, அவர்களிடமிருந்து ஜனிக்கும் குழந்தையும் குஷ்டரோகப் பற்றுள்ளதாயிருக்கும். 25—30.

குஷ்டத்தில் ஸாத்யாஸாத்யாதிகள் : — (1) சர்மம், இரத்தம், மாம்ஸம் இவற்றைப்பற்றிய குஷ்டங்கள் ஸாத்யங்கள். அங்ஙனமே வாதமும் கபமும் அதிகரித்துள்ள குஷ்டமும் ஸாத்யமாகும். (2) மேதோதாதுவைப் பற்றிய குஷ்டமும், த்வந்த்வதோஷ ஸம்பந்தமான குஷ்டமும் யாப்யமாம். (3) மஜ்ஜை, அஸ்த்தி இவற்றைப்பற்றிய குஷ்டமும், கிருமிகள் உண்டானது, நாவறட்சியுள்ளது, அழற்சியையுண்டுபண்ணுவது, அக்னிமாந்த்யத்துடன் கூடியது, மூன்று தோஷங்

சேர்ந்தனவென்று வேறு சிலரும் கருதுகிறார்கள். குஷ்டத்திற்குக் காரணமான தோஷங்களால் ஸ்வேதவஹஸ்ரோதஸ்ஸுகள் (வியர்வைக் குழாய்கள்) கோளாறடைவிக்கப்படுவதால் ரூக்ஷத்தன்மை, அதிக வியர்வை கசிதல், மயிர்ச்சிலிர்க்கை ஆகிய குறிகள் காண்பதாக ஸ்ரீகண்டதத்தன்.

1. முற்கூறிய மற்றக்குறிகள்—சர்மம், இரத்தம் மாம்ஸம் ஆகிய தாதுக்களைப்பற்றிய குஷ்டங்களுக்குரிய குறிகள் என்று கருத்து. சர்மத்தைப்பற்றிய குஷ்டம் முதல் அதற்கு மேன்மேலுமுள்ள ஒவ்வொரு தாதுவைப்பற்றிய குஷ்டத்திலும், அதற்கும் முன்புள்ள தாது சம்பந்தமான குஷ்டங்களின் குறிகள் முறையே சேர்ந்து காணுமென்கிற விஷயம் இதனால் குறிக்கப்படுகிறது. பொதுவாயுள்ள பல விஷயங்களில் ஒன்றுக்குக் கூறப்பட்டவிதி அதுபோன்ற மற்றவைகளுக்கும் பொருந்தும்''—''ஸமானேஷ்வர்த்தேஷு ஏகத்ராபிஹிதோ விதிரந்யத்ராப்யாஸஞ்ஜநீய:'' என்கிற நியாயப்படி இவ் விஷயம் குறிக்கப்பட்டதாய் அறிக.]

2. சுக்ரதோஷம் கூறப்பட்டதிலிருந்து இங்கே ஸ்த்ரீகளுக்கு ஆர்த்தவதோஷமும் கூறப்பட்டதாய் அறிக. [இதற்கு முந்திய தாதுக்களைப்பற்றிய குஷ்ட லக்ஷணங்கள்யாவும் இதிலும் தோன்றும்]

3. சோணித்தாது—ஸ்த்ரீகளுடைய மாதவிடாய்க்குக் காரணமான ஆர்த்தவம் என்கிற ஏழாவது தாது.

களாலும் உண்டானது ஆகிய குஷ்டங்கள் அஸாத்யங்களாம். வெடிப்புகள், அவயவங்களிலிருந்து துர்நீர்க் கசிவுகள், கண் சிவப்பு, குரல் கம்மி அல்லது அடைத்துப் போதல், பஞ்சகர்மங்களை முறைப் படி செய்தும்[1] அவற்றின் பிரயோகத்தால் குணமுண்டாகாமை ஆகியவற்றுடன் கூடிய குஷ்டமும் அஸாத்யமாகும். 31—32½.

பல குஷ்டங்களிலும் பிரதானமாயுள்ள தோஷம்:—(1) கபால குஷ்டம் வாததோஷத்தினாலும், (2) ஔதும்பர குஷ்டம் பித்தத்தினா லும், (3) மண்டலம், விசர்ச்சிகா என்பவை கபத்தினாலும், (4) ருஷ்யஜிஹ்வம் என்பது வாத-பித்தங்களாலும், (5) சர்மம், ஏக குஷ்டம், கிடிமம், ஸித்மம், அலஸம், வைபாதிகம் என்பவை வாத-கபங்களா லும், (6) தத்ரு, சதாரு, புண்டரீகம், விஸ்போடம், பாமா, சர்ம தளம் என்கிற குஷ்டங்கள் கப பித்தங்களாலும், (7) காகணம் என் பது ஸந்நிபாதத்தினாலும் உண்டாகின்றன. 33—35½.

ஸப்த மஹா குஷ்டங்கள்:—முதலிலுள்ள மூன்று குஷ்டங்கள், ஸித்மம், காகணம், புண்டரீகம், ருஷ்ய ஜிஹ்வம் ஆகிய இவ் வேழும் மஹா குஷ்டங்களாம்.[2] 36.

## ச்வித்ரம் அல்லது கிலாஸம்[3]

கிலாஸம்:—ச்வித்ரம் என்றும், கிலாஸம் என்றும், வாருணம் என்றும் வழங்கப்படும் இவ்வியாதிக்கும் பெரும்பாலும் குஷ்டத்திற் குக் கூறியவையே காரணங்களாகும். இது எவ்வித துர்நீர்க் கசிவு மில்லாததாய், மூன்று தாதுக்களைப்பற்றியதாகவு மிருக்கும். (1) வாத தோஷப் பிராபல்யத்தினால் கிலாஸம் ரூக்ஷமாகவும், வெண் சிவப்பாகவும் தோன்றும். (2) பித்ததோஷ மேலீட்டினாலான கிலா ஸம் தாமரை யிதழுக்கொப்பாகச் சிவந்தும், அழற்சியோடு கூடிய தாகவும், உரோமங்களை யுதிர்த்துப் போடுவதாகவும் இருக்கும். (3) கபதோஷத்தினால் உண்டாகிற கிலாஸம் வெண்மையாகவும், தடிப்

---

1. பூர்வரூப நிலைமையிலே செய்யவேண்டிய சிகித்ஸை முதல், இரஸம் முதலிய நான்கு தாதுக்களைப்பற்றி யுண்டாகும் குஷ்டங்களி ருக முறையே செய்யப்படும் நான்கு சிகித்ஸாக்கிரமங்களும் சேர்ந்து குஷ்டத்திற்கான பஞ்சகர்மங்கள் என்று கூறப்படுவதாக ஸ்ரீ கண்ட தத்தனது கொள்கை. [விவரணம்:—குஷ்டபூர்வரூபத்தில் சோதந சிகித்ஸை; குஷ்டம் சர்மத்தைப்பற்றியபோது சோதநம், லேபநம் முதலியவை; இரத்தத்தைப்பற்றியபோது சோதநம், லேபநம். கஷாயபாநம், இரக்த மோக்ஷணம் முதலியவை; இங்ஙனமே மாம் ஸம், மேதஸ் இவற்றைப்பற்றிய குஷ்டங்களிலும் முறையே வெவ் வேறு அதிக சிகித்ஸைகள் தகுந்தவாறு பிரயோகிக்கப்படும்.] வமந விரேசநாதிரூபமான ஐந்து சிகித்ஸாமுறைகளே இங்கு 'பஞ்சகர்மம்' என்று குறிக்கப்படுகிறதென்றும் கூறுவர்.

2. இவற்றைத் தவிர மற்றவை "க்ஷுத்ரகுஷ்டங்கள்" ஆம்.

3. ச்வித்ரம் அல்லது கிலாஸம் என்பது தமிழில் வெண்குஷ்டம் எனப்படுகிறது. இதற்கு வாருணம் என்றும் அருணம் என்றும் தாருணம் என்றும் வேறு பெயர்களுண்டு.

பாகவும், குருவாகவும், அரிப்புள்ளதாகவும் இருக்கும். நிறத்தி லுள்ள பேதங்களைக்கொண்டே இங்ஙனமே இரத்தம், மாம்ஸம், மேதஸ் என்கிற மற்ற மூன்று தாதுக்களைப்பற்றிய [1] மூன்றுவித ச்வித்ரங்களையும் முறையே தெரிந்துகொள்க. அவற்றுள் முதலி லிருந்து முறையே ஒன்றைவிட மற்றொன்று கஷ்டஸாத்யமாகும். நிறங்களைக்கொண்டே மற்ற இரண்டுவித கிலாஸங்களையும் [2] தெரிந்து கொள்க. 37—39.

**கிலாஸத்தில் ஸாத்யாஸாத்யங்கள்:**—(1) வெளிறிய உரோமங் களைப் பெருதவையும், சொற்பமாயுண்டா யிருப்பவையும், ஒன்ருே டொன்று சேராமல் தூரத்தில் விலகியிருப்பவையும், தேஹத்தின் கீழ்ப்புறத்தில் உண்டாயிருப்பவையும், சொற்ப காலத்திற்குள் உண் டானவையும், நெருப்பு எரித்து ஏற்படாதவையுமான ச்வித்திரங்கள் சிகித்ஸிக்கத் தகுந்தவையாம். (2) இவற்றைத் தவிர்த்து வேறு கிலாஸங்கள் அஸாத்யமானவை. குஹ்யப் பிரதேசங்களிலும், கையிலும், பாதத்திலும், [3] உதடுகளிலும் உண்டான ச்வித்ரம் வெகு நாட்படாதனவாயிருந்தாலும் நற்பெயரை விரும்பும் வைத்தியர் முக்கியமாய் அஸாத்யமெனக் கருதவேண்டும். 40, 41.

---

1. இங்கே "மூன்று தாதுக்களைப்பற்றிய" என்பதனுல் வாதம், பித்தம், கபம் என்கிற மூன்று தோஷங்களும், அங்ஙனமே இரத்தம், மாம்ஸம், மேதஸ் என்கிற மூன்று தாதுக்களும் முறையே குறிக்கப் படுகின்றன. [சர்மத்தைப்பற்றிய வெண்குஷ்டம் கிலாஸம் என்றும், மாம்ஸம், மேதஸ் இவற்றைப்பற்றியது ச்வித்ரம் அல்லது அருணம் என்றும் வழங்கப்படும். இவ்விரண்டிலும் துர்நீர்ப் பொசிவு முதலி யவை இரா. இரத்தம் முதலியதின் கோளாருல் துர்நீர்க்கசிவு காண்பது வழக்கம். ஆனல் சரகர் "இவ்வியாதிக்குக் காரணமான தோஷம் இரத்தத்தைப்பற்றி யிருந்தால் வியாதியின் நிறம் சிவப் பாகவும், மாம்ஸத்தைப்பற்றியிருந்தால் தாம்ர நிறமாகவும், மேதோ தாதுவைப் பற்றியதானுல் வெண்மையாகவும் இருக்கும். அந்த ச்வித்ரம் மூன்றும் ஒன்றைவிட மற்றொன்று குருகுணத்தில் அதிகரித் ததாயிருக்கும்." என்று மூன்றுக்கும் ச்வித்ரம் என்பதை பொதுப் பெயராகவே வழங்குகிருர். பாலுகி யென்பவர் "மாம்ஸதாதுவைப் பற்றியதாய் தோஷமிருந்தால் அது வாருணம் என்றும், மேதோ தாதுவைப்பற்றியதானுல் ச்வித்ரம் என்றும், இரத்த தாதுவைப்பற் றியதானுல் தாருணம் என்றும் கூறப்படும்" என்கிருர்.]

2. ச்வித்ரம் தோஷஜம், விரணஜம் என்று இரண்டு விதம். "விரணம் முறை கேடாகச் சிகித்ஸிக்கப்படுவதால் விரணஜச்வித்ரம் உண்டாகிறது. தோஷஜச்வித்ரம் இரண்டு விதம், ஆத்மஜம், பரஜம் என்று. வியாதிகொண்ட மனிதரைப் பரிசித்துப் பழகுவதால் அவர் களிடமிருந்து பற்றிய தோஷத்தினல் உண்டாவது பரஜச்வித்ரம். எவருக்குத் தம் சரீரத்திலேயே வாதாதி தோஷங்கள் கோளா றடைந்து உண்டாகிறதோ அது தோஷஜச்வித்ரம்" என்று போஜன்.

3 "பாணிதலம்" என்கிற மூலத்திலுள்ள சொல்லுக்குச் சாதாரணமாய் உள்ளங்கை யென்றுதான் பொருள். ஆனல் அதில் "பாணி" என்பதற்குக் கரதலம் என்றும், "தலம்" என்பதற்குப்

குஷ்டம் முதலியவை ஸாங்க்ராமிக ரோகங்கள்[1]:—அடிக்கடி ஒருவருக்கொருவர் தொட்டுப் பழகுவதாலும், ஒருவர் மூச்சுக்காற்று மற்றவர் மேல் படிவது அல்லது மற்றவரால் உறிஞ்சப்படுவதாலும், ஒருவரோடொருவர் சேர்ந்து புஜிப்பதாலும், ஒருவர் படுக்கையில் மற்றவர் படுப்பது அல்லது பலர் ஒரே சயனத்திற் சேர்ந்து படுப்பதாலும், ஒரே ஆஸனத்தைப் பலர் உபயோகிப்பதாலும், ஒருவர் உபயோகித்த வஸ்திரம்-புஷ்பம்-லேபநம் ஆகியவற்றை மற்றவர் உபயோகிப்பதாலும் குஷ்டம், ஜ்வரம், க்ஷயம், நேத்ராபிஷ்யந்தமென்கிற கண்ணோய் ஆகியவைகளும், ஔபஸர்கிக வியாதிகளென்கிற பூதாவேசாதிகளாலான பிணிகளும்[2] ஒருவரிடமிருந்து மற்றவரிடம் பற்றிப் பரவுகின்றன. 42, 43.

---

## 50. உதர்த-கோட நிதாநம்.

**உதர்த ஸம்ப்ராப்தி:**—மிகக் குளிர்ந்த காற்று தேஹத்தில் அடிக்கடியும் வீசிப் பரிசிப்பதால் கபமும் வாயுவும் கோளாறடைந்து, பித்தத்துடன் சேர்ந்து,[3] அவை சரீரத்தில் உள்ளும் புறமும்[4] வியாபித்து, உதர்த மென்னும் வியாதியை யுண்டுபண்ணுகின்றன. 1.

**உதர்த பூர்வரூபம்:**—நாவறட்சி, அரோசகம், இருதயம் சோர்வடைதல், தேஹமிளைத்தல், அவயவங்கள் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சி, கண் சிவந்துவிடுதல் ஆகியவை உதர்தத்தின் பூர்வ ரூபங்களாம். 2.

**உதர்தம்:**—(1) காட்டீக்கள் கடித்தாற்போன்ற தோற்றமுள்ள வீக்கம் தேஹத்திற்கு வெளியில் உண்டாகும்; அரிப்பும் குத்தலும்

---

பாதம் என்றும் பகுத்து ஸ்ரீகண்டதத்தன் வரைந்துள்ள வியாக்யானப்படி இங்கு விஷயம் மொழிபெயர்க்கப்பட்டது. "அந்தே ஜாதம் அஸாத்யம்"—"சரீரத்தின் முனைகளாயுள்ள கரதலங்கள், பாததலங்கள் இவற்றிலுண்டான ச்வித்ரமும் அஸாத்யம்" என்கிற ஸுச்ருதவாக்கியம் ஸ்ரீகண்டதத்தனுடைய வியாக்யானத்துக்குப் பிரமாணமாகக் கருதப்படுகிறது.

1. குஷ்டம் பலமான தொற்றுவியாதியாகையால், அதைப்போல் வேறு சில ஒட்டுவாரொட்டி ரோகங்களும் ஸந்தர்ப்பானுஸாரமாய் இங்கே குறிக்கப்படுகின்றன.

2 ஔபாஸர்கிகங்கள் என்பவை உபத்திரவ ரூபமானவை. ஆனால், பலமாகப் பரவுந் தன்மையுள்ள விஷநோய்களும், பூதங்கள் என்கிற க்ஷுத்ர ஜீவராசிகளால் (ஸூக்ஷ்மக்ரிமிகளால்) ஸம்பவிக்கும் வியாதிகளும் "ஔபாஸர்கிக ரோகங்கள்" என்று வியாக்யாநம் செய்யப்படுகிறது.

3. சிறிய கொப்புளங்களோடு கூடிய எரிப்புண்மாதிரியான வியாதி 'உதர்தம்'.

4. உள்ளே இரத்தம் முதலிய தாதுக்களிலும், புறத்தில் சர்மத்திலும் என்று கருத்து.

இதில் அதிகமாயிருக்கும்; வாந்ியும், ஜ்வரமும், அழற்சியும் தோன்றும்;[1] இந்த வியாதியை "உதர்தம்" என்றறிக: வேறு சிலர் இதையே சீதபித்தம் என்பார்கள். இந்த வியாதியில் வாததோஷம் மற்றவைகளைவிட அதிகரித்திருந்தால் அது "சீதபித்தம்" என்றும், கபதோஷம் அதிகரித்திருந்தால் "உதர்தம்" என்றும் வழங்கப்படுகிறது. (2) தடித்து மேலெழுந்து நிற்பவையாகவும், சிவந்தவையாகவும், அரிப் புள்ளவையுமான படைகள் கபதோஷக் கோளாறால் சிசிரருதுவில் தோன்றுகின்றன. இந்த வியாதியும் "உதர்தம்" எனப்படுகிறது. 3—5.

கோடம்:—முறைப்படி போதியவளவு வமநம் செய்விக்கப் படாமையால்,[2] வயிற்றிற் கிளர்ச்சியுண்ட பித்தம், கபம், உணவு இவை வெளிவராமல் அடக்கப்பட்டுப் போவதால்[3] வட்டம் வட்டமான அநேக தடிப்புகள் தோன்றும்; அவை அரிப்பையு முண்டாக்கும்[4]. இவ்வியாதி தொடர்ந்து நீடித்திருந்தால் உத்கோடம் என்றும், தோன்றிய சிறிது நேரத்திற்குள் மறைந்தால் 'கோடம்' என்றும் வழங்கப் படும். 6, 6½.

---

## 51. அம்ல-பித்த நிதாநம்.*

அம்ல-பித்தத்தின் காரணம்:—ஒன்றோடொன்று விருத்தமான குணமுள்ளவை, புளிப்பாயிருப்பவை, விதாஹி குணமுள்ளவை, பித்தத்தைப் பிரகோபிக்கச் செய்பவை[5] இத்தகைய உணவுகளையும் பானவகைகளையும் உட்கொள்பவருக்கு, அதற்கு முன்பே தனக்குற்ற காரணத்தினால் சயம் அடைந்திருந்த பித்தமானது[6] பிர

---

1. இதில் அரிப்பு கபத்தினாலும், குத்தல் வாதத்தினாலும், வாந்தி ஜ்வரம் அழற்சி இவை பித்தத்தினாலும் உண்டாகுமாம்.

2. வமநசிகித்ஸை செய்கையில் நேரிடும் அயோகம் அல்லது மித்யாயோகம் இங்கு குறிக்கப்படுகிறது.

3. வமந வேகம் தடுக்கப்படுதல் எனக் கருத்து. ["அஸம்யக் வமநோ தீர்ண பித்தச்லேஷ்மாந்நநிக்ரஹை:" என்பதற்கு "உற்றவாறு வமநம் நிறைவேற்றப்படாமையால் பித்தமும் கபமும் கிளறிக் கிளப்பப்படுவதாலும், உணவை வாந்திசெய்யும் வேகம் அடக்கப்படுவதாலும்" என்றும் பொருள் கூறலாம்.]

4. இங்ஙனம் காரணமும் குறிகளும் வேறுவிதமாயிருப்பதால் உதர்தத்தினும் கோடம் வேறென்று கருதப்படுகிறது.

* அம்லபித்தம்—மார்பு, தொண்டை முதலியவற்றில் எரித்தலையுண்டு பண்ணிக்கொண்டு, ரேதக்கெரிவுடன் தோன்றும் பித்தம் மேலிட்ட ஓர் அஜீர்ண வியாதி வாதமும் சிலேஷ்மமும் ஆமாசயத்திற் சேர்ந்து அவை இதில் அநுபந்தமாயிருக்கும்.

5. கள் முதலியவை.

6. வருஷ ருதுவில் ஜலத்தையும், ஓஷதிகளையும் பற்றிய விதாஹமென்னும் குணத்தினால் முன்பே சயாவஸ்த்தை (தனது ஸ்த்தாநத்திலேயே விருத்தி) யடைந்த பித்தம் எனக் கருத்து.

கோபித்து அழற்சியைத் தரும்; கற்றறிந்த வைத்தியர் அதை "அம்ல-பித்தம்" என்பார்கள். 1.

அம்ல-பித்தத்தின் பொது லக்ஷணம்:—உணவு ஜீர்ணமாகாமை, உடல் சோர்வடைதல், வாயில் உமிழ் நீரூறுதல், கைப்பும் புளிப்புமாகத் தேக்கெரிவு காணுதல், குருத்வம், மார்பிலும் தொண்டையிலும் அழற்சி, அரோசகம் இக்குறிகளுள்ள வியாதியை வைத்தியன் "அம்ல-பித்தம்" என்றறிக. 2.

அதோகதாம்ல-பித்தம்[1]:—நாவறட்சி, அழற்சி, மூர்ச்சை, தலைச் சுற்றல் இக்கோளாறுகளை யுண்டுபண்ணிக்கொண்டு தோஷமானது கீழ்நோக்கிப் பலவாறு[2] வெளியாவதுண்டு. சில ஸமயம் இருதயத்திற்குச் சோர்வு, கோடம், அக்னிமாந்த்யம், மயிர்ச்சிலிர்க்கை, வியர்வை, சரீரத்தில் பசுமைநிறம் ஆகிய கோளாறுகளும் தோன்றும். 3.

ஊர்த்வகதாம்ல-பித்தம்[3]:—சில ஸமயம் வமநமூலமாய் அம்ல-பித்தத்தில் தோஷம் மேல்நோக்கி வெளியாகும். (1) அது இலைப் பசுமை, மஞ்சள், நீலம், கறுப்பு, இளஞ்சிவப்பு, கருஞ்சிவப்பு ஆகிய நிறங்களைப் பெற்றதாகவும், அதிக புளிப்பாகவும் இருக்கும். (2) இறைச்சி கழுவிய நீரைப்போன்றதாகவும், அதிக பிசுபிசுப்பாகவும் அல்லது தெளிவாகவும், பலவித சுவையுள்ளதாகவும் கபாதிக்யத்தினுல் வெளியாகும். (3) புஜித்த உணவு ஜீர்ணமான பிறகாவது, புஜிக்காமலிருக்கையிலாவது ஒவ்வொரு ஸமயம் கைப்பும் புளிப்புமாக வாந்தியாகும்; இவ்விதமாகவே தேக்கெரிவும் உண்டாகும்; அப்பொழுது தொண்டையிலும், மார்பிலும், அழற்சி அதிகமாயிருக்கும்; சிரோ வேதனையுமுண்டாகும். (4) உள்ளங்கைகளிலும் பாதங்களிலும் அழற்சி வெப்பம் இவையும், பலமான அரோசகமும், ஜ்வரமும் கப-பித்தக் கோளாறால் உண்டாகும் குறிகளாம். (5) மேலும் தினவு, தடிப்புகள், கட்டிகள் ஆகிய பலவிதமான கோளாறுகளும், சரீரமெங்கும் வேறுவகையான பல பிணிகளும் தோன்றும்[4]. 4—6.

அம்ல-பித்தத்தில் ஸாத்யாஸாத்யாதி நிலைமைகள்—அம்ல-பித்த வியாதி நாட்பட்டாததாயிருந்தால் ஏற்றவாறு சிகித்ஸை செய்ய நிவ்ருத்தியடையும். நாட்பட்டதானுல் யாப்யமாகவும், அதுவே அபூர்வமாய் கஷ்டஸாத்யமாகவும் இருக்கிறது. 7.

---

1. குடலிலிருந்து குதமார்க்கத்தினுல் கீழ்நோக்கி அழற்சியுடன் தோஷம் (மலாதிகள்) வெளியாகும் வியாதி.

2. மஞ்சள், பச்சை, கறுப்பு, சிவப்பு முதலிய வெவ்வேறு நிறங்களையும், துர்நாற்றம் முதலியவைகளையும் பலவாறு உடையதான அம்லபித்தம்.

3. குடலிலிருந்து தோஷம் மேல் நோக்கி வெளியாதல்.

4. இங்கே (1), (2), (3), (4), (5) என்று குறிக்கப்பட்டுள்ளவை முறையே பித்தம், கபம், வாதம், த்வந்த்வங்கள், ஸந்நிபாதம் இவற்றாலான ஊர்த்வகதாம்ல-பித்தங்களைப் பற்றியவை என்றறிக.

அம்ல-பித்தத்தில் மூன்று விசேஷ த்வந்த்வ லக்ஷணங்கள்[1]:—அவ்வம்ல-பித்தம் வாதஸஹிதம், வாத-கபஸஹிதம், கபஸஹிதம் என்று மீண்டும் பொதுவாக மூவகைப்படும். இக்கோளாறுகள் வைத்தியர்களைப் பிரமிக்கச் செய்யுந் தன்மையனவாகையால்[2], இவற்றைக் கற்றறிந்த வைத்தியன் தோஷ இலக்ஷணங்களைக்கொண்டு பகுத்துணரலாம். (1) நடுக்கம், பிதற்றல், மூர்ச்சை, தேஹமெங்கும் தினவு, உடல் இளைத்தல், குத்தல், கண்கள் இருளடைதல், தலைச்சுற்றல், அதிக மயக்கம், மயிர்ச்சிலிர்க்கை ஆகியவை வாதாதிகமான அம்ல-பித்தத்தின் குறிகளாம். (2) அடிக்கடி கோழை சிந்துதல், சரீரம் பாரமாதல், திமிர், அரோசகம், சைத்தியம், இளைப்பு, வாயில் கபம் சூழல், ஜாடராக்னி மந்தப்படுதல், அரிப்பு, அதிக நித்திரை ஆகியவை கபாதிகமான அம்ல-பித்தத்தின் குறிகளாகும். (3) இவ்விரண்டின் குறிகள் யாவும் சேர்ந்து தோன்றிய வியாதி வாத-கபாதிகமான அம்ல-பித்தமாகும். 8—10½.

கப-பித்தங்கள் ஸமமாய் பிரகோபித்த அம்ல-பித்தம்:—புளிப்பும் கைப்பும் காரமுமாய் ஏப்பம் விடுதல், மார்பிலும் வயிற்றிலும் தொண்டையிலும் அழற்சியுண்டாதல், தலை சுற்றுதல், மூர்ச்சித்தல், அரோசகம், வாந்தி, சோம்பல், தலைநோய், வாயில் நீரூறுதல், வாய் இனிப்பாதல் ஆகியவை சிலேஷ்மமும் பித்தமும் ஒரே அளவாகப் பிரகோபித்துள்ள அம்ல-பித்தத்தின் குறிகளாகும். 11, 12.

## 52. விஸர்ப்ப நிதாநம்

விஸர்ப்பத்தின் காரணம்:—இலவணம், அம்லம், காரம், உஷ்ணம் இத்யாதிகுணமுள்ள வஸ்துக்களை மிகுதியா யுபயோகிப்பதால்

---

1. அம்ல-பித்த வியாதிகளில் எல்லாவற்றிலும் பித்ததோஷம் ஸம்பந்தித்திருக்கும். வாதமோ அல்லது கபமோ அம்ல-பித்தத்திற் கூட்டு தோஷமாயிருந்தால் அப்பொழுது ஒவ்வொரு அம்ல-பித்த வியாதியும் த்வந்த்வதோஷ ஸம்பந்தமுள்ளதாகவே இருப்பது ஸஹஜம். ஆகவே "அம்ல-பித்தத்திற் பொதுவான த்வந்த்வலக்ஷணங்கள்" என்று இவற்றைக் கூறலாம். மேலும் ஊர்த்வகதாம்ல-பித்தத்திலும் முன்பு வாதாதி தோஷங்களுடைய ஸம்பந்தங்களைக்கொண்டு சில பாகுபாடுகள் குறிக்கப்பட்டன. மீண்டும் இங்கு கூறப்படுகிற பாகுபாடுகள் அவ்விதமானவையல்ல வென்றும், அம்லபித்தங்கள் அனைத்திலும் வாதாதி தோஷங்களுக்கும் பொதுவான ஸம்பந்தத்தினால் காணும் ஸாதாரணக் குறிகள் இங்கு கூறப்படுகின்றன என்பதை இப் "பொதுவான த்வந்த்வலக்ஷணங்கள்" பகுத்தறிவிக்கின்றன.

2. இப்பொதுவான த்வந்த்வாம்ல பித்தங்களில் தோஷங்கள் மேல் நோக்கியும், கீழ் நோக்கியும், ஒருமிக்கவோ, ஒன்றன்பின் மற்றொன்றாகவோ வெளியாவது இயல்பாகையால் (அதாவது வாந்தியும் அதிஸாரமும் தோன்றுமாகையால்), வியாதியின் உண்மையான ஸ்வரூபம் அறியப்படுவது கடினமாயிருக்கும்.

தோஷங்கள் பிரகோபித்து "விஸர்ப்பம்"[1] உண்டாகும்; இது உடம்பெங்கும் பரவுவதால் விஸர்ப்பம் என்று வழங்கப்படுகிறது. 1.

விஸர்ப்பம் ஏழுவிதம் :—தனித்தனியே ஒவ்வொரு தோஷத்தினுல் உண்டாகும் விஸர்ப்பங்கள் மூன்று, ஸந்நிபாதத்தினுல் ஒன்று, த்வந்த்வ தோஷங்களால் மூன்று; ஆக விஸர்ப்பங்கள் ஏழுவகையாம்.[2] வாதவிஸர்ப்பம், பித்தவிஸர்ப்பம், கபவிஸர்ப்பம், ஸந்நிபாத விஸர்ப்பம் என்று நான்கு ஸாதாரண விஸர்ப்பங்களும், த்வந்த்வ தோஷங்களாலான மூன்றுவித விசேஷ விஸர்ப்பங்களும் இனி விவரிக்கப்படும். த்வந்த்வங்களுள் வாத-பித்தங்களால் "அக்னி விஸர்ப்பமும்", கப-வாதங்களால் "கிரந்தி விஸர்ப்பமும்", பித்த-கபங்களால் கடுமையான "கர்தமகமும்" உண்டாகும்.[3] 2—3½.

விஸர்ப்பத்திற் கோளாறடையும் தோஷ தாதுக்கள்:—இரத்தம், லஸீகையென்னும் நிணநீர், சர்மம், மாம்ஸம் ஆகிய நான்கு தாதுக்களும், வாத-பித்த-கபங்களாகிற மூன்று தோஷங்களும் ஆக இவ் வேழும் விஸர்ப்பங்கள் உண்டாவதற்கு ஆதாரமா யிருக்கின்றன. 4½.

வாத விஸர்ப்பம்:—அவற்றுள் வாதத்தினுல் உண்டாகும் விஸர்ப்பத்தில் உடம்பெங்கும் விரணம் பரவும்; வாதஜ்வரம் போன்ற நோயுண்டாகும்; சோபை. துடிப்பு, குத்தல், பிளக்கப்படுவது போன்ற வேதனை, இசிவு, கடுப்பு, மயிர்ச்சிலிர்க்கை இவைகளும் காணும். 5½.

பித்த விஸர்ப்பம்:—பித்தத்தினுல் உண்டாகும விஸர்ப்பத்தில் விரணம் விரைவில் உடலெங்கும் பரவும்; அது மிகவும் சிவப்பாயிருக்கும்; பித்த ஜ்வரத்திற்குச் சமமான இலக்ஷணங்கள் காணப்படும். 6.

---

1. வெகு எளிதில் தொற்றிப் பரவக்கூடியதும், அதிக வலியையும் எரித்தலையும் உண்டுபண்ணக்கூடியதுமான துர்நீர் அடங்கிய "அக்கி" போன்ற விஷவிரணம் "விஸர்ப்பம்" எனப்படுகிறது. [வாந்தியின் வேகத்தை அடக்குவதாலும், ஏற்ற காலத்தில் துஷ்டரத்தத்தை வெளிப்படுத்தாமையாலும், சரத் காலத்தின் இயற்கையான பிரபாவத்தினுலும் சரீரத்தில் இரத்தம் கெட்டுப்போய் விஸர்ப்பம் காணும்" என்றும் கூறுவர்.]

2. அஷ்டாங்கஹ்ருதயத்தில் விஸர்ப்பம் எட்டுவிதம் என்று கூறப்படுகிறது. ஆனல் இங்கு தோஷங்களாலுண்டாகும் ஏழுவித விஸர்ப்பங்கள் மாத்திரம் குறிக்கப்படுகின்றன. இதே அத்தியாயத்தின் இறுதியில் "க்ஷதஜ விஸர்ப்பம்" என்கிற ஆகந்துக விஸர்ப்பமும் தனியே கூறப்படுகிறது. அதைச் சேர்த்து வாக்படர் விஸர்ப்பம் எட்டுவிதம் என்கிருர்.

3. விஸர்ப்பம் "பாஹ்யம்", "ஆந்தரம்" என்று வேறு இரண்டு விதமாகவும் வழங்கப்படுகிறது. "மர்மங்கள் தாக்கப்படுதல், மூர்ச்சித்தல், இந்த்ரியங்கள் தாக்கப்படுவது, அதிக நாவறட்சி, வேகங்களை முறைதவருக வெளிவிடுதல், திடீரென்று ஜாடராக்னியும் தேஹபலமும் க்ஷீணித்தல் ஆகிய இக் காரணங்களால் ஆந்தர விஸர்ப்பம் உண்டாகும். இதற்கு வேறுபட்ட காரணங்களால் பாஹ்யவிஸர்ப்பம் காணும்" என்று சாகாதிகள் கூறுகிருர்கள்.

கப விஸர்ப்பம்:—கபஸம்பந்தமான விஸர்ப்பங்களில் தினவும், ஸ்நிக்த்தமான விஸர்ப்பங்களும், கபஜ்வரத்திற்குச் சமமான வேதனை களும் உண்டாகும். 6½.

ஸந்நிபாத விஸர்ப்பம்:—மூன்று தோஷங்களும் ஒரு மிக்கப் பிரகோபித்துண்டாகும் விஸர்ப்பத்தில் வாத-பித்த-கபங்களாலான மூன்று விஸர்ப்பங்களுடைய எல்லாக் குறிகளும் சேர்ந்திருக்கும். 7.

அக்னி விஸர்ப்பம் :— வாத-பித்தங்களாலான விஸர்ப்பமானது ஜ்வரம், வாந்தி, மூர்ச்சை, அதிஸாரம், நாவறட்சி, தலைச் சுற்றல், கிரந்திகள் உடைதல், அக்னிமாந்தியம், தமகச்வாஸம், அரோசகம் இவற்றோடு கூடியிருக்கும்; எல்லா அங்கங்களும் அக்னியினுல் எரி பவைபோல் தவிக்கும் ; விஸர்ப்பமானது எந்தெந்த பிரதேசத்தில் வியாபிக்கின்றதோ அவ்வவ்விடமும் வெகு சீக்கிரத்தில் எரிந்து அவிந்த கொள்ளிக்கட்டைக்கு ஒப்பாகக் கறுப்பாகவோ, நீலநிற மாகவே, சென்னிறமாகவோ ஆய்விடும் ; துரிதமாகப் பரவுவதால் கொப்புளங்களால் அவ்வவ்விடமும் அக்னியினுல் எரிக்கப்பட்டவை போலாகும் ; மேலும் அந்த விஸர்ப்பம் அதிவேகமாக மர்மங்களை அனுஸரித்துச் சென்று, அதனுல் வாயு மிகவும் பலம் பெற்றுவிடவே அங்கங்களில் வேதனையை அதிகமாயுண்டுபண்ணும்; ஞாபக சக்தியை இழக்கச் செய்யும் ; நித்திரையைப் போக்கிவிடும் ; ச்வாஸத்தை விருத்தி செய்யும்; விக்கலும் உண்டாகும் ; அம்மனிதன் இவ்வவஸ்த் தையைப் பெறவே, எவ்விடத்திலும் சுகம்பெற முடியாதவனுய், அமைதியின்மையினுல் மிகவும் பீடிக்கப்படுபவனுய் தரையிலும், சயனத்திலும், ஆஸனம் முதலியவைகளிலும் படுத்துப் புறண்டு, கிலேசமடைந்து, மனம் தேஹம் இவற்றிற்குண்டாகும் அஸாதாரண சிரமத்தினுல் எளிதில் தெளிவடையாத நித்திரையைப் பெறுவான்[1]; அது 'அக்னி விஸர்ப்பம்' எனப்படும். 8—13.

கிரந்தி விஸர்ப்பம்:—கபத்தினுல் வாயுவானது தடுக்கப்பட, அக் கபத்தை வாயு பலவிதமாகப் பிளந்து, அல்லது இரத்தம் விருத்தி யான மனிதனின் சர்மத்திலும், ஸிரைகளிலும், ஸ்நாயுக்களிலும் உள்ள இரத்தத்தையாவது அவ்விதம் உடைத்து, அதைத் தூஷிப் பித்து, நீளமாகவும், சிறியனவாகவும், வட்டங்களாகவும், பெருத் தவையாகவும், கடினமாகவுமுள்ள இரத்தஸம்பந்தமான கிரந்தி களை வரிசை வரிசையாய் உண்டுபண்ணும் ; அக்கிரந்திகள் கடுமை யான வலியையும் ஜ்வரத்தையும் உண்டாக்கும்; ச்வாஸம், காஸம், அதிஸாரம், வாய்வறண்டு போதல், விக்கல், வாந்தி, தலைச்சுற்றல், மயக்கம், உடல் கருநிறமாக மாறுதல், மூர்ச்சை, உடல் சோர்ந்து ஒடிந்து விழுவதுபோன்ற உணர்ச்சி, அக்னிமாந்தியம் இவையும் உண்டாம் ; வாத-கபங்கள் பிரகோபித்துண்டாகும் இது "கிரந்தி விஸர்ப்பம" எனப்படும். 14—17½.

1. தீர்க்க நித்திரை எனக் கூறுவர்; அதாவது மரணம்.

கர்தம விஸர்ப்பம்:—கப-பித்தங்களாலான விஸர்ப்பத்தில் ஜ்வரம், நித்திரை, விரைப்பு, சோம்பல், தலைவலி, அங்கங்கள் ஒடிந்து விழுந்து விடுவது போன்ற உணர்ச்சி, இளைப்பு, வலிப்பு, வாய்ப்பிதற்றல், அரோசகம், தலைச்சுற்றல், மூர்ச்சை, பசியின்மை, எலும்புகளில் கடுப்பு, நாவறட்சி, இந்த்ரியங்கள் குருத்தன்மையடைதல், மலம் ஆமமாகவே வெளிப்படுதல், ஸ்ரோதஸ்ஸுகளில் பிசுபிசுப்பு இவை உண்டாகும்; இந்த விஸர்ப்பம் பெரும்பாலும் ஆமாசயத்திற்குச் சமீபமாய் உடலின் மத்தியபாகத்தில் பரவும்; ஏதாவது ஓரிடத்தைப் பற்றி சொற்ப வலியை யுண்டுபண்ணும்; அதிக மஞ்சள் நிறமாகவும் சென்னிறமாகவும் வெண்மையாகவுமுள்ள கொப்புளங்களால் சூழப்பட்டிருக்கும்; அந்த விஸர்ப்பம் தவளையைப் போன்ற நிற முடையதாகவும், கறுத்து ஸ்நிக்த்தமாகவும், மலினமாகவும், குருத் தன்மையோடு சோதையுடையதாகவும், வெகு ஆழத்திலேயே பழுத்துவிடுந் தன்மையதாகவும், துர்நீக் கசிவுடன் வெளிப்படையாய் உடையக்கூடியதாகவும், சேறுபோன்றதாகவும, சிதருண்ட மாம்ஸத் துடன் கூடியதாகவும், ஸ்நாயுக்களும் ஸிரைகளும் நன்கு வெளியில் புலப்படும்படி வியாபித்திருப்பதாகவும், சவநாற்ற முள்ளதாகவும் இருக்கும்; இதை "கர்தம விஸர்ப்பம்" என்பார்கள்.[1] 18—21½.

ஆகந்துக விஸர்ப்பம்[2]:—அடி தாக்குதல் முதலிய பாஹ்ய கார ணங்களால் பிரகோபித்த வாயு இரத்தத்துடன் பித்தத்தையும் தூண்டி விஸர்ப்பத்தை உண்டுபண்ணும்; அவ்விஸர்ப்பம் கொள்ளுகளைப் போன்ற கொப்புளங்களுடையன; வீக்கமும், ஜ்வரமும், வலியும், எரித்தலும் அதிகமாயிருக்கும்; அவ் விஸர்ப்பங்கள் கருஞ் சிவப் பாகவோ சிவப்பாகவோ இருக்கும்.[3] 22, 23.

விஸர்ப்பத்தின் உபத்திரவங்கள்:—ஜ்வரம், அதிஸாரம், வாந்தி, சர்மமும் மாம்ஸமும் பிளவுறுதல், உடல்வாட்டம், அரோசகம், உணவு ஜீர்ணமாகாமை இவை விஸர்ப்பங்களுக்கு உபத்திரவங்களாகும். 24.

---

1. சேறு போன்றிருப்பதால் இப்பெயர் வந்தது.

2. இதற்கே க்ஷதவிஸர்ப்பம் என்றும் பெயர்.

3. ஆகந்துகம் என்கிற க்ஷதவிஸர்ப்பம் பித்த விஸர்ப் பத்திற்கு உட்பட்டு விடுகிறது என்றும், ஆகவே இவ்வியாதி ஏழுக்கு அதிகப்படுவதாகக் கருத முடியாதென்றும் ஸ்ரீ கண்டதத்தன், "வெவ்வேறு வகையான ஆயுதங்கள் தாக்குவதாலும், ஸர்ப்பங்க ளுடையவும் வேறு துஷ்டப்பிராணிகளுடையவும் பற்களும் நகங் களும் பொத்துவதாலும், அவை சரீரத்திற்குள் ஒடிந்து முனைகள் மிதமிஞ்சி சேர்ந்து விடுவதாலும் இரத்தமும் பித்தமும பிரகோப மடைந்து சீக்கிரம் விரணம் உண்டாகும்; இவ்விரண்டும் சேர்ந்து கொண்டு மிகக் கடுமையான விரணசோதை யென்கிற வீக்கத்தை யுண்டுபண்ணுகின்றன; கறுப்பும் பசுமையுமான சிறிய கொப்புளங் களால் அவ்வீக்கம் சூழப்பட்டிருக்கும்; இந்த விஸர்ப்பம் பித்த விஸர்ப்பம போன்ற குறிகளுள்ளதா யிருக்கும்; ஆகவே இதைப் பித்த விஸர்ப்பத்தின் அநுபந்த வியாதியாகக் கருதலாம்." என்கிற போஜவாக்கியங்களை இதற்குப் பிரமாணமாகவும் கூறுகிறர்.

விஸர்ப்பங்களில் ஸாத்யாஸாத்யங்கள்:—(1) வாத விஸர்ப்பம், பித்த விஸர்ப்பம், சிலேஷ்ம விஸர்ப்பம் ஆகிய இம்மூன்றும் சிகித்ஸை யினுல் எளிதில் தீருபவை. (2) ஸந்நிபாத விஸர்ப்பமும, ஆகந்துக விஸர்ப்பமும், மிகவும் அதிகரித்த பித்தத்தினுல் சக்ரத்தை மை போல் கருக்கச்செய்யும் விஸர்ப்பமும்[1] அஸாத்யங்கள். (3) மர்ம ஸ்த்தானங்களிலுண்டாகும் எல்லா விஸர்ப்பங்களும் கஷ்ட ஸாத்யங் களாம்.[2] 25.

## 53. விஸ்போட நிதானம்.*

விஸ்போடத்தின் காரணுதிகள்:—(1) கடு, அம்லம், க்ஷாரம் இச் சுவையுள்ளவையும், உஷ்ணமும் விதாஹியும் ரூக்ஷமுமான குண முள்ளவையுமான பதார்த்தங்களை அதிகமா யுபயோகிப்பதாலும், பக்குவமாகாத உணவுகளையுண்பதாலும், முன்பு புஜித்த உணவு ஜீர்ணமாகாம லிருக்கையிலேயே மீண்டும் புஜிப்பதாலும், வெயிலின் கடுமையினுலும், அவ்வப் பருவத்தின் சீதோஷ்ணுதிகள் இயற்கையி னும் அதிகமாவதாலும் அல்லது அவற்றின் நிலைமைகள் ஒன்றுக் கொன்று மாறுபடுவதாலும்[3] வாதம் முதலிய தோஷங்கள் பிர கோபமடைகின்றன. ஸம்ப்ராப்தி:—(2) அத்தோஷங்கள் சர்மத் தைப்பற்றியவையாய், அப்பால் கிரமமாக இரத்தம், மாம்ஸம், அஸ்த்தி இவற்றை மிகவும் தூஷிப்பித்து அதிக கோரமான விஸ்போடங்களை யுண்டுபண்ணும். (3) எல்லா விஸ்போடங்களுக் கும் முதலில் பூர்வரூபமாக ஜ்வரமும் காணும். 1, 2.

விஸ்போடத்தின் பொது லக்ஷணம்:—முக்கியமாக இரத்தமும் பித்தமும் கோளாறடைந்து[4] அக்னியினுல் சுடப்பட்டுண்டாவது

---

1. "மிகவும் அதிகரித்த பித்தத்தினுலான விஸர்ப்பம்" என்று கூறினும், "மைபோல் கறுப்பாகச் செய்வது" என்றதாலும், அஸாத் யத்தில் இதைச் சேர்த்திருப்பதாலும் "அக்நி விஸர்ப்பம்" இங்கே குறிக்கப்படுகிறதென்று சிலரது கருத்து. ஆகவே அக்னிவிஸர்ப்ப மும் அஸாத்யக் குறிகளைப் பெற்ற வியாதியாகும்.

2. கஷ்ட ஸாத்யம் என்பதை இங்கே அஸாத்ய பர்யாயம் என் கிருர் ஸ்ரீகண்டதத்தன். ஏனெனில் "க்ஷதவிஸர்ப்பமும், ஸந்நிபாதத்தி னுலும், மர்மஸ்த்தானங்களிலுமுண்டாகும் எல்லா விஸர்ப்பங்களும் அஸாத்யங்கள் என்றுணர்ந்து வைத்தியன் அவற்றிற்குச் சிகித்ஸை செய்யக் கூடாது" என்று போஜன் கூறுகிருர்.

* விஸ்போடம்—சீழ் அல்லது துர்நீரடங்கிய கொப்புளம்.

3. எந்த ருதுவுக்கு எது இயல்போ அதற்கு எதிரிடையான தன்மை. அதாவது கோடை காலத்தில் குளிர், ஹேமந்தருதுவில் கடுமையான வெப்பம் முதலியது. [இங்கு மொழியப்பட்டுள்ள காரணங்களுள் சில வாதத்தையும், சில பித்தத்தையும், சில கபத்தை யும் அவ்வவற்றின் தன்மைக்கேற்றவாறு பிரகோபிக்கச் செய்யும்.]

4. எல்லா விஸ்போடங்களிலும் பித்தத்திற்கும் இரத்தத்திற்கும் பலமான ஸம்பந்தமுண்டென்றுதான் இதன் கருத்து; சூலையில் வாத

போல் சரீரத்தில் சில விடங்களிலோ எல்லாப் பிரதேசங்களிலுமோ கொப்புளங்கள் உண்டாகும்; ஜ்வரமும் இதில் தொடர்ந்திருக்கும்; இக் கொப்புளங்களே "விஸ்போடங்கள்" எனப்படுகின்றன. 3.

வாத விஸ்போடம்:—தலைநோய், உடலெங்கும் குத்தல், வலி, ஜ்வரம், நாவறட்சி, கணுக்கள்தோறும் பிளக்கப்படுவதுபோன்ற வேதனை, கொப்புளங்களால் உடல் கருநிறமாதல் இவை வாத விஸ்போடத்தின் குறிகளாம். 4

பித்த விஸ்போடம்:—ஜ்வரம், அழற்சி, உடல்வலி, கொப்புளங் களிலிருந்து நீர்வடிதல், அவை பழுத்துப் பக்குவமாகத் தோன்றல், நாவறட்சி இவற்றோடு கூடியவையாய் கொப்புளங்கள் பொன்னிறம் அல்லது சென்னிறமாகக் காணும். இவை பித்த விஸ்போடத்தின் குறிகளாகும். 5.

கப விஸ்போடம்:—வாந்தி, அரோசகம், சைத்தியம் அல்லது திமிர்ப்பு இவற்றால் தொடரப்பட்டு கொப்புளங்கள் உண்டாகும்; அவை கடினமாகவும், வெண்மையாகவும், தினவுள்ளவையாகவும், வேதனையற்றவையாகவும், மெதுவாகப் பக்குவமடைபவையாகவும் இருக்கும். இவை கபவிஸ்போடத்தின் குறிகள். 6.

த்வந்த்வதோஷஜ விஸ்போடம்:—(1) வாத-பித்தங்களால் உண் டாகும் விஸ்போடம் கடும் வேதனையைத் தரும். (2) அரிப்பு, திமிர்ப்பு, குருத்வம் இக்குறிகளைக்கொண்டு விஸ்போடம் வாத-கப ஸம்பந்தமானதென்றும், (3) தினவு, அழற்சி, ஜ்வரம், வாந்தி இவற் றால் பித்த-கபங்களால் உண்டானதென்றும் அறிக. 7, 7½.

ஸந்நிபாத விஸ்போடம்:—கொப்புளத்தின் நடுவில் சிறிது குழி விழுந்தும் ஓரங்களிற் சுற்றிலும் வரம்புகட்டியதுபோல் உயர்ந்து மிருத்தல், கடினமாகவும் சிறிது பழுக்குந் தன்மையதாகவும் இருத் தல், அழற்சி-சிவப்பு - நாவறட்சி-மயக்கம்-வாந்தி-வலி-பிதற்றல்-நடுக் கம்-சோம்பல் இவற்றால் தொடரப்படுதல் ஆகியவை மூன்று தோஷங்களாலுமுண்டான விஸ்போடத்தின் குறிகள். இவ்வியாதி அஸாத்யமாகும். 8, 9.

இரத்த விஸ்போடம்:—இரத்தக் கோளாறால் கிளம்பும் விஸ் போடங்கள் சென்னிறமாகவும், குன்றுமணி-பவளம் இவைபோன் றும் இருக்கும்; இவை இரத்தத்தினாலும், அத்துடன் கூடிய பித்தத்தி னாலும் உண்டாகின்றன. 10.

---

தோஷத்திற்குப் பிராதான்யம் எப்படியோ அப்படியென்று அறிக; ஆனால் இவ்வியாதியில் வாததோஷமும் அனுபந்தமாயிருப்பதாய் அறிக. "எப்பொழுது இரக்தமும் பித்தமும் வாதத்தினால் தொடரப் பட்டவையாய், சர்மத்தின்மீது உடலெங்கும் வியாபிக்கின்றனவோ, அப்பொழுது நெருப்பால் எரிக்கப்பட்டதுபோல் கொப்புளங்களை யுண்டாக்கும்; அழற்சியும் ஜ்வரமும் இதில் தொடரும்; இவை விஸ்போடங்கள் எனப்படும்" என்று போஜன்.

விஸ்போடங்களில் ஸாத்யாஸாத்யங்கள்:—முற் கூறிய இரத்த-விஸ்போடம் எவ்விதமான சிகித்ஸைகளாலும் நிவ்ருத்தியாவதில்லை. மேலும் இவற்றுள் ஒரு தோஷத்தினால் உண்டாகும் விஸ்போடம் எளிதில் சிகித்ஸித்து நிவ்ருத்திக்கக் கூடியது. இரண்டு தோஷங்களால் உண்டாவது கஷ்ட ஸாத்யமாகும். எல்லாத் தோஷங்களும் ஒரு மிக்கக் கோளாறடைந் துண்டாகும் விஸ்போடமும், அநேக உபத்திரவங்களோடு கூடிய விஸ்போடமும் வெகு கடுமையானவை யாகையால் அஸாத்யமாம். 11.

---

## 54. மஸூரிகா நிதாநம்.*

மஸூரிகையின் காரணம்:—ஜனங்கள் அதிக கடுவாகவும், அம்லமாகவும், இலவணமாகவும், க்ஷாரமாகவுமுள்ள பதார்த்தங்களை யுபயோகிப்பதாலும், விருத்தமாக அல்லது அத்யசநமாகவுள்ள உணவுகளைப் புஜிப்பதாலும், பதன்கெட்ட பருப்புவகைகளையும் சாகவர்க்கம் முதலியவைகளையும் உண்பதாலும், கெட்டுப்போன வாயு தண்ணீர் இவற்றாலும், குரூர குணமுள்ள பூதக் கிரஹங்களினாலும் தேசத்தில் தோஷங்கள் பலமாக விருத்தியடைந்து வியாபிக்க, அவை மனிதரின் சரீரத்திற் பற்றி இரத்தத்தையும் தூஷிப்பித்து, பிறகு இரத்தத்தின் மூலமாய் கடலைப்பருப்புகளின் உருவங் கொண்ட கொப்புளங்களை யுண்டுபண்ணும்; இவற்றிற்கு "மஸூரிகைகள்" [1] எனப் பெயர். 1—2½.

மஸூரிகையின் பூர்வரூபம்:—மஸூரிகை விளங்கக் கிளம்பு முன் ஜ்வரம், அரிப்பு, உடல் சோர்ந்து வீழ்தல், அமைதியின்மை, மயக்கம், கன்றினற்போல் சர்மத்தில் நிறமாறுபாட்டுடன் வீக்கங் காணுதல், கண் சிவத்தல் இக்குறிகள் தோன்றும். 3½.

வாத மஸூரிகை:—(1) வாதத்தினாலுண்டாகும் மஸூரிகையில் கொப்புளங்கள் கருஞ் சிவப்பாகவும், ரூக்ஷமாகவும், கடுமையான வேதனையுண்டு பண்ணுபவையாகவும், சிறிது கடினமாகவும், மெதுவாகப் பக்குவமடைபவையாகவும் இருக்கும். (2) அஸ்திகளிலும், அவற்றின் பூட்டுகளிலும் கடுப்புவலியும், இருமலும், நடுக்கமும், அமைதியின்மையும், சோர்வும் உண்டாகும்; தவடைகள், உதடுகள், நா இவை வறளும்; தாஹமும், அரோசகமும் தொடரும். 4—5½.

பித்த மஸூரிகை:—பித்ததோஷப் பிரகோபத்தினாலான மஸூரிகையில் கொப்புளங்கள் சிவந்து அல்லது பசுமையாய் அல்லது ஒருவாறு வெளுப்பாயிருக்கும்; அழற்சியுண்டு பண்ணும்; தீவிரமான

---

* மஸூரிகா—வைசூரி யெனப்படும் பெரியம்மை.

1. கடலைப் பருப்புகள் போன்ற நீர்க்குளுவான் அல்லது கொப்புளங்கள் என்று பொருள்.

வேதனையளிக்கும்; சீக்கிரத்திற் பக்குவமடையும். (2) மேலும் பேதியாகும்; உடலில் கடுப்பும், அழற்சியும் தோன்றும்; நாவறட்சி, அரோசகம், வாயில் புண்கள், கண் சிவப்பு, மிகக் கடுமையான ஜ்வரம் இக்குறிகளும் உண்டாகும். 6—7½.

இரத்த மஸூரிகை:—இரத்ததோஷத்தினாலான மஸூரிகைகளில் பித்த மஸூரிகைக்குக்குரிய குறிகள் தோன்றும். 8.

சிலேஷ்ம மஸூரிகை:—(1) கபதோஷத்தினாலான மஸூரிகையில் வாயிலிருந்தும் நாசியிலிருந்தும் கபம் ஊறுதல், திமிர்ப்பு, தலைநோய், தேஹம் பாரமாதல், இருதயத்தின் சோர்வு, அரோசகம், அதிக நித்திரை, சோம்பல் இவையுண்டாம். (2) கொப்புளங்கள் வெண்மையாகவும், ஸ்நிக்த்தமாகவும், அதிக பருமனாகவும், தினவுள்ளவையாவும், மெதுவாகப் பக்குவமடைபவையாகவு மிருக்கும். 9,10.

ஸந்நிபாத மஸூரிகை:—எல்லாத் தோஷங்களாலும் உண்டான மஸூரிகைகள் கருநிறம் அல்லது நீல நிறமாகவும், தட்டையாய் அகன்றவையாகவும், மத்தியில் குழியுள்ளவையாகவும், அமிதமான நோவுண்டு பண்ணுபவையாகவும், மெதுவாகப் பக்குவமடைபவையாகவாகவும் இருக்கும்; அவற்றிலிருந்து சீழும் வடியும்; கொப்புளங்களும் அளவற்றவை யாயிருக்கும். 11.

சர்ம தளமஸூரிகை:—"சர்மம்" அல்லது "சர்மதளம்" என்கிற மஸூரிகையில் தொண்டையடைப்பும், அரோசகமும், கணுக்களில் பிடிப்பும், பிதற்றலும், அமைதியின்மையும் தோன்றும்; இது கஷ்டஸாத்ய வியாதி. 12.

ரோமாந்திக மஸூரிகை:—"ரோமாந்திகம்" என்கிற மஸூரிகை பித்த - கபங்களால் உண்டாவது. (1) ரோமகூபங்களென்கிற மயிர்க்கால்களின் உயரத்துக்குச் சம அளவாக அக்கொப்புளங்கள் தோன்றும்; நிறத்திற் சிவந்திருக்கும். (2) இதில் காஸமும் அரோசகமும் உண்டாகும்; இதற்கு ஜ்வரம் பூர்வரூபமாகக் காணும். 13.

தாதுக்களைப் பற்றிய மஸூரிகைகள்:—(1) சர்மத்தைப் பற்றிய மஸூரிகை சொற்ப தோஷங்களாலுண்டாகும்; நீர்க்குமிழிகளைப் போன்ற அவற்றிலிருந்து தண்ணீர் போன்ற துர்நீர் வடியும்.[1] (2) இரத்தத்தைப்பற்றிய மஸூரிகைகளில் கொப்புளங்கள் செந்நிறமானவை; எளிதிற் பக்குவமடைபவை; மெல்லிய புரணியுள்ளவை; அதிக தோஷங்களைப் பெறுதவை; உடையும்போது இரத்தக்கசிவுண்டாம்; இவை சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக் கூடியவை. (3) மாம்ஸத்தைப்பற்றிய மஸூரிகைகளில் அவை கடினமாகவும், ஸ்நிக்த்தமாகவும், மெதுவாகப் பக்குவமடைபவையாகவும், கனமான புரணிகளை யுடையவையாகவுமிருக்கும்; உடல் வலியும், நாவறட்சியும், அரிப்

---

1. வியாதியின் தன்மை அதற்குக் காரணமாயுள்ள தோஷத்தின் பலத்திற்கு ஏற்றதாயிருக்கு மென்கிற நியாயப்படி, சர்மஜ மஸூரிகையில் விசேஷபாதை யிராதென்று அறியலாம்.

பும்,ஜ்வரமும், அமைதியின்மையும் தோன்றும். (4) மேதஸ்ஸைப்பற்றிய மஸூரிகைகள் உருவத்தில் வட்டம் வட்டமாகவும், மிருதுவாகவும், சிறிது உயர்ந்து மேலெழுந்தவையாகவும், பருமனாகவும், ஸ்நிக்த்த மாகவும், வேதனையுண்டு பண்ணுபவையாகவு மிருக்கும்; மூர்ச்சை, அமைதியின்மை, அதிக தாபம் இவையும் தோன்றும். இதிலிருந்து தேறுபவன் அரிது. (5) மஜ்ஜாதாதுவைப்பற்றிய மஸூரிகைகள் உருவத்திற் சிறியவை; சரீரத்தின் மேற்புறத்தில் சர்மத்தோடு ஸம மாயுண்டாய், உருவத்திற் சிறியவையாய், ரூக்ஷமாகவும் காணப் படும்; சொற்ப அளவு உயர்ந்து கிளம்பி தட்டையாகவு மிருக்கும்; அதிகமாய் மூர்ச்சையும், வேதனையும், அமைதியின்மையும் தொடரும். இம்மஸூரிகை மர்மஸ்த்தாநங்களைத் துன்புறுத்திப் பிராணனை யும் சீக்கிரம் போக்கக்கூடியது. (6) மஸூரிகைகள் அஸ்த்தியைப் பற்றியிருந்தால், எலும்புகள் வண்டுகளால் துளைக்கப்பட்டவைபோல் ஆய்விடும்[1]. (7) சுக்ரத்தைப்பற்றிய மஸூரிகையில் கொப்புளங்கள் பக்குவமானவை போன்றும், ஸ்நிக்த்தங்களாகவும், உருவத்தில் மிகச் சிறியவையாகவும், அதிக வேதனை யளிப்பவையாகவும் இருக் கும். உடலில் திமிர்ப்பு, அமைதியின்மை, மூர்ச்சை, அழற்சி, உன்மாதம் இவையும் காணும். இதில் இலக்ஷணங்கள் கூறப்பட்டன வாயினும் உயிர்நிலைத்திருப்பது அரிது[2]. 14—21½.

தாதுக்களைப்பற்றிய மஸூரிகையில் தோஷஸம்பந்தம்:—ஏழுவித தாதுக்களைப் பற்றிய முற்கூறிய ஏழுவித மஸூரிகைகளிலும் வாதாதிதோஷங்கள் கலந்திருக்குமாகையால், ஒவ்வொரு மஸூரிகை யிலும் அததற்குள்ள குறிகளைக்கொண்டு அந்தந்த தோஷத்தின் ஸம்பந்தத்தையும் கண்டறியலாம். 22.

மஸூரிகைகளில் ஸாத்யாஸாத்யாதிகள்:—(1) சர்மத்தைப் பற் றியது, இரத்தத்தைப்பற்றியது, பித்த ஸம்பந்தமானது, பித்த-கபங்க ளாலானது ஆகிய மஸூரிகைகள் எளிதில் நிவ்ருத்திக்கக்கூடியவை யாம். (2) வாதம், வாத-பித்தம், வாத-கபம் இவற்றாலான மூன்று மஸூரிகைகளும், க்ருச்சிர ஸாத்தியங்களாம்; ஆகையால் இவற் றைப் பெருமுயற்சியுடன் சிகித்ஸிக்க வேண்டும். (3) ஸந்நிபாதத் தினுலுண்டான மஸூரிகை அஸாத்யம். அதன் குறிகள் அடியில் குறிக்கப்படுகின்றன. இவற்றுள் சில மஸூரிகைகள் பவளங் களைப் போன்றவை; சில நாவற்பழங்களையொத்தவை; சில இரும் புக் குளிகைகளுக்கொப்பானவை; வேறு சில ஆளிவிதைகளைப் போன்றவை; இவற்றிற்குள்ள நிறபேதங்கள் அந்ததந்த தோஷ

1. அஸ்த்தியையும், மஜ்ஜாவையும் பற்றிய மஸூரிகைகள் சற்றேறக்குறைய ஸமானலக்ஷண முள்ளவை யெனக் கருதி, அவை முன்-பின்னய் இங்கு ஒருமிக்கச் சேர்த்து மொழியப்படுகின்றன.

2. இதே நியாயம் அஸ்த்தி - மஜ்ஜைகளைப்பற்றிய மஸூரிகை களுக்கும் பொருந்தியனவாகையால், அஸ்த்தியையும், மஜ்ஜாவையும் பற்றிய மஸூரிகைகளும் அஸாத்யமென்றே அறியவேண்டும்.

பேதத்தினுல் ஏற்பட்டவையாம், இருமல், விக்கல், மயக்கம், மிகக் கடுமையான ஜ்வரம், பிதற்றல், அமைதியின்மை, மூர்ச்சை, நாவறட்சி, தாபம், மிகக் கொட்டாவியுடன் உறங்கி விழ்தல், முகம்-நாசி-நேத்திரம் இவற்றிலிருந்து இரத்தம் கசிதல், தொண்டையில் குரு குருவென்கிற சப்தத்துடன் அதிக வேதனையோடு ச்வாஸம் விடுதல் ஆகிய இக்குறிகள் மஸூரிகையுள்ளவனுக்குக் கண்டால் அதை அஸாத்ய மென்றறிக[1]. மஸூரிகையினுல் வருந்துபவனொருவன் நாசியினுலே வெகு சிரமப்பட்டு மூச்சு விடுவானுனுல், நாவறட்சியும் அமிதமாயிருந்தால் அவன் வாத தோஷத்தினுல் மிகவும் விகாரமடைந்து உயிர்துறப்பான். 23—30.

மஸூரிகையில் உபத்திரவம்:—மஸூரிகை உண்டாய் இறங்குந் தருவாயில் முழங்கையிலும், மணிக்கட்டிலும், அம்ஸ பலகம் என்கிற தோள்பட்டையிலும் கடுமையான வீக்கம் கண்டால் அவனுக்குண்டாயுள்ள மஸூரிகை அஸாத்யமாம். 31.

---

## 55. க்ஷுத்ரரோக நிதாநம். *

அஜகல்லிகா:—கபம், வாதம் இவ்விரு தோஷங்களுடைய கோளாருல் பாலர்களுக்கு "அஜகல்லிகா" என்கிற சர்ம வியாதியுண்டாகிறது[2]; அவ்வஜகல்லிகைகள் ஸ்நிக்த்தமாகவும், சர்ம்த்தோடு ஸமான நிறமுள்ளனவாகவும், கிரந்திகளைப்போல் உருட்சியாகவுமிருக்கும்; அவற்றில் வலியிராது. 1.

---

1. இங்கே இருமல் முதலிய விகாரங்கள் எல்லா மஸூரிகைக்கும் பொதுவாம். என்ருல் ஸந்நிபாத மஸூரிகையே யல்ல, வேறு எந்த மஸூரிகையிலாவது காஸம் முதலிய குறிகள் தோன்றினுல் அஃதெதுவும் அஸாத்யமென்பது கருத்து.

* க்ஷுத்ரம் என்ருல் வெகு அற்பமானது அல்லது எளிதானது என்பொருள். இங்கே "க்ஷுத்ரரோகங்கள்" என்பதற்குச் சரியான பொருள் "சில்லரைவியாதிகள்" என்பதே, [காரணத்தினுலும், ஸ்வரூபத்தாலும், சிகித்ஸையினுலும் இந்த ரோகங்கள் சொற்பமாகக் கருதப்படுகின்றன, ஆனுல் அப்பொழுது அக்னிரோஹிணி, வல்மீகம் முதலியவை ஸந்நிபாதத்தினுல் உண்டாகுபவையாகையாலும், காரணலக்ஷணுதிகள் அவற்றிற்குப் பலமானவையாகையாலும் எல்லாவற்றிற்கும் "க்ஷுத்ரரோகம்" என்கிற பொதுப் பெயர் பொருந்தா தெனினும், இங்கு கூறப்படுகிற சுமார் 44-வித ரோகங்களுள் மிகச் சிறுபான்மை ரோகங்களே கடுமையானவை; மற்றப் பெரும்பான்மையும் ஸாதாரணமானவை யாகையால் இப்பெயர் பொதுவாகப் பொருந்தும். மேலும் சிற்சில கடுமையான வியாதிகளுக்கு இப்பெயரை யுபயோகிக்கையில் (க்ஷுத்ர மிருகம் என்பதற்குக் கொடிய விலங்கு என்றுபொருள் கூறுவதுபோலவே) க்ஷுத்ரம் என்பதை "கொடியது" என்று பொருள்படுத்தலாம்.]

2. இது பெரும்பாலும் பாலர்களுக்கு உண்டாவதாயினும், பெரியவர்களுக்கும் சில ஸமயம் உண்டாவதுண்டு.

யவப்ரக்யா:—வாற்கோதுமை போன்றதாய்,[1] மிகக் கடினமாகவும், முடிச்சுள்ளதாகவும், மாம்ஸத்தைப் பற்றியதாகவும் உண்டாகிற பரு "யவப்ரக்யா" எனப்படுகிறது. இதுவும் கப-வாதங்களால் உண்டாகிறது. 2.

அந்த்ராலஜீ:—கனமாகவும், முகமில்லாததாகவும், ஒருவாறு உயர்ந்து மேலெழுந்ததாகவும், உருவத்தில் வட்டமாகவும், சொற்ப சீழுடையதுமாயுள்ள பருவை "அந்த்ராலஜீ" என்றறிக[2]. இதற்கும் கப-வாதங்களின் கோளாறே காரணமாம். 3.

விவ்ருதா:—திறந்த முகமுள்ளதும், அதிக அழற்சி யுண்டுபண்ணுவதும், பழுத்த அத்திப் பழம் போன்றதும், வட்டமாயிருப்பதுமான பிளவையை "விவ்ருதா" என்றறிக[3]. இது பித்த தோஷத்தினால் உண்டாவது. 4.

கச்சபிகா:—உருவத்தில் ஆமையைப் போன்று, முடிச்சுள்ளதாய், கடுமையான வலி யுண்டுபண்ணுவதான பிளவை "கச்சபிகா"[4] எனப்படும். வாத-கபங்களாலான இவை ஸாதாரணமாய் ஐந்தாறு கிளம்புவது வழக்கம். 5.

வல்மீகம்:—பிடரி, தோள், அக்குள், கரங்கள், பாதங்கள் இவற்றுள் எதிலாவது, ஸந்தி பாகங்களிலாவது, கழுத்தின் முன் புறத்திலாவது மூன்று தோஷங்களாலும் புற்றைப்போல் ஒருவித கிரந்தி யுண்டாகும்; உடனே தகுந்த சிகித்ஸை செய்யாவிடில் கிரமமாகப் பருத்துப்போய் சீழ்வடிதலையும் குத்தலையும் பெற்று உயர்ந்தெழும்பிய முளைகளுடையவையான அநேக முகங்களோடு விஸர்ப்பத்தைப் போல அது பரவும். இதை வைத்தியர்கள் வெகு கஷ்ட ஸாத்யமான "வல்மீகம்" என்கிற ரோகமென்பார்கள். இதுவே நாட்பட்டதாய் விட்டால் இதற்குச் சிகித்ஸிப்பது பின்னும் வெகு கடினம்[5]. 6, 7.

இந்த்ர வித்தா:—தாமரைப் பூவின் தாதுகளைப் போன்ற சிறு கட்டிகளால் மத்தியிலே சூழப் பெற்ற பிளவை "இந்திரவித்தா" எனப்படும். அது வாத - பித்தங்களால் உண்டானது. 8.

---

1. வாற் கோதுமையைப் போலே மத்தியில் தடித்தும், இரு முனையிலும் மெல்லியதாயும் இருக்குமென்று கருத்து.

2. அந்த்ராலஜீ யென்பது ஸ்நாயுவைப்பற்றி யுண்டாவதாகவும், அத்திக்காய்க்குச் சமானமான உருவமுள்ளதாகவும் இருக்குமென்று போஜன்.

3. பித்த தோஷத்தாலான வேக்காட்டால் வாய் திறந்து கொள்வதால் இப்பெயரிடப்பட்டது.

4. மத்தியில் உயர்ந்து, ஓரங்கள் தாழ்ந்து பருத்திருப்பதால் இப்பெயர் வந்தது.

5. அநேக முகங்களோடும் சிகரங்களோடும் கூடியிருப்பதாலும், வெகு ஆழமான தாதுக்களைப் பற்றிக்கொண்டு கிளம்புவதாலும் "வல்மீகம்" (புற்று) என்கிற பெயர் வந்தது.

**கர்தபிகா:**—சிறிது உயர்ந்து மேலெழுந்ததாகவும், செந்னிற மாகவும், சிறிய கட்டிகள் சூழ்ந்ததாகவும், வட்டவடிமாய் வலியுண்டு பண்ணுவதுமான பிளவை "கர்தபிகா" எனப்படுகிறது. இது வாத-பித்தங்களால் உண்டாவது. 9.

**பாஷாண கர்தபம்:**—வாத-கபங்களுடைய கோளாருல் ஹநுஸந்தியில் கடினமாய், சொற்ப வலியோடு, ஸ்நிக்தமாகக் கிளம்புகிற கட்டியை "பாஷாண கர்தபம்" [1] என்றறிக. 10.

**பநஸிகா:**—செவியின் உட்புறத்தில் அதிகவேதனையுண்டு பண்ணியவாறு,[2] கடினமாயுண்டாகும் கட்டி "பநஸிகா" எனப்படுகிறது. இது வாத-கபங்களால் ஆனது. 11.

**ஜாலகர்தபம்:**—விஸர்ப்பத்தைப் போலவே பலமாகப் பரவுவதால், மெல்லிய தோலுடையதாய், பக்குவ மடையாமல்[3] தாபஜ்வரத்தையு முண்டுபண்ணும் வீக்கத்தை "ஜாலகர்தபம்" என்றறிக. இது பித்தப்பிரகோபத்தால் உண்டாவது. 12.

**இரிவேல்லிகா:**—திரண்டுருண்டு கடுமையான வலியையும் ஜ்வரத்தையு முண்டுபண்ணிக்கொண்டு ஸந்நிபாதத்தினுல் சிரஸ்ஸின் மீதுண்டாகும் கட்டி "இரிவேல்லிகா" எனப்படும்: இதில் மூன்று தோஷங்களுடைய இலக்ஷணங்களும் ஒருமிக்கத் தோன்றும். 13.

**கக்ஷா:**—புயத்திலாவது, விலாப்பக்கத்திலாவது, தோளிலாவது, அக்குளிலாவது பித்ததோஷப் பிரகோபத்தினுல் கருநிறமான கொப்புளம் அதிக வேதனையோடு தோன்றும்; அதை "கக்ஷா" என்று[4] கூறுவர். 14.

**கந்தமாலா:**—கக்ஷாவைப் போலவே பித்தப் பிரகோபத்தினுல் சர்மத்தைப் பற்றி உடலில் வேறு எவ்விடத்திலாவது கொப்புளம் போல் கிளம்பும் பிளவையை "கந்தமாலா" என்பர். 15.

---

1. பாஷாணம் போல் கடினமானதால் இப்பெயர் வந்தது.

2. "காதைச் சுற்றிலும் உண்டாகிறது" என்று போஜன். காதின் வெளிப்புறத்தைச் சுற்றிலும் என்றும் கூறுவர். அது அவ்வளவு உசிதமல்ல. "காதின் உட்புறத்திலேயே முற்றிலும் வியாபித்தது" என்று ஸ்ரீகண்டதத்தன்.

3. பக்குவமடையாமை யென்பதற்கு நன்கு பக்குவமடையாமை (என்ருல் சொற்பம் பக்குவமாதல்) என்று பொருள். "பித்த தோஷத்தாலுண்டாவதால் முற்றிலும் பக்குவமாகாம்லிருப்பது யுக்தமாகாது" என்று சக்ரதத்தர். "ஆனுல் இது பக்குவமடைவதேயில்லை" என்று ஸ்ரீகண்டதத்தன். பித்தத்தை அதிகமாகக் கொண்ட ஸந்நிபாதத்தினுல் இது சர்மத்தைப் பற்றி யுண்டாவதாகவும், இது பக்குவமடைவதில்லையென்றும், விஸர்ப்பமென்று கூட இது வழங்கப்படு மென்றும் போஜன். "பித்தத்தை அதிகமாகப் பெற்று, கடுமையான தாபத்தையும், விஸர்ப்ப ஜ்வரத்தையும் உண்டு பண்ணிக்கொண்டு இரத்தத்தினுல் பக்குவமடையக்கூடிய ஜாலகர்தபம் என்னும் வியாதி கிளம்பும்" என்று ஜதூகர்ணன். இவ்வியாதிக்கு அக்னிவாதம் என்றும் பெயர் உண்டு.

4. பெரும்பாலும் கக்ஷத்திலேயே புறப்படுவதால் இப்பெயர்.

**அக்னிரோஹிணி:**—கக்ஷப் பிரதேசங்களில்[1] மாம்ஸபேசியை உடைக்கக் கூடியதாய், சரீரத்திற்குள்ளே தாபத்தையும் வெளியில் கடும் ஜ்வரத்தையும் உண்டுபண்ணிக்கொண்டு உண்டாகும் பிளவையை "அக்னிரோஹிணி" என்றறிக; இது எரியும் அக்னிக்கு ஒப்பிடக்கூடியது; ஸந்நிபாதத்தினால் உண்டாவது; அஸாத்யமான இவ்வியாதி[2] மனிதனை எழு நாட்களிலாவது, ஒரு பக்ஷத்திற்குள்ளாவது உயிர்துறக்கச் செய்யும். 16, 17.

**சிப்பம்:**—வாயுவும் பித்தமும் நகத்தின் மாம்ஸத்தைப்பற்றியதாய் அழற்சியையும் வேக்காட்டையுமுண்டுபண்ணும்; இதை 'சிப்பம்'' என்று கூறுவர்[3]. 18.

**குநகம்:**—சிப்பமே சொற்ப தோஷங்களாலுண்டானால் அதை "குநகம்" என்பார்கள். 18½.

**அநுசயி:**—மேற்புறத்தில் சர்மத்தோடொத்த நிறமுள்ளதாகவும், பாதத்தினுள் வெகு ஆழத்திலுண்டாய் சொற்ப வீக்கத்தையும் வேதனையையும் கொடுத்துக்கொண்டு உட்புறத்தைத் தின்றுகொண்டே கிளம்புவதுமான வியாதியை "அநுசயி" என்பர். 19, 20.

**விதாரிகா:**—கக்ஷம், துடையிடுக்கு ஆகியவற்றின் ஸந்திகளில் அமுக்கிராங்கிழங்கு போல் திரண்டதாய், ஸந்நிபாதத்தினால் மூன்று தோஷங்களுடையவும் குறிகளைப் பெற்று[4], இரத்த நிறமாகக் கிளம்பும் பிளைவ "விதாரிகா" எனப்படுகிறது. 21.

**சர்க்கரார்புதம்:**—சிலேஷ்மமும் வாதமும் சேர்ந்து மாம்ஸம், ஸிரைகள், ஸ்நாயுக்கள், மேதஸ் இவற்றைப் பற்றிக்கொண்டு[5] ஒருவித கிரந்தியையுண்டு பண்ணுகின்றன. இது உடைந்தால் தேன், நெய், கொழுப்பு இவற்றைப்போன்ற சீழ் முதலியதைப் பெருக்கும். இதில் வாததோஷம் விருத்தியடைந்து, மாம்ஸத்தைச் சோஷிப்பித்து, கடினமான சர்க்கரையைப்போல்[6] அதைத் திரிபடையச் செய்கிறது; அதனால் பிறகு ஸிரைகள் துர்நாற்றமும், துர்நீர்க்கசிவும், பல நிறமு

---

1. கக்ஷப் பிரதேசங்களில் என்று பன்மையாகக் கூறுவதால், துடையிடுக்கு முதலிய விடங்களிலும் தோன்றுமென்று கருத்து.

2. தகுந்த சிகித்ஸை செய்யத்தவறினால் இது அஸாத்யம் என்று கருத்து. "அக்னிரோஹிணியும், அவ்விதமான இதரகொடிய ரோகங்களும் சிகித்ஸை செய்யாவிட்டாலும், அல்லது முறைதவறின சிகித்ஸையைச் செய்தாலும் உயிரைப் போக்கிவிடும்" என்று சரகர்

3. சிப்பத்தையே சரகர் அக்ஷதம் என்கிறார். இதையே "விரற்சுற்று" அல்லது "நகச்சுற்று" என்று தமிழில் வழங்குவர்.

4 விதாரிகா வாத-கபங்களால் உண்டாவதாக சரகர்.

5. சர்க்கரார்புதத்தில் வாதமும் கபமும் தோஷங்கள்; மாம்ஸம் ஸிரை, ஸ்நாயு, மேதஸ் என்பவை தூஷ்யங்கள்.

6. சர்க்கரை—பருக்காங்கல்; அது போன்றிருப்பதால் இப் பெயர் வந்தது.

முள்ள இரத்தத்தைத் திடீரெனப் பொசிக்கின்றன; அதை "சர்க்கரார் புதம்" என்றறிக. 22—24.

பாததாரி:—அடிக்கடியும் விசேஷமாக நடந்துச் செல்லும் வழக்க முள்ளவருக்குப் பாதங்கள் அதிக ரூக்ஷத்தன்மையைப் பெற அவற்றில் வாயு பிரகோபித்து, வெடிப்புகளை யுண்டுபண்ணும்; அதற்குப் "பாததாரி" என்று பெயர்[1]. 25.

கதரம்:—பருக்காங்கல் முதலியதை மிதிப்பதாலோ, முள் முதலியது தைப்பதாலோ பாதத்தில் இலந்தகங்கொட்டையைப் போல்[2] புடைத்துக்கொண்டு கிளம்புகிற கிரந்தி "கதரம்" எனப்படும்[3]. 26.

அலஸம்:—கெட்டுப்போன சேற்றை மிதித்து அது உள்ளே படுவதால் கால் விரல்களின் இடையில் தினவு அழற்சி வலி இவை உண்டாவதால், வழுக்கை போன்ற ஒருவித புண் உண்டாகும். அதற்கு "அலஸம்" என்று பெயர்[4]. 27.

இந்திரலுப்தம்:—பித்தம் மயிர்க்கால்களைப் பற்றி, வாதத்துடன் கலந்து உரோமங்களை உதிர்த்துவிடும்; பிறகு கபம் இரத்தத்துடன் கலந்து கொண்டு உரோமகூபங்களென்கிற மயிர்க்கால்களை அடைத்துப்போட,[5] அதனால் வெறு மயிர்கள் மறுபடியும் முளைக்காமற் போக, அவ்விகாரம் "இந்திரலுப்தம்" என்றும்;[6] "காலித்யம்" என்றும், "ருஷ்யா" என்றும் வழங்கப்படும்[7]. 28, 29.

---

1. இது ஸாதாரணமாய் பலருக்கு உண்டாகும் பாத வெடிப்பு. குஷ்டத்தைச் சேர்ந்த "விபாதிகா" என்பதில் பிடகை உண்டாய், அது வெடித்து விரணமுண்டாவதால் அதற்கும் பாததாரிக்கும் விசேஷ வித்தியாஸமுண்டு.

2. மூலத்தில் "கோலவத்" என்றிருக்கிறது. அதற்கு "இலந்தக் கொட்டையைப் போன்றது" என்று பொருள். ஆனால் "கீலவத்" என்று மற்றொரு பாடம்; அதற்கு "ஆணி அல்லது முளையைப்போன்றது" என்று பொருள் கூறவேண்டும்.

3. கைகளில் கூட கதரம் உண்டாவதாகச் சிலர். "வாத-கபங்கள் கோளாறடைந்து கைகளிலும் பாதங்களிலும் வெகு ஆழமான பிரதேசங்களில் வியாபித்து, கடினமான கிலத்தைப் போன்ற மாம்ஸ வளர்ச்சியை யுண்டுபண்ணுகின்றன; அது வேதனையுண்டாக்கும் போது அவ்விடத்தில் உள்ளே சல்யமடங்கியிருப்பது போன்ற உணர்ச்சியுண்டாம்; இதை சர்க்சரா கதரம் என்றும், வாத-கண்டகம் என்றும் வழங்குவர்" என்று போஜன். இதையே ஆணிவிழுதல் என்று தமிழில் வழங்குவர்.

4. அலஸம்—சேற்றுப்புண்.

5. இவ்வியாதி ஸந்நிபாதத்தினால் உண்டாகிறதென்று இதனால் அறியலாம்.

6. "ஸ்த்ரீகள் மிகவும் கோமளமான சரீரமுடையவர்களாதலாலும், விகாரமடைந்த இரஜஸ் என்கிற மாதவிடாயை மாதந்தோறும் வெளிவிடுவதாலும், அதிகமாய் வியாயாமம் செய்யும் வழக்கமின்மையாலும் அவர்களுக்கு காலித்யம் அல்லது கலதி என்பது உண்டாவதில்லை" என்று விதேஹர்.

7. இங்கே இந்திரலுப்தம், காலித்யம் அல்லது கலதி, ருஷ்யா என்கிற மூன்றும் பொட்டைத்தலை என்பதற்கே பர்யாயச்பதங்க்

தாருணகம்:—வாதம், கபம் இவற்றின் பிரகோபத்தினால் மயிர்களின் அடித்தடமான கபாலமானது கடினமாகவும், தினவுள்ளதாகவும், ருக்ஷமாகவும்மாறி வெடித்துப் போகும் [1]. அதை "தாருணகம்" என்பார்கள். 30.

அரும்ஷிகா:—சிரஸ்ஸில் சிலேஷ்மம், இரத்தம் இவற்றின் கோளாறுலும், கிருமிகள் விருத்தியாவதாலும் அநேக முகங்களோடு விசேஷமாய் துர்நீர்களைப் பொசிக்கும் விரணங்கள் உண்டாகும்; அவற்றிற்கு "அரும்ஷிகா" என்று பெயர். 31.

பலிதம்:—கோபம், மனத்துயரம், சிரமம் இவற்றல் உடலிலுண்டான வெப்பம் சிரஸ்ஸை அடைந்து, சிரஸ்ஸில் பித்தமும் சேர்ந்து, தலை மயிர்களைப் பழுக்கச் செய்கின்றன [2]; அதனல் "பலிதம்" என்கிற நரை யுண்டாகிறது [3]. 32.

யுவாநபிடகா:—யௌவனவயதிலுள்ளவருக்கு வாதம், கபம், இரத்தம் இவற்றல் இலவம் முட்களைப் போன்று முகத்திலுண்டாகும்

---

ளாகக் குறிக்கப்பட்டாலும், இவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பிட்ட கோளாறைக் கிரஹிப்பதாகச் சிலரது கொள்கை. உதாரணமாய் கார்த்திகன் என்பவர் 'இந்திரலுப்தம் மீசையிலும், காலித்யம் அல்லது கலதி சிரஸ்ஸிலும், ருஹ்யா என்பது ஸர்வசரீரத்திலும் உண்டாகிற கோளாறு' என்று பிரித்துக் கூறுகிறர்.

1. வாத-கபங்களால் "தாருணகம்" உண்டாவதாக இங்கே குறிக்கப்பட்டாலும், பித்தமும் இரத்தமுங்கூட இதில் அநுபந்தமாயிருக்குமென்றும், செதிள் செதிளாகவும், வலியோடும் சிரஸ்ஸின் கபாலத்தில் கடுமையாயுண்டாகு மென்றும், அதில் குத்தல், தினவு, நாவறட்சி, உடல் சென்னிறமாதல் ஆகிய குறிகள் உண்டாகுமென்றும், இதில் பித்த - ரக்தங்கள் பிரபல மென்றும் விதேஹர்.

2. "பித்தே தஸ்மிந் பாசகோக்நிரிதி ஸம்ஜ்ஞா" — பித்தத்திற்கே பாசகாக்னி யென்று பெயர் எனப்படுகிறது. "தஸ்மாத் தேஜோமயம் பித்தம் பித்தோஷ்மா யஸ்ய பக்திமாந், ஸ காயாக்நி:ஸ காயோஷ்மா"—"ஆகையினல் பித்தமானது தேஜோமயம்; பித்தத்தின் வெப்பமே சரீராக்னி யெனப்படுகிறது" என்கிற பிரமாணங்களின்படி சாரீரமான உஷ்ணத்திற்கும் பித்தத்திற்கும் பேதமில்லையென்று தெரியவருகிறது. அங்ஙனமிருக்க இரண்டும் வேறு என்று இங்கு கூறுவதெப்படி? என்றல் பித்தத்தின் பொது ஸ்வரூபம் திரவ தேஜோமயம்; என்றல் திரவ ரூபமாகவும் ஒளியுருவமாகவுமுள்ளது பித்தம். அதில் திரவ ரூபமான பித்தம் இங்கே கிரஹிக்கப்படுவது; தேஜோமயமான பித்தம் ஜாடராக்னியாயிருந்து பாசந வேலை முதலியதைச் செய்கிறது என்பது ஸ்ரீகண்டதத்தனது ஸமாதானம்.

3. சோகம், சிரமம் இவற்றல் பிரகோபித்த வாதம் பித்தத்தையும், தேஹோஷ்ணத்தையும் சிரஸ் முதலியதில் பரப்புகிறது. இதனல் வாயு மறைபொருளாகவும், பித்தம் வெளிப்படையாகவும் கூறப்பட்டன; மேலும் "பித்தமும்" என்றதால் கபமும் கிரஹிக்கப்படுவதாக வே கருத்தென்று ஸ்ரீகண்டதத்தன். தேஜஸ்ஸானது வாதம் முதலான தோஷங்களோடு சேர்ந்து சிரஸ்ஸின் கபாலத்தையெரித்து பலிதம் என்கிற நரைத்தலை யுண்டுபண்ணுகிறது; சொற்பம் எரித்தால்

பருக்கள் "யுவாநபிடகா" என்றும், "முகதூஷிகை" என்றும் வழங்கப்படும்[1]. 33.

பத்மிநீ கண்டகம்:—கப-வாதங்களின் பிரகோபத்தினால் வெளுத்த கண்டரங்களையுடைய தாய் வட்டமாகப் படருவதும், தாமரைத்தண்டின் முட்களைப்போன்ற சிறு சிறு முனைகளால் சூழப்பட்டதுமான சர்மரோகம் "பத்மிநீ கண்டகம்" எனப்படுகிறது[2]. 34.

ஜதுமணி:—சர்மத்திற்குச் சமானமாகவே சிறிது மேலெழுந்தாற்போல வட்ட வடிவமா யுண்டாகும் ஒருவித பரு "ஜதுமணி" யெனப்படுகிறது; இதில் நோவுண்டாகாது; இது கபம், இரத்தம் இவற்றின் விகாரத்தினால் உண்டாவது. சிலருக்கு இது பிறந்தது முதலே இயற்கையிலான ஒரு "லக்ஷ்ம" அல்லது மறுவாகவும் கருதப்படும்.[3] 35,

மஷகம் :—வாத கோபத்தினால் சரீரத்தின்மீது வேதனையற்றதாகவும், சர்மத்திற்கு மேலெழுந்ததாய் உளுந்தைப் போன்றதாகவுமுண்டாகும் கறுப்பான மறு "மஷகம்" எனப்படும். 36.

திலகாலகம்:—வாத-பித்த-கபங்கள் சோஷிக்கப்படுவதால்[4] 'திலகாலகங்கள்' எனப்படும் சர்மரோகம் உண்டாகிறது. இது நிறத்தில் கறுப்பாகவும், அளவில் எள்ளுப் பிரமாணமாகவும், வலியுண்டு பண்ணுததாகவும், சர்மத்தோடு படிந்தாற்போன்றும் இருக்கும். 37.

நியச்சம்:—அளவிற் பெரிதாகவோ அல்லது சிறியதாகவோ, நிறத்தில் வெண்கறுப்பாகவோ அல்லது கறுப்பாகவோ, வலியுண்டு பண்ணுததாய்[5] சரீரத்திலுண்டாகும் படை "நியச்சம்" என்று கூறப்படும். 38.

---

மயிர்களுக்குப்பொன் அல்லது வெண்ணிறத்தைக்கொடுக்கிறது; அது பலிதம் எனப்படுகிற." என்று சரகர். [அகாலத்திலுண்டாகும் நரைத்தலே இங்கே கிரஹிக்கப்படுகிறது; முதிர்ந்த வயதிலுண்டாகும் இயற்கை நரையானது மூன்று தோஷங்களோடு கூடியதாலான வயது சென்றதா லேற்பட்ட உஷ்ணத்தினால் உண்டாகிறது.]

1. வாலிபருக்கு உண்டாகும் முகப்பரு.

2. பத்மிநீ கண்டகம்—தாமரைமுள் போன்ற பரு.

3. இதை மச்சை என்பர்.

4. "வாத-பித்தங்களால் சிலேஷ்மம் சோஷிக்கப் படுவதால்" என்றும் பொருள் கூறுவர். "எவருக்குப் பிரகோபமடைந்த பித்தம் இரத்தத்தைப் பற்றியதாய் சோஷிக்கப்படுகிறதோ, அவருக்கு திலகங்களும், வியங்கங்களும், நீலிகைகளும் உண்டாகின்றன" என்று சரகர் கூறுவதை அனுஸரித்து, இது வாத-பித்த-இரத்தங்களின் தோஷத்தினால் உண்டாவதாகவும் கூறுவர். "வாயுவானது பித்தத்தைக் கிரஹித்துக்கொண்டு கபம் இரத்தம் இவற்றையும் பற்றியதாய் சர்மத்தின்மீது எள்ளுப்பிரமாணமான பருக்களை யுண்டு பண்ணும்; அவை திலகாலகங்கள்" என்றும் சிலர் கூறுகிறார்கள்.

5. "வலியுண்டுபண்ணுததாய்" என்பதற்குப் பதிலாகப் "பிறப்பிலுண்டானதாய்" என்றும் பாடபேதம் உண்டு. அவர்கள் நியச்சத்திற்குப் பர்யாய நாமமாக லாஞ்சனம் என்பதையும் வழங்குவர்.

வியங்கம்:—கடுஞ்சினம், ஆயாஸம் இவற்றால் பிரகோபித்த வாயுவானது பித்தத்துடன் கூடியதாய் விரைவாக முகத்தைப்பற்றிக் கொண்டு சில மாசுகளை யுண்டுபண்ணும்; இதில் வலியிராது; அளவிற் சிறியதாயிருக்கும்; நிறத்தில் வெண்கறுப்பானது; இதை "வியங்கம்" என்பார்கள். 39, 39½.

நீலிகா:—இதே தன்மையுள்ள படை சரீரத்திலாவது முகத்திலாவது கருநிறமாகத் தோன்றினால் அது "நீலிகா" எனப்படும்[1]. 40.

பரிவர்த்திகா:—(1) பலமாகத் தேய்ப்பதாலோ, நசுக்குவதாலோ அல்லது அடி முதலியது தாக்குவதாலோ ஆண்குறியின் சர்மத்தினுள் வாயுவானது நாற்புறமும் வியாபிக்குமானால்[2], அப்பொழுது வாதத்தின் ஆக்கிரமிப்பாலே அந்த சர்மம் பின்புறமாகச் சுற்றிலும் மடிந்துவிடும். பீஜகோசமும் கிரந்தியைப் போன்றதாக நீண்டு தொங்கும்; வாத தோஷத்தினால் உண்டானதும், நோவுண்டு பண்ணுவதுமான இவ்வியாதி "பரிவர்த்திகா" எனப்படுகிறது. (2) இதுவே கபதோஷக் கோளாறால் உண்டானால் அரிப்புள்ளதாகவும், கடினமாகவும் இருக்கும். 41—43.

அவபாடிகா:—ஒருவன் அவா மேலிட்டவனாய்க் குறுகிய யோனி முகத்தைப்பெற்ற ஸ்த்ரீயினிடம் வலியப் புணருவதாலும், கையினால் துஷ்பிரயோகம் பலமாக செய்வதாலும் லிங்கத்தின் சர்மம் வலியப் புரண்டு விடும்போது அதில் பிளவுண்டாவதுண்டு; அவ்வித வெடிப்பை "அவபாடிகா" என்றறிக.[3] 44, 44½.

நிருத்தப்பிரகசம்:—லிங்கத்தில் வாதம் சேர்ந்து, அதன் முகத்தினுள்ள சர்மத்தை மணி யென்கிற பாகத்துடன் நெருங்கச் சேர்த்து

---

அதாவது ஓர் இயற்கைத் குறியெனப் பொருள். இதையே மச்சை என்று சிலர் கூறுவர்.

1. வியங்கத்திற்குள்ள தோஷங்கள் நீலிகாவுக்கும் உண்டென்று கருத்து. தோஷங்களுடைய சேர்க்கை, பாக விசேஷம் முதலிய காரணத்தினால் வியங்கத்தின் நிறமே நீலிகாவில் கறுப்பாக மாறுவதாய் அறிக.

2. நாற்புறமும் வியாபிப்பதாகக் கூறுவதால் இதிற் காரணமாயுள்ள வாயு வியானவாயு என்று கருத்து. "மணியின் முனையிலுள்ள சர்மத்தை வியானவாயு மணிக்கு அடிப்புறமாகச் சுற்றிலும் மடித்துப் போடும்; குத்தல், வலி, அழற்சி முதலியவையுண்டாகும்; இதற்குப் பரிவர்த்திகா எனப் பெயர். இதுவே கபஸம்பந்த முள்ளதானால் அந்த பாகம் கடினமாகவும், ஸ்நிக்த்தமாகவும், தினவுள்ளதாகவும், சொற்ப வேதனையுண்டுபண்ணுவதாகவும் இருக்கும் என்று போஜன். இதனால் பித்ததோஷமும் பரிவர்த்திகையில் அநுபந்தமாயிருக்கு மென்று தெரிகிறது.

3. இவ்வியாதியைப்பற்றி போஜன் கூறுகிறார்:—"மர்தனம் செய்வதாலோ, அபிகாதத்தினாலோ, கன்னிகையோடு புணருவதாலோ லிங்கத்தின் சர்மம் தர்ப்பைகளால் குத்தப்பட்டதுபோலப் பிளவுற்றால் அதை அவபாடிகா என்பார்கள். வாதத்தினாலும், பித்தத்தினாலும், கபத்தினாலும் தனித்தனியே அது மூன்று வகைப்படும்."

விடுகிறது; அவ்விதம் மேல் சர்மத்தினுல் மணி மூடப்படுவதால் மூத்திரத்வாரம் அடைபட்டு, மூத்திரம் மெல்லிய தாரையாய், வேதனை யின்றியே வெளியாகும்;[1] மணியானது சர்மத்தினுல் நெருங்க மூடப் படுவதால் பிரித்து வெளிப்படுத்தக்கூடாததாயிருக்கும்; வாத தோஷத்தினுலான[2] இவ்வியாதி "நிருத்தப்பிரகசம்" எனப்படு கிறது.[3] 45—47.

ஸங்நிருத்தகுதம் :—மலாதிகளின் வேகங்களை அடக்குவதால் குதத்தைப்பற்றிய வாயுவானது பிரகோபித்து, மஹாஸ்ரோதஸ் என் கிற பெருங்குடலின் கீழ் மூனைத்வாரத்தைச் சுருக்கி, குதத்வாரத்தை மெல்லியதாகவும் செய்கிறது; மலமார்க்கம் குறுகுவதால் மலம் வெளிவருவது மிக சிரமமாகும்; மிகக் கடுமையான இவ் வியா திக்கு "ஸங்நிருத்தகுதம்" என்று[4] பெயர். 48—49.

அஹிபூதநம் :—சிசுவின் குதப்பிரதேசத்தில் மல-மூத்திரங்கள் அலம்பப்படாது சேர்ந்துபோனுலும், அவ்விடம் வியர்த்துக்கொண் டிருந்தாலும், ஸ்நாநாதிகளால் சுத்தம் செய்யாவிடினும், இரத்த கபங் களின் கோளாறுல் அங்கு அரிப்புண்டாகிறது ; அவ்விடத்தைத் தின வுக்காகச் சொறிவதால் உடனே கொப்புளங்களும் துர்நீர்க்கசிவும் காணும்; அநேகம் சிறிய விரணங்கள் இவ்விதமுண்டாய் அப்பால் அனைத்தும் ஒன்ருகச் சேர்ந்து கடுந்துன்பம் விளைவிப்பதான பெரிய விரணமாகப் பரவும்; இது "அஹிபூதநம்" என்று[5] வழங்கப்படும். 50,51.

வ்ருஷண கச்சூ:—ஸ்நாநமாவது வேறு சோதநமாவது இல்லாத வனுக்கு பீஜத்தில் மலம் சேர்ந்து வியர்வையினுல் கசிவு உண்டானுல்,

---

1. இது வேதனையுண்டுபண்ணு மென்று ஓரிடத்திலும், வேதனை யுண்டாக்காதென்று வேறிடததிலும் கூறப்படுகிறது; மூத்திர மார்க் கம் அடைபடுகையில் வேதனையும், அடைபடாமல் மூத்திரம் மெது வாக வெளிவருகையில் வேதனையின்மையும் இருக்கும் என்று அதன் கருத்து.

2. அவபாடிகா என்கிற விரணம் ஆருமலிருக்கையிலேயே சர்மம் மூடப்படுவதால் நிருத்தப்பிரகசம் உண்டாவதாகவும் கூறுவ துண்டு. இது வாதாதி தோஷங்களால் சுதந்திரமாகவும் உண்டாகும்.

3. நிருத்தப் பிரகாசம் என்பது இதற்குச் சரியான பெயர். போஜன் கூறுகிருர்:—"லிங்கத்தின் உட்புறத்துச் சர்மத்தில் வாயு பிரகோபித்து த்வாரத்தை நன்ருக மூடிவிடும்; அடிக்கடி அது மெது வாகப் பிரகாசமாகவும் ஆகும்; துவாரம் திறக்கும்போது மெதுவாக மூத்திரம் வெளியாகும்; லிங்கத்திலிருந்து வாதம் சிறிது விலகிவிடு வதால் மணி முதலியது பிளவுறுவதில்லை; இவ்விதம் நிருத்தமாகவும் (மூடப்படுவதாகவும்), பிரகாசமாகவும் (திறப்பதாகவும்) மூத்திரத்வா ரம் அடிக்கடி மாறுவதால் இது நிருத்தப் பிரகாசம் எனப்படுகிறது."

4. ஸங்நிருத்தகுதம்—குதத்வாரம் விசேஷமாக அடைபடுதல்.

5. பவலித வியாதி முதலியவைகளால் துஷ்டமான மூலைப்பாலை யுண்பதால் பாலருக்கு "அஹிபூதநம்" உண்டாவதாக போஜன் முதலியவர்.

அப்பொழுது சொறிவதால் சீக்கிரத்தில் அங்கு கொப்புளமும் துர்நீர்க்கசிவும் உண்டாகும்; இது கபம் இரத்தம் இவற்றின் கோளாறால் ஏற்படுகிறது. இதை "வ்ருஷண கச்சு" என்பார்கள்[1]. 52,53.

குதப்ரம்சம்:—ரூக்ஷமாகவும் துர்பலமாகவுமுள்ள மனிதனுக்கு அதிகமாக அடிக்கடியும் முக்குவதாலும், அதிஸாரத்தினுலும் குதம் வெளியில் வந்துவிடுவதுண்டு, "குதப்ரம்சம்" என்று அதற்குப் பெயர். 54.

வராஹதம்ஷ்ட்ரா:—வராஹதம்ஷ்ட்ரா என்கிற படைபோன்ற வியாதி அழற்சியுடன் உண்டாகிறது; இதில் சுற்றிலும் ஓரம் சென்னிறமாகின்றது; சர்மத்தில் வேக்காடு உண்டாகும்; கடுமையான வேதனையும் ஜ்வரமும் உண்டாகும். அது "வராஹதம்ஷ்ட்ரா" என்று கூறப்படும். 55.

---

## 56. முகரோக நிதானம்.*

முகரோகங்களுக்குப் பொதுக்காரணம்:—ஆநூபமாம்ஸம், ஆநூபமிருகங்களின் பால், அவ்விதமான தயிர், மத்ஸியங்கள் இவற்றை அமிதமாய்ப் புஜிப்பதால் பிரகோபித்த தோஷங்கள் முகத்தினுள்பல வியாதிகளை யுண்டுபண்ணும்; இத்தோஷங்களுள் சிலேஷ்மம் பிரதானமாயிருக்கும். 1.

உதடுகளைப்பற்றிய ரோகங்கள். (1) வாதஜ - ஓஷ்டரோகம்[2]:—உதடுகள் வாத தோஷப்பிரகோபத்தினுல் கடினமாகவும், ரூக்ஷமாகவும், அசைக்கக் கூடாதனவாகவும், வாதஸம்பந்தமான மற்ற வேதனைகளையுடைய வையாகவும், சிறிது அல்லது அதிக வெடிப்புகளைப் பெற்றும் இருக்கும். (2) பித்தஜ-ஓஷ்டரோகம்:—பித்தப் பிரகோபத்தினுல் உதடுகள் கட்டிகளால் நிரம்பும்; வலியோடும் அழற்சியுடனும் சமைக்கப்பட்டவை போலவும், நிறத்தில் பசுமையாகவும் அவை தோன்றும். (3) கபஜ - ஓஷ்டரோகம்:—உதடுகளில் அவற்றிற்குச் சம நிறமுள்ள கட்டிகள் பரவியிருக்கும்; ஆனுல் வேதனை அதிகமிராது; உதடுகள் பிசுபிசுப்பாகவும், பரிசிக்கக்குளிர்ந்தவையாகவும்,

---

1. பெரும்பாலும் இந்த கச்சு வ்ருஷணத்தை மாத்திரம் ஆச்ரயித்து உண்டாவதால் குஷ்டரோகத்திற் கூறிய கச்சுவைவிட வேறுபட்டதாகும்.

* முகம்—வாய்; என்றுல் உதடுகள், பற்கள், பல்லீறுகள், நா, உள் தவடைகள், தொண்டை முதலியவை, இவ்வவயவங்களைப்பற்றியுண்டாகும் வியாதிகள் எல்லாம் பொதுவாக முகரோகங்கள் எனப்படுகின்றன. [உதடுகளில் 8; பற்களில் 8; பல்லீறுகளில் 15; தவடையில் 9; நாக்கில் 5: தொண்டையில் 17; எல்லாப்பாகங்களையும் பற்றியது 3-ஆக முகரோகங்கள் 65.]

2. ஓஷ்ட ரோகங்கள்—உதடுகளைப்பற்றிய வியாதிகள்.

குருவாகவும் தோன்றும். (4) ஸந்நிபாதஜ - ஓஷ்டரோகம்:—மூன்று தோஷங்களாலும் உதடுகள் விகாரமடைகையில் ஒரு ஸமயம் அவை கறுப்பாகவும், மற்றொரு ஸமயம் பசுமையாகவும், வேறு ஸமயம் வெண்மையாகவும் மாறும்; அவை அநேக கட்டிகள் [1] நிரம்பியவை யாகவுமிருக்கும். (5) இரக்தஜ - ஓஷ்டரோகம்:—நிறத்திற் பேரீச்சங் கனிபோன்ற கட்டிகளால் உதடுகள் பீடிக்கப்படும். அவை முற்றிலும் இரத்த நிறமுள்ளவையானல் இரத்ததோஷத்தினுல் கோளாறடைந்த வையாகும். (6). மாம்ஸஜ - ஓஷ்டரோகம்: —மாம்ஸதோஷத்தினுல் உதடுகள் குருவாகவும், ஸ்த்தூலங்களாகவும், மாம்ஸபிண்டம் போல் பிதுங்கிக்கொண்டு மிருக்கும் ; கிருமிகளும் உண்டாய், வாயின் இரண்டு பாரிசங்களிலிருந்தும் நெளிந்து வெளியாவது முண்டு. (7). மேதோஜ - ஓஷ்டரோகம்:—மேதஸ் என்கிற கொழுப்பின் தோஷத்தி னுல் உதடுகள் நெய்யின் மீதுள்ள ஆடை போன்று விகாரமடைந்து, தினவையும் குருத்வத்தையும் பெற்று, ஸ்படிகம்போன்று தெளி வான துர்நீரை மிகுதியாகப் பெருக்கும்; அந்த விரணம் ஆறுவது மில்லை; மெதுவடைவதுமில்லை. (8). அபிகாதஜ - ஓஷ்டரோகம்:—அடி முதலியது தாக்குவதால் உதடுகள் இரத்தம் குழம்பி, இரத்தநிறமாக மாறி ஸாதாரண வெடிப்பை அல்லது பெரும் பிளப்பைப் பெறும்; அவற்றில் அரிப்புண்டாய் கிரந்தியைப் போன்ற மாறுதலுமுண்டா கும். இதை கிரதிதோஷ்டம் என்றும் கூறுவர். 2—9½.

தந்தமூலங்களைப்பற்றிய ரோகங்கள் [2]:—(1) பல்லீறுகளிலிருந்து ஆகஸ் மிகமாய் [3] இரத்தம் கசியும்; தந்தங்களைச் சேர்ந்த மாம்ஸங் கள் துர்நாற்றத்தையும், கருநிறத்தையும், துர்நீர்க்கசிவையும், பஞ்சு போல் மிருதுத் தன்மையையும் பெற்றுச் சிதைவடையும்; கெட்டுப் போன இடத்திலிருந்து மற்றப் பாகங்களிலும் தோஷம் பரவி, தந்த மாம்ஸங்கள் ஒன்றோடொன்றாக அழுன்று மிகச் சீரழியும் [4]; கப தோஷத்தினுலும் இரத்த தோஷத்தினுலும் உண்டாகிற இவ்வியாதி சீதாதம் எனப்படும். (2) இரண்டு அல்லது மூன்று பற்களின் மாம்ஸபாகங்களில் கபதோஷ - இரத்த தோஷங்களால் பெரிதாக வீக்கமுண்டாகும் ; அது தந்தபுப்புடகம் எனப்படும். (3) பற் களின் ஈறுகளிலிருந்து சீழும் இரத்தமும் கசியும்; பற்கள் ஆட் டங்கொள்ளும் ; இது இரத்ததோஷத்தினுல் காணுகிற தந்த

1. ''அநேக கட்டிகள்'' என்பதற்கு ''அநேக நிறமுள்ள கட்டி கள்'' என்றும் பொருள் கூறுவர்.

2. தந்தமூலம்—பற்களின் ஈறு முதலிய மாம்ஸ ஸம்பந்தமான அடிப்பாகம்.

3. அபிகாதமென்கிற அடிதாக்குதல் முதலிய காரணமில்லா மூலே என்று கருத்து.

4. துஷ்டமான இரத்தம் தந்தமூலமாம்ஸங்களில் ஒரு புறத்தி லிருந்து மற்றொரு புறம் பரவுவதால் பரஸ்பரம் அழுன்று சிதலுவ தாகக் கருதவேண்டும்.

வேஷ்டம் என்கிற வியாதியாம். (4) கபம்-இரத்தம் இவற்றின் கோளாறால் பல்லீறுகளின் அடிப்பாகக்களில் வலியுடன் கூடி, உமிழ்நீரை அதிகமாகப் பெருக்கிக் கொண்டு கட்டியொன்றுண்டாகும்; அதற்கு ஸௌஷிரம் என்று பெயர். (5) பல்லீறுகளிலிருந்து தந்தங்கள் ஆடிப்போம்; தவடையிலும் பிளக்கப்படுவது போன்ற நோவுண்டாகும்;[1] இது ஸந்நிபாதத்தினாலுண்டாகும் மஹாஸௌஷிரம் என்கிற வியாதியாம். (6) தந்தங்களுக்கு ஆதாரமான மாம்ஸங்கள் சிதறி, அவ்விடமிருந்து இரத்தம் வெளியாம் ; பித்தம்-இரத்தம்-கபம் இவற்றாலுண்டாகிற இந்த வியாதி பரிதரம் எனப்படும்[2]. (7) பற்களுக்கு ஆதாரமான மாம்ஸங்களில் அழற்சியும் வேக்காடும் உண்டாய் பற்கள் ஆடிப்போம் ; பித்தம் இரத்தம் இவற்றின் கோளாறால் உண்டாகிற இவ்வியாதிக்கு உபகுசம் என்று பெயர். (8) தந்தமாம்ஸம் பெரிதும் தேய்ந்து சிதைந்து போனால் வேதனை கடுமையாய் பற்களும் ஆட்டங்கொள்ளும்; வைதர்ப்பம் எனப்படும் இது அபிகாதத்தினால் உண்டாகிறது. (9) வாதப் பிரகோபத்தினால் இயற்கையினும் அதிகமாய் வளரும் பல் கடும் வேதனையுண்டு பண்ணிக்கொண்டே முளைக்கும் ; பல் வெளிவந்ததும் வலியும் தணிந்துவிடும். இதற்கு கலிவர்த்தநம் என்று பெயர். (10) பற்களைப் பற்றிய வாயு மெதுவாக தந்தங்களை மிகப் பெரியவையாகவும், கரடு முரடாகவும் செய்விக்கின்றது; கராளம் என்கிற இது அஸாத்ய மானது. (11) கடைவாயின் கோடிப் பல்லுக்கு அடியில் மிக்க வலியுடன் பெரியதோர் வீக்கம் உண்டாகும்; அதிலிருந்து உமிழ்நீர் மிகப் பெருகும்: கப தோஷக் கோளாறால் உண்டாகிற அது அதிமாம்ஸகம் எனப்படும். (12) பற்களின் மூலபாகங்களைப் பற்றி ஐந்துவித நாடிவிரணங்கள்[3] உண்டாம்; அவை முன்பு நாடிவிரண நிதாநத்திற்குக் கூறிய ஐந்துவித விரணங்களின் இலக்ஷணங்களை யுடையவையாயிருக்கும்[4]. 10—21½.

**தந்தங்களைப்பற்றிய ரோகங்கள் :** — பிளக்கப்படுவது போன்ற வலி பற்களில் உண்டானால் அது வாத தோஷத்தினாலான தாளநம் என்கிற வியாதியாகக் கூறப்படுகிறது. (?) வாதகோபத்தினால் பல்லில் கறுத்த த்வாரமுண்டாம்[5]; ஆடிக்கொண்டு நீர்க்கசியும்;

---

1. "தவடைகளும்" என்றதால் உதடுகள்கூட பிளக்கப்படுபவை போலிருக்குமென்று கருத்து. இது ஏழு தினங்களில் மனிதனை மரிக்கச் செய்யுமென்று போஜன் கூறுகிறார்.

2. பரிதரம்—கிழிபடுவது; தந்த மாம்ஸம் கிழிபடுவதால் இப் பெயரிடப்பட்டது.

3. நாடிவிரணம்—குழிப்புண்கள்.

4. 45-வதான நாடிவிரண நிதாநத்திற் கூறிய வாதநாடி, பித்த நாடி, கபநாடி, ஸந்நிபாதநாடி, ஆகந்துகநாடி என்னும் 5-வித நாடி விரணங்கள் தந்தத்திலு முண்டாமெனப்படுகிறது.

5. துஷ்ட ரத்தத்தினால் அதிலிருந்தே உண்டாகிற கிருமிகளால்

வேதனையோடு வீக்கமுண்டாம்; சில ஸமயம் திடீரென்று நோவுண் டாகும்; இது கிருமிதந்தகம் எனப்படும். (3) பற்கள் அனேகம் விழுந்து போய், முகம் வக்கிரமாகும் வியாதி பஞ்ஜநகம் எனப்படுகிறது; அது கப-வாதங்களால் உண்டாவது. [1] (4) பித்தம், வாயு இவற்றின் பிரகோபத்தினால் பற்களானவை சைத்தியம், ரூக்ஷம், பெருங்காற்று, புளிப்பு இவற்றின் பரிசத்தைத் தாங்கவியலாதவையாய் [2] விடும்; இதற்கு தந்த ஹர்ஷம் என்று பெயர். (5) பற்களிற் சேர்ந்த அழுக் கானது வாதத்தினாலும் பித்தத்தினாலும் சோஷிக்கப்பட்டுச் சுண்ணக் கல்லைப்போல் பரிசிப்பதற்குக் கடினமாகப் போகும்; அது தந்த சர்க்கரை [3] எனப்படும். (6) தந்தங்களிலுண்டான அச்சர்க்கரையே ஓடுகளைப்போல் உடைந்து வேறுபடுங்கால் அதுவே கபாலிகா என்று வழங்கப்படும்; அது எப்பொழுதுமே பற்களைச் சிதைவுறச் செய்யு மியல்புடையது. [4] (7) பித்தமும் இரத்தமும் சேர்ந்து கோளா றடைந்து பல்லை முற்றிலும் எரித்துப்போடும்; அதனால் பல் கபில நிறைத்தையோ கருநிறத்தையோ பெறும்; அந்த வியாதி ச்யாவ தந்தம் எனப்படுகிறது. (8)மூன்று தோஷங்களும் இரத்தமும சேர்ந்து தந்தமாம்ஸத்தில் வெளியிலும் உட்புறத்திலும் பெரிய கட்டியை யுண்டுபண்ணி, அழற்சியும் வலியும் தரும்; உடைந்தால் சீழும் இரத்த மும் அதிலிருந்து வெளியாம்; இது தந்தவித்ரதி எனப்படும். 22—29.

ஜிஹ்வாரோகங்கள் [5] :—(1) வாததோஷக் கோளாறால் நாக்கு வெடிக்கும்; திமிர்த்திருக்கும்; தேக்கமர இலையைப்போன்று வெகு சுரசுரப்பாகவும் ஆகும். (2) பித்தக் கோளாறால் நாக்கு அழன்று போகும்; நீண்டும் சென்னிறமுமாயுள்ள முள்போன்ற மூளைகள்

---

பல் அரிக்கப்பட்டுப் போக, பல்லின் உட்புறத்தில் த்வாரம்உண்டாவ தும், அது கருநிறமாவதும் இயல்பு.

1. பற்களை விழச்செய்யும் தோஷமே வாயையும் கோண லாக்குகிறது.

2. "சீதமுஷ்ணஞ் ச தசநா: ஸஹந்தே ஸ்பர்சநம் ந ச. யஸ்ய தம் தந்தஹர்ஷந் து வ்யாதிம் வித்யாத் ஸமீரணாத்"—"எவனுடைய பற்கள் சைத்தியத்தையும், உஷ்ணத்தையும், கை முதலியவற்றால் பரிசிப்பதையுங்கூட ஸஹிப்பதில்லையோ அவனுக்கு வாத தோஷத் தினால் தந்தஹர்ஷம் என்கிற வியாதி யுண்டானதாய் அறிக" என்று வேறொரு பாடமுண்டு. இந்த பாடப்படி இவ்வியாதி வாதத்தினால் உண்டாயிருந்தும், உஷ்ணத்தைத் தாங்கக் கூடாமலிருத்தல் வியாதி யின் பிரபாவத்தினாலென்க. தந்தஹர்ஷம் பற்சிலிர்க்கை.

3. தந்த சர்க்கரா—பல்லில் காரைக் கட்டுதல்.

4. ஒரே வியாதி நிலைமைகளின் பேதத்தால் "சர்க்கரா" என் றும், "கபாலிகா" என்றும் பிரித்துக் கூறப்படுகிறது. முதிராமல் பல்லும் காரையும் ஒரு மிக்கக் கூடியுள்ள நிலைமையில் "தந்த சர்க் கரா" என்றும், நன்கு முதிர்ந்து பற்களிலிருந்து உடைந்து வெளி யாகும் நிலைமை "கபாலிகா" என்றும் வழங்கப்படுகின்றன.

5. ஜிஹ்வா ரோகங்கள்—நாக்கைப்பற்றிய வியாதிகள்.

அடர்ந்து மிருக்கும். (3) கபதோஷக் கோளாறால் நாக்கு குருவாகவும், இல்வமுட்களைப் போன்ற அடர்த்தியான மாம்ஸாங்குரங்களால் வியாபிக்கப்பட்டு மிருக்கும்[1]. (4) நாக்கின் மேல் கபம் இரத்தம் இவற்றின் கோளாறால் கடுந்துன்பம் விளைவிப்பதான வீக்கம் அல்லது கட்டி யொன்றுண்டாகும்; அது அலாஸம் எனப்படும். அது வளர்ந்து வருகையில் நாக்கை ஸ்தம்பிக்கச் செய்யும்; நாக்கின் மூலப் பிரதேசத்தில் அதிக வேக்காடு முண்டாம்[2]. (5) நாக்கின் அடிப் புறத்தில், கபம்-இரத்தம் இவற்றின் கோளாறால் நாக்கை மேற்புற மாகத் தூக்கியதாய் நாக்கின் முனையைப் போன்றதோர் வீக்கம் காணும்; அது அதிக உமிழ்நீரையும் அரிப்பையும் உண்டுபண்ணும்; அழற்சியுமுண்டாகும்; அதை உபஜிஹ்வா என்பார்கள். 30—32.

தாலு ரோகங்கள்[3] :—(1) தவடை பின் அடிப்புறத்தில் கபப்பிர கோபத்தினாலும், இரத்ததோஷத்தினாலும் நீண்ட வீக்கமொன்று உருவத்தில் விம்மிக்கொண்ட வஸ்திபோல் காணும். நாவறட்சி, இருமல், கஷ்டச்வாஸம் இவற்றையுமுண்டுபண்ணும் இவ்வியாதியை கண்ட சுண்டீ[4] என்பார்கள். (2) தவடையில் அழற்சியையும் குத்தலையும் வேக்காட்டையும் தருவதும், கபதோஷ-இரத்தக் கோளாறுகளால் உண்டாவதுமான[5] பெரியதோர் வீக்கம் துண்டிகேரீ எனப்படும்[6]. (3) மிருதுவாகவும், சென்னிறமாகவும், கடும் வலியுண்டுபண்ணுவதாக வும், ஜ்வரத்துடன் கூடியதுமான இரத்ததோஷத்தாலாகிய தவடை வீக்கத்திற்கு அத்ருஷம் என்று பெயர். (4) ஆமையைப்போல் பருத்து உயர்ந்ததாகவும், வேதனை தராததாகவுமுள்ள வீக்கம் கச்சபம் எனப்படுகிறது; இது கபதோஷக்கோளாறால் உண்டாகிறது. (5) தவடையின் மத்தியில் தோஷத்தினால் தாமரையின் தாதுபோன்றதாய் உண்டாகும் வீக்கம் தால்வர்புதம் ஆகும்; இதில் முன்பு இரக்

---

1. இது நாக்குப்புண் அல்லது நாக்கில் காளான் எனப்படும்.

2. கோளாறடைந்த கபத்தினாலும் இரத்தத்தினாலும் இஃதுண்டாவதால், இரத்தம் கபதோஷம் இரண்டும் இதில் முக்கியம்; நாக்கு ஸ்தம்பிக்கும் என்பதால் அக்கோளாறை யுண்டுபண்ணுவதற்கு வாயுவும், அதிக வேக்காடு உண்டாகுமென்பதால் பித்தமும் ஸம்பந்தப்பட்டதாய் குறிக்கப்பட்டது. ஆகவே அலாஸ வியாதி ஸந்நிபாதத்தினால் உண்டாவதாகவும், இது பெரும்பாலும் அஸாத்யமானதென்றும் கருத்து.

3. தாலு ரோகங்கள்—தவடையைப்பற்றிய வியாதிகள்.

4. இதையே "களசுண்டீ" என்றும் வழங்குவர்.

5. இதில் அழற்சியும் வேக்காடும் பித்தத்தின் குறிகள்; குத்தல் வாததோஷக் குறி; கபதோஷக் கோளாறும் விளங்கக் கூறப்பட்டிருக்கிறது; ஆகவே இவ்வியாதி ஸந்நிபாத ஸம்பந்தமானது.

6. காட்டுப் பருத்திக்கு துண்டிகேரீ அல்லது வநகார்ப்பாஸம் என்றுபெயர்; அதன் காய்போன்று வீக்கமிருப்பதால் இப்பெயரிடப்பட்டது.

தார்புதத்திற்குக் கூறிய குறிகளைக் காணலாம்[1]. (6) தவடையின் நடுவில் கபதோஷக் கோளாறால் அங்குள்ள மாம்ஸம் திரண்டு ஒருவித வீக்கமுண்டாகும்; அதில் வலியிராது; அதை மாம்ஸ ஸங்காதம்[2] என்பார்கள். (7) கபதோஷம், மேதோ தோஷம்இவற்றால் தவடையில் இலந்தங் கொட்டையளவாக ஒரு சிறிய கட்டியுண்டாகும்; அது அவ்விடத்தில் நிலைத்திருக்கும்; வேதனை அதனால் உண்டாகாது; அதை புப்புடம் என்பார்கள். (8) வாதகோபத்தினால் தவடை உலர்ந்து, அதில் வெடிப்புண்டாகும்: வெகுபலமான பெருமூச்சு காணும்; இதற்குத் தாலுசோஷம் என்று பெயர். (9) பித்த கோபத்தினால் தவடையில் கடும் வேக்காடும், தாலுசோஷத்தினாலுண்டானது போல் மற்ற விகாரங்களும்[3] தோன்றும்; இதை தாலுபாகம் என்பர். 33—37.

களரோகங்கள்[4] :—தொண்டையில் வாதமும், பித்த கபங்களும் சேர்ந்து பிரகோபமடைத்து அங்குள்ள மாம்ஸத்தையும் இரத்தத்தையும் தூஷிப்பித்தும், தொண்டையை அடைக்கக் கூடியவையான முளைகளையுமுண்டுபண்ணி, உயிருக்கு அபாயமான நிலைமையையுண்டுபண்ணுகின்றன[5]. அவ்வித முண்டாகிற வியாதி ரோஹிணி. (1) நாக்கின் எல்லாப்புறங்களிலும் வேதனையை மிகுதியாயுண்டாக்குபவையும், தொண்டையை அடைப்பவையுமான மாம்ஸமுளைகள் உண்டாகும்; இது வாததோஷத்தினாலான ரோஹிணி; இதில் வாதப் பிரகோபத்தினாலுண்டாகக் கூடிய அநேக உபத்திரவங்கள்[6] காணும்.

---

1. முன்பு 38-வது களகண்டாதி நிதாநத்திற் கூறிய இரக்தார்புதக் குறிகளைப் பார்க்க. "தவடையின் மேற்புறத்திலே—அதாவது மேல்வாயின் நடுவிலே தாமரையின் தாது போன்றதாய் ஒரு வீக்கமுண்டாகும்; பக்கங்களில் நீண்ட முளைகள் தோன்றும்; நாசியையும் இது தாக்கித் தொந்தரவளிக்கும்; கபரக்தக் கோளாறுகளாலுண்டாகும் இவ்வியாதி தால்வர்புதம் எனப்படும்" என்று போஜன்.

2. மாம்ஸ ஸங்காதம்—மாம்ஸத்திரட்சி.

3. தவடை உலர்தல், மூச்சுத்திணறுதல் ஆகியவை 'மற்ற விகாரங்கள்' என்பதால் குறிக்கப்படுகின்றன.

4. களரோகங்கள்—தொண்டை வியாதிகள்.

5. அடுத்தாற்போல் கூறப்படும் ஐந்து விதமான ரோஹிணீ ரோகங்களுக்கும் பொதுவாகக் காண்கிற ஸம்பராப்தி. ரோஹிணீ ரோகங்கள் எல்லாம், பொதுவாக நோக்குங்கால் ஸந்நிபாத ஸம்பந்தமானவை. ஆனால் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தோஷத்திற்குள்ள விசேஷ பலத்தைக்கொண்டு வாதஜாதி பேதங்கள் வழங்கப்படும். ஆனால் ஸுச்ருதர் தனித்தனி தோஷத்தினாலும், இரத்தத்தினாலும், ஸந்நிபாதத்தினாலும், தனித்தனியாகவும் ஒருமிக்கச் சேர்ந்தும் இவ்வியாதி யுண்டாவதாகக் கூறுகிறார்.

6. ரோஹிணி மிகக் கடுமையான வியாதியாகையால் பிராணாபாயமானதென்று பொதுவாகக் கூறப்பட்டது. ஆயினும் அதன் விவரம் பின்வருமாறு:—"ஸந்நிபாத ரோஹிணி பிராணனை உடனே போக்கும்; கப ரோஹிணி மூன்று தினங்களிலும், பித்தரோஹிணி ஐந்து தினங்களிலும், வாதரோஹிணி ஏழு தினங்களிலும் பிராணாபாய முண்டுபண்ணும்" என்று கரநாதன்.

(2) பித்த தோஷத்தினாலான ரோஹிணியானது வெகு துரிதமாயுண்டாய், சீக்கிரமாக வேக்காட்டையும் பக்குவ நிலைமையையும் பெறும்; கடுமையான ஜ்வரமும் தொடரும். (3) கபதோஷத்தினாலான ரோஹிணி தொண்டையை அடைக்கும்; அசைவற்று நிற்கும்; அசைவற்ற முளைகளுள்ளதாகவுமிருக்கும். (4) ஸந்நிபாத ரோஹிணீ [1] வெகு ஆழமானப் பிரதேசத்திலும் தாபத்தையுண்டு பண்ணி, தடுக்கக்கூடாத கொடிய நிலைமையை யுண்டாக்கும். (5) இரத்தக் கோளாருலான ரோஹிணி கொப்புளங்களால் சூழப்பட்டிருக்கும்; பித்த ரோஹிணிக்குச் சமமான மற்றக்குறிகளையும் பெற்றிருக்கும்; இது ஸாத்யமான வியாதி. (6) தொண்டையில் கபதோஷத்தினால் இலந்தங் கொட்டையளவான கிரந்தி யெழும்பும்; முள்ளைப் போலவும் சுணையைப் போலவும் வேதனையுண்டு பண்ணும்; அது கடினமாகவும், அசைவற்றதாகவும் இருக்கும்; சஸ்திரப் பிரயோகத்தினாலே நிவ்ருத்திக்கக் கூடிய இதை கண்டசாலூகம் [2] எனக் கூறுவர். (7) கபதோஷத்தினாலும் இரத்ததோஷத்தினாலும் நாக்கின் மேற்புறத்தில் தொண்டையில் நாக்கின் முனையைப்போன்ற உருவமுள்ளதாய் வீக்கமொன்று உண்டாகும்; இவ்வியாதிக்கு அதிஜிஹ்வம் என்று பெயர்; நன்கு பக்குவமடைந்து விட்டால் இது அஸாத்யமாகும். (8) கபதோஷமே விசாலமாயும் பருத்ததாயுமுள்ள ஒருவித வீக்கத்தைத் தொண்டையில் உண்டாக்குகிறது; அது உணவு செல்லும் மார்க்கத்தையும் அடைத்துப் போடும்; அதன் கொடுமை தடுக்க வியலாதது; அஸாத்யமான இவ்வியாதியை வலயம் என்பார்கள். (9) வாத-கபங்கள் இரண்டும் பிரகோபமடைந்து ச்வாஸநோயுடன் கூடியதான ஒரு வீக்கத்தைத் தொண்டையில் உண்டாக்கும்; இதை நிபுணர்கள் பலாஸம் என்று வழங்குவர்; மர்மச்சேதம் செய்யக்கூடிய இவ் வியாதி அஸாத்யமென்று கருதப்படுகிறது. (10) திரண்டும் பருத்து சிறிது அழற்சியுண்டுபண்ணுவதுமான ஒருவித வீக்கம் தொண்டைக்குள் உண்டாகும்; அரிப்பும் அதில் காணும்; அது பக்குவமடைவதில்லை; கடினமாகவும் குருவாகவும் இருக்கும்; கபதோஷ - இரத்ததோஷங்களாலான இவ்வியாதிக்கு ஏகப்ருந்தம் என்று பெயர். (11) மேலெழுந்து உயர்ந்ததாகவும், உருட்சியாகவும், அமிதமான அழற்சியை யுண்டு பண்ணுவதாகவும், கடுமையான ஜ்வரமுண்டு பண்ணுவதாகவுமுள்ள வீக்கத்தைப் பித்தத்தினாலும் இரத்ததோஷத்தினாலும் உண்டான ப்ருந்தம் எனக் கூறுவர். இதிலே குத்தல் அதிகரித்ததானால்

1. நடுக்கம், தண்டாபதாநகம் முதலிய விரைப்பு, ஸ்தம்பித்தல் முதலியவை வாதப்பிரகோபத்தினால் காணக்கூடிய உபத்திரவங்கள்.

2. சாலூகம்—நீரிலுண்டாகும் நைதல் முதலியதின் கிழங்கு; அது போன்றதாய் கடினமாகவும் திரண்டதாகவும் தொண்டையில் உண்டாவது இவ்வியாதி.

இதை வாத தோஷத்திலுலான ப்ருந்தம் என்பார்கள்.[1] (12) தொண்டையில் மாம்ஸ வளர்ச்சியால் கனமான வர்த்திபோன்ற வீக்கம் உண்டாகும்; தொண்டையை மிக்க அடைத்து, பலவித வேதனையைக் கொடுக்கும்; ஸந்நிபாதத்திலுல் ஸம்பவிக்கும் இவ்வியாதி சதக்நியென்னும் கொடுங்கருவி போல்[2] பிராணஹரமானது; ஆகவே இதன் பெயர் சதக்நீ. (13) கபதோஷ-இரக்த்த தோஷங்களால்தொண்டையில் நெல்லிக்கொட்டையளவாய், கடினமாகவும், அதிக நோவுண்டு பண்ணுவதாகவும் கிரந்தியுண்டாகும்; உணவின் கவளம் தொண்டையில் அடைத்துக் கொண்டதுபோல் வேதனையுண்டாம்; களாயு என்று இதற்குப் பெயர்; இதைச் சஸ்திரப் பிரயோகத்திலுல் தான் பரிஹரிக்கலாம். (14)எவ்வீக்கம் தொண்டை முழுமையையும் வியாபித்து, எல்லாத் தோஷங்களாலும் காணக்கூடிய வலி முதலிய குறிகளோடு கிளம்புகிறதோ அது ஸந்நிபாதத்திலுலான களவித்ரதி யென்கிற வியாதி; இதில் முற்கூறிய ஸந்நிபாத வித்ரதிக்குள்ள மற்றக் குறிகளும்[3] தோன்றும். (15) தொண்டையில் உணவாவது நீராவது இறங்க முடியாமல் அம்மார்க்கத்தை அடைக்கக் கூடியதாய் பெரிய வீக்கம் கிளம்பும்; இது மூச்சுவிடுவதையும்[4] தடுக்கும்; கடுமையான ஜ்வரமும் தொடரும்; இரத்த தோஷத்துடன் கூடிய கபக்கோளாறுலான இவ்வியாதி களௌகம் எனப்படுகிறது. (16) எவன் மூர்ச்சையடைந்து, இடைவிடாது பெருமூச்செறிந்து கொண்டும், குரல் மாறுபட்டும், உலர்ந்து ஸ்வாதீனமிழந்த தொண்டையைப் பெற்றும், ச்வாஸமார்க்கங்களில் கபம் சூழ்ந்தும்[5] வருந்துகின்றுனே அவனுக்குண்டாயுள்ளது ஸ்வரக்நம் என்கிற வியாதியாம்; அது வாததோஷத்திலுல் உண்டானது. (17) மாம்ஸதாநம் என்னும் வியாதியில் வீக்கம் மெதுவாகப் பரவி,தொண்டையை அடைக்கும்; அது உருவத்தில் நீண்டு மிருக்கும்[6]; மாம்ஸதா

1. ஏகப்ருந்தத்தின் நிலைமையில் ஏற்படுகிற பேதமே ப்ருந்தம். இல்லையேல் 18 வியாதிகள் தொண்டையைச் சேர்ந்தவை யென்று கூறியிருக்க வேண்டும்.

2. "கூறிய இரும்பு முனைகள் அடர்ந்த மிகப் பெரிய சிலையாலாகிய கருவிக்கு சதக்நி என்று பெயர்" என்று ஸ்ரீ கண்டதத்தன். இக்காலத்தில் பிரங்கியென்று வழங்கப்படும் கருவி யென்றும் கூறுவர்.

3. 40-வது வித்ரதி நிதாநத்தில் ஸந்நிபாதவித்ரதி லக்ஷணங்களைப் பார்க்க.

4. வீக்கம் மிகப் பெரிதாகையால் உதாந வாயுவின் கதி அதனுல் தடுக்கப்படும்.

5. ச்வாஸ மார்க்கங்கள்—நாஸித்வாரம், தொண்டை, ச்வாஸநாடியென்கிற ச்வாஸக்குழாய், ச்வாஸாசயம் இவைகள்.

6. "ஸ மாம்ஸதாநேதி பிபர்த்தி ஸம்ஜ்ஞாம்"—"அது மாம்ஸதாந மென்கிற பெயருடையது" என்று வேறு பாடமுண்டு. அப்பொழுது "உருவத்தில் நீண்டது" என்கிற குறி இதற்கு இல்லை யென்று கருதவேண்டும்.

நம் எனப்படும் அது அதிக துன்பம் விளைவிக்கும்; பிராணனைப் போக்குமியல்புடைய இவ்வியாதி ஸந்நிபாதத்தினலானது. (18) தொண்டைக்குள் அழற்சி, குத்தல் இவற்றை யுண்டுபண்ணிக்கொண்டும், மிகச் சிவந்த நிறமாகவும், சீழ் பிடித்து மாம்ஸபாக மெல்லாம் சிதறிப் போனதாகவும், பித்த தோஷத்தினல் உண்டானதுமான வீக்கம் விதாரீ எனப்படுகிறது. எந்தப் பக்கத்தினல் சாய்ந்து பிணியாளி படுக்கும் வழக்கமோ பெரும்பாலும் அப்பக்கமாய் இது முகத்தினுள் தோன்றும்[1]. 38—54.

முகத்திற்குள் ஸர்வஸர வியாதிகள்[2] :—(1) வாய்க்குள் எல்லாப் புறமும் குத்தலுடன் பரவிய விரணம் வாதத்தினலும், (2) செந்நிறமாகவும், அழற்சியுடன் கூடியவையாகவும், சிறியவையாகவும், சிறிது பசுமையாகவும் பரவிய விரணம் பித்தத்தினலும், (3) சொற்ப வேதனையும் தினவும் முகசர்மத்துக்குச் சமான நிறமுள்ளதாகப் பரவியதுமான விரணம் கபத்தினலும் உண்டானவையாம். 55,55½.

முகரோகங்களில் அஸாத்யங்கள்:—(1) உதட்டைப்பற்றிய வியாதிகளில் மாம்ஸஜம், இரத்தஜம், ஸந்நிபாதஜம் ஆகியவை அஸாத்யங்கள். (2) ஈறுகளின் வியாதிகளில் ஸந்நிபாதத்தினலுண்டானதும், ஸௌஷிரமென்பதும் அஸாத்யங்கள். (3) பற்களைப் பற்றிய வியாதிகளில் ச்யாவதந்தம், தாளநம், பஞ்ஜநம் என்பவை அஸாத்யங்களாம். (4) நாக்கைப்பற்றிய வியாதியில் பலாஸமும், (5) தவடையைப் பற்றியவைகளில் அர்புதமும் அஸாத்யங்கள். (6) மேலும் ஸ்வரக்நம், வலயம், ஏகப்ருந்தம், பலாஸம், விதாரி, களௌகம், மாம்ஸதாநம், சதக்நி, ரோஹிணி ஆகிய தொண்டையைப் பற்றியவைகளும் அஸாத்யமாம். இப்பத்தொன்பது விதமான அஸாத்ய வியாதிகளிலும் அந்நிலைமையைப் பிணியாளியிடம் விளங்கக் கூறி விட்டுச் சிகித்ஸை செய்யவேண்டும். 56—59.

---

# 57. கர்ணரோக நிதாநம்.

## கர்ணத்தின் உட்புற வியாதிகள்

கர்ணசூலை:—செவியைப் பற்றிய வாயுவானது உள்ளே இயற்கைக்கு மாருக நாற்புறமும் ஓடும்போது காதுகளில் அதிக குத்தலை

---

1. "பித்ததோஷத்தினல் முகத்தினுள் விதாரி உண்டாகிறது; இது ஸ்நாயுஜாலத்தைப்பற்றியதாய், மனிதன் எந்தப் பக்கத்தினல் படுக்கிருனே பெரும்பாலும் அப்பக்கமாய் தோன்றும். அழற்சி வேக்காடு முதலியவையும் காணும்" என்று போஜன்.

2. ஸர்வஸர வியாதிகள்—முகத்தினுள் எல்லாப்பக்கங்களிலும் பரவியுண்டாகு மியல்புடைய ரோகங்கள்.

* கர்ணம் என்பதால் வெளிப்புறச் செவியும், அதன் உள்ளடங்கிய த்வாரமும், சப்தத்தைக் கிரஹித்துணர்வதான ஸூக்ஷ்மரூபமாயுள்ள கர்ணேந்த்ரியமும் குறிக்கப்படுகின்றன.

யுண்டுபண்ணும்; தோஷங்களால் ஆவரணம் செய்யப் பட்டதாய், ஆவ்ருத தோஷத்திற்கு ஏற்ற விகாரங்களையு முண்டுபண்ணும். இது "கர்ணசூலை" எனப்படுகிறது; இதைச் சிகித்ஸிப்பது வெகுகடினம்[1]. 1.

கர்ணநாதம்: — வாததோஷமானது செவியில் ஸ்ரோதஸ் என்கிற நுண்ணிய குழலைப்பற்றி நின்றால் அப்பொழுது பேரிகை, மிருதங்கம், சங்கு இவை முதலியவற்றின் முழக்கம் போன்ற வெவ்வேறு வகையான தொனிகள் காதிலுண்டாகும். இது "கர்ணநாதம்" என்று கூறப்படுகிறது. 2.

பாதிர்யம்:—வாயுவானது தனியாகவோ, கபத்துடன் கூடிய தாகவோ சப்தத்தைக் கிரஹிக்கும் த்வாரத்தை மறைத்துவிட்டால் அப்பொழுது "பாதிர்யம்" என்கிற செவிட்டுத்தனம் உண்டாகிறது. 3.

கர்ணக்ஷ்வேடம்:—வாயுவானது பித்தம் முதலிய வேறு தோஷங்களோடு கூடி புல்லாங்குழலோசை போன்ற சப்தத்தைக் காதுகளில் உண்டுபண்ணும்; அது "கர்ணக்ஷ்வேடம்"[2] எனப்படுகிறது. 4.

கர்ணஸ்ராவம்:—சிரஸ் எதனாலாவது தாக்கப்படுவதாலாவது, தண்ணீரில் மூழ்குவதாலாவது, காதில் வித்ரதி மிகுதியாகப் பழுத்துடைவதாலாவது வாததோஷம் அதிகரித்து, காதில் மிகவும் வலியெடுத்துச் சீழ்வடியும்.[3] இது "கர்ணஸ்ராவம்" என்று கூறப்படும். 5.

கர்ண கண்டு:—வாததோஷம் கபத்துடன் கூடிய செவியினுள் அரிப்புண்டாக்கும். அதற்குக் "கர்ணகண்டு" எனப் பெயர். 5½.

கர்ணகூதம்:—சிலேஷ்மம் பித்தத்தின் சூட்டினால் சோஷிப்பிக்கப்பட்டு காதில் "கர்ணகூதம்" என்கிற காதுக் குரும்பையை யுண்டு பண்ணும். 6.

கர்ணப் பிரதீநாஹம்:—முற்கூறிய கர்ணகூதமானது இளகி திரவ நிலைமையைப் பெற்று, நாசித்துவார மார்க்கத்தையடைந்தால்[4]

---

1. மூர்ச்சை முதலிய உபத்திரவங்கள் தோன்றினால் இதைச் சிகித்ஸிப்பது கடினம் என்று கூறப்படுகிறது:—"மூர்ச்சை, அழற்சி, ஜ்வரம், காஸம், இருதயவேதனை, வாந்தி ஆகிய இவை அஸாத்யமான கர்ணசூலையில் உபத்திரவங்களாகக் காணும் என்று." விதேஹர்.

2. கர்ணநாதத்திற்கும், கர்ணக்ஷ்வேடத்திற்கும் உள்ள பேதம்: கர்ணநாதம் வாததோஷத்தினால் உண்டாவது; கர்ணக்ஷ்வேடம் வாயு பித்தம் முதலிய பல தோஷங்களால் உண்டாவது. இலக்ஷணத்தில் கர்ணநாதம் மிருதங்கம், பேரிகை முதலிய பல வாத்தியாதிகளின் ஒலிகளை யொற்றிருக்கும்; கர்ணக்ஷ்வேடத்தில் வேணுத்வனிபோன்ற ஓசை தோன்றும்.

3. காதிலிருந்து அதிகமாகச் சீழ் முதலியது வடிவதால், அவ்வவயவத்தில் ரூக்ஷத்தன்மை யேற்பட்டு, வாயு அதிகரிக்குமென்று கருதப்படுகிறது.

4. நாசி, வாய் இவ்விரண்டின் த்வாரங்களின் முன்புறத்தை கர்ணநாதம் அடைவதாகவும் கூறுவர்.

அதற்குக் "கர்ணப்பிரதி நாஹம்" என்று பெயர். [1] இவ்வியாதி சிரஸ்ஸில் "அர்த்தாவபேதம்" என்கிற ஒற்றைத்தலைவலியை யுண்டு பண்ணும். 7.

கிருமி கர்ணகம்:—செவியினுள் கிருமிகள் விருத்தியடைந்தாலும்,[2] ஈக்கள் விசேஷமாகக் குஞ்சுபொறித்தாலும் அந்த நிலைமையைக் கொண்டு அவ்வியாதி "கிருமிகர்ணகம்" என்று வழங்கப்படும். 8.

கீடகர்ணம்:—குளவிகள், பூரான் முதலிய பூச்சிகள் செவிக்குழியில் புகுந்து அமைதியின்மையையும், கலக்கத்தையும், அபரிமித வேதனையையும் கொடுக்கும். அவனுக்குக் காதில் குடைத்தலும், புரபுரவென்கிற சப்தமும் காணும்; உட்புகுந்த கீடம் அல்லது பூச்சி அசையும்போது வலி கடுமையாகவும், அசைவற்றிருக்கையில் சொற்ப வலியுமிருக்கும். 9,10.

கர்ணவித்ரதி:—ஒருவகை வித்ரதி காதின் உட்புறம் எதனாலாவது குத்தப்படுவதை அல்லது அபிகாதமென்கிற தாக்குதலைக் காரணமாகக் கொண்டும், மற்றொருவகை வாதாதி தோஷங்களைக் காரணமாகக் கொண்டும் உண்டாகின்றன. அவற்றுள் (1) முந்தியது பசுமையும் சிவப்புமுள்ள இரத்தத்துடன் கூடிய திரவப்பொசிவை யுண்டு பண்ணும். (2) பிந்தியது குத்தல், அழற்சி, எரித்தல் முதலியவற்றை யுண்டுபண்ணும் [3]. 11.

கர்ணபாகம்:—பித்தக்கோளாறால் கர்ணபாகம் என்னும் வியாதி யுண்டாகிறது ; இது அழுகுதலையும் துர்நீர்க்கசிவையு முண்டுபண்ணும். இவ்வியாதி கர்ணவித்ரதி பக்குவமடைவதாலாவது, நீர் புகுந்து விடுவதாலாவது ஸம்பவிக்கும். 12.

பூதிகர்ணம்:—காதிலிருந்து சீழ்வடிந்து கொண்டிருந்தால் அதை "பூதிகர்ணம்" என்றறி [4] க. 12½.

---

1. "கர்ணப் பிரதிநாஹம் கபத்தினாலாவது, வாதத்தினாலாவது உண்டாகிறது" என்று விதேஹர்.

2. "மாம்ஸமும் இரத்தமும் பதனழிந்து அதனால் கிருமிகள் உண்டாகின்றன" என்று ஸ்ரீகண்டதத்தன். இதனால் செவியில் விரண முண்டாய், அது அழுகி அப்பால் கிருமிகள் உண்டாகுமென்பது கருத்து. இது ஸந்நிபாதத்தினால் உண்டாவது. 'இரத்தம், மாம்ஸம் இவை செவியில் பதனழிய, அது கபம், பித்தம், மற்றும் துர்நீர் இவற்றுடன் சேர்ந்து விடுமானால் அப்பொழுது கறுப்பும் சிவப்பும் வெண்மையுமாயுள்ள பலவித கிருமிகள் உண்டாகும். அவை செவியைத் தின்று விடுவதுபோல் பலவித வேதனையைத் தரும்; கிருமிகர்ணம் என்கிற இது ஸந்நிபாதத்தாலுண்டாகிறது' என்று நிமியென்பவர் கூறுகிறார்.

3. ஆகந்துக கர்ண வித்ரதி யென்றும், தோஷஜ கர்ண வித்ரதி யென்றும் இவ்வித்ரதி இரண்டு விதமாம்.

4. இதில் சீழ் வெகு கனமாகக் கசிவதாகக் கூறப்படுகிறது. கர்ணஸ்ராவத்தில் சீழ் திரவமாயிருப்பதோடு வலியும் அதிகம். இதில் வேதனை நியதமாயிருப்பதில்லை. "செவித்வாரத்தில் கபம் சேர்ந்து,

கர்ணசோதை முதலியன :— காதிலுண்டாகிற "சோதை"; "கர்ணார்புதம்," "கர்ணார்சஸ்" ஆகியவற்றை முன்னால் அததற்குக் கூறிய லக்ஷணங்களைக் கொண்டு தெரிந்து கொள்ள வேண்டும்[1]. 13.

கர்ணரோகங்களில் பொதுவான தோஷ லக்ஷணங்கள்:— (1) செவியில் ஓசை, அதிக வலி, காதுக்குரும்பையின் வறட்சி, தெளிவான துர்நீர்க்கசிவு, காது கேட்காமை ஆகியவை வாததோஷக் குறிகளாம். (2) சென்னிறத்துடன் கூடிய வீக்கம், வீக்கம் உடைதல், அழற்சி, பசுமையும் துர்க்கந்தமுமான கசிவு ஆகியவை பித்த தோஷத்தினாலான குறிகள். (3) சப்தம் ஒருவிதமாயிருக்க வேறு விதமாகக் காதில் விழுதல், அரிப்பு, ஸ்திரமான வீக்கம், வெண்மையும் ஸ்நிக்தமுமாயுள்ள கசிவு, சொற்ப வலி ஆகியவை கபதோஷத்தாலான குறிகள். (4) ஸந்நிபாதத்தினால் வாதாதிகளுக்குக் கூறிய எல்லா லக்ஷணங்களும், பல வேறு நிறங்களைப் பெற்ற துர்நீர்க்கசிவும் உண்டாகும்.[2] 14, 15.

## கர்ணபாளியைப்பற்றிய ரோகங்கள்[3]

பரிபோடகம்:—மிகவும் கோமளமான காது முனையை வெகு காலம் விட்டிருந்து அப்பால் வெகு துரிதமாக அதை வளரச் செய்வதால் வெளிக்காதில் வலியுடன் வீக்கமுண்டாகும்; கறுஞ்சிவப்பாகவும் தடிப்பாகவுமுள்ள அவ்வீக்கத்தில் கீறுகீறுகச் சிறு வெடிப்புகள் தோன்றும்; வாதப்பிரகோபத்தா லுண்டாகும் அது "பரிபோடகம்" எனப்படும். 16, 16½.

உத்பாதம்:—வெகு கனமான ஆபரணம் பூணுவதாலும், அடிபடுவதாலும், பலமாக உரஞ்சுவதாலும் பாளியில் கபிலவர்ணமாக வீக்கமுண்டாகும்;[4] அதில் அழற்சியும், வேக்காடும், வலியும் தோன்றும். அது சிவப்பாகவுமிருக்கும். இரக்ததோஷ-பித்த தோஷங்களா லுண்டாகும் இது "உத்பாதம்" எனப்படும். 17, 17½.

---

பித்தச் சூட்டினால் ஒருவாறு இளக்கப்பட்டு, மிகுதியாக வெளியில் வழியும்; அதில் வேதனை யிருந்தாலுமிருக்கும்; இல்லாமலுமிருக்கும்; சீழ் வெகு கனமாயிருக்கும்; அது பூதிகர்ணம்" என்று ஸுச்ருதர்.

1. "வாத-பித்த-கப-இரத்தங்களால் 'கர்ணசோதை' நான்கு விதம். இவ்விதமே 'கர்ணார்சஸ்ஸும்' நான்கு. காதில் ஸந்நிபாதத்வந்தவஜ-ஆகந்துஜசோதைகளும், ஸஹஜ-ஸந்நிபாதார்சஸ்ஸுகளும் உண்டாவதில்லை. வாத-பித்த-கப-இரத்த-மாம்ஸ-மேதஸ்-ஸிரைகளைப் பற்றி ஏழு கர்ணார்புதங்கள் உண்டு" என்று ஸ்ரீ கண்டதத்தன் கூறுகிறார். சோதை, அர்புதம், அர்சஸ் என்பவற்றின் லக்ஷணங்களை 36-வது, 38-வது, 5-வது அத்தியாயங்களில் முறையே பார்க்க.

2. நான்கு விதமான கர்ணரோகங்கள் சரகர் கூறியதை அனுஸரித்தவையாம்.

3. கர்ணபாளி—இலைபோன்றுள்ள வெளிக்காது.

4. இரத்தம் பித்தம் இவற்றாலுண்டாகிற இவ்வியாதியில் கபில வர்ணம் தோன்றுவது வியாதியின் பிரபாவத்தினாலேயே.

உந்மந்தகம்:—காதை வலிய வளர்ப்பதால் வாயு பிரகோப மடைந்து, கபத்தைக் கவர்ந்திழுத்து, ஸ்தம்பித்தும் சொற்ப வேதனை யுள்ளதுமான வீக்கத்தை யுண்டுபண்ணும்; தினவும் அதிகமா யிருக் கும்; வாத-கபங்களின் கோளாறால் உண்டாகும் இவ்வியாதி "உந் மந்தகம்" எனப்படுகிறது. 18, 19.

துக்கவர்த்தநம்:—காதை முறைதவறுகக் குத்தி வளர்ப்பதால் மூன்று தோஷங்களும் கோளாறடைந்து அரிப்பு, அழற்சி, வலி இவற்றுடன் கூடியதும் வேக்காடுடையதுமான வீக்கமுண்டாகும். இது "துர்க்கவர்த்தநம்" எனப்படும். 20.

பரிலேஹீ:—கபதோஷமும், இரத்ததோஷமும், அவற்றால் கிருமி களும் விருத்தியடைந்து கடுகுகளைப்போன்ற விஸர்ப்பங்கள் என்கிற கொப்புளங்கள் பாளியில் பரவும்; அவற்றில் எரித்தலும், தினவும், வலியும் விசேஷமா யிருக்கும்; அவை நாற்புறமும் பரவி பாளியைத் தின்றுகொண்டே வரும். அதனால் இது "பரிலோஹீ" எனப் படும். 21, 22.

---

## 58. நாஸாரோக நிதாநம்.*

பீநஸம்:—நாசியானது அமுத்தப்படுவதுபோல் உணரப்பட்டும்,[1] வறட்சியடைந்தும், அடிக்கடி கசிவைப் பெற்றும், அழன்றும் வரு மானால், வாஸனையையுமுணரமுடியாவிட்டால்,[2] நாக்கும் சுவை யறியக்கூடாததாக ஆனால்[3] அவ்வியாதியை "பீநஸம்" என்பதாய் அறிக. வாத-கபங்களாலுண்டாகிற இது[4] பிரதிச்யாயத்திற்குச்[5] சமமான மற்றக் குறிகளையும் பெற்றிருக்கும். 1, 1½.

பூதிநஸ்யம்:—மிக்ப் பதனழிந்த இதர தோஷங்களால்[6] வாத தோஷம் தொண்டையிலும், தவடைகளின் அடிப்புறத்திலும், மேன் மேலும் சேர்ந்துபோய் அப்பால் வாயாலும் நாசியினாலும் அதுவே சீழை வெளியாக்கும்; "பூதிநஸ்யம்" என்று இதை வழங்குவர். 2.

---

* நாசியைப்பற்றிய ரோகங்களை விவரிக்கும் அத்தியாயம்.

1. வாதத்தினால் சிலேஷ்மதாது சோஷிப்பிக்கப் படுவதால் இவ் வுணர்ச்சி யேற்படுகிறது. அமுத்தப்படுவது என்றால் ஒருவிதமான மூக்கடைப்பு என்று கருத்து.

2. வாஸனையுணர முடியாமையானது பெரும்பாலும் மூக் கடைப்பால் உண்டாகிறது.

3. நாஸா ரோகத்திற்குக் காரணமான தோஷத்தினால் நாக்கும் தூஷிப்பிக்கப் படுவதால் சுவையுணர முடிவதில்லை.

4. பீநஸம் வாத-கபங்களாலுண்டாவதாக இங்கே கூறப்பட் டாலும், கதாதரன் இதைப் பித்த-கபங்களாலுண்டாவதாகக் கூறு வதே பொருந்தும் என்கிறார்.

5. பிரதிச்யாயம்—இவ்வத்தியாயத்திலேயே 214-ம் பக்கம் பார்க்க.

6. இதர தோஷங்கள்—பித்தம், கபம், இரத்தம் இவை.

**நாஸாபாகம்:**—நாசியைப் பற்றிய பித்ததோஷம் அரும்ஷிகா வென்கிற விரணங்களை யுண்டுபண்ண, வேக்காடும் வெகு கடுமையா யிருந்தால் அல்லது துர்நீர்க் கசிவும் அழுகுதலும் கண்டால் அதை "நாஸாபாகம்" என்றறிக. 3.

**பூயரக்தம்:**—பதனிழந்த தோஷங்களாலாவது, வேறு காரணங் களாலாவது,[1] நெற்றியில் அபிகாத முண்டாவதாலாவது நாசியா னது இரத்தங்கலந்த சீழைக் கக்கும்; இவ்வியாதியை "பூயரக்தம்" என்று கூறுவர். 4.

**க்ஷவது:**—(1) நாசியைப்பற்றிய மர்மஸ்த்தானம்[2] தூஷிப்பிக்கப் பட்டு, வாயுவானது கபத்தினுலும் தொடரப்பட்டு அதிக சப்தத்துடன் நாசிமார்க்கத்திலிருந்து பல முறை வெளியாகும். இதை "தோஷஜ க்ஷவது" என்பார்கள். (2) தீக்ஷ்ணமான வஸ்துக்களை யுபயோகிப் பதாலாவது, அவ்வித வஸ்துக்களை முகருவதாலாவது, சூரியனை உற் றுப் பார்ப்பதாலாவது, வர்த்தி முதலியதால் நாசியினுட்புறத்துள்ள தருணஸ்த்தி மர்மம்[3] பரிசித்துத் தூண்டப்படுவதாலாவது "ஆகந்துக க்ஷவது" என்கிற மற்றொரு க்ஷவது[4] உண்டாகிறது. 5, 6.

**ப்ரம்சது:**—சிரஸ்ஸில் சில காலமாக சயாவஸ்த்தை யடைந் திருந்த சிலேஷ்மதோஷம் சூரிய தாபத்தினுல் இளகியும், முறிந்தும், இலவணரஸ முள்ளதாகவும், தடிப்பாகவும் நாசியிலிருந்து ஒழுகும். இந்த ரோகத்தை "ப்ரம்சது"[5] என்பார்கள். 7.

**தீப்தம்:**—மிகவும் அழன்றுள்ள நாசித்வாரத்திலிருந்து வெளி யாகும் வாயு வெப்பமுள்ள புகையைப் போல் துன்பமளிக்கும்; அப் பிணியாளியின் நாசி எரிவது போலிருக்கும். அந்த வியாதியை "தீப்தம்" என்பர். 8.

**பிரதீநாஹம்:**—கபமும் வாதமும் சேர்ந்து ச்வாஸமார்க்கத்தை அடைத்து, மூக்கு விம்மலடைந்தால் அதை "பிரதிநாஹம்" என்று வழங்குவர். 8½.

**நாஸாஸ்ராவம்:**—பசுமையும் வெண்மையும் கலந்து நாசியி

---

1. அடிக்கப்படுவது, குத்தப்படுவது, வீழ்தல், சஸ்திராதிகளால் பொத்தப்படுவது முதலியவை வேறு காரணங்களாம்.

2. முகம், செவி, நாசி முதலியவற்றின் ஸ்ரோதஸ் ஸுகளென் கிற த்வாரங்கள் ஒன்று கூடுமிடமாகிய ச்ருகாடகம் என்கிற மர்மம் என்று பொருள்.

3. நாசியினுள் உள்ள மெல்லிய எலும்பு வெகு நுட்பமான தால் அது மர்மமாகக் கூறப்பட்டது. அல்லது "தருணஸ்த்தியும், ச்ருங்காடக மர்மமும் பரிசிக்கப்பட்டு" என்றும் பொருள் கூறுவது பொருந்தும்.

4. க்ஷவது—தும்மல்.

5. வெயிலில் ஸஞ்சரிப்பதால் ஸம்பவிக்கும் ஒருவித ஜலதோ ஷமே ப்ரம்சது.

லிருந்து தடிப்பாகவாவது தெளிவாகவாவது தோஷம்[1] பெருகினால் அதற்கு "ஸ்ராவம்" என்று பெயர். 9.

நாஸாசோஷம்.—நாசித்வாரம் மிகவும் அழன்று[2] வாயுவினால் அதிகமாய் சோஷிப்பிக்கப்பட்டால் ச்வாஸம் விடுவதிலும் வாங்குவதிலும் வெகு கஷ்டமுண்டாம்; அந்த வியாதி "நாஸா சோஷம்" எனப்படும். 10.

பீநஸத்தில் ஆம பக்வ லக்ஷணங்கள்:—(1) சிரோபாரம், அரோசகம், நாசியிலிருந்து சளி மெல்லிதாக ஒழுகுதல், குரல் கம்மிப்போதல், அடிக்கடியும் மூக்கைச் சிந்துதல் ஆகியவை ஆம பீநஸத்தின் லக்ஷணங்களாம். (2) அவ்விதம் ஆமமான சிலேஷ்மமே தடிப்பாக மாறி நாசித்வாரங்களிலேயே சுஷ்கித்துப் போய், குரல் சுத்தமாய் இயற்கை நிலைமையடையும்; முகம் முதலியதின் நிறமும் சுத்தமாகும்; இவை பக்வ பீநஸத்தின் லக்ஷணங்களாம். 11, 12.

## பிரதிச்யாய ரோகங்கள்

பிரதிச்யாயத்தின் நிதானஸம்ப்ராப்திகள்:—(1) மலாதி வேகங்களை அடக்குவது, அஜீர்ணம், தும்பு தூசுகள் ச்வாஸமார்க்கத்திற் புகுதல், அதிகமாகப் பிரஸங்காதிகள் செய்தல், கடுஞ்சினம், ருதுக்களின் முறைதவறுன நிலைமைகள், வெயில் முதலியதால் சிரஸ்தாபமடைதல், மிதமிஞ்சி கண்விழித்தல், அமிதமாக நித்திரையுறுதல், மிகக் குளிர்ந்த ஜலத்தையுபயோகித்தல், பனியிலிருத்தல், அமிதமான புணர்ச்சி, அதிகமாகக் கண்ணீர் சொரிதல், ச்வாஸ மார்க்கத்திற் புகை அதிகமாயேறுதல் ஆகியவற்றால் (2) முன்னமே மிகுதியாக தோஷம் சேர்ந்துள்ள சிரஸ்ஸில் வாயு மிக்வும் விருத்தியடைந்து பிரதிச்யாயத்தைத் தூண்டும். (3) சிரஸ்ஸில் வாயு முதலிய தோஷங்களும் இரத்தமும் தனித் தனியாகவும் ஒருமிக்கச் சேர்ந்தும் சயமடைந்து, பிறகு பற்பல காரணங்களால் பிரகோபத்தையும் பெற்று பிரதிச்யாய வியாதியை யுண்டுபண்ணுகின்றன[3]. 13—14½.

பிரதிச்யாயத்தின் பூர்வரூபம்:—தும்மல் அதிகரித்தல், சிரஸ்ஸுக்குள் ஏதோ அதிகமாய் நிறைந்திருப்பது போன்ற உணர்ச்சி, உடல் திமிர்த்தல், சரீரம் நசுக்கப்படுவது போன்ற வேதனை, மயிர்ச்

---

1. தோஷமென்று இங்கு சளிக்குப் பெயர்.

2. பித்த ஸம்பந்தமின்றி அழற்சியுண்டாகாதாகையால், இவ் வியாதியில் பித்ததோஷமும் வாதத்துக்கு அநுபந்தமென்று விளங்குகிறது. "க்ராணச்ரிதே ச்லேஷ்மணி மாருதேந பித்தேந காடம் பரிசோஷிதே ச"—"நாசியைப்பற்றிய கபம் வாதத்தாலும் பித்தத்தாலும் மிகவும் சோஷிப்பிக்கப்படுவதால்" என்று வேறு பாடமுமுண்டு.

3. பிரதிச்யாயத்திற்கு "ஸத்யோஜநகம்," "காலாந்தரஜநகம்" என்று காரணம் இரண்டு விதம். அவற்றுள் காரணம் பலமாயிருந்தால், அது தோஷங்களுக்குச் சயம் முதலிய விருத்திக்கிரமத்தையெதிர்பார்க்காமல் உடனே வியாதியைக் கிளப்பும். மற்றொரு கார

சிலிர்க்கை இவையும் வேறு பல உபத்திரவங்களும்[1] பிரதிச்யாயத்திற்குப் பூர்வரூபங்களாம். 15.

**வாதப் பிரதிச்யாயம்:**—நாசி அழுத்திக் கட்டப்படுவது அல்லது இசிக்கப்படுவது போன்ற உணர்ச்சி, மூக்கடைப்பு, இலேசான சளியொழுகுதல், தொண்டையும் தவடைகளும் உதடுகளும் உலர்ந்து போதல், கன்னங்களில் வேதனை, அமிதமான தும்மல், வாயில் அருவருப்பு, குரல் கம்மிப்போதல் ஆகிய இக்குறிகள் வாதஸம்பந்தமான பிரதிச்யாயத்தில் தோன்றும். 16, 17.

**பித்தப் பிரதிச்யாயம்:**—பித்தக் கோளாறுலான பிரதிச்யாயத்தில் பிணியாளிக்கு நாசியிலிருந்து உஷ்ணமாகவும், பசுமை நிறமாகவும் சளி வெளியாகும்; அவனது சரீரம் மிக்க மெலிந்தும், அதிகமாய் வெளிறியும், தாபமுள்ளதாகவும், உஷ்ணவேகத்தால் பிடிக்கப் பட்டதாகவுமிருக்கும். அவன் திடீரென்று புகைந்து புகைந்து தீயைக் கக்குபவன்போல வருந்துவான். 18, 18½.

**கபப் பிரதிச்யாயம்:**—சிலேஷ்மதோஷத்தினுலான பிரதிச்யாயத்தில் கபம் குளிர்ந்ததாகவும், வெண்மையாகவும், அளவில் அதிகமாகவும் நாசியிலிருந்து வெளியாகும். அப்பிணியாளி மிக்க வெளிறிய சரீரத்தையும் நேத்திரங்களையு முடையவனுய், சிரோபாரமுள்ளவனுகவு மிருப்பான்; தொண்டை, தவடைகள், உதடுகள், சிரஸ் இவற்றில் அமிதமான அரிப்புமுண்டாய் வருந்துவான். 19½.

**ஸந்நிபாதப் பிரதிச்யாயம்:**—எவனுக்குப் பிரதிச்யாயம் பக்குவமாகியோ, பக்குவமாகாமலேயோ அடிக்கடியும் நிவ்ருத்தியாவது போல் மறைந்து, மீண்டும் மீண்டும் கிளம்புகிறதோ அவனுக்கு ஸந்நிபாதத்தினுல் பிரதிச்யாயமுண்டாயிருப்பதாகக் கருதவேண்டும். 20½.

---

ணம் தோஷங்களுக்குச் சயாதி நிலைமைகளைக் கிரமமாயுண்டு பண்ணி, படிப்படியாக வியாதியைத் தோற்றுவிக்கும். இவற்றுள் காலாந்தரஜநகரூபமான நிதாநம் உடல் முழுமையிலும் நன்குகப் பரவி வேருன்றி விருத்தியடைவதால், வியாதியை யுண்டாக்குவதில் அது வெகு சக்தி வாய்ந்ததாயிருக்கும். இங்கே (1) என்று குறிப்பிட்டுள்ளவை நிதாநங்கள். (2) என்பதன் கீழுள்ள விஷயம் ஸத்யோஜநக நிதாநம். (3) என்பது காலாந்தரஜநக நிதாநம். நாசியின் மூலஸ்த்தாநத்திலுள்ள கபமாவது இரத்தமாவது பித்தமாவது வாததோஷப் பெருக்கினுல் விம்மிய நாசியின் மேலுள்ள சிரோத்வாரத்திற் பற்றியிருக்கும் வாதத்தை நோக்கி வலியச் செல்லும்; ஆதலால் இதற்குப் பிரதிச்யாயம் எனப் பெயர்".

1. "பிரதிச்யாயத்திற்கு நாசியில் அழற்சி, நாசியில் குடைத்தல், தும்மல், உதடுகள் வெடித்தல், குரலடைப்பு, வாயில் நீருறுதல், சிரஸ் நிரம்பி யிருத்தல் ஆகியவை பூர்வரூபங்கள்" என்று விதேஹர் கூறும் விகாரங்களும் இங்கே உபத்திரவங்கள் என்பதால் குறிக்கப்படுகின்றன.

**துஷ்டப் பிரதிச்யாயம்:**—நாசியானது சளி முதலியதைப் பொசிக்கும்; மீண்டும் மிக்க உலர்ந்துவிடும் ; அடிக்கடி மூக்கு விம்மி விரியும்; மீண்டும் அடைபடும்; மூச்சு வெகு துர்நாற்ற முள்ளதாகவுமிருக்கும்; அவன் வாஸனையையும் உணரமாட்டாதவனுவான்; இவ்விதமான "துஷ்டப் பிரதிச்யாயம்" என்கிற இவ்வியாதி கஷ்டஸாத்யமான தென்றறிக. [1] 21—22½.

**இரக்தப் பிரதிச்யாயம் :**— இரத்த தோஷத்தினுலான பிரதிச்யாயத்தில் நாசியிலிருந்து இரத்தம் பெருகும்; கண்கள் மிகச் சிவந்திருக்கும்; உரோகாதமென்கிற இடிப்புபோன்ற வலி [2] மார்பில் உண்டாகும்; ச்வாஸமும் முகமும் துர்நாற்றமுள்ளவையா யிருக்கும்; வாஸனையுமுணர முடியாது. [3] 23,24.

**அஸாத்ய துஷ்டப்பிரதிச்யாயம் :**— எல்லாப் பிரதிச்யாயங்களும் ஏற்ற சிகித்ஸை செய்யப் படாமற்போனுல் காலக்கிரமத்தில் துஷ்டப் பிரதிச்யாயமாக மாறி அஸாத்ய நிலைமையையும் பெறுகின்றன. அப்பொழுது நாசியில் வெளுப்பாகவும், ஸ்நிக்த்தமாகவும், அணுவளவாகவுமுள்ள கிருமிகள் விருத்தியடைகின்றன. இதில் கிருமிசிரோரோகத்தில் உண்டாவது போன்ற மற்றக் குறிகளும் [4] தோன்றும். 25, 26.

**பீநஸத்தின் உபத்திரவங்கள்:**—பீநஸரோகங்கள் விருத்தியடைந்தால் செவிட்டுத்தனம், கண்தெரியாமை, வாஸனையறிய முடியாமை, கடுமையான நேத்திர ரோகங்கள் [5], சோதை, பசியின்மை, காஸம் ஆகிய இவை உபத்திரவங்களாகத் தோன்றும், 27.

**வேறு நாஸாரோகங்கள்:**—முன்பு கூறப்பட்ட ஏழுவித அர்புதங்

---

1. சளி முதலியதைப் பொசித்தல், உலர்ந்துபோதல், விம்மி விரிதல், அடைபடுதல் முதலிய ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையாயுள்ள இலக்ஷணங்கள் மாறி மாறி வெவ்வேறு ஸமயங்களில் தோன்றுமே யல்லாது ஒருமிக்க உண்டாகமாட்டா. இது கஷ்டஸாத்யமான துஷ்டப் பிரதிச்யாயம்.

2. உரோகாதம் என்பது ஓர் வியாதியாகவும் கருதப்படுகிறது. அதன் விவரமாவது:—"உரக்ஷதத்தின் குறி தோன்றும்; மார்பு அடைக்கப்படும்; காதில் சீழ் வடியும்; மார்பில் கபம் சேரும்; காஸமும் ஜ்வரமும் தொடரும்; பீநஸமும் இருக்கும்; இக்குறிகளோடு கூடிய வியாதிக்கு "உரோகாதம்" என்று பெயர்"

3. பித்தப்பிரதிச்யாயத்தின் குறிகள் இதிலும் தோன்றும்.

4. கிருமிஜசிரோரோக விஷயத்தை பின்னுல் 60-வது நிதானத்தில் பார்க்க.

5. கடுமையான நேத்திர ரோகங்கள் என்பதிலேயே "கண்தெரியாமை" யென்பதும் அடங்கியிருக்க, மறுபடியும் அதைப் பிரத்தியேகமாகக் குறிப்பிடுவதால் வேறு நேத்திர ரோகம் உண்டானுலும் உண்டாகாவிட்டாலும் கண் தெரியாமை முக்கியமாகக் காணுமென்பது கருத்து.

களும்[1], நான்குவித சோதைகளும், நான்கு வித அர்சஸ்ஸுகளும் நான்கு இரக்த - பித்தங்களும் நாசியிலும் உண்டாகும். 28

---

# 59. நேத்திர ரோக நிதானம்.*

நேத்திர ரோகங்களின் பொதுக் காரணங்கள்:—உஷ்ணத்தினுல் மிகத் தாபமடைந்து தண்ணீரில் மூழ்குவதாலும், தூரத்திலுள்ள வஸ்துக்களை யுற்று நோக்குவதாலும், நித்திரை யின்மையினுலும் முறை தவறிய ஸ்வேத சிகித்ஸையினுலும், தும்பு தூசுகளும் தூமமும் கண்ணிற்படிவதாலும், வாந்தியை அடக்குவதாலும், அமிதமாக வமநத்தைப் பிரயோகிப்பதாலும், இரவில் திரவமான ஆஹாரத்தை யுட்கொள்வதாலும், மலம்-மூத்திரம்-அபானவாயு இவற்றின் வேகங் களைக் கிரமமாக அடக்கிப் போடுவதாலும், தொடர்ந்தாற்போல மிகவும் அழுவது சினங்கொள்வது துயரமுறுவது இவற்ருலும், தலையில் அடி முதலியது தாக்குவதாலும், அமிதமான மதுபானத் தாலும், அந்தந்த பருவத்திற்கு ஏற்றவாறின்றி பிரதிகூலமாயுள்ள சர்யைகளாலும், பலவித கிலேசங்களாலும், அதிகமான புணர்ச்சி யாலும், கண்ணீரை வலிய அடக்குவதாலும், மிக்க நுட்பமானவை

---

1. வாத-பித்த-கபங்களால் மூன்றும், இரத்தத்தினுல் ஒன்றும், மாம்ஸத்தினுல் ஒன்றும், மேதஸ்ஸினுல் ஒன்றும் ஆக ஆறுவித அர்புதங்கள் முன்பு 38-வது நிதானத்தில் கூறப்பட்டவை. [சாலாக்ய தந்த்ரிகளுடைய கொள்கைப்படி ஸந்நிபாதார்புதம் ஒன்று அதிக மாகச் சேர்க்கப்பட்டு, நாசியில் ஏழு அர்புதங்கள் என்று கணக்கிடப் படுகிறது. சோதையும் வாத-பித்த-கபஸந்நிபாதங்களால் நான்கு விதம். அவ்விதமே அர்சஸ்ஸும் இரத்த-பித்தமும் என்றறிக. அங் கங்கே கூறப்பட்ட அர்புதாதி இதர ரோகங்கள் நாசியிலும் பிரத்தி யேகமாய் உண்டாவதாக சாலாக்கிய சாஸ்திர வல்லோர் கூறுவர்.]

* "வாத-பித்தங்களால் தனித் தனியே பத்து நேத்திர ரோகங்கள்; கபத்தினுல் பதின்மூன்று; இரக்த தோஷத்தினுல் பதினுறு; ஸந்நிபா தத்தினுல் இருபத்தைந்து; ஆகந்துக காரணத்தினுல் இரண்டு—ஆக எழுபத்தாறுவித ரோகங்கள் நேத்திரத்தில் உண்டாகும்" என்று ஸுச்ருதர். "அவற்றுள் நேத்திரத்திலுள்ள ஸந்திகளென்கிற பாகங் களைப்பற்றியவை ஒன்பது; வர்த்மாவென்கிற உள்ளிமையைப்பற் றியவை இருபத்தொன்று; வெண்மடலில் பதினென்று; கருவிழியில் நான்கு; நேத்திரத்தின் எல்லாப் பாகங்களையும் பற்றியுண்டாகுபவை பதினேழு; திருஷ்டி யென்கிற கண்மணியைப் பற்றியவை பன்னி ரண்டு; வெளிக் காரணத்தினுல் உண்டாகுபவை இரண்டு. ஆகச் சுருக்கமாக நேத்திர ரோகங்களின் ஸங்க்யை எழுபத்தாறு" என்று ஆச்ரயபேதத்தைப்பற்றிய நேத்திரரோக ஸங்க்யையையும் ஸுச்ரு தர் கூறுகிறர்.

களை யுற்றுப் பார்ப்பதாலும் தோஷங்கள் பிரகோபித்துப் பலவித வியாதிகளை நேத்திரத்தில்[1] உண்டுபண்ணுகின்றன.[2] 1—3.

## நேத்திரத்தில் ஸகல பாகங்களையும் பற்றிய வியாதிகள்

அபிஷ்யந்தங்கள் நான்கு:—வாதம், பித்தம், கபம், இரத்தம் இவற்றால் அபிஷ்யந்தம் என்கிற நேத்திர ரோகம் நாலு விதமாயுண்டாகிறது. கடும் வேதனை யளிப்பதான இவ்வியாதி பெரும்பாலும் எல்லா நேத்திர ரோகங்களுக்கும் ஆதாரமாகிறது.[3] (1) வாதாபிஷ்யந்தக் கோளாறில் நேத்திரத்தில் குத்தலும், சீதளத்தினாலுண்டாவது போன்ற திமிர்ப்பும், தேஹத்தில் மயிர்ச்சிலிர்க்கையும், கண்ணில் கரகரப்பும் உண்டாம், கண் ரூக்ஷமாகப் போய் தலை நோயுடன் ஈரப்பசையற்றுப்போவது முண்டு; கண்ணீர் குளிர்ந்திருக்கும். (2) பித்தாபிஷ்யந்தத்தில் கண்ணில் தாபமும், விசேஷமான வேக்காடும், தூமம் கிளம்புவது போன்ற அழற்சியும் உண்டாம்; கண்ணுக்குக் குளிர்ச்சியான உபசாரத்தைப் பிணியாளி விரும்புவான்; கண்ணீர் மிகுதியாகவும் சூடாகவும் சொரியும்; கண் ஒருவாறு பசுமை நிறமடையும். (3) சிலேஷ்மாபிஷ்யந்தத்தில் நேத்திரம் குருவாகவும், வீக்கமுள்ளதாகவும், அரிப்புள்ளதாகவும், ஒருவித பசையுடன் கூடியதாகவும் இருக்கும்; அதில் சைத்தியமும் அதிகரிக்கும்; கண்ணீர் பிசுபிசுப்பாகவும் அடிக்கடியும் வழியும்; பிணியாளி கண்ணுக்கு உஷ்ணோபசாரத்தை விரும்புவான். (4) இரக்தாபிஷ்யந்தத்தில் கண்ணீர் சிவப்பாயிருக்கும்; கண் சிவக்கும்; நேத்திரத்திலும் அதைச் சுற்றிலுமுள்ள இரத்த நாடிகள் மிகச் சிவப்பாகும்; மற்றுமுள்ள பித்த லக்ஷணங்களும் தோன்றும்.[4] 4—8.

அதிமந்தம்:—(1) முற்கூறிய அபிஷ்யந்த ரோகங்களே ஏற்ற சிகித்஁ஸை செய்யப்படாமல் முதிர்ந்துவிடுமானால் நேத்திரத்தில் கடுமையான வேதனையை யுண்டுபண்ணி அதிமந்த மென்கிற வியாதியை யுண்டுபண்ணும். (2) அபிஷ்யந்தத்தைப் போலவே இதுவும்

---

1. நேத்திரத்தின் சுற்றளவு முதலியன: "கண்ணானது பொதுவாய் மொத்த விஸ்தாரத்தில் இரண்டரை அங்குலம் அளவுள்ளது; உட்புற அகலம் அவனவனது பெருவிரலின் மத்திய பாகத்து அகலம் உள்ளது; இந்த அளவு நேத்திரபுத்புதம் என்கிற நேத்திரகோளத்துக்குக் கூறப்படுகிறது." என்று ஸுச்ருதர்.

2. நேத்திரரோகங்களுக்குப் பொதுவான ஸம்ப்ராப்தியும் ஸுச்ருதரால் கூறப்படுகிறது:—"தோஷங்கள் முறை தவறானப் போக்குடன் மேல்நோக்கிச் சென்று, ஸிரைகளென்கிற நேத்திர ஸம்பந்தமான நாடிகளைப்பற்றிக்கொண்டு நேத்திரத்திலுள்ள பல பாகங்களிலும் வியாதிகளைக் கடுமையாயுண்டாக்குகின்றன."

3. "ஸகல நேத்திர ரோகங்களும் பெரும்பாலும் அபிஷ்யந்தத்தைக் காரணமாகக்கொண்டு உண்டாகலாம்" என்று ஸுச்ருதரும் கூறுகிறார்.

4. பித்தாபிஷ்யந்தத்தின் மற்றக் குறிகளும் என்பது கருத்து.

நான்குவிதம். (3) கண்ணானது இதில் பிடுங்கப்படுவதுபோலவும், கடுமையாகக் கடையப்படுவதுபோலவும் துன்பமடையும்; சிரஸ்ஸின் ஒரு பாரிசத்திலும் இவ்விரண்டுவித வேதனையுமுண்டாம். இக் குறிகளைக்கொண்டு அவ்வியாதியை அதிமந்தம் என்றறிக. (4) இவற்றுள் "சிலேஷ்மாதிமந்தம்" ஏழு நாட்களிலும், "இரத்தாதி மந்தம்" ஐந்து நாட்களிலும், "வாதாதிமந்தம்" ஆறு நாட்களிலும், "பித்தாதிமந்தம்" உடனேயும் முறை தவறிய சிகித்ஸையினால் திருஷ்டியை அழித்து விடும்.[1] 9—11.

நேத்திர ரோகங்களில் ஆம-பக்குவ நிலைமைகள்:—(1) நேத்திரத்தில் வேதனை கடுமையாதல், சிவப்பும் வீக்கமும் காணுதல், கரகரப்பு-குத்தல்-குடைத்தல்கள் தோன்றுதல், நீர் வடிதல் ஆகியவை நேத்திர ரோகம் ஆமநிலைமையி லிருப்பதன் குறிகளாம். (2) வேதனை மந்தப்படுதல், அரிப்புண்டாதல், வீக்கமும் கண்ணீரும் அடங்குதல், கண்ணின் நிறம் சிறப்பாக இயற்கை நிலைமையைப் பெறுதல் ஆகியவை நேத்திர ரோகம் பக்குவநிலைமை யடைந்திருப்பதன் லக்ஷணங்களென்றறிக. 12, 13.

நேத்திரபாகம்:—(1) கண்ணில் தினவு, பிசுபிசுப்பு, நீர்வடிதல், கண் கனிந்த அத்திப்பழம் போன்றிருத்தல், வீக்கங்கொள்ளல், பொங்கிப் போதல் ஆகிய இக் குறிகள் தோன்றினால் அது சோதையின்றியுண்டான நேத்திரபாகம் எனப்படும். (2) சோதையின்றியுண்டான நேத்திரபாகம் வீக்கத்தைத் தவிர மற்றக் குறிகளை மாத்திரம் பெற்றிருக்கும். 14, 14½.

ஹதாதிமந்தம்:—வாத தோஷத்தாலான அதிமந்தம் சிகித்ஸையின்றி உபேக்ஷிக்கப்படுமானால் உக்கிரமான நோவை யுண்டுபண்ணி அதுவே நேத்திரத்தை வலிய சோஷிக்கச் செய்யும். அப்பால் இஃது அஸாத்ய நிலைமையைப் பெறும். ஆகவே இது "ஹதாதிமந்தம்" என்று கூறப்படுகிறது[2]. 15.

---

1. இங்கே அதிமந்தமென்கிற தலையங்கத்தின் கீழ் (1) என்று குறிப்பிட்ட விஷயம் அதிமந்தத்தின் நிதானத்தையும், (2) என்கிற விஷயம் அதிமந்தத்தின் ஸங்க்யையையும், (3) என்கிற விஷயம் பொதுவான அதிமந்த லக்ஷணங்களையும், (4) என்பது ஒவ்வோர் அதிமந்தத்தினாலும் திருஷ்டிக்குத் தீங்கு நேரிடுவதற்கான காலாவதியையும் குறிப்பதாய் அறிக. [பித்தாதிமந்தத்தில் திருஷ்டிக்கு உடனே பங்கமுண்டாம் எனப்படுகிறது. வைத்திய பரிபாஷைப்படி "ஸத்ய" (உடனே) என்பதற்கு மூன்று அல்லது ஏழு நாட்கள் என்று பொருள் கூறுவது வழக்கம்.]

2. ஹதாதிமந்தத்தை விதேஹர் திருஷ்டயுத்க்ஷேபம் என்று வழங்குகிறார். அவர் கூறும் இலக்ஷணமாவது:—"வாயுவானது நேத்திர ஸிரைகளில் பிரவேசித்து, நேத்திரத்தையடைந்து சீக்கிரத்தில் திருஷ்டியைப் போக்குகிறது; பிறகு அவ்வாயு கண்ணைக் கடைவதுபோலத் தொந்தரவளித்து, குத்தல் குடைத்தல் முதலிய வேதனைகளையுமுண்டுபண்ணி, அதை வெளியில் பிதுக்கித் தள்ளுகிறது.'

வாதபர்யயம் :—வாயுவானது அடிக்கடியும் மாறி மாறி புருவத்திலும் நேத்திரத்திலும வேகத்தைக் காட்டி, பல விதமாய் கடுமையான நோவையுண்டு பண்ணும். அவ்வியாதி "வாதபர்யம்" எனப் படுகிறது. 16.

சுஷ்காக்ஷிபாகம் :—நேத்திரம் கடினமாகவும் ருக்ஷமாகவும் விகாரமடைந்த வர்த்மபாகத்தையுடையதாய் ஒருவாறு இடுங்கி அல்லது மூடிக்கொண்டு அதிக தாபத்தினால் வருந்தியும், எதையும் பார்க்க வியலாமல் கலங்கியும், விழித்துப் பார்க்க வெகு கஷ்டப் படுவதாகவும் இருந்தால் அதை "சுஷ்காக்ஷிபாகம்" என்கிற வியாதி யென்று அறிக. 17.

அந்யதோவாதம் :—வாயுவானது கன்னத்தைச் சார்ந்துள்ள காடா வென்கிற நாடி [1]-செவி-சிரஸ்-மோவாய்க்கட்டை இவற்றைப் பற்றியாவது, மந்யாவென்கிற பிடரிநரம்பைப் பற்றியாவது, அல்லது வேறு பிரதேசத்தைப் பற்றியாவது இருந்துகொண்டு புருவத்திலும், கண்ணிலும் வலியுண்டுபண்ணுமானால் அதை "அந்யதோ வாதம்" எனக் கூறுவர் [2]. 18.

அம்லாத்யுஷிதம் :—அம்லரஸத்தை அமிதமா யுபயோகிப்பதால் கண்ணானது மத்தியில் ஒருவாறு கறுத்து, ஓரங்களில் சிவந்து, எல்லாப் பாகமும் சமைக்கப்படுவது போன்று துன்புறுமானால், அழற்சியையும் வீக்கத்தையும் பெற்று, கண்ணீரையும் பெருக்குமானால் அவ்வியாதி "அம்லாத்யுஷிதம்" எனப்படும். 19.

ஸிரோத்பாதம் :—நேத்திரத்திலுள்ள ஸிரைகள் வேதனையோடு அல்லது வேதனையின்றி சிவக்கும்; அச்சிவப்பு அடிக்கடியும் மிகவும் அரிகரிக்கும்; அவ்வித வியாதி "ஸிரோத்பாதம்" எனப்படும் [3]. 20.

ஸிராஹர்ஷம் :—ஸிரோத்பாதம் அறியாமையால் உபேக்ஷிக்கப் படுமானால் "ஸிராஹர்ஷம்" என்னும் ரோகம் உண்டாகும்; அதில் கண்ணிலிருந்து செந்நிற நீர் அதிகமாய் வடியும்; கண்ணைத் திறந்து பார்க்கவும் முடியாது [4]. 21.

## கருவிழியைப்பற்றிய ரோகங்கள் [5]

சுக்லம் [6] :—(1) கிருஷ்ணபாக மென்கிற கருவிழியில் ஊசியினால்

1. சிரஸ்ஸின் பின்புறத்தில் கழுத்தும் சிரஸ்ஸின் கபாலாஸ்த்தியும் சேருமிடத்திலுள்ள நாடிகளின் ஸந்திக்கு "காடா" என்றும், "க்ருகாடிகா" என்றும், "அவடு" என்றும் பெயர்.

2. வியாதிக்குக் காரணமான வாதம் ஓரிடத்திலிருக்கக் கண்ணிலும் புருவத்திலும் (வேறோரிடத்தில்) வேதனையுண்டாவதால் இப் பெயர் வந்தது.

3. ஸிரோத்பாதம் இரத்த தோஷத்தினால் உண்டாவதாம்.

4. இத்துடன் நேத்திரத்தில் "ஸர்வகதம்" என்கிற எல்லாப் பாகத்தைப்பற்றிய வியாதிகள் முடிந்தன.

5. நேத்திரத்தின் கிருஷ்ண பாகத்தைப்பற்றிய ரோகங்கள்.

6. சுக்லம்—கண்ணில் பூவிழுதல். இது ஸவ்ரணசுக்லம், அவ்ரண சுக்லம் என்று இருவகைப்படும். இங்கே [(1) இந்த இலக்

குத்தப்பட்டது போன்று வெகு ஆழமான விரணத்துடன் வெண்மையான புள்ளி யொன்று தோன்றும்; அதிலிருந்து சூடாகவும் அதிக அளவாகவும் நீரும் ஸ்ரவிக்கும். இதை விரணத்துடன் கூடிய சுக்லம் எனக் கூறுவர். (2) முற்கூறிய புள்ளி திருஷ்டிக்கு அருகிலில்லாமலும், ஆழமாகப் பரவாமலும், அதிக கண்ணீர் வடிக்காமலும், வேதனையுண்டு பண்ணுமலும், இரட்டைப் புள்ளியில்லாமலு மிருந்தால் ஒருக்கால் நிவ்ருத்தியாகும். (3) அபிஷ்யந்தத்தைக் காரணமாயுடையதும், கருவிழியைப் பற்றியதும், அழற்சியுண்டு பண்ணுவதும், சங்கு சந்திரன் மல்லிகை இவற்றைப் போன்றதும், நீரில்லாமல் ஆகாயத்தில் தோன்றுகிற வெளிறிய மேகம்போன்று காணப்படுவதும், விரணமில்லாததுமான சுக்லம் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியதாம். (4) வெகு ஆழமான பிரதேசத்தைப் பற்றியுண்டானதும், அளவில் அதிகமானதும், வெகு நாட்பட்டதுமான சுக்லம் க்ருச்சிர ஸாத்யமென்று கூறப்படுகிறது. (5) (அ) விழியின் மத்தியபாகம் சிதைந்து போய் மாம்ஸத்தினுல் மூடப்பட்டிருப்பதும், ஆகவே சற்று மறைந்து மீண்டும் புலப்படும் தன்மையதும், ஸூக்ஷ்மமான ஸிரைகளால் சூழப்பட்டதும், திருஷ்டியின் பார்வையைப் போக்குவதும், இரண்டு படலங்களைப் பற்றியதும், உட்புறத்தில் சிவந்திருப்பதும், வெகு நாட்பட்டதுமான சுக்லம் சிகித்ஸிக்கக்கூடாததாகும். (ஆ) மேலும் கண்ணீர் சூடாகப் பொசிதல், நேத்திரத்தில் பிடகை யென்கிற கட்டியுண்டாதல், சுக்லம் பயறுபோல் தோன்றுதல்[1] ஆகிய குறிகளும் வியாதி அஸாத்யமென்று அறிவிப்பவையாம். (இ) தித்திரி யென்னும் பறவையின் சிறகுபோன்று பல நிறமுள்ள சுக்லத்தையும் அஸாத்யமென்று சிலர் கூறுவர். (6) தோஷத்திலுலுண்டான சுக்லமானது கிருஷ்ணமண்டல மென்கிற கருவிழி முழுமையிலும் பரவும்; அதை ஸந்நிபாதத்தினுலுண்டான[2] அக்ஷிபாகாத்யயம் என்கிற வியாதி யென்பார்கள். இது அஸாத்யமானது. (7) கருவிழியைப் பற்றிக்கொண்டு[3] ஒருவித வளர்ச்சி வெள்ளாட்டுப் புழுக்கையைப் போல் உண்டாகும்; அது ஒருவாறு சிவந்தும், வலியுண்டுபண்ணுவ

கக் குறியுள்ள விஷயம் ஸவ்ரண சுக்லத்தையும், (2) இந்த இலக்கம் அரிதாக நிவர்திக்கக் கூடிய சுக்லத்தையும், (3) இந்த எண் அவ்ரண சுக்ல லக்ஷணங்களையும், (4) இது க்ருச்சிரஸாத்ய சுக்லத்தையும், (5) என்கிற எண்ணுக்குக் கீழுள்ள (அ) (ஆ) (இ) என்பவை அஸாத்ய சுக்லத்தின் வெவ்வேறு நிலைமைகளையும் குறிப்பவையாம். அவ்ரண சுக்லம் க்ருச்சிர ஸாத்யத்தைச் சேரும்.]

1. "பயறுபோன்ற குறியுள்ள சுக்லம் இரண்டு படலங்களைப் பற்றியிருக்கையிலேயே தோன்றும்" என்று விதேஹர்.

2. "ஸந்நிபாதத்தினுலுண்டான" என்பதற்குப் பதிலாக "அபிஷ்யந்தத்தினுலுண்டான" என்று வேறு பாடம்.

3. கருவிழியை முற்றிலும் மறைத்து அல்லது மாற்றிப்போடுகிறது என்று பொருள்.

தாகவும், செந்நிறமான பிசுபிசுப்புள்ள கண்ணீரை வடிப்பதாகவு மிருக்கும்; அதை அஜகா ஜாதம் என்பார்கள்.[1] 22—28.

## திருஷ்டியைப்பற்றிய வியாதிகள்[2]

(1) முதற்படலத்தைப்பற்றிய[3] வியாதி:—ஒருவனுக்கு திருஷ்டியில் முதற்படலத்தை தோஷங்கள் கோளாறடையச் செய்தால், அவனுக்கு எப்பொழுதேனும் ஒவ்வொரு ஸமயம் வஸ்துக்கள் நன்கு விளங்காவண்ணம் புலப்படும். (2) இரண்டாம் படலத்தைப்பற்றிய வியாதி:—தோஷம் திருஷ்டியின் இரண்டாம் படலத்தைப்பற்றியதானால் திருஷ்டி உருவங்களைத் தகுந்தவாறு காணமுடியாததாகும்; ஈக்களும் கொசுக்களும் ஆகாயத்திற் பறப்பதாகப் புலப்படும்; த்வாரமில்லாத விடங்களில் த்வாரங்கள் இருப்பது போலவும், பலவித வட்டமான உருவங்கள் இருப்பதுபோலவும், கொடிகள் பறப்பது போலவும், கிரணங்கள் நீண்டிருப்பதுபோலவும், பல வேறுவகையான ஜந்துக்கள் துள்ளியோடுவது போலவும், மழைத்துளிகள் சொரிவதுபோலவும், மேகம் கிளம்புவதுபோலவும், இருள் சூழ்வது

---

1. அஜகாஜாதம் என்பது மூன்று படலங்களைப் பற்றிய வியாதி யென்று விதேஹர்.

2. திருஷ்டி—கண்ணுக்குள் படிகம் போன்றிருக்கும் மணியும், அதன் முன் பின் பாகங்களிலுள்ள மற்ற முக்கியமான தர்சனோபயோகியாயுள்ள பாகமும் சேர்ந்து இப்பெயரைப் பெறுகிறது. "பஞ்சபூதங்களுடைய தெளிந்த ஸூக்ஷ்மாம்சங்களாலானதும், இரு கடலைப் பருப்பளவுள்ளதுமான நேத்திராவயவம் திருஷ்டி" என்று ஸுச்ருதர். "நேத்திரத்தின் வெளிப் புறத்தோற்றத்திலுள்ள அளவில் மூன்றிலொருபாகம் கருவிழி; கருவிழியின் ஏழிலொரு பாகங்கொண்டது திருஷ்டி யென்று நேத்திர தத்துவஞ்ஞர் கூறுவர்" என்று நிமி என்பவர் கூறுகிறார்.

3. படலம் என்பது திருஷ்டியைப்பற்றிய சில பாகம்; திருஷ்டி யென்று குறிக்கப்படினும் நேத்திரத்தின் இதர பாகத்திலும் சில் படலங்களுக்குச் சம்பந்தம் கற்பிக்கப்படுகிறது. [படலங்கள் நான்கு: (1) ரஸ இரத்தங்களை ஆச்ரயித்தது பாஹ்யபடலமென்கிற வெளிப் படலம். (2) இரண்டாவது மாம்ஸதாதுவை ஆதாரமாகக்கொண்டது. (3) மேதோதாதுவைப்பற்றியது மூன்றும் படலம். (4) கால்காஸ்த்தி யென்கிற ஒருவித கடின தாதுவைப்பற்றியது நான்காம் படலம். "இவற்றுள் முதற்படலம் ஒளியையும் ஒருவித நீர்போன்ற திரவ தாதுவையும் ஆதாரமாயுடையது" என்று ஸுச்ருதர். "ஒளி, நீர்ப் பொருள் என்று ஸுச்ருதர் குறிப்பிடும் வஸ்துக்கள் முறையே இரத்தத்தையும் இரஸதாதுவையும் குறிக்கின்றன" என்று ஸ்ரீகண்டதத்தன்.] மேலும் இங்கே மூலத்திற் குறிப்பிட்ட முதற்படலம் என்பதற்கு பாஹ்யபடலமென்பது பொருளல்லவென்றும், தோஷங்களால் முதலில் தாக்கப்படுவது உட்புறமாயுள்ள காலகாஸ்த்தியைப்பற்றிய படலமேயென்றும், உட்புறமிருந்து அல்லது கடைசியிலிருந்து இங்கே படலக்கிரமம் கூறப்படுகிறதென்றும் மதுகோசவியாக்யானம். விதேஹர்கூட "திருஷ்டியின் உட்புறத்துப் படலத்தையே முதலில் தோஷங்கள் வலித்துத் தாக்குகின்றன" என்று கூறுகிறார்.

போலவும் புலப்படும்; மேலும் தூரத்திலுள்ள உருவங்கள் அருகிலிருப்பதாகவும், அருகிலுருப்பவை அங்ஙனமே தூரத்திலிருப்பதாகவும் திருஷ்டிக்குண்டான லக்ஷ்யப்பிராந்தியினால் தோன்றும்[1]. பெருமுயற்சி செய்தபோதிலும் ஊசியின் த்வாரத்தைப் பார்க்கவும் வல்லமையிராது. (3) மூன்றும் படலத்தைப் பற்றிய வியாதி:—(1) தோஷமானது மூன்றும் படலத்தைப்பற்றி யிருந்தால் அம்மனிதன் உயரத்திலிருப்பவைகளைப்பார்ப்பான்; கீழே ஆழத்திலுள்ளவைகளைப்பார்க்கவியலாதவனாயிருப்பான்; பெரிய உருவங்களும் வஸ்திரத்தினால்போர்க்கப்பட்டவை போலப் புலப்படும்; மனித உருவங்களில் காது, மூக்கு, கண் முதலிய அவயவங்கள் ஹீனமாயிருப்பவை போலவும், வேறு விதமாக விகாரமடைந்திருப்பவை போலவும் தோன்றும். (2) தோஷங்கள் மிகவும் பலமாயிருந்தால் அந்தந்த தோஷத்திற் கேற்ப திருஷ்டியில் வெவ்வேறு நிறமும் தோன்றும்.[2] (3) தோஷமானது திருஷ்டியின் கீழ்ப்புறத்தையடைந்திருந்தால், அருகிலுள்ள உருவங்களும், மேற்புறத்தைப்பற்றியிருந்தால் தூரத்திலுள்ள உருவங்களும், அதன் பார்ச்வபாகங்களைப்பற்றி யிருந்தால் பக்கவாட்டிலுள்ளவைகளும் கண்ணில் புலப்படமாட்டா. திருஷ்டியைச் சுற்றிலும் தோஷம் வியாபித்திருந்தால் உருவங்கள் வியக்தமாகத் தோன்றுவதில்லை. திருஷ்டியின் மத்தியில் தோஷமிருந்தால் பெரிதாயுள்ள உருவம் சிறியதாகத் தோன்றும். தோஷம் இரண்டு பாகமாக திருஷ்டியில் பிரிந்திருந்தால் ஒவ்வொரு உருவமும் இரண்டு போலவும், தோஷம் இடம் மாறிக்கொண்டிருந்தால் உருவங்கள் பற்பலவாகவும் தோன்றும்; திருஷ்டியில் தோஷம் குறுக்காகத் தங்கியிருந்தால் அவனுக்கு ஒரு வஸ்து இரண்டுருவம் போலப் புலப்படும்[3]. இவ்வியாதி திமிரம்[4] எனப்படும். (4) நான்காம் படலத்தைப்பற்றிய வியாதி:— முற்கூறிய திமிரமென்னும் வியாதியே நான்காம் படலத்தை யடைந்ததும் திருஷ்டிபாகத்தை எல்லாப் புறத்திலும் மறைத்துப்போட,

---

1. திருஷ்டியினுள் அடங்கிய சிலேஷ்மாதி தோஷங்கள் நேத்திரத்தினுள் மேலும் கீழுமாகவும் குறுக்காகவும் அடிக்கடி அசைந்தோடுவதாலும், வேறு விதமான மாறுதல்களாலும் கண்பார்வையில் இவ்வித விகாரங்கள் உண்டாகின்றனவாம்.

2. கபதோஷத்தினால் வெண்மையும், பித்தத்தினால் பசுமையும், வாதத்தினால் கறுப்பும், இரத்தத்தினால் சிவப்பும் ஆக இவ்வித நிறமாறுபாடுகள் உண்டாமென்பது கருத்து.

3. இங்கே (1) என்கிற எண்ணின் கீழ் திருஷ்டி தோஷத்தினால் உருவங்களுடைய தோற்றத்தில் ஏற்படுகிற வேற்றுமைகளும், (2) என்கிற எண்ணின் கீழே தோஷாதிக்யத்திற்கேற்றவாறு திருஷ்டியில் நிறமாறுபாடும், (3) என்கிற எண்ணின் கீழே திருஷ்டியில் தோஷம் நிற்குமிடத்திற்கு ஏற்றவாறு தூர-ஸமீபதர்சனாதிகளிலுண்டாகும் விகாரங்களும் குறிக்கப்படுகின்றன.

4. திமிரம் என்றால் இருள்; அந்தகத்தன்மையுண்டானால் இருளடைந்த நிலைமையுண்டாவதால் இப்பெயர் வந்தது.

ஒரு லிங்கநாசம் உண்டாம்.[1] இந்த லிங்கநாசம் முற்றிலும் இருளை யுண்டுபண்ணி, வியாதி அதிக முதிர்ச்சி பெறாத நிலைமையில் மஹத்தான இத் திருஷ்டிரோகத்தினால் ஆகாயத்தில் சந்திரன் போலவும், சூரியன் போலவும், நக்ஷத்திரங்களைப் போலவும் பிரகாசமான போலியுருவங்கள் தோன்றும். மின்னலொளியும், பளிங்கு போல் நிர்மலமாய் ஒளிவீசும் வேறு வித ரூபங்களும் புலப்படும். அந்த லிங்கநாசமே நீலிகா என்றும், திமிரமே காசம் என்றும் வேறு பெயர்களாலும் வழங்கப்படும். 29—4½.

திமிரரோகங்களில் வாதாதிகளின் இலக்ஷணங்கள் :— (1) வாததோஷத்தினால் உருவங்கள் சுழன்றசைவது போலவும், அழுக்கடைந்தவை போலவும், செந்நிறமாயிருப்பவைபோலவும், வக்கிரமாகவும் புலப்படும்[2]. (2) சூரியன் மின்மினிப்பூச்சி - இந்திரதனுஸ் - மின்னல் இவற்றைப்போன்ற உருவங்களும், மயில் நர்த்தனம் செய்வதுபோல அநேகவித நிறங்களின் தோற்றங்களும் பித்ததோஷத்தினால் புலப்படும்; மேலும் பொதுவாக எதுவுமே நீலநிறமாகவும் தோன்றும். (3) கபதோஷத்தினால் உருவங்கள் ஸ்நிக்தமாகவும், வெண்மையாகவும், தண்ணீரால் நனைக்கப்பட்டவைபோல மிகவும் கரித்துத் திமிர்த்தவையாகவும் காணப்படும். (மேலும் பார்க்கப்படுபவையெல்லாம் ஸ்தூலமாகவும், ஆகாயம் மேகங்கள் சூழ்ந்தது போலவும் தோன்றும்.) (4) இரத்ததோஷ ஸம்பந்தத்தினால் உருவங்கள் செந்நிறமாகவும், பலவகையான இருளடர்ந்த தோற்ற [illegible] நிறமாகவும், [illegible] மாகவும் காணப்படும். (5) ஸந்நிபாததோஷத்தினால் உருவங்கள் பலநிறமுள்ளவையாகவும், ஒன்றிருக்க [illegible] இரண்டு அல்லது அநேகம் போலவும், எவ்விகாரமுமில்லாமலிருப்பினும் அங்க ஹீனமடைந்தவை போலவும் தோற்றும். மேலும் எங்கும் எல்லா உருவங்களும் வியாபித்திருப்பது போலவும், அனேகமாய் எல்லாம் ஜோதிமயமாகவும் திருஷ்டியிற்படும். (6) பித்தத்தினுடைய

---

1. லிங்கம் என்பதற்கு இந்த்ரியசக்தி யென்று பொருள். நேத்திரத்திற்குப் பார்வையென்பது சக்தி; அந்தச் சக்தி இழக்கப்படுவதால் லிங்கநாசம் என்கிற பெயர் வந்தது. [முன்பு மூன்றும் படலத்தைப்பற்றிய காசம் அல்லது திமிரம் என்னும் விகாரமும் தகுந்த சிகித்ஸை செய்யப்படாவிடில் நான்காம் படலத்திலும் வியாபித்து லிங்கநாசம் அல்லது நீலிகா என்கிற கடும் வியாதியை யுண்டுபண்ணும் என்று கருத்து. "மூன்றும் படலத்தைப்பற்றிய அந்த வியாதி காசம் எனப்படும்; அது யாப்யம். அது நான்காம் படலத்தை யடைந்தால் லிங்கநாசம் எனப்படுகிறது" என்கிற கதாதரன் முதலியவருடைய கொள்கைப்படி நீலிகா முதலிய இம்மூன்றும் ஒரே வியாதியைக் குறிக்கும் பர்யாய பதங்களாம்.]

2. வாதத்தின் இயற்கைத் தன்மையினால, ஒரு படலத்தைப் பற்றியதாயினும், எல்லாப் படலங்களிலும் இவ்வியாதி பரவுமென்று கூறப்படுகிறது.

தேஜோம்சமான இரத்ததாதுவினால் அபிவ்ருத்தியடைந்த பித்ததோஷமானது பரிம்லாயி என்கிற திமிரரோகத்தை யுண்டுபண்ணும். இவ்வியாதியில் திசைகள் பசுமை நிறமாகக் காணப்படும்;[1] ஆகாயத்தில் சூரியனைப்போலவும், மின்மினிகளைப் போலவும் உருவங்கள் தோன்றும்; மரங்கள் மின்மினிகளாலும் இதர தேஜஸ்ஸுகளாலும் வியாபிக்கப்பட்டவை போலவும் புலப்படும்[2]. (7) இரு நிறபேதங்களைக்கொண்டு அறுவகைப்பட்ட லிங்நாசம் என்னும் வியாதி விவரிக்கப்படும்[3]. வாததோஷத்தில் செந்நிறமாகவும்; ம்லாயி அல்லது பரிம்லாயி என்பதில் நீலமாகவும், பித்தத்திலும் அவ்விதமே கறுவலாகவும், கபத்தில் வெண்மையாகவும், இரத்ததோஷத்தில் சிவப்பாகவும், ஸந்நிபாதத்தாலுண்டானதில் பல நிறமும் இவ்வியாதியில் தோன்றும். (1) வாததோஷத்தினாலான லிங்கநாசத்தினால் செந்நிறமாகவும், பருத்துச் சிவந்த பிங்கான் சில்லியைப்போன்றதாகவுமுள்ள ஒருவித மண்டலம் திருஷ்டியில் உண்டாகும்; அது சஞ்சலமாகவும், கடினம்ாகவுமிருக்கும். (2) "பரிம்லாயி லிங்கநாசத்தில்" அந்த மண்டலம் நீல்நிறமாகவும், மிக்க வாட்டமுள்ளதாகவும்[4] இருக்கும்; அதில் தற்செயலாக தோஷம் குன்றி வருமானால் ஒருக்கால் இதில் பார்க்கும் சக்தி திருஷ்டிக்கு உண்டாகலாம். (3) பித்த தோஷத்தினாலான லிங்கநாசத்தில் மண்டலமானது சிறிது கறுப்பாகவும், அல்லது வெண்கல நிறமாகவும், பசுமையாகவும் தோன்றும். (4) காசத்தில் சுக்லமானது வெகுவாகப் பசுமையாய் அல்லது சங்கு-மல்லிகை-சந்திரன் இவற்றின் ஒளிபோன்றதாய், தாமரையிலையில் அசைந்தாடும் வெண்மையான ஜலபிந்துவைப்போல் காணப்படும்; கண்ணைப் பிசைந்து அழுந்தத் துடைத்தால் அந்த மண்டலம் ஒருவாறு பரவி நிற்பதாகத் தெரியும்[5]. (5) இரத்த தோஷத்

---

1. பசுமை யென்பதற்குப் பதிலாக இந்த வியாதியில் நிறம் நீலமாயிருக்குமென்று ஸ்ரீகண்டதத்தன்.

2. இதைப்பற்றி விதேஹர்கூறுவதாவது :—"இரத்தப்பிரஸாதமென்கிற தேஜோதாதுவால் வாதம் விருத்தியாய், ம்லாயி என்கிற வியாதி யுண்டாம்; காசம் என்றும் கூறப்படும்; இது யாப்யவியாதி". சிலர் இரத்த தோஷ-பித்த தோஷங்களால் இது உண்டாகுமென்பர்.

3. முன்பு திமிரம் என்னும் நிலைமையில் திருஷ்டியைப்பற்றி விவரித்த ஆறுவித பேதங்களும் தோஷங்களையே முக்கியாதாரமாயுடையன; இங்கு லிங்கநாச நிலைமையில் முக்கியமாக நிறங்களையாதாரமாகக் கொண்டு ஆறு பேதங்கள் கற்பிக்கப்படுகின்றன.

4. 'ம்லாயி' என்பதற்கு வாட்டமென்று ஸாதாரணப் பொருள்; 'பசுமையும் நீலமும் கலந்த நிறமுள்ளது என்று ம்லாயி என்பதன் பொருள்' என்றும் சிலர். "பரிம்லாயி லிங்கநாசத்தில் மண்டலமானது திருஷ்டியில் பெரிய காசமணியைப்போலவும் நெருப்பைப் போலவும் காணப்படும்" என்று கதாதரன்.

5. கபதோஷத்தினாலான லிங்கநாசத்தில் "கண்மண்டலம் வெயிலில் சுருங்கி நிழலில் விரிவடையும்" என்பர்.

தினாலான மண்டலம் பவளம் போலவும், தாமரை மலரின் இதழ் போலவும் ஒருவாறு சிவப்பாகக் காணப்படும். (6) ஸந்நிபாதத்தினுலுண்டான லிங்கநாசத்தில் திருஷ்டியில் பல வர்ணங்கள் தோன்றும். மேலும் இந்த நேத்திரதோஷங்களில் ஒவ்வொன்றிலும் வாதாதி தோஷம் ஒவ்வொன்றின் மற்றக் குறிகளும் அததற் கேற்றவாறு உண்டாகும். இங்ஙனம் லிங்கநாச • திமிரங்களின் பெயரால் பன்னிரண்டுவித வியாதிகள் திருஷ்டியைப்பற்றி கூறப்பட்டன. 41—54½.

விதக்த்ததிருஷ்டி முதலியன.—(1) பித்த விகாரத்தினுல் திருஷ்டி பாகம் சிறிது நிலையாகப் பசுமை நிறமடையுமானுல், உருவங்கள் மஞ்சள் நிறமாகத் தோற்றும்[1]; அது பித்த விதக்த்த திருஷ்டி எனப்படும். இதில் பித்ததோஷம் மூன்றும் படலத்தைப்பற்றிக் கொண்டால் பகலில் எதையும் பார்க்க முடியாது ; [2] இரவில் கண் தெரியும் ; இரவில் காலத்திற்கியல்பான குளிர்ச்சியினுல் திருஷ்டி குளிர்ந்து, பித்தமும் குறைவதால் அவ்விதம் பார்வை தெளிகிறது. (2) அங்ஙனமே கபதோஷத்தினுல் திருஷ்டி பாகம் தாக்கப்பட, பார்க்கப்படுபவை யாவும் வெண்மையாகத் தோற்றும்.[3] இது சிலேஷ்ம விதக்த்த திருஷ்டி யெனப்படும். கபதோஷம் மூன்று படலங்களிலும் சிறிது வியாபிக்க, அதனுல் வலிய நக்தாந்த்யம் என்கிற இரவிற் கண் தெரியா நிலைமையுண்டாம். பகலில் திருஷ்டி சூர்யரச்மியினுல் தெளிந்து சுய ஸ்திதியையடைந்து, கபம் குறைவதால், வஸ்துக்களை நன்கு பார்க்க முடியும். (3) மனத்துயரம், ஜ்வரம், ஆயாஸம், சிரோவேதனை இவற்றுல் திருஷ்டி தாக்கப்பட்டு, பார்க்கப்படுபவை யாவும் புகை படிந்தவை போலத் தோற்றும் ; அப்பிணியாளி தூமதர்சீ யெனப்படுகிருன். (4) பகல் நேரங்களில் உருவங்கள் இயற்கையளவினும் குறுகியவையாகவும், வெகுப் பிரயாஸையினுல் பார்க்கக்கூடியவையாகவும் தோன்றுமானுல் அது ஹ்ரஸ்வ ஜாட்யம் எனப்படுகிறது.[4] (5) திருஷ்டி பாகம் தோஷங்களால் வியாபிக்கப்பட்டு[5], கிரிப் பிள்ளையின் திருஷ்டிக்குச் சமமான நிறமுடையதாகத் துலங்கித் தோன்றினுல், பகலில் பலவிதமான நிறமுள்ளவையாக உரு

---

1. அடுத்தாற்போல " இதே தோஷம் மூன்றும் படலத்தைப் பற்றியது " என்று மொழிவதை யனுஸரித்து இக்கோளாறு முதல் இரண்டாம் படலங்களைப்பற்றிய தென்று கருதப்படுகிறது.

2. இக்கோளாறு திவாந்தம் என்று வழங்கப்படும்.

3. இதிலும் வியாதி முதல் இரண்டாம் படலத்தைப்பற்றியுண்டாய், பிறகு மூன்ருவது படலத்தையும் தாக்குகிறது.

4. இந்த வியாதியில் தோஷம் திருஷ்டியின் மத்திய பாகத்தை யடைந்திருக்கும்.

5. தோஷங்கள் என்பதால் ஸந்நிபாத தோஷம் குறிக்கப்படுகிறது.

வங்கள் காணப்பட்டால் அவ்வியாதி நகுலாந்த்யம் எனப்படும்[1]. (6) திருஷ்டிபாகம் வாதத்தினால் ஆக்கிரமிக்கப்பட வக்கிரத்தன்மையையும், உட்புறமாகக் குறுகலையும் அடையும்; வெகு ஆழ்ந்த பாகத்தில் வலியும் உண்டாம்; இதை கம்பீரிகா என்பர்[2]. (7) ஆகந்துக லிங்க நாசங்கள்[3] :—வெளிமுகாந்தரங்களால் ஸநிமித்தம், அநிமித்தம் என்று இரண்டு வித லிங்கநாசங்கள் கூறப்படும்[4]. (1) சிரஸ்ஸிலுண்டாகிற பலமான தாபத்தினால் அபிஷ்யந்த லக்ஷணங்களோடு உண்டாவதை[5] ஸநிமித்த பாஹ்யலிங்கநாசம் என்றறிக. (2) திருஷ்டியானது தேவர், முனிவர், கந்தர்வர், மஹாநாகங்கள் ஆகியவற்றின் பார்வையினாலும், சூரியனை யுற்று நோக்குவதாலும் கெடுமானால் அது அநிமித்த பாஹ்யலிங்கநாசம் எனப்படும். இதில் கண் மிகத் தெளிவாகவும், திருஷ்டிபாகம் வைதூர்யமணி நிறமாய் நிர்மலமாகவும் துலங்கும். 55—64.

## சுக்ல பாகத்தைப்பற்றிய ரோகங்கள்[6]

(1) வெண்மண்டலத்தில் கனமில்லாததாகவும், விசாலமான பாகத்தில் பரவியதாகவும, சிறிது கருநிறம் கலந்து சிவப்பாகவுமுள்ள ஒருவித மாம்ஸவளர்ச்சிக்கு பிரஸ்தார்யர்மம் என்று பெயர்[7]. (2) மிருதுவாகவும், ஒருவாறு வெளிறியதாகவுமுள்ள மாம்ஸம் சுக்ல பாகத்தில் படரும்; இது விருத்தியாவதற்கு நீடித்த காலம் செல்லும்;

---

1. "நகுலாந்த்யமும், ஹ்ரஸ்வஜாட்யமும் நக்தாந்த்யம் என்கிற கோளாறையுண்டு பண்ணும். அதாவது இரவிற் கண் தெரியாது. நகுலாந்த்ய ஹ்ரஸ்வ ஜாட்யங்கள் இரண்டும் நான்காம் படலத்தை ஆச்ரயித்தவை ; நிறங்களைப் பெற்றுவிடுவதால் அஸாத்யங்கள்" என்று விதேஹர்.

2. கம்பீரமான பாகங்களை ஆச்ரயித்து, ஸகல படலங்களையும் பற்றிய இவ்வியாதி அஸாத்ய வியாதி யென்று ஸுச்ருதர்.

3. "பாஹ்ய்லிங்கநாசம்" அல்லது "பாஹ்ய திருஷ்டி ரோகம்" என்றும் இது வழங்கப்படுகிறது.

4. ஸநிமித்தம்—வெளிப்படையான காரணத்தினால் உண்டாவது; அநிமித்தம்—வெளிப்படையாக அறியமுடியாத காரணமுள்ளது.

5. இங்கே அபிஷ்யந்தம் என்பதற்கு இரத்தாபிஷ்யந்தமென்று கருத்து என கதாதரன். பாஹ்ய ரோகங்களான இவ்விரண்டையும் ஸந்நிபாதஜரோகவர்க்கத்தில் ஸுச்ருதர் சேர்த்துப்படித்திருப்பதால், இங்கு த்ரிதோஷஜாபிஷ்யந்தத்தின் லக்ஷணமே குறிக்கப்படுவதாக கார்த்திகன் என்பவர் கூறுகிறார். இவ்விரண்டு பாஹ்ய தோஷஸம்பந்தமான வியாதிகளும் அஸாத்யங்கள்.

6. சுக்லபாகம்—நேத்திரகோளத்தின் வெண்மண்டலம்.

7. அர்மம்—நேத்திரத்திலுண்டாகும் மாம்ஸவளர்ச்சி. (முக்கியமாக அது வெண்மண்டலத்தைப் பற்றியது.) "ஒருவித கருஞ்சிவப்பான மாம்ஸவளர்ச்சி வெண்மண்டலத்தில் ஸந்நிபாத தோஷத்தால் வளர்கிறது ; இது பிரஸ்தார்யர்மம் எனப்படுகிறது" என்று நிமி.

இது சுக்லார்மம்[1] எனப்படும். (3) சுக்ல மண்டலத்தில் செந்தாமரையிதழ் போன்று சென்னிறமாகவும, மிருதுவாகவுமுள்ள மாம்ஸம் மேன்மேலும் விருத்தியாவதுண்டு; அது இரக்தார்மம் எனப்படுகிறது. (4) விசாலமாகவும், மிருதுவாகவும், கனமாகவும், நிறம் முதலியதில் யக்ருத் என்கிற கல்லீரலைப் போன்றதாகவும் வெண் மண்டலத்தில் உண்டாகும் மாம்ஸ வளர்ச்சி அதிமாம்ஸார்மம் எனப்படும். (5) கடினமாகவும், பரவுந்தன்மையதாகவும், அதிக மாம்ஸமடர்ந்ததாகவும், சுஷ்கமாகவுமுள்ள ஐந்தாவதான மாம்ஸவளர்ச்சிக்கு ஸ்நாய்வர்மம் என்று பெயர்[2]. (6) மாம்ஸம் போன்ற தோற்றமும், கபில்நிறமும், நத்தை போன்ற உருவமுமுள்ள புள்ளிகள் சுக்ல மண்டலத்தைப்பற்றி உண்டாவதுண்டு; அவ்வியாதிக்கு சுக்தி என்று பெயர்[3]. (7) வெண்மண்டலத்தில் முயலின் இரத்தம் போன்றதாய் ஒரு புள்ளி தோன்றும்; அதை அர்ஜுநம் என்பார்கள். (8) சுக்லபாகத்தில் கப-வாதங்களுடைய பிரகோபத்தினால் பிஷ்டம் போன்ற[4] ஒருவித சதைவளர்ச்சி கிளம்பும்; அது மலினமான கண்ணாடிபோல் தோன்றும்; அவ்வியாதியை பிஷ்டகம் என்றறிக. (9) வெண்மண்டலத்தில் ஸிரைகளென்கிற நுண்ணிய இரத்த நாளங்களின் வலை போன்ற வளர்ச்சி ஸிராஜாலம் எனப்படும்; இதில் பின்னிக்கொண்டுள்ள ஸிரைகள் கடினமாகவும், சிறிது சிவப்பாகவும், விசாலமாகவு மிருக்கும். (10) சுக்லபாகத்தைப்பற்றியவையாய், ஸிரைகளால் சூழப்பட்டு, கருவிழிக்கு அருகில் வெண்மையான பிடகைகள் உண்டாம்; அதை ஸிராஜபிடகை என்பார்கள். (11) கண்ணின் வெண்மண்டலத்தில் வெண்கல நிறமாகவும், ஜலபிந்து போன்றதாகவும், கடினமாகவும் உண்டாகிற வளர்ச்சி[5] பலாஸக்கிர

---

1. சுக்லார்மம் கபதோஷத்தினால் உண்டாவதாகவும், அதனாலேயே மெதுவாக விருத்தியாவதாகவும் ஸ்ரீ கண்டதத்தன்.

2. "பிரஸ்தார்யர்மத்தில் திரவாம்சம் வாடி சோஷிப்பிக்கப்படுவதால் அந்த அர்மம் பசையற்றதாய்விடும்; அதுவே ஸ்நாயவர்மம் எனப்படுகிறது" என்று நிமி.

3. இவ்வியாதியைப்பற்றி வாக்படர் கூறுவதாவது:—"கண்ணின் வெண்மண்டலத்தில் பித்தம் ஒருவாறு கபில நிறமான புள்ளிகளையுண்டுபண்ணும்; அவை அழுக்கடைந்த கண்ணாடி போலவாவது சுக்லபாகத்தில் முற்றிலும் வியாபித்தாவது இருக்கும்; அழற்சியிராது; நாவறட்சி, பேதி, ஜ்வரம் இவையும் உண்டாம்; இது சுக்திகா எனப்படும்". ஆனால் அழுக்கடைந்த கண்ணாடியின் திருஷ்டாந்தம் இக்கிரந்தத்தில் பிஷ்டகமென்கிற ரோகத்துக்குக் கூறப்படுகிறது.

4. பிஷ்டம் — உத்வர்த்தநசூரணம் அல்லது நலங்குப் பொடியென்று வழங்கப்படும் ஒருவித மாப்பண்டம்.

5. பலாஸம் என்றால் கபம்; கபம் உறைந்து கடினமான வளர்ச்சி யேற்படும் வியாதி. இதில் வாத தோஷமும் சேருகிறது. "சுக்லபாகத்தில் வாதத்தினால் சிலேஷ்மம் இறுக்கப்பட்டு, ஜலபிந்துவைப்போல் எழும்பி கடினமாக உண்டாகும் வளர்ச்சி பலாஸக்கிரதிதம் எனப்படுகிறது; பார்ப்பதற்கு உருட்சியாகவும் இருக்கும்' என்று விதேஹர்.

திதம் எனப்படுகிறது [1]. (12) கண்குவளையின் ஸந்தியிலுண்டான [2] வீக்கம் பக்குவமடைந்து, குத்தலை யுண்டுபண்ணி, துர்நாற்றமுள்ள சீழையும் வடிக்கும்; அது பூயாலஸம் எனப்படுகிறது. (13) திருஷ்டி ஸந்தியில் பெரிதான கிரந்தி யொன்றுண்டாகும்; அது பக்குவ மடைவதில்லை; அதிக அரிப்பையுண்டு பண்ணும்; வலியிராது; இது சிலேஷ்மோபநாஹம் எனப்படும் [3]. 65—71.

நாடீரோகங்கள் முதலியன.—வாதாதிதோஷங்கள் அச்ருமார்க்க மென்கிற கண்ணீர் வடியும் நாடிகளினூடாக ஸந்திபாகங்களிற் சென்று, அந்தந்த தோஷத்திற்கேற்ற இலக்ஷணங்களை யுடைய துர்நீர்களைப் பெருக்கும்; இந்த துர்நீர்ப் பெருக்கை சிலர் நேத்திர நாடீ யென்பார்கள். நான்குவிதமான இந்த நாடீரோகத்தின் இலக்ஷணங்கள் அடியிற் கூறப்படும். (1) ஸந்தியிலுண்டான வேக் காட்டுடன் கூடிய வீக்கத்தினால் சீழ்வடியுமானால் அவ்வியாதி பூயஸ்ராவம் [4] எனப்படுகிறது; அது ஸந்நிபாதத்தினாலுண்டாவது. (2) ஸந்தியிலிருந்து வெளுப்பாகவும், கனமாகவும், பிசுபிசுப்பாகவு முள்ள துர்நீர் வடியுமானால், அந்த ரோகம் சிலேஷ்மஸ்ராவம் எனப் படும். (3) இரக்தஸ்ராவமென்பது இரத்த தோஷத்தினாலான வியாதி; அதில் தோஷமடைந்த இரக்தம் மிகுதியாய் வெளிப்படும். (4) பித்த தோஷத்தால் மஞ்சளைப்போலப் பொன்னிறமாகவும், நீர்போன்ற தாகவும், உஷ்ணமாகவும் துர்நீர் ஸந்திகளின் மத்தியிலிருந்து வெளி

---

1. இந்தப் பிரகரணத்தில் வாக்படர் ஸிரோத்பாதம், ஸிரா ஹர்ஷம் என்கிற வியாதிகளையும் கூறுகிறார் :—சுக்லபாகத்தில் இரத்தக் கோடுகளைப்போன்ற இரத்த தோஷத்தால் உண்டாகும் ஒருவித வளர்ச்சியில் வேதனையோடு வீக்கமும், கண்ணீர்க்கசிவும் தோன்றும்; அதற்கு ஸிரோத்பாதம் என்று பெயர். அது உபேக்ஷிக் கப்பட்டால் இரத்தக்கொடிகளை அவ்வியாதி விருத்தி செய்து ஸிரா ஹர்ஷம் என்கிற வியாதியை யுண்டுபண்ணும்; அதில் கண்ணீர் வடி வதோடு, கண்ணைத் திறந்து பார்க்கவு மியலாது.''

2. நேத்திர ஸந்திகள்:—(1) பக்ஷ்ம-வர்த்ம ஸந்தி = அதாவது இமையும் இரெப்பையும் சேருமிடம். (2) வர்த்ம-சுக்ல ஸந்தி = இரெப்பையின் மாம்ஸ பாகமும் வெண்மடலும் சேருமிடம். (3) சுக்ல-கிருஷ்ணஸந்தி = வெண்மண்டலமும் கருவிழியும் சேருமிடம். (4) கிருஷ்ண-திருஷ்டி ஸந்தி = கருவிழியும் பாப்பா வென்கிற கண் மணியும் சேருமிடம். (5) கநீநிகா ஸந்தி = கன்னத்தின் பார்சமும் கண் குவளையும் சேருமிடம். (6) அபாங்கஸந்தி = கடைக்கண்ணில் இரு குவளைகள் சேருமிடம்.

3. சிலேஷ்மோபநாஹத்தில் கபதோஷத்தின் பலத்தினால் வலி யின்மை, அரிப்பு முதலியவை தோன்றுகின்றன. சிலேஷ்மோப நாஹமென்னும் கிரந்தி சிவப்பாகவும் கடினமாகவுமிருக்கு மென்றும் விதேஹர்.

4. இரண்டு அச்ருவஹ நாடிகள் (கண்ணீர்வடிக்கும் குழல்கள்) மூலமாகச் சீழ்வடியும் என்று பொருள்.

வரும்[1]. இது பித்தஸ்ராவம் எனப்படும். (5) இரத்த தோஷத்தினால் சிவப்பாகவும், கனமில்லாததாகவும், அழற்சி குத்தல் இவற்றுடன் கூடியதாகவும், வர்த்துளமான வீக்கமுடையதாகவும், கிருஷ்ண-சுக்ல ஸந்தியில் பர்வணி என்னும் வியாதியுண்டாகிறது. (6) முற்கூறிய பர்வணி என்னும் வியாதியின் இலக்ஷணங்களையே பெற்று கிருஷ்ண-சுக்ல ஸந்தியிலேயே அலஜீ எனப்படும் வியாதியுண்டாகிறது.[2] (7) வர்த்ம-சுக்ல ஸந்தியில் பலரூபமுள்ள கிருமிகள் உற்பத்தியாய், வர்த்மாவென்கிற இரெப்பையிலிருந்தும் இமையிலிருந்தும் அவற்றின் ஸந்திகளின் வாயிலாக நேத்திரத்தினுள் பிரவேசித்து அரிப்புண்டாக்கி அவ்வவயவத்தைக் கெடுத்துத் தின்றுவிடும்; இந்த வியாதிக்கு கிருமிக்கிரந்தி என்று பெயர். 72—76.

## வர்த்ம ரோகங்கள் [3]

(1) வர்த்மாவுக்குள் உட்புறம் முகமுடையதாய் சிவந்த ஒரு கட்டியுண்டாகும்; இரெப்பையின் மேற்புறமாகவும் அவ்வீக்கம் எழும்பி வெளியில் தோன்றும்; அது ஸ்த்தூலமாகவும் அதிக தினவுண்டுபண்ணுவதாகவும் இருக்கும்; ஸந்நிபாத ஸம்பந்தமான இது உத்ஸங்கபிட்கா என்று[4] கூறப்படும். (2) வர்த்மாவின் ஓரங்களில் ஊதிப் பருத்த கொப்புளங்கள் மாதுளை வித்துபோன்று ஸந்நிபாத தோஷத்தினால் கிளம்பும்; அவை உடைந்துகொண்டும் துர்நீரைப் பெருக்கிக்கொண்டுமிருக்கும். இப்பிடகைகள் கும்பீகைகள் எனப்படும். (3) துர்நீர்க்கசிவுள்ளவையாகவும், தினவுள்ளவையாகவும், கனமாகவும், செங்கடுகு போன்றவையாகவும், வலியுண்டுபண்ணுபவையுமான கொப்புளங்கள் போதகி என்று கூறப்படும். (4) கடினமாய் ஸத்தூலமாகவும், நுண்ணிய வேறு கொப்புளங்களால் சூழ்ப்பட்டதாகவும் உள்ள பிடகைக்கு வர்த்மசர்க்கரா என்று பெயர்;[5] இது

---

1. முற்கூறிய பூய - சிலேஷ்ம - இரத்த - பித்தங்களென்கிற நான்குவித ஸ்ராவவியாதிகளும் அஸாத்யங்கள்.

2. பர்வணி வியாதி, இரத்தத்தினாலும், வாத-கபதோஷங்களாலும் உண்டாவதாக ஸ்ரீகண்டதத்தன். அலஜீ-பர்வணி இரண்டுக்குமுள்ள பேதம் முதலியது விதேஹரது அடியிற் கூறப்படும் விவரணத்திலிருந்து தெரியவரும் :—" இரத்தம், கபம், வாதம் இம் மூன்றும் சுக்ல-கிருஷ்ண ஸந்தியில் விருத்தியடைய, அதனால் சிறு முளைபோன்ற பிடகை பர்வணீ யென்பதாயுண்டாகிறது. அது சிவப்பு, தாபம், எரித்தல் பசுமையான கண்ணீர் இவற்றுடன் கூடியது. கபம், பித்தம், இரத்தம் இவற்றை விருத்திசெய்து, சுக்ல - கிருஷ்ண ஸந்தியில் பசுமுலைபோன்ற பெரிய முளையையுண்டுபண்ணும்; குத்தல் கண்ணீர்களுடன் கூடிய இவ்வியாதி அலஜீ எனப்படும்.".

3. வர்த்மா என்பது இரெப்பையின் உட்புறம்.

4. உத்ஸங்க பிடகையென்பது கீழ் இரெப்பையினுள் உண்டாய், உடைகையில் கோழி முட்டையின் கருவைப்போன்ற துர்நீரைக் கசியச்செய்யும் ஒருவித கொப்புளம் என்று விதேஹர்.

5. இதையே விதேஹர் வர்த்மகர்க்கரிகா என்கிறார்.

வர்த்ம பாகத்தை தூஷிப்பிக்கிறது. (5) வர்த்மாவுக்குள் வெள்ளரி விதைகள்போல் தோன்றும் சில பிடகைகள் சொற்ப வேதனையுண்டு பண்ணும்; வழுவழுப்பாகவும், கடினமாகவுமிருக்கும்; அவ்வியாதி அர்சோவர்த்மா என்று [1] கூறப்படும். (6) வர்த்மாவுக்கு உட்புறத்தில் நீண்ட முளை கடினமாகவும், தடிப்பாகவும், அதிக வேதனையைத் தருவதாகவு முண்டாகும்; இந்த வியாதி சுஷ்கார்சஸ் எனப்படுகிறது[2]. (7) வர்த்மாவுக்குள் மந்தவேதனையும் அழற்சியும் குத்தலு முண்டுபண்ணியவாறு செந்நிறமாகவும், மிருதுவாகவும், நுண்ணியதாகவும் உண்டாகும் கட்டி அஞ்ஜநநாமிகா எனப்படும். (8) வர்த்மாவில் கடினமாகவும், உள் சர்மத்தின் நிறத்திற்குச் சமானமான வர்ண முள்ளவையுமான பிடகைகள் எல்லாப் பாகங்களிலும் நிரம்பிவிடுவதுண்டு; அது பஹுலவர்த்மா எனப்படும். (9) அரிப்புண்டாக்குவதும், சொற்ப நோவைக் கொடுப்பதுமான வர்த்மாவி லுண்டாகும் வீக்கத்தினால் பிணியாளி கண்ணை நன்கு மூட வியலாதவனாவான். அது வர்த்ம பந்தகம் எனப்படுகிறது. (10) மிருதுவாகவும், சொற்ப வேதனையோடும், திடீர் திடீரென்று ஏககாலத்தில் வர்த்மாவை முற்றிலும் சிவக்கச் செய்வதுமான வீக்கம் க்லிஷ்ட வர்த்மா எனப்படும். (11) க்லிஷ்டவர்த்மரோகத்திலேயே பித்தமும் சேர்ந்து இரத்தத்தைக் காந்தச்செய்தால், அப்பொழுது இரெப்பை துர்நீர்க்கசிவு முதலியதால் கொதிப்படைந்தது போலாகும்; அது வர்த்ம கர்தமம் எனப்படும். (12) எந்த வர்த்மாவானது உள்ளும் புறமும் நிறத்தில் கபிலமாகவும்[3], குத்தல் வலியுள்ளதாகவும் ஆகிறதோ அதை ச்யாவ வர்த்மா என்பார்கள். (13) வர்த்மாவில் வெளிப்புறத்தில் வீக்கமுண்டாய், அது வலியுண்டுபண்ணுததாகவு மிருந்து, உட்புறத்தில் மிகுதியாகக் கசிவையும் பெற்றிருந்தால் அதை பிரக்லிந்நவர்த்மா என்றறிக[4]. (14) எவனுடைய இரெப்பைகள் கழுவப்படாவிட்டாலும், அடிக்

---

1. "வர்த்மாவுக்கு உட்புறத்திலாவது வெளியிலாவது கடினமாகவும், வலியில்லாததுமான பிடகையுண்டாம்; ஸந்நிபாதத்தினாலுண்டாகிற இவ்வியாதி அர்சோவர்த்மா எனப்படும்" என்று நிமி.

2. "வர்த்மாவின் உட்புறத்தில் ஈரப்பசையற்ற சுஷ்கார்சஸ் என்னும் முளையுண்டாகும்; அது ஸ்த்தூலமாகவும், கடினமாகவும் இருக்கும்; இது ஸந்நிபாதத்தினாலுண்டாவது." என்று விதேஹர்.

3. உள்ளும் புறமும் கபில நிறமாதல் வாத தோஷக்கோளாறால் என்றறிக. "பிரகோபித்த வாயுவானது பித்த கபங்களையும் தூண்டி வர்த்மாவில் சேர்ந்து நெருப்பால் சுடப்பட்டதுபோல் கபில நிறத்தையுண்டுபண்ணும். அது ச்யாவவர்த்மா எனப்படும்" என்று விதேஹர்.

4. பிரக்லிந்நவர்த்மா ஸந்நிபாதத்தினாலுண்டாவதாகவும், அதற்குப் பில்லம் என்று பெயரென்பதாகவும் சக்ஷுஷ்யரென்பவர் கூறுகிறார். "அக்லிந்நவர்த்மா என்பதே பில்லம் என்றும் கூறப்படும்; அது பிரக்லிந்நவர்த்மாவினுடைய ஓர் அவஸ்த்தா பேதந்தான்" என்று மதுகோச வியாக்யாநம்.

கடியும் ஒட்டிக்கொண்டாலும், பக்குவமாகாதவையாகவு மிருந்தால் அவ்வியாதி அக்லிந்நவர்த்மா எனப்படும்[1]. (15) வர்த்மாவானது ஸந்திபாகத்தில்[2] தளர்ச்சியடைந்து, அசைந்தாடுவதில் ஸ்வாதீன மிழந்ததாய், நேத்திரம் மூட வியலாததாய்விடுமானால்[3] அதை வாதஹத வர்த்மா என்றறிக. (16) வர்த்மாவுக்கு உள்ளே உண்டானதும், வெளியில் மேடுபள்ளமாகத் தோற்றுவதும், கிரந்தியைப் போன்றதும், சொற்ப வேதனையுள்ளதும், சென்னிறமானதும், சீக்கிரத்தில் கிளம்பி மலருமியல்புடையதுமான கட்டி அர்புதம் எனப் படும். (17) வாயுவானது ஸந்திகளைப் பற்றியவையும், இமைகொட்டும் வேலையைச் செய்விப்பவையுமான நாடிகளிற் பிரவேசித்து, கண் இமைகளை எப்பொழுதும் ஆடச் செய்யும்; அந்த வியாதியை நிமேஷம் என்பார்கள்[4]. (18) வர்த்மாவின் மத்தியில் சிவப்பாகவும், மிருதுவாகவுமுள்ள முளை[5] கிளம்பும்; அறுக்க அறுக்க அது மீண்டும் கிளம்பி வளரும்; இரத்த தோஷத்தினாலான இவ்வியாதி சோணிதார்சஸ் எனப்படும். (19) பக்குவமடையாமலும், கடினமாகவும், ஸ்தூலமாகவும், வலியற்றதாகவும் வர்த்மாவுக்குள் உண்டாகிற கிரந்தி நகணம் எனப்படும். (20) மூன்று தோஷங்களும் ஒருமிக்கப் பிரகோபமடைந்து இரெப்பைக்கு வெளியில் மேலெழுந்து தோன்றுமாறு வீக்கத்தையுண்டுபண்ணி, அநேகம் த்வாரங்களையும் உட்புறத்திலுண்டாக்கி, உள்ளே துர்நீரையும் கசியச் செய்வதாலாகும் தாமரைக்கொடி போன்ற வீக்கத்தை பிஸவர்த்மா என்பார்கள்[6]. (21) வாதம் முதலிய தோஷங்கள் வர்த்மாவைச் சுருக்கிவிட்டால் அப்பொழுது கண்ணைத் திறந்து பார்ப்பது கஷ்டமாகும்; அந்த வியாதியை குஞ்சநம் என்பார்கள்[7]. (22) இமை

---

1. "பித்த கபங்களின் பிரகோபத்தால் வர்த்மாவின் உட்புறம் வெடிப்புள்ளதாகும்; மேலும் சிவப்பாகவும் உரோமங்களற்றதாகவும் அப்பாகம் ஆகும்; அது பில்லம்" என்று சிலர் பில்லத்திற்கு இலக்ஷணங்கள் கூறுவர்.

2. வர்த்ம-சுக்ல ஸந்தி என்று பொருள்.

3. மூடமுடியாமல் என்பதால், மூடியதைத் திறக்க முடியாமல் என்றுகூட பொருள் என்று மதுகோசவியாக்யாநம்.

4. நிமேஷம் என்றால் கண்கொட்டுதல் எனப் பொருள்.

5. மாம்ஸவளர்ச்சியாலானது இந்த முளை. இரத்த தோஷத்தினால் மாம்ஸ வளர்ச்சியுண்டாகிறது. "வாயுவானது இரத்தத்தை ஸிரைகளுடைய முகங்களிற் செலுத்தி அங்கிருந்த வண்ணம், சிவப்பான மாம்ஸமுளையை யுண்டுபண்ணும்; அது இரத்தத்தைப் போஷிக்கும்; அறுத்தால் வளரும்; வலியிராது; இது சோணிதார்சஸ் எனப்படுகிறது" என்று விதேஹர்.

6. "நுண்ணிய அநேகம் த்வாரங்களோடு கூடி வர்த்மா வீங்கிவிடுமானால் அது தாமரைக்கொடி போலிருக்கும்; ஆகவே அது பிஸவர்த்மா எனப்படும்" என்று ஸுச்ருத வியாக்யாநம் (சந்த்ரிகை).

7. குஞ்சநம்—சுருங்கிக் கொள்ளல் என்று பொருள்.

மயிர்கள் வாததோஷத்தினால் அசைத்துத் தள்ளப்பட்டு, கண்ணுக்குள் மடிந்து, நேத்திரத்தில் அடிக்கடி கரகரப்பையும் வீக்கத்தையும் உண்டுபண்ணுகின்றன ; அவ்விமை மயிர்கள் வேரிலிருந்து நழுவி கருவிழியிலும், வெண்மடலிலும் உதிர்ந்து நிற்கும் ; அதிக கடுமையான அவ்வியாதி பக்ஷ்மகோபம்[1] எனப்படும். (23) பித்தமானது பக்ஷ்மாசயம் என்கிற வர்த்ம பாகத்தைப்பற்றியதாய் இமைமயிர்களை உதிர்த்துவிடும் ; அவ்விடத்தில் அரிப்பும் அழற்சியும் பித்தத்தினாலுண்டாம். அதை பக்ஷ்மசாதம் எனக் கூறுவர்[2]. 77—100.

நேத்திரரோக ஸங்க்யை :—(நேத்திரரோகங்களுள் ஸந்நிபாதத்தாலானவை ஒன்பது. வர்த்மாவைப் பற்றியவை இருபத்தொன்று.[3]. சுக்லமென்கிற வெண்மண்டலத்தைப் பற்றியவை பதினொன்று. கருவிழியைப் பற்றியவை நான்கு. திருஷ்டியைப் பற்றியவை பன்னிரண்டு. நேத்திரத்தில் எல்லாப் பாகங்களையும் பற்றியுண்டாகுபவை பதினேழு. ஆகந்துக காரணங்களால் உண்டாகுபவை இரண்டு ; இவ்விரண்டும் மிகக் கடுமையானவை.)[4]

---

1. பக்ஷ்மகோபம்—இது ஸந்நிபாதத்தினாலுண்டாவதென்று ஸ்ரீ கண்டதத்தன். ஆனால் ஸுச்ருத வியாக்யாதாவான சந்த்ரிகாகாரர் இங்ஙனம் வேறுபாடம் கூறுகிறார் —“பக்ஷ்மாசயமென்கிற வர்த்மாவைப்பற்றிய தோஷங்கள் இமைமயிர்களை வெகு கூர்மையாகவும் உரப்பாகவும் செய்துவிடுகின்றன ; அவ்வித மயிர்களால் கண் அரைக்கப்பட்டு மிக வருந்தும் ; அந்த ரோமங்களை விலக்கும்போதெல்லாம் வேதனை நீங்கும்.” “இந்த வியாதியில் வாதம் பிரகோபித்து, அதனால் மற்றத் தோஷங்களும் விருத்தியடைந்து வியாதியையுண்டுபண்ணுகிறது” என்று விதேஹர். பக்ஷ்மகோபம் என்றால் இமை வீக்கம் என்று பொருள். [“வாதத்தினால் இமைமூடப்படும் ; வர்த்மாவுக்குள் பக்ஷ்மாவின் ஸமீபமாய் கோடங்கள் தோன்றும் ; இரெப்பையின் உட்புறமாக உரோமங்கள் முளைக்கும் ; அந்நிலைமை ஸந்நிபாதத்தால் காண்கிறது. உபபக்ஷ்மா என்று இதன் பெயர்.” என்று கல்யாணவிநிச்சய காரர் கூறுகிறார்.]

2. பக்ஷ்மசாதம் என்பதற்கு இமை மயிர் உதிர்தல் என்று பொருள். இந்த வியாதி கப-பித்தங்களால் உண்டாவது. [வாக்படர் இங்கே க்ருச்சிரோந்மீலநம் என்கிற வியாதியையும் விவரிக்கிறார் :—“வாததோஷம் வர்த்மாவைப் பற்றிய ஸிரைகளை ஆச்ரயித்து நோயை யுண்டுபண்ணும் ; நித்திரை செய்து எழுந்திருக்கும்போது இரெப்பைகள் மூடிக்கொள்ளும் ; வேதனையுண்டாம் ; கண்களில் மண் விழுந்து நிரம்பியது போன்று வலியெடுக்கும் ; திறப்பது வெகு கஷ்டமாகத் தோன்றும் ; கண்ணீர் சொரியும் ; மெதுவாகக் கண்ணைப் பிசைந்தால் வேதனை ஒருவாறு தணியும் ; இதை ‘க்ருச்சிரோந்மீலநம்’ என்று கூறுவர்.”]

3. வர்த்மரோகங்கள் 23-விதம் என்று விவரிக்கப்பட்டிருந்தாலும், அர்சோவந்தமா, சுஷ்கார்சஸ் இவ்விரண்டையும் நேத்திரார்சஸ் என்கிற ஒரே வியாதியாகவும், பக்ஷ்மகோபம், பக்ஷ்மசாதம் என்பவற்றை பக்ஷ்மதோஷம் என்னும் ஒரே வியாதியாகவும் கணக்கிடுவதால் வர்த்ம ரோகங்கள் 21-ஆகின்றன.

4. இக்கணக்குப்படி எழுபத்தாறு நேத்திரரோகங்கள்.

## 60. சிரோரோக நிதாநம்.

**சிரோரோகங்களின் ஸங்க்யா ஸம்ப்ராப்தி:**—வாத பித்த கபங்களால் தனித்தனியே ஒவ்வொரு வியாதியும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும், இரத்த தோஷத்தினுல் ஒன்றும், க்ஷயத்தினுல் ஒன்றும், கிருமிகளால் ஒன்றும், ஸூர்யாவர்த்தம், அனந்தவாதம், அர்த்தாவபேதம், சங்ககம் என்கிற பெயர்களைப் பெற்ற வேறு நான்கும் ஆகப் பதினொரு வியாதிகள் சிரஸ்ஸைப்பற்றியுண்டாகின்றன[1]. 1, 1½.

**தோஷஜ சிரோரோகங்கள்:**—(1) சிரோவேதனை கடுமையாக ஆகஸ்மிகமாயுண்டானுலும், இரவில் அவ்வேதனை அதிகரித்தாலும், சிரஸ்ஸைக் கட்டுதல்[2] - சூடுகளையுபயோகித்தல்[3] முதலியவற்றுல் தணிவடைவதாலும் அதை வாததோஷத்தினுலான சிரோரோகம் என்றறிக. (2) சிரஸ்ஸானது நெருப்புப்பற்றியதுபோல் சூடுள்ளதாகவும், நேத்திரமும் நாசியும் அழற்சியுள்ளவையாகவும் ஆனுல், சைத்தியோபசாரத்தினுலும், இரவு நேரத்திலும் நோய் தணிந்தால் அச்சிரோவேதனை பித்தத்தினுல் உண்டானதாய் அறிக. (3) சிரஸ்ஸானது கபத்தினுல் பூசப்பட்டதுபோலவும், குருவாகவும், எதனுலேயோ கட்டப்பட்டதுபோலவும், பரிசிப்பதற்கு மிகக் குளிர்ச்சியாகவுமிருந்தால், முகமும் வீங்கிய நேத்திரங்களுடையதாக இருந்தால் அச்சிரோரோகம் கபத்தினுலுண்டாவதாகும். (4) ஸந்நிபாத சிரோரோகத்தில், வாதாதி சிரோரோகங்களுக்குத் தனித் தனியே கூறிய எல்லாக் குறிகளும்[4] தோன்றும். 2—4½.

**விசேஷ சிரோரோகங்கள்:**—(1) இரத்ததோஷத்தினுலான சிரோரோகமானது பித்தசிரோரோகத்திற்கேற்ற இலக்ஷணங்களைப் பெற்றும், சிரஸ்பரிசித்தலையும் தாங்கக்கூடாததாகவுமிருந்தால் அது இரத்த சிரோரோகமாம். (2) சிரஸ்ஸிலடங்கிய இரத்தம், கபம், வாயு[5] ஆகி

---

1. சாலாக்ய தந்திரநிபுணர்கள் சிரோரோகங்கள் எல்லாம் பொதுவாக ஸந்நிபாதத்தினுல் உண்டாவதாகக் கூறுகிருர்கள்; வாத சிரோரோகம் முதலியதும் ஸந்நிபாத ஸம்பந்தமானவையே; ஸந்நிபாதத்திலும் வாதாதிதோஷங்களின் பிராபல்யத்தினுல் வாத சிரோரோகம், பித்த சிரோரோகம் முதலிய பேதங்கள் ஏற்படும்.

2. வஸ்திரம் முதலியதால் கட்டுதல்.

3. ஸ்வேதாதிகளால் (ஒத்தடம் செய்து) உஷ்ணப்படுத்தல்.

4. “ஸந்நிபாதசிரோரோகத்தில் வாதலக்ஷணங்களான வீக்கம் தலைச்சுற்றல், நடுக்கம் இவையும், பித்த லக்ஷணங்களான தாபம், வெறி, நாவறட்சி இவைகளும், கபலக்ஷணங்களான திமிர்ப்பு, குருத்வம் முதலியவையும் வெகு கடுமையாயுண்டாம்” என்று சரகர்.

5. ஊர்த்வகதி உள்ளதான உதாநவாயு என்று பொருள். [வாயு க்ஷீணித்தல் என்பது இவ்விடத்தில் பொருந்ாதென்றும், வாயு விருத்தியாலுலன்றி கடுமையான வலி முதலியது உண்டாகாதென்றும், வஸை கபம் முதலியவை சிரஸ்ஸில் க்ஷீணிப்பதால் க்ஷயஜ சிரோவேதனையுண்டாகுமென்று ஸுச்ருதாதிகள் கூறுவது யுக்தமென்றும், ஆகவே வாயு என்கிற பதத்தின் ஸ்த்தாநத்தில் கபம் என்பதைக் கூறுவதே யுக்தமென்றும் ஸ்ரீ கண்டதத்தன்.]

யவை க்ஷீணிப்பதால் சிரஸ்ஸில் க்ஷய ஸம்பந்தமான ரோகம் உண்டா கும்; தாங்கமுடியாத தீவ்ரவலி யுண்டாகும்; க்ஷயஜ சிரோரோகம் என் கிற இவ்வியாதி வெகு துன்பமளிப்பது; ஸ்வேத சிகித்ஸை, வமநசி கித்ஸை, தூமபானம், நஸ்யம், இரக்தமோக்ஷணம் இவற்றால் இந்த ரோகம் விருத்தியாகும்[1]. (3) சிரஸ்ஸில் கிருமிகள் சேர்ந்தால் சிரஸ் ஸானது ஊசியினால் மிகவும் குத்தப்படுவது போலவும், உட்புறத்தில் மெல்லப்படுவது போலவும், ஜந்துக்கள் நெளிவது போலவும் உணரப் படும்; நாசியிலிருந்து சீழும், வேறு துர்நீரும் வெளிவரும். (4) சூரி யன் உதயமாவதற்கு முன்பு சிறுகச் சிறுக நேத்திரம், புருவம் இவற் றில் வேதனை யாரம்பித்து, பிறகு கிரமமாக வலுவடையும்; சூரியன் மேலே கிளம்பக் கிளம்ப தலைநோயும் அதிகப்பட்டுவரும்; பிறகு சூரியன் மேல் திசையில் சாய்ந்து வருகையில் வேதனையும் கிரம மாகத் தணிவடையும்; ஸந்நிபாதத்தினாலான இது வெகு கஷ்ட ஸாத்யமானது. ஸூர்யாவர்த்தம் என்று இதைக் கூறுவர்[2]. (5) மூன்று தோஷங்களும் கோளாறடைந்து, மந்யா வென்கிற நாடி யைப் பிடித்து, கழுத்தின் பின்புறத்தில் மிகக் கடுமையான வலியைக் கொடுக்கும்; அவ்வேதனை கண்களிலும், புருவங்களிலும், கன்னத் திலும் விசேஷமாகத் தங்கி, தவடையின் பக்கமாய் நடுக்கலையும் உண்டுபண்ணும்; ஹநுக்கிரஹமென்கிற வாதநோயும், நேத்திரக்

---

1. "ஸ்வேத-வமந-தூமபாநாதிகளால் கபம் க்ஷீணிக்கும்; தீவ்ர மான தூம-நஸ்யாதிகளால் வஸை, மூளை முதலியவை க்ஷீணிக்கும்; இரத்தக்ஷயம் உண்டாம்" என்று ஸ்ரீ கண்டதத்தன். "சிரஸ் சூன்ய மாயிருப்பது போலவும் சுழலுவது போலவுமிருக்கும்; தலை குடையும்; கண்கள் சுழல மூர்ச்சையுண்டாம்; உடலிளைக்கும்; இவை க்ஷய சிரோரோக லக்ஷணங்கள்" என்று விதேஹர்.

2. ஸூர்யாவர்த்த ரோகம் வாத-பித்தங்களால் உண்டாவதாக ஸுச்ருதர். மேலும் குளிர்ச்சியான உபசாரங்களால் அவ்வியாதிக் குத் தணிவு ஒரு ஸமயம் உண்டாவதாகவும், மற்றொரு ஸமயம் உஷ் ணோபசாரத்தினால் தணிவுண்டாவதாகவும் கூறுகிறார். நிமியென்ப வர் கூறுவதாவது:— "சூரிய-சந்திரர்களுக்குச் சமானமாயுள்ள பித்த-வாதங்கள் இரண்டும் அவற்றிற்குள்ள உஷ்ண-சீத குணங் களால் ஆகஸ்மிகமாகக் கடும் வேதனையைச் சிரஸ்ஸில் முற்பகலில் உண்டாக்குகின்றன, சூரியனது கடுஞ்சூடு தணிந்து மாலைப் பொழுது நெருங்கி வருகையில் ஸ்ரோதோமார்க்கங்கள் என்கிற இரத்தக்குழாய்கள் ஒருவாறு சுருங்க நேர்வதால், பித்த குணம் தணிந்து சிலேஷ்மம் அவ்விடங்களில் விசேஷமாகப் பரவும்; அதை மீறி வாயுவும் தன் மார்க்கத்திற் செல்லத் துவக்குகிறது; அத னால் மாலை நேரம் நெருங்கும்போது வேதனை இவ்வியாதியில் தணி வடைகிறது." "பித்தமானது வாததோஷத்தை யனுஸரித்து, சிரஸ் ஸில் சயாவஸ்த்தை யடைந்து, நடுப்பகலில் சூரிய வெப்பத்தினால் விருத்தியடைந்து தலைவலியை யுண்டுபண்ணுகிறது; இச்சிரோரோ கம் அதிக கடுமையானது; மாலை நேரத்தில் தணியும். வாத-பித்தங் களாலான இவ்வியாதி ஸூர்யாவர்த்த விபர்யயம் எனப்படுகிறது," என்று மற்றொரு சிரோரோகத்தை விதேஹர் கூறுகிறார்.

கோளாறுகளும் இதனுலுண்டாம்; இச்சிரோரோகத்தை அநந்த வாதம் என்று வழங்குவர்[1]. (6) ருக்ஷமான உணவுகளையும் அத்யசந மென்கிற அஜீர்ண போஜனத்தையும் உண்பதாலும், கீழ்க்காற்று-பனி இவை தாக்குவதாலும், அதிக புணர்ச்சியினுலும், வேகங்களை அடக்குவதாலும், ஆயாஸத்தினுலும், மிதமிஞ்சிய வியாயாமத்தினுலும் வாதம் தனியாகவோ கபத்துடன் கூடியோ சிரஸ்ஸின் ஒரு பாரிசத்தைப் பற்றி, அதிக வலுப்பட்டு மந்யாவென்கிற நாடிப் பிரதேசத்திலும், ஒரு பக்கத்துப் புருவம் கன்னம் செவி கண் நெற்றி இவற்றிலும் வலியை யுண்டுபண்ணும்; சஸ்திரத்தினுல் தாக்கப்படுவதுபோலவும், அரணியினுல் கடையப்படுவது போலவும் தீவ்ரமான வலியுண்டாம்; இது அர்த்தாவபேதம் எனப்படும். இந்த நோய் அதிகமானுல் நேத்திரத்தையாவது செவியையாவது கெடுத்துப்போடும்.[2] (7) இரத்தம், பித்தம், வாயு இவை கோளாறடைந்து சங்கமென்கிற கன்னத்தில் சேர்ந்து தாங்கவியலாத நோவையும், அழற்சியையும், சிவப்பையும், வீக்கத்தையும் அவ்விடத்திற் கடுமையாயுண்டாக்குகின்றன; அவ்வீக்கம் முதலியது விஷத்தைப்போல் வெகு வேகமுள்ளதாய் தொண்டையையும், சிரஸ்ஸையும் அடைந்து மூன்று நாட்களில் பிராணுபாயத்தைத் தரக்கூடியதாகும். மூன்று தினங்கள் கழிந்த பிறகு சிகித்ஸித்தால் ஜீவிக்கக்கூடும். இதற்கு சங்ககம் என்று பெயர். 5—16½.

---

## 61. அஸ்ருக்தர நிதாநம்*

அஸ்ருக்தரத்தின் காரணுதிகள்:—(1) விருத்தமான மதுபானங்களாலும்,[3] அத்யசநத்தினுலும், அஜீர்ணத்தினுலும், கர்ப்பபாத மென்கிற கருவழிவாலும், அதிக புணர்ச்சியினுலும், வாஹனங்களிற் சவாரி செய்வதாலும், மனக்கிலேசத்தினுலும், அதிக இல்ங்கநாதிகளாலும், அதிக பாரங்களைச் சுமப்பதாலும், அபிகாதத்தினுலும், பகலிற் படுத்துறங்குவதாலும் பிரதரம் என்கிற அஸ்ருக்தர ரோகம் உண்

---

1. அநந்தவாதம் அந்யதோவாதத்தினும் பேதமில்லாத தென்பதைக் கருதி, ஸுச்ருதர் சிரோரோகங்கள் பத்து என்கிருர்.

2. அர்த்தாவபேதம்—ஒற்றைத்தலைவலி; இந்த நோய் ஸந்நிபாதத்தினுல் உண்டாவதாகவும், இது ஒரு பக்ஷத்திற்கு ஒரு முறையோ பத்து நாட்களுக்கு ஒரு முறையோ, அல்லது ஆகஸ்மிகமாகவோ கிளம்பி வருந்தச் செய்வதாகவும் ஸுச்ருதர்.

* அஸ்ருக்கரம்—இரத்தப்பெருக்கு என்று பொருள். தமிழில்பெரும்பாடு எனப்படும். இயற்கையில் மாதவிடாயில் வெளியாகும் இரத்த தோஷம் ஆர்த்தவம் என்றும், வியாதியால் அமிதமாய் வெளியாவது அஸ்ருக்தரம் என்றும் சோணிதப்பிரதரம் என்றும் கூறப்படும்.

3. கெட்டுப்போன அல்லது ஒன்ருெடொன்று விரோதகுணமுள்ள பதார்த்தக்களின் சேர்க்கையாலான மதுவகைகள்.

டாகிறது; சிலேஷ்மம், பித்தம், வாதம், ஸந்நிபாதம் இவற்றால் அது நான்கு வகைப்படும். (2) எல்லா அஸ்ருக்தரங்களிலும் பொதுலக்ஷணங்களாக உடலெல்லாம் நசுக்கப்பட்டது போன்ற குத்தலும் வேதனையும் உண்டாகும். (3) இவ்வியாதியில் இரத்தப் பெருக்கு அதிகமானால் பலக்குறைவு, தலைச்சுற்றல், மூர்ச்சை, வெறி, நாவறட்சி, தாபம், பிதற்றல், உடல் வெளிறிப் போதல், சோம்பல் இவையும், மற்றும் வாத ஸம்பந்தமான வியாதிகளும் உபத்திரவங்களாகத் தோன்றும். 1—3.

**கபாஸ்ருக்தரம்:**—சிலேஷ்ம தோஷத்தினாலான அஸ்ருக்தரத்தில் கருப்பையிலிருந்து வெளியாகும் ஆர்த்தவதோஷம் ஆமதோஷ மிச்ரமாகவும், பிசின் போன்றதாகவும், வெண்மையாகவும், இறைச்சி கழுவிய நீர் போன்றதாகவும்[1] இருக்கும். 3½.

**பித்தாஸ்ருக்தரம்:**—பித்த தோஷத்தினாலுண்டான அஸ்ருக்தர வியாதியில் வெளியாகும் தோஷம் பசுமையாகவும், நீலமாகவும், கறுப்பாகவும், சிவப்பாகவும், உஷ்ணமாகவும் இருக்கும்; மேலும் வெகு வேகமாகவும், பித்தத்திற்குச் சம்பந்தமான மற்றக் குறிகளைப் பெற்றதாகவுமிருக்கும். 4.

**வாதாஸ்ருக்தரம்:** — வாததோஷத்தினாலான அஸ்ருக்தரத்தில் தோஷமானது ரூக்ஷமாகவும், சிவந்தும், நுரைத்ததாகவும், அளவில் சொற்பமாகவும், மாம்ஸம் கழுவிய நீர் போன்றதாகவும் இருக்கும்; வாததோஷ ஸம்பந்தமான வலி முதலிய மற்றக் கோளாறுகளும் உண்டாகும். 4½.

**ஸந்நிபாதாஸ்ருக்தரம்:** — மூன்று தோஷங்களாலுமுண்டாகிற பிரதரத்தில் வெளியாகும் ஆர்த்தவமானது தேன் நிறமாகவும், அரிதாளம்போலவும், நெய் போன்றதாகவும், மஜ்ஜையைப் போன்றதாகவும், சவ நாற்றம் உள்ளதாகவும் இருக்கும். 5

**அஸாத்யமான அஸ்ருக்தரங்கள்:**—முற்கூறிய ஸந்நிபாதாஸ்ருக்தரம் அஸாத்யமானது. அடிக்கடியும் அதிக இரத்தப் பெருக்கு உண்டானாலும், நாவறட்சி-தாபம்-ஜ்வரம் இவை இருந்தாலும், பிணியாளி இரத்தம் க்ஷீணித்தும் மிக துர்பலமாகவுமிருந்தாலும், அவ்விதப் பிரதரங்களும் அஸாத்யமானவையாம். 6, 6½.

**சுத்தார்த்தவ லக்ஷணம்:**—மாதவிடாயி லுண்டாகும் ஆர்த்தவப் பெருக்கானது மாஸத்திற் கொரு முறை தோன்றும்; அது பிசுபிசுப்பில்லாததாகவும், அழற்சியையாவது வலியையாவது உண்டாக்காததாகவும், ஏறக்குறைய ஐந்து நாட்கள் தொடர்ச்சியாகவும், அளவில் மிதமாகவும் வெளியாகும்; அதன் நிறம் முயலிரத்தத்தைப் போல் காணப்படும்; அவ்வார்த்தவம் ஸம்பந்தித்த வஸ்திராதிகளைத் தண்ணீரில் நனைத்துக் கழுவினால் அதன் கறை நிற்காமல் போய்விடும். இவ்

---

1. அரிசிகழுவிய நீர் போன்றது எனவும் கூறுவர்.

விதமான ஆர்த்தவத்தையே தோஷமற்றதும் சிறந்த குணமுள்ளது மென்று[1] கூறுவர். 7—8½.

---

## 62. யோநிவியாபந் நிதாநம்.*

யோநிவியாபத்தின் பொதுக் காரணங்கள்:—ஸ்திரீகளுக்கு யோநியில் இருபது விதமான ரோகங்கள் உண்டாகும்; அவை முறை தவறான ஆஹார விஹாரங்களாலும், ஆர்த்தவ தோஷத்தினாலும், பீஜதோஷத்தினாலும், கர்ம வசத்தாலும் உண்டாகும். அவை தனித் தனியே இதனடியில் விவரிக்கப்படுகின்றன. 1, 1½.

வாதஜ யோநிரோகங்கள்:—(1) வாயுவால் கீழ்மேலாகப் புரட்டப்பட்ட யோநியிலிருந்து[2] ஆர்த்தவம் நுரைத்துப்போய் மிகத் தொந்தரவுடன் வெளிப்படும். அதற்கு உதாவர்த்தயோநி என்று பெயர். (2) மாதவிடாய் முற்றிலும் இல்லாமலே இருந்தால், அவ் வித யோநிரோகம் வந்த்யா எனப்படும்.[3] (3) எந்த யோநி ரோகத்தில் எப்பொழுதுமே வலியிருந்து கொண்டிருக்குமோ அது விப்லுதா எனப்படும். (4) புணரும்போது அதிக வலியுண்டானால் அக் கோளாறையுடைய யோநி பரிப்லுதா எனப்படுகிறது. (5) கடினமாகவும், விரைப்புள்ளதாகவும், குத்தல் வலி முதலியதால் வருந்துவதாகவுமுள்ள யோநி வாதலா எனப்படும். இதற்கு முன் கூறிய மற்ற நான்கு யோநி ரோகங்களிலுங்கூட வாத தோஷஸம்பந்தமான இதர வேதனைகளும் தோன்றும். 2—4.

பித்தஜ யோநிரோகங்கள்:—(1) அழற்சியைத் தந்து கொண்டு மிக்க இரத்தப் பெருக்கால் க்ஷீணிக்கும் யோநி இரக்தக்ஷயா எனப் படுகிறது. (2) வாத வேகத்துடன்கூட பீஜத்தை[4] ஆர்த்தவத்தோடு கக்கித் தள்ளும் யோநிக்கு வாமிநீ என்று பெயர். (3) வாதத்தினால் பிடிக்கப்பட்டு க்ஷோபமடைந்த கர்ப்பாசயம் தன் ஸ்த்தாநத்திலிருந்து ஒருவாறு நழுவும்; பிரஸவிப்பதிலும் அவ்வவயவம் அதிக துன்ப மனுபவிக்கும்; இதை பிரஸ்ரம்ஸிநீ என்பார்கள். (4) கர்ப்பாசயத்தி லிருந்து இரத்தம் மிகவும் க்ஷயிப்பதால் கர்ப்பம் இருந்திருந்து அழிந்துவிடும்; அவ்வித கருப்பை புத்திரக்நீ எனப்படும். (5) பித்தலா

---

1. எவ்விதமான வியாதி ஸம்பந்தமற்றதும், கர்ப்போற்பத்திக்கு அனுகூலமானதும் என்று கருத்து.

* யோநியென்கிற சொல் இங்கே யோநியையும், கருத்தரிப்பதற்கு ஆதாரமான கர்ப்பாசயத்தையும் குறிக்கிற பொதுப் பெயர். யோநியையும், கருப்பைவயயும் பற்றியுண்டாகிற கோளாறுகள் யோநிவியாபத் என்பதால் குறிக்கப்படுகின்றன.

2. கீழ் மேலாகப் புறண்டதும், அல்லது இடம்விட்டுப் புறண்டதுமான கர்ப்பாசயம் முக்கியமாக இதனால் குறிக்கப்படுகிறது.

3. மலட்டுத்தனமுள்ள கருப்பை யென்று பொருள்.

4. பீஜம்—சுக்லதாது என்று பொருள்.

என்கிற யோநி அதிக அழற்சியையும் வேக்காட்டையும் பெற்று ஜ்வரத்தையு முண்டுபண்ணும். முற்கூறிய மற்ற நான்கு பித்தஜ ரோகங்களிலும் பித்த ஸம்பந்தமான மற்றக் குறிகளும் அதிகமாகத் தோன்றும். 5—7.

சிலேஷ்மஜ யோநிரோகங்கள்:—(1) எவ்வளவு புணர்ச்சியினாலும் திருப்தி பெறாத யோநி அத்யாநந்தா எனப்படும். (2) யோநியில் இரத்த-கப தோஷங்களால் கர்ணிகை யென்கிற ஒருவித கிரந்தியுண் டாம்; அதற்குக் கர்ணிநீ யென்று பெயர். (3) புணரும்போது புருடனைக் காட்டிலும் முன்னதாகவே திருப்தியடைபவளுடைய யோநிக்கு அசரணா என்று பெயர். (4) அமிதமாகப் புணர்ச்சியில் விருப்பங்கொண்டு திருப்தியடையாமலிருந்தால் அவ்வித யோநி அதிசரணா என்று கூறப்படும்; இவ்விரண்டுவித விகாரங்களிலும் ஸ்த்ரீயானவள் கருத்தரிக்கமாட்டாள். (5) சிலேஷ்மஜா என்கிற யோநியானது அதிக பசையுள்ளதாகவும், அதிக அரிப்புள்ளதாகவும் இருக்கும். முற்கூறிய மற்ற நான்கு கப ஸம்பந்தமான கோளாறு களிலும் கபதோஷத்தின் மற்றக் குறிகளும் தோன்றுவதுண்டு- 8–10.

ஸந்நிபாதஜ யோநிரோகங்கள்:—(1) ஆர்த்தவம் உண்டாகாம லும், ஸ்தனம் வளராமலுமுள்ள ஸ்த்ரீ ஷண்டீ எனப்படுவாள். அவளது யோநி புணரும் போதும் பசையற்றிருக்கும். (2)உடல் மிகப் பெருத்துத் தொங்கியைப் பெற்ற ஸ்த்ரீக்கு யோநி வளர்ந்து தொங் கும்; இக்கோளாறுள்ள யோநிக்கு அண்டலீ என்று பெயர். (3) மிகவும் விரிந்துள்ள யோநி விவ்ருதா எனப்படுகிறது. (4) மிகவும் சுருங்கி ஊசியைப்போன்ற முகமுள்ளது ஸூசிவக்த்ரா என்று கூறப்படும். (5) எல்லாத் தோஷங்களுடையவும் கோளாறுகளை ஒருமிக்கப் பெற்றது ஸந்நிபாதஜா என்று கூறப்படும். முற்கூறிய மற்ற ஸந்நிபாதஜயோநி ரோகங்களிலும் த்ரிதோஷஸம்பந்தமான மற்றக் குறிகளும் காணும். ஸந்நிபாதத்தினால் உண்டாகிற இந்த ஐந்துவித யோநி ரோகங்களும் அஸாத்யங்களாகும். 11—13.

---

## 63. யோநிகந்த நிதாநம்.

யோநிகந்தத்தின் காரணாதிகள்: — பகலில் நித்திரையுறுவதா லும், அதிகமாகச் சினங்கொள்வதாலும், அதிக வியாயாமத்தினாலும், அமிதமான புணர்ச்சியாலும், நக-தந்தாதிகளால் காயம் படுவதாலும் வாதாதி தோஷங்கள் பிரகோபமடைந்து, இரத்தங் கலந்த சீழை விருத்தி செய்து, எலுமிச்சம் பழத்திற்கொப்பான வீக்கத்தை யோநி யில் உற்பத்தி செய்யும்; அது யோநிகந்தம் எனப்படும். 1, 2.

வாதஜயோநிகந்தம்: — யோநியில் புற்றுபோலுண்டான கந்த

---

* யோநிகந்தம்—யோநியிலுண்டாகும் ஒருவித சதை வளர்ச்சி: இதை யோநிப்புற்று என்று கூறுவதுண்டு. இவ்வியாதி பெரும்பா லும் கிழட்டு ஸ்த்ரீகளுக்குக் காண்பதாய் கருதுகிறார்கள்.

மென்னும் வீக்கம் ரூக்ஷமாகவும், கறுப்பாகவும், மடிப்புள்ளதாகவு மிருந்தால் அதை வாததோஷத்தாலுண்டானதாய் அறிக. 2½.

பித்தஜ யோநிகந்தம்:—யோநிப்புற்றானது அழற்சியையும் செந்நிறத்தையும் பெற்று, ஜ்வரம்மும் அதைத் தொடர்ந்திருந்தால் அதைப் பித்த தோஷத்தினாலுண்டானதாய் அறிக. 3.

சிலேஷ்மஜ யோநிகந்தம்:—அதிக தினவுள்ளதும் காசாம்பூ போன்ற நிறம் முதலியதைப் பெற்றதுமான யோநிகந்தம் கப தோஷத்தினாலுண்டானது. 3½.

ஸந்நிபாதஜ யோநிகந்தம்:—முற்கூறிய மூன்று தோஷக்களாலான யோநிகந்தங்களுடைய இலக்ஷணங்களை யெல்லாம் பெற்றுள்ள யோநிப்புற்று ஸந்நிபாத தோஷத்தினாலுண்டானதாம். 4.

---

## 64. மூடகர்ப்ப நிதானம்: *

மூடகர்ப்பத்தின் பொதுக் காரணங்கள்:—பயம், அடி தாக்குதல், தீக்ஷ்ணமும் உஷ்ணமுமான அன்ன பானங்களையுட்கொள்ளல் இக்காரணங்களால் கர்ப்பம் அகாலத்தில் வெளியாகும்; அப்போழுது வலியுடன் இரத்தம் வெளிப்படும்[1]. 1.

கர்ப்பவித்திரவம்:— நான்காவது மாதம் வரையில் முற்காரணங்களால் கருவழிவு நேரிட்டு, உள்ளிருக்கும் பிண்டம் கரைந்து நழுவினால் அதற்கு "கர்ப்பவித்திரவம்" என்று[2] பெயர். 1½.

கர்ப்ப பாதம்:—பிறகு ஐந்தாவது ஆறுவது மாதங்களில் கர்ப்பம் ஒருவாறு உருவடைந்து கெட்டிப்பட்டிருக்கும்; அக்காலங்களில் வெளியானால், அது "கர்ப்ப பாதம்" எனப்படுகிறது. 2.

அகாலப் பிரஸவம்:—முதிர்ந்துள்ள கர்ப்பமானது அபிகாதம், விஷமபோஜனம், வயிறு முதலியது அமுக்கப்படுதல் முதலான காரணங்களால், பக்குவமடைந்த கனி மரத்திலிருந்து வீழ்வது

---

* வாதம் பிரகோபித்து கருப்பையில் அதன் த்வாரத்தை மறைத்தோ, அல்லது வெளியாகும் சிசுவுக்குத் தடங்கலாகக் கருப்பை முதலியதை அடைத்தோ, வேறுவிதமாகவோ இயற்கைக்கு மாறான பிரஸவம் ஏற்படும் கோளாறு.

1. நோவுடன் இரத்தம் வெளியாதல் மூடகர்ப்பத்தின் பூர்வரூபம் எனப்படுகிறது.

2. நான்காம் மாதம் வரையில் கருவானது கெட்டியாகாமல் பெரும்பாலும் திரவரூபமாயிருக்குமாகையால், பசையுள்ள கனத் திரவம் போல ஸ்ரவித்து வெளியாகும். அதற்கேற்றவாறு "கர்ப்ப வித்திரவம்" என்று அதற்குப் பெயரிடப்பட்டது. "கர்ப்பம் மூன்றும் மாஸத்திலோ அதற்கு முன்போ வெளியானால், அது இரத்தாதிகளின் குழம்பை ஸ்ரவிக்கச் செய்யுமாகையால், அதற்கு கர்ப்ப ஸ்ராவம் என்று பெயர். பிறகு கனத்துப் பருத்து விழுந்து விடுகையில் அதை "கர்ப்பபாதம்" எனக் கூறுவர்" என்று போஜன்.

போல் அகாலத்திலேயே கருப்பையிலிருந்து விழுந்து விடுகின்றது. அதற்கு "அகாலப்பிரஸவம்" என்று[1] பெயர். 2½.

மூடகர்ப்பம்[2]:—வாயுவானது, அது சலிக்க வேண்டிய மார்க்கம் தடுக்கப்பட, யோநியிலும், வயிறு முதலிய விடங்களிலும் வலியை யும், மூத்திரத்திற்கு அடைப்பையும் தந்து, "மூடகர்ப்பம்" என்னும் வியாதியை யுண்டாக்குகிறது. பிறகு முரண்பட்டு முறை தவறுயசை யும் வாதத்தினுல் கர்ப்பமானது வளைக்கப்பட்டதாய், யோநிமார்க் கத்தை நோக்கி எண்ணிறந்த வகையில் முறை கேடாக அசைந்து வெளியாக முயலும். அவற்றுள் (1) சிசுவின் பருத்தத் தலையினுல் யோநிமார்க்கம் அடைக்கப்பட்டு அசைவது ஒரு வகை. (2) மற் றொருவகை கர்ப்பமானது தன் வயிற்றினுல் யோநியை நோக்கிச் சென்று குறுக்காக வழியை அடைத்துக் கொள்ளல். (3) கர்ப்பம் தன் சரீரத்தை ஒருக்களித்ததாய் ப்ருஷ்டபாகத்தின் மூலமாய் யோநியை நோக்கிச் சென்று வழியை அடைத்துக் கொள்வது. (4) ஒன்று தன் ஒரு கையை யோநிக்கு வெளியிற் செல்லுமாறு விட்டும், (5) மற்றொன்று இரண்டு கைகளையும் அங்ஙனமே வெளியிற் செல்ல விட்டும் கர்ப்பாசய த்வாரத்தை அடைத்து நிற்கும். (6) ஒரு கர்ப்பம் நிமிர்ந்துகொண்டு கருப்பையில் குறுக்காயிருந்து கொண்டு யோநி மார்க்கத்தை யடைத்துப்போடும். (7) கவிழ்ந்து குறுக்காயிருந்த வாறு கர்ப்பத்வாரத்தை யடைத்துப்போடுவது மற்றொரு வகை. (8) அங்ஙனமே ஒருச்சாய்ந்த வண்ணமசைந்து, விலாப்பக்கத்தினுல் அசைந்து, கர்ப்பத்வாரத்தை யடைப்பது மற்றொருவகை. இவ்விதம் முக்கியமாக எண்வகைப்பட்ட முறை தவறுன கதிகள் பிரஸவகாலத் தில் கர்ப்பத்திற்கு ஸம்பவிக்கும். இவற்றைத் தவிர வேறு நான்கு விதமான கதிகளும் இதன் கீழே கூறப்படும். 3—5.

மூடகர்ப்பத்தில் நான்கு வகைகள்:—கீலகம், பிரதிகுரம், பரிகம், பீஜகம் என்று வேறு நான்கு மூடகர்ப்பங்கள் உண்டு. அவற்றுள் (1) இரண்டு கைகளும், இரு கால்களும், சிரஸ்ஸும் மேல் நோக்கி நிற்க, ப்ருஷ்டபாகத்தினுல் சிசுவானது யோனிமார்க்கத்தைக் கீலம் என்கிற முளையைப் போல் அடைத்துக்கொள்வது கீலகம் எனப் படும். (2) அதற்கு நேர் எதிரிடையாய் யோனிமுகத்தில் இரண்டு கைகளும் இரண்டு கால்களும் வெளிவந்து நிற்க, சிரஸ்ஸும் அவ் விதமே கீழ் நோக்கியிருக்க, இந்நிலைமையில் யோனிமுகம் அடை பட்டு அக்கர்ப்பம் வெளிவர முடியாமலிருப்பது பிரதிகுரம் எனப் படும், (3) இரண்டு கைகளும், சிரஸ்ஸும் கர்ப்பத்வா

1. ஏழாவது மாதத்திற்குப் பிறகு அகாலத்தில் கர்ப்பம் வெளி யாவதை விக்ருதப் பிரஸவம் அல்லது விப்பிரஸவம் என்பர்.

2. மூட கர்ப்பம்—கர்ப்பத்தின் வழி மறிக்கப்படுதல். உசித மான பிரஸவகாலத்தில் கர்ப்பம் இயற்கைக்கு விரோதமாய் கர்ப் பாசயத்திலிருந்து வெளியாவதில் உண்டாகக் கூடிய முறைதவறுன ப்ரவ்ருத்திகள் மூடகர்ப்பம்.

ரத்தை நோக்கித் திரும்பி, அதை அடைத்துக்கொண்டு, கர்ப்பத்தின் சரீரம் மேலே தங்கி நின்றால் அந்நிலைமை பீஜகம் எனப்படும். (4) கர்ப்பம் கருப்பையில் யோனிக்குக் குறுக்காக உழல் மரம் போல நீண்டு அடைபட்டு நின்றால், அந்த நிலைமையை பரிகம் என்பார்கள். 6, 6½.

மூடகர்ப்பத்தில் அபாயக் குறிகள்:—தாய்க்குத் தலை தொங்கிட்டுப் போனாலும், உடல் மிகச் சீதளமானாலும், இலஜ்ஜை யிழந்து விட்டாலும், வயிற்றின்மீது இரத்த நாளங்கள் நீலநிறமாய் மேலெழுந்து தோன்றினாலும் அந்நிலைமை கர்ப்பத்திலுள்ள சிசுவையும், அச்சிசு அவளையும் இறக்கச் செய்யுந் தருணத்தி லிருப்பதாய் அறிக. 7.

சிசு கருப்பையில் இறத்தல்:—(1) கர்ப்பம் அசைவற்றிருத்தல், பிரஸவவேதனை யெனப்படுகிற ஆவி முற்றிலும் நீங்கிவிடுதல், உடல் ஒருவாறு கறுவலாகவோ வெண்மையாகவோ மாறுதல், மூச்சுக்காற்று துர்நாற்றமடைதல், தேஹம் வீங்குதல் ஆகியவை சிசு கருப்பையில் மரித்திருப்பதின் லக்ஷணங்களாம். (2) மாதாவினுடைய மனோவியாகுலங்கள், வெளிக் காரணங்களாலுண்டான வேறு துயரம் முதலியவை, பலவேறு வியாதிகள், இவை கர்ப்பத்தைப் பிடித்து அதைக் கருப்பையிலே இறக்கச் செய்யுங் காரணங்களாம். 8, 9,

கர்ப்பிணிகளுக்கு உண்டாகும் அஸாத்யமான கோளாறுகள்:—யோநிஸம்வரணம் என்கிற வியாதி[1], சிசு கருப்பையிலேயே பற்றிக்கொண்டு அசையாமலிருத்தல்,[2] மக்கல்லம்,[3] மற்றுமுள்ள உபத்திரவங்கள் ஆகியவை மூடகர்ப்பமென்கிற கோளாறைப் பெற்ற ஸ்திரீயைக் கொன்றுவிடும். 10.

## 65. ஸூதிகாரோக நிதானம்

மக்கல்லம்:—(பிரகோபமடைந்த வாயுவானது, பிரஸவித்த ஸ்திரீயினுடைய கருப்பையிலிருந்து வெளிவரும் உதிரத்தைத்

1. "வாததோஷத்தை விருத்திசெய்யக்கூடிய அன்னபானங்கள், புணர்ச்சி, நித்திரையின்மை இவற்றை அதிகமாய் அப்யஸிக்கும் கர்ப்பிணிக்கு யோனிமார்க்கத்திலுள்ள வாயுவானது பிரகோபித்து யோனித்வாரத்தை மூடிவிடும்; அவ்விதம் உள்ளடைந்த வாயு கர்ப்பத்திலுள்ள சிசுவைப் பிடித்து கர்ப்பாசயத்வாரத்தை அடைத்துப் போடும்; சிசுவும் அசுத்த வாதஸம்யோகத்தினால் இறந்துவிடும். அச்சிசு கீழ்ப்பக்கத்தில் தடுக்கப்பட்டுப் போக, மேல் நோக்கியெழும்பி மாதாவின் மார்பை அடைக்கும்; அதனால் மாதாவும் இறப்பாள். யமனுக்கொப்பான கடுமையான இந்த வியாதியை யோநிஸம்வரணம் என்றறிக."

2. இந்த நிலைமைக்கு கர்ப்பஸங்கம் என்று பெயர்.

3. "மக்கல்லம் என்பது கடுமையான ஒருவித ஸூதிகாரோகம். பிரஸவித்த ஸ்த்ரீக்கு அவசியமான ஔஷதங்களைக் கொடுத்து, துஷ்ட இரத்தம் முதலியதைச் சுத்தம் செய்யாமையால் இவ்வியாதியுண்டாகிறது" என்று ஸுச்ருதர்.

தடுத்து உள்ளடக்கி, இருதயத்திலும், சிரஸ்ஸிலும், வஸ்தியிலும் வலியையுண்டுபண்ணும். அதற்கு "மக்கல்லம்" என்று பெயர்.)

ஸூதிகாரோகம்:—உடல்வலி, ஜ்வரம், நடுக்கம், நாவறட்சி, தேஹம் பாரமாதல், வீக்கம், வலி, அதிஸாரம் ஆகிய இவை "ஸூதிகாரோகத்தின்" குறிகளாம்.[1] 1.

ஸூதிகாரோகத்தின் காரணங்கள்:—(1) பிரஸவித்திருக்கையில் முறை தவறுக உபசரித்தல், பிரஸவித்தவள் அதிக கிலேசம் அனுபவித்தல், விஷம போஜனம், அஜீர்ண போஜனம் இவற்றால் ஸூதிகைக்கு உண்டாகும் வியாதிகள் வெகு கொடியவையாம். (2) ஜ்வரம், அதிஸாரம், சோதை, குத்தல், வயிற்றுப் பொருமல், பலம் க்ஷீணித்தல் இவைகளும், சோம்பல்- அரோசகம்-வாயில் அதிக நீரூறுதல் ஆகிய கப-வாதங்களாலான பிணிகளும் வெகு கடுமையானவை. மாம்ஸபலம் க்ஷீணித்த நிலைமையிலுண்டாகும் இவை கஷ்டஸாத்யமான ஸூதிகாரோகங்கள்; ஸூதிகைக்கு உண்டாவதால் இவையும் "ஸூதிகாரோகங்கள்" எனப்படுகின்றன. 2—4.

---

## 66. ஸ்தனரோக நிதாநம்*

ஸ்தனரோக ஸம்ப்ராப்தி:—கர்ப்பிணியாகவோ ஸூதிகையாகவோ உள்ள ஸ்த்ரீக்கு பாலுள்ளவையான ஸ்தனங்களில் தோஷம் பிரவேசித்து,[2] அவற்றின் மாம்ஸத்தையும் இரத்தத்தையும் தூஷிப்பித்து, ஸ்தனரோகத்தை[3] யுண்டுபண்ணுகிறது. 1.

ஸ்தனரோகங்கள் ஐந்து:—ஐந்துவித ஸ்தன வித்ரதிகள் உண்டு. இரக்தவித்ரதியைத் தவிர்த்து முற்கூறிய மற்ற ஐந்து வித்ரதிகளுடைய இலக்ஷணங்களே இவ்வைந்து வித ஸ்தன வித்ரதிகளிலும் தோன்றும்.[4] 2.

---

1. ஸூதிகா—பிரஸவித்த ஸ்த்ரீ. அவளுக்கு உண்டாகும் கோளாறுகள் "ஸூதிகாரோகங்கள்".

*ஸ்தனரோகங்கள்—ஸ்தனத்திலுண்டாகும் பலவித வித்ரதிகள்

2. பிரஸவ ஸமயத்தில் ஸ்தனங்களின் ஸ்ரோதஸ்ஸுகளென்கிற க்ஷீரக் குழாய் முதலியவை விரிவடைவதால், அத்துவாரங்களினூடே தோஷம் அவ்வயவங்களுக்குள் ஊடுருவிச் செல்லும்

3. "ஸ்தனரோகம்" என்பதே ஸ்தனகோபம் எனப்படும்.

4 வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம், ஆகந்துகம் என்கிற காரணங்களால் ஸ்தன வித்ரதிகள் ஐந்து. ஆகந்துக ஸ்தனரோகம் அபிகாதத்தினுலாவது, சல்யம் பிரவேசிப்பதாலாவது உண்டாம். ஐந்து வித பொதுவான வித்ரதிகளின் இலக்ஷணங்களைப்பற்றி இதற்கு முன் 40-வது அத்தியாயத்தைப் பார்க்க.

## 67. ஸ்தந்யதோஷ நிதாநம்.*

ஸ்தந்யதோஷத்தின் காரணங்கள் :—குருவாகவும், பலவகையாகவுமுள்ள உணவுகளால் விகாரமடைந்த தோஷங்கள் தாயின் பாலைத் தூஷிப்பிக்கும் ; அவ்விதமான பால் குழந்தைக்குப் பலவகையான நோய்களையுண்டுபண்ணும். 1.

ஸ்தந்ய தோஷங்கள் :—(1) துவர்ப்பாகவும், தண்ணீரில் மிதக்கக்கூடியதுமான முலைப் பால் வாததோஷத்தினால் தூஷிப்பிக்கப்பட்டதாம். (2) கடு-அம்லம்-இலவணம்-என்கிற இரஸங்களையுடையதும், பசுமையான இரேகைகளுள்ளதுமான முலைப்பால் பித்தத்தினால் விகாரமடைந்ததாகும். (3) கபதோஷத்தினால் விகாரமடைந்த ஸ்தந்யம் பிசுபிசுப்புள்ளது ; அது தண்ணீரில் அமிழ்ந்துவிடும். (4) த்வந்த்வதோஷங்களால் விகாரமடைந்த ஸ்தந்யத்தில் இரண்டிரண்டு தோஷங்களுக்குமுள்ள இலக்ஷணங்களும், (5) ஸந்நிபாத தோஷங்களால் விகாரமடைந்ததில் முற்கூறிய மூன்று தோஷங்களாலான ஸ்தனதோஷங்களின் எல்லாக் குறிகளும் தோன்றும். 2, 3.

சுத்த ஸ்தந்யம் :—தோஷமற்றதான முலைப்பால், தண்ணீரில் சேர்த்ததும் அத்துடன் ஒன்றாகக் கலந்துவிடும் ; அது வெண்மையாக இனிப்பாகவும், நிறமாறுபாடில்லாததாகவுமிருக்கும். 4.

---

## 68. பாலரோக நிதாநம்*

துஷ்ட ஸ்தந்ய பானத்தினாலான பாலரோகங்கள் :—(1) வாத தோஷத்தினால் கெட்டுப்போன தாய்ப்பாலைப் பருகும் சிசு வாத ரோகங்களால் வருந்தும்; அதன் குரல் கம்மிப்போம் ; உடல் இளைக்கும் ; மல-மூத்திரங்களும், அபானவாயுவும் அடைபடும். (2) பித்த தோஷத்தினால் விகாரமடைந்துள்ள ஸ்தந்யத்தைப் பானம் செய்யும் குழந்தைக்கு அதிகமாய் வியர்க்கும் ; பேதியாகும் ; காமாலையும், மற்றும் பித்தரோகங்களும் அதைப் பிடிக்கும் ; நாவறட்சியும், ஸர்வாங்கங்களிலும் தாபமும் உண்டாகும். (3) சிலேஷ்ம தோஷத்தினால் தூஷிக்கபட்ட முலைப்பாலையுண்ணும் சிசுவுக்குச் சொள்ளு நீர் மிகப் பெருகும் ; கபஸம்பந்தமான ரோகங்கள் தோன்றும் ; அது அமிதமாக உறக்கங்கொள்ளும் : சுறுசுறுப்பற்றிருக்கும் ; முகமும் நேத்திரங்களும் வீங்கி மிகவும் வாந்தியாகும். (4) த்வந்த்வதோஷங்களாலான ரோகங்களில் இரண்டிரண்டு தோஷங்களுக்குள்ள இலக்ஷணங்

---

*ஸ்தனத்திலுண்டாவது ஸ்தந்யம்—அதாவது முலைப் பால். " இரஸதாதுவின் தெளிவான முக்கியாம்சமாகவும், இனிய சுவையுள்ளதாகவும், பரிபக்குவமான உணவின் ஸாரத்திலிருந்துண்டானதாகவுமுள்ள திரவம் ஸ்தனத்திலிருந்து ஸ்ரவிக்கும் ; அது ஸ்தந்யம் எனப்படுகிறது " என்று ஸுச்ருதர்.

* குழந்தைகளின் விசேஷவியாதிகளை விளக்கும் அத்தியாயம்.

களும், ஸந்நிபாத ஸம்பந்தமான ஸ்தந்யரோகத்தில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் தோன்றும். 1—3½.

சிசுவின் வேதனைகளை அறியுமுபாயம் :—(1) சிசுவுக்குண்டா யுள்ள நோய் மிருதுவானதா கடுமையானதா வென்பதை அதன் அழுகையைக் கொண்டு அறிந்துகொள்ளலாம். (2) குழந்தை அதிகமாக எவ்விடத்தை அடிக்கடியும் பரிசித்துக் கொள்கிறதோ, எந்த விடத்தைப் பரிசித்தால் வேதனையும் தாங்கவியலாததாயிருக் கிறதோ அவ்விடத்தில் நோவிருப்பதாய் அறியலாம். (3) கண்களை மூடிக்கொண்டிருந்தால் சிரஸ்ஸில் வேதனை யிருப்பதாகவும், (4) வயிறு கட்டிப் போதல், வாந்தி, ஸ்தனத்தைக் கடித்தல், குடலிரைத் தல், வயிற்றுப் பொருமல், முதுகுப் பக்கம் வளைதல், வயிற்றுப் பக் கம் உயர்தல் இவற்றைக் கொண்டு குடலில் வேதனை யென்றும் உணர்க. (5) மல-மூத்திரங்கள் பந்தித்துப்போதல், திடீரென்று பயப்படுதல், திசைகளைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தல் இவற்றால் மூத் திர வஸ்தியிலும், குதத்திலும் நோவென்று அறியலாம். (6) செவி, நாசி, குதம் முதலிய ஸ்ரோதோ மார்க்கங்களையும், ஸந்திபாகங்களை யும் ஊக்கத்துடன் அடிக்கடியும் உற்றுப் பார்த்து சோதித்தறிய வேண்டும். 4—7.

குகூணகம் :—பாலின் தோஷத்தினால் பாலருக்குக் கண்ணின் இரெப்பை யென்கிற வர்த்மபாகத்தில் "குகூணகம்" என்கிற நோயுண்டாகிறது; அதனால் நேத்திரம் தினவுள்ளதாய் அதிக நீரை அடிக்கடியும் வடிக்கும்; குழந்தை நெற்றி, நேத்திரம், நாசி இவற் றைத் தேய்த்துக்கொள்ளும்; சூரிய வெளிச்சத்தைப் பார்க்கமுடி யாமலும், இரெப்பை திறக்க முடியாததாவுமிருக்கும். 8, 9.

பாரிகர்ப்பிகம் :—கர்ப்பிணியான தாயாருடைய பாலைப் பெரும் பாலும் குழந்தை பருகுவதால்,[1] இருமல் ஜாடராக்னி மந்தப்படு தல், வமநம், சோம்பல், உடலிளைப்பு, அரோசகம், தலைக் கிறுகிறுத்தல் ஆகிய கோளாறுகளோடு வயிறு பருக்கும்; இந்த வியாதிக்குப் "பாரிகர்ப்பிகம்" என்றும் பரிபவம் என்றும் பெயர். 10, 11.

தாலுகண்டகம் :—குழந்தையின் தவடையைச் சேர்ந்த மாம்ஸத் தில் சிலேஷ்மம் விருத்தியடைந்து "தாலுகண்டகம்" என்கிற வியாதி யுண்டாகும்; அதனால் தவடையில் மேற்புறமாகக் குழி விழுந்தாற் போலிருக்கும்; வெகு கஷ்டப்பட்டே குழந்தை பாலுண்ணும்; மலம் திரவமாக வெளியாகும்; நாவறட்சி, கண்ணோய், தொண்டை நோய், வாய்ப்புண், தலையைத் தாங்கவியலாமை, வாந்தி ஆகிய கோளாறு கள் தோன்றும். 12, 13.

மஹாபத்மம் முதலியது :—(1) சிசுவுக்கு வஸ்தியின் மீதும், சிரஸ்ஸிலும் உண்டாகிற விஸர்ப்பம் பிராணஹரமானது. தாமரைப்

---

1. அவ்வித தாய்ப்பாலைப் பருகாவிட்டாலும் என்று கூட கருத்து.

பூவின் நிறம் முதலியதையுடைய, ஸந்நிபாதத்தினாலான இவ் வியாதிக்கு "மஹாபத்மம்" என்று பெயர். இதில் சிரஸ்ஸிலுண் டான விஸர்ப்பம் கன்னங்களிலும், அங்கிருந்து மார்பிலும் வியாபிக் கும்; வஸ்திபாகத்திலுண்டானது மார்பை நோக்கியும், கீழே குதத்தி லும் பரவிவரும். (2) மேலும் க்ஷுத்ரரோகப் பிரகரணத்திற் கூறிய அஜகல்லிகா, அஹிபூதநம் என்கிற ரோகங்களும் குழந்தைகளைப் பெரிதும் வருந்தச் செய்யும். 14, 15.

பாலருக்குண்டாகும் இதர ரோகங்கள் :—முன்பு ஜ்வரம் முத லிய[1] வேறு பிரதான ரோகங்கள் எவை கூறப்பட்டனவோ, அவை யெல்லாம் பாலர்களுக்கும் உண்டாம்; முன்பு அவற்றிற்குப் பொதுவாகக் கூறிய இலக்ஷணங்களே இவற்றிலும் தோன்றும். 16.

பாலக் கிரஹபீடைகள் :—(1) குழந்தை க்ஷணந்தோறும் சோர்ந்துபோம்; மறுபடி க்ஷணத்திற்கெல்லாம் பயந்து நடுங்கும்; அழும்; நகங்களாலும் பற்களாலும் தாதியை அல்லது தாயையும், தன்னையும் பிறிப் பிடுங்கும்; மேலே அண்ணாந்துப் பார்க்கும்; பற் களைக் கடிக்கும்; கூவும்; கொட்டாவி விடும்; புருவங்களை நெறிக் கும்; உதடுகளைக் கடித்துக்கொள்ளும்; அடிக்கடி நுரையைக் கக் கும்; மிகவும் இளைத்துக் கசங்கிப்போய் இரவில் தூக்கமின்றி விழித் திருக்கும்; கண்கள் வீங்கும்; பேதியாகும்; குரல் மாறும்; இறைச்சி, இரத்தம் இவற்றைப் போன்ற ஒரு வகை துர்நாற்றம் தேஹத்தி லுண்டாகும். சுபாவமாய் உண்பது போல உணவுண்ணாது; கிரஹா வேசமுள்ள சிசுவுக்கு மேலே கூறப்பட்டவை பொது லக்ஷணங்களாம். (2) ஒரு பக்கத்துக் கண்ணில் மாத்திரம் நீர் சொரியும்; உடல் மிக வியர்க்கும; துடித்தலும் நடுக்கலு முண்டாம்; வாயை வக்ரித்துக் கொண்டு மேலே ஒருவாறு பார்க்கும்; இரத்தத்திற்குச் சமமான துர்நாற்றம் உடலில் ஏற்படும்; மிகப் பயந்து பற்களைக் கடிக்கும்; ஸ்தந்யத்தைச் சற்றும் விரும்பாது; இவை கிரஹ பீடையின் விசேஷ லக்ஷணங்களாம[2]. (3) ஸ்கந்தக் கிரஹத்தினால் பீடிக்கப்படும் குழந்தை ஞாபகமிழந்து சொற்பமாய் அழும்; நுரையைக் கக்கும்; ஞாபகம் வந்ததும் அதிகமாய் அழும்; உடலில் சீழ், இரத்தம் இவற்றின் நாற்ற முண்டாகும். இது ஸ்கந்தாபஸ்மாரம் எனப்படும். [3] (4) உடல்

---

1. "ஜ்வரம் முதலிய" என்பதால் அதிஸாரம், கிரஹிணீ, பாண்டு, இரத்தபித்தம், காமலா முதலான ஸகல சாரீர ஆகந்துக ரோகங்களும் குறிக்கப்படுகின்றன.

2. சிசுக்களைக் கிரஹங்கள் பீடிப்பதைப்பற்றி ஸுச்ருதர் கூறுவ தாவது:—"தாத்ரீ (தாதி), தாய் இவர்களுடைய பூர்வாபசாரத்தினால் துஷ்டக் கிரஹங்கள் மலினமாகவும், சுபாசாரமற்றவையாகவும், பயந்தவையாகவும், களித்திருப்பவையாகவுமுள்ள சிசுக்களைத் தாம் பூஜை பெறும்பொருட்டுத் துன்புறுத்துகின்றன."

3. வாயில் நுரை கப்புதல் முதலிய அபஸ்மாரக் குறிகள் தோன்றுவதால் இது ஸ்கந்தாபஸ்மாரம் என்று வழங்கப்படுகிறது

துவண்டும், பயந்து நடுங்கியும், பக்ஷிகளின் நாற்றத்தைப் பெற்றும், எங்கும் துர் நீர்க்கசிவுள்ள விரணங்களால் பிடிக்கப்பட்டும், வேக்காடுள்ள கொப்புளங்கள் சரீரத்திற் பரவியுமுள்ள சிசு சகுநியென்னும் பக்ஷிதோஷத்தினுல் வருந்துவதாய் அறிக. (5) குழந்தையின் உடம்பு ஸாதாரண விரணங்களாலும் கொப்புளங்களாலும் நிரம்பி, சேற்றின் நாற்றத்தையும் பெற்று, இரத்தக்கசிவுள்ள தாயிருக்கும்; அக்குழந்தைக்கு பேதியாகும்; ஜ்வரமடிக்கும்; அழற்சியுண்டாயிருக்கும்; இக்கோளாறுகள் ரேவதீக்கிரஹத்தினுல் பிடிக்கப்படுவதன் குறிகளாம். (6) பூதநாக்கிரஹத்தினுல் தாக்கப்பட்டுள்ள சிசுவுக்கு அதிஸாரம், ஜ்வரம், நாவறட்சி, மூலேப் பார்வை, அழுகை, தூக்கமின்மை, ஏக்கங்கொள்ளல் ஆகியவை இலக்ஷணங்களாகும். (7) வாந்தி, இருமல், ஜ்வரம், நாவறட்சி, பதன் கெட்ட நிணநீர் நாற்றம், அதிக அழுகை, முலேயுண்பதில் வெறுப்பு, அதிஸாரம் ஆகியவை அந்த பூதனுக்கிரஹத்தினுல் பிடிக்கப்படும் குழந்தையினிடம் தோன்றும். (8) சீதபூதனை யென்னும் கிரஹத்தினுல் தாக்கப்பட்ட சிசு நடுங்கும்; இருமும்; நேத்திர ரோகங்களால் வருந்தும்; இளேத்துப் போம்; உடலில் துர்நாற்றமும், வாந்தியும், அதிஸாரமும் உண்டாம். (9)முகமுண்டதிகாக்கிரஹத்தினுல் பிடிக்கப்படும் சிசுவின்முகம் தெளிவான நல்ல நிறமுள்ளதாயிருக்கும்;முகத்தில் ஸிரைகள் மேலெழுந்து வியாபித்திருக்கும்; சரீரத்தில் மூத்திர நாற்றமுண்டாம்; அது அதிக உணவுண்ண விரும்பும். (10) நைகமேயக்கிரத்ஹத்தினுல் பிடிக்கப்படும் சிசுவுக்கு வாந்தி,நடுக்கம்,தொண்டையும் முகமும் சோஷித்தல், மூர்ச்சை, ஒருவித துர் நாற்றம் இக் குறிகள் தோன்றுவதோடு அது மேல் நோக்கி உற்றுப் பார்க்கும்; பற்களேக் கடிக்கும். 17—29.

---

## 69. விஷ நிதானம்

விஷம் பொதுவாக இரண்டு விதம்:—விஷம் ஸ்த்தாவரமென்றும் [1] ஜங்கமமென்றும் [2] இருவகைப்படும். அவற்றுள் முந்தியது மூலம் என்னும் வேர் முதலியவற்றைச் சேர்ந்ததாகவும், பிந்தியது ஸர்ப்பம் முதலியவற்றைச் சேர்ந்ததாகவும் இருக்கும். 1.

---

1. மூலவிஷம், பத்திரவிஷம், பலவிஷம், புஷ்பவிஷம், சர்மவிஷம், க்ஷீரவிஷம், ஸாரவிஷம், நிர்யாஸவிஷம், கந்தவிஷம், தாதுவிஷம் என்று ஸ்த்தாவர விஷம் பத்து விதம். [மூலம்—வேர்; பத்திரம்—இலே; பலம்—காய் அல்லது கனி; புஷ்பம்—மலர்; சர்மம்—பட்டை. க்ஷீரம்—இலேவேர் முதலியதின் பால்; ஸாரம்—மரத்தின் வைரம் அல்லது சாறு; நிர்யாஸம்.—பிசின்; கந்தம்—கிழங்கு; தாது—கனிஜமான உலோஹ பாஷாணுதிகள்.]

2. ஜங்கம விஷம்:—ஸர்ப்பம், தேள், வெறிநாய் முதலிய ஜந்துக்களேச் சேர்ந்த விஷம், திருஷ்டிவிஷம். நிச்வாஸவிஷம், தம்ஷ்ட்ராவிஷம், நகவிஷம், மூத்திர விஷம், புரீஷவிஷம், சுக்ரவிஷம், ஆர்த்தவிஷம், லாலாவிஷம், ஸ்பர்ச விஷம், முகதம்ச விஷம், பர்திதவிஷம்,

ஜங்கமவிஷங்களின் பொதுக்குறிகள்:—நித்திரை, சோம்பல் ஆயாஸம், அரூசி, அஜீர்ணம், மயிர்ச்சிலிர்க்கை, வீக்கம், அதிஸாரம் இக்கோளாறுகளை ஜங்கமவிஷம் உண்டுபண்ணும். 2.

ஸ்தாவர விஷங்களின் பொதுக்குறிகள்:— ஸ்தாவர விஷம் ஜ்வரம், விக்கல், மயிர்ச்சிலிர்க்கை, தொண்டைக்கட்டு, நுரை கக்குதல், அரோசகம், ச்வாஸம், மூர்ச்சை இக்குறிகளை யுண்டுபண்ணும். 3.

விஷமிட்டவனைக் கண்டறியு முபாயங்கள்:—மனிதருடைய இங்கிதங்களை யறிய வல்லவனாயிருப்பவன் விஷமிட்டவனை அவனது பேச்சாலும், செயல்களாலும், முகக்குறிகளாலும் தெரிந்து கொள்ளலாம்; மேலும் வேறு சில அடியில்வரும் இலக்ஷணங்களாலும் புத்திசாலியாயிருப்பவன் விஷ மிட்டவனை யறியலாம். அவன் வினவப்படுகையில் விடையளிக்கமாட்டான்; எதையோ கூற விரும்பி அதைக்கூறவியலாமல் குழப்பமடைவான்; பேதையனைப்போல் பல விஷயங்களையும் கலந்து பொருளற்ற வார்த்தைகளை வெகுவாகப் பேசுவான்; காரணமின்றியே திடீரென்று சிரிப்பான்; விரல்களால் அகஸ்மாத்தாய் சிட்டிகை போடுவான்; தரையைக் கீறுவான்; நடுக்கங்கொண்டிருப்பான்; பயந்து திரும்பத் திரும்பப் பார்ப்பான்; நகங்களால் எதையேனும் கிள்ளுவான்; முகங்கருத்துப் பாழடைந்தவன் போலத் தோற்றுவான்; வெகு தீனத்தன்மையுடன் ஆஸனத்திலுட்காருவான்; தலைமயிரைப் பரிசித்துக்கொண்டு எதோ சிந்திப்பான்; முற்றிலும் தகுந்த உணர்ச்சி இல்லாதவனாய் தோற்றுவான். 4—7½.

ஸ்தாவர விஷங்களின் விசேஷக் குறிகள்:—(1) மூலங்கள் என்கிற வேர்கள் ஸம்பந்தமான விஷங்கள் சரீரத்திற் பற்றினால், தடி முதலியதால் அடிக்கப்பட்டது போல் வேதனையும், பிதற்றலும், மயக்கமும் தோன்றும். (2) பத்திரம் என்கிற இலைஸம்பந்தமான விஷத்தினால் கொட்டாவியும், நடுக்கமும், பெருமூச்சும் உண்டாம். (3) பலங்கள் என்கிற காய் கனிகள் ஸம்பந்தமான விஷங்களால் பீஜகோசத்தில்[1] வீக்கமும், அழற்சியும், அன்னத்வேஷமும் உண்டாம். (4) புஷ்ப ஸம்பந்தமான விஷத்தினால் வாந்தியும், வயிற்றுப் பொருமலும், பெருமூச்சும் உண்டாகும். (5) சர்மம் என்கிற பட்டை, (6)

குதவிஷம், அஸ்திவிஷம், பித்தவிஷம், சூகவிஷம், சவ விஷம் என்று ஜங்கம விஷம் பதினாறுவிதம். [திருஷ்டி—நேத்திரத்தினால் கடுமையாக உற்றுப் பார்ப்பது; நிச்வாஸம்—வெளிவிடப்படும் மூச்சுக்காற்று; தம்ஷ்ட்ரா—கோரப்பல்; புரீஷம்—மலம்; சுக்ரம்—பீஜம்; ஆரா—கொடுக்கு; லாலாஸ்பர்சம்—சொள்ளுநீரின் பரிசம்; முகதம்சம்—வாயால் கடித்தல்; பர்திதம்—அபான வாதம்; குதம்—ஆஸனத்வாரம்; சூகம்—முன் கூறிய ஜல சூகாதிகள்.]

1. "முஷ்கசோத:" என்கிற மூலபாடத்துக்கு பீஜகோசவீக்கம் என்பது பொருள். "முஷ்கசோத:" என்பதற்குப் பதிலாய் "முகசோஷம்" என்று வேறு பாடமுண்டு; அதற்கு "வாய் உலர்ந்து போதல்" என்று பொருள்.

ஸாரம் என்கிற மரம் முதலியதின் வைரபாகம் அல்லது சாறு, (7) நிர்யாஸம் என்கிற பிசின் இவற்றின் ஸம்பந்தமான விஷங்கள் சரீரத்திற் சேருவதால் வாயில் துர்நாற்றமும், சுரசுரப்பும், தலைவலியும் அதிக கபத்தின் கசிவும் உண்டாம். (8) க்ஷீரம் என்கிற செடி கொடிகளின் பால் ஸம்பந்தமான விஷங்களால் வாயிலிருந்து நுரை ததும்பலும், பேதியும், தேஹத்தில் குருத்தன்மையும் தோன்றும். (9) தாதுக்கள் என்கிற உலோஹ-பாஷாணாதி ஸம்பந்தமான விஷங்களால் மூர்ச்சையும், தவடைகளில் அழற்சியும் உண்டாகும். இவ் விஷங்கள் யாவும் பெரும் பாலும் காலக்கிரமத்தில் உயிருக்கு அபாயம் விளைவிக்குந் தன்மையன. 8—12.

திக்த்த விஷ லக்ஷணம்[1]:—(1) அடி தாக்கியவிடத்தில் விரணமானது உடனே சமைக்கப்படுவதுபோன்ற உணர்ச்சியுடன் அடிக்கடியும் அதிக இரத்தக் கசிவைப் பெற்றாலும், விரணத்திலிருந்து மாம்ஸம் கறுத்து, துர்நீர்க்கசிவுகளைப் பெற்று, அதிக துர்க்கந்தமடைந்து அடிக்கடியும் சிதைந்து வீழ்ந்தாலும், நாவறட்சியும் மூர்ச்சையும் ஜ்வரமும் தாபமும் உண்டானாலும் அதை விஷம் தீட்டிய சஸ்திரத்தினால் தாக்கப்பட்டதாலான கோளாறாகத் தெரிந்துகொள்ளலாம். (2) பகைஞர் ஒருவனுடைய விரணத்தில் பொறாமையினால் விஷம் வைத்து விட்டால் அதிலும் இதே இலக்ஷணங்கள் உண்டாகும். 13, 14.

விஷபானக் கோளாறுகள்:—விஷமுட்கொண்டவனுக்குப் பசுமையாகவும் ஒட்டடை போன்றதாகவும் அதிஸாரமுண்டாகும்; நுரைத்து வாந்தியுமுண்டாம். 15.

## ஜங்கம விஷங்கள்

ஸர்ப்பஜாதிகள்:—பேர்கி,[2] மண்டலி,[3] இராஜிலம்[4] என்கிற மூன்று ஜாதி ஸர்ப்பங்களும் முறையே வாதப் பிரக்ருதியாகவும், பித்தப் பிரக்ருதியாகவும், சிலேஷ்மப் பிரக்ருதியாகவும் இருப்பவை; இரண்டிரண்டு ஜாதி ஸர்ப்பங்கள் புணர்ந்து அவற்றினிடமிருந்து ஜனிக்கும் கலப்பான ஸர்ப்பஜாதிகள் அந்தந்த ஜாதி ஸர்ப்பங்களின் தன்மைக்கேற்றவாறு த்வந்த்வ தோஷங்களாலுண்டானவையெனக்[5] கருதவேண்டும். 16.

---

1. திக்த்த விஷம்:—விஷம் பூசிய சஸ்திரம். அவ்வித சஸ்திரத்தினால் அடித்தால் அதை "திக்த்தாஹதம்" என்று கூறுவர்.

2. போகி—நாகம் என்கிற நல்ல பாம்பு.

3. மண்டலீ—சாரைப் பாம்பு.

4. இராஜிலம்—விரியன் என்கிற விரியன் கத்தரி.

5. போகியும் மண்டலியும் சேருவதால் ஜனிக்கும் பாம்பு வாத-பித்தப் பிரக்ருதி; போகியும் இராஜிலமும் சேர்ந்துண்டாவது வாத-கபப் பிரக்ருதி; மண்டலியும் இராஜிலமும் சேர்ந்துண்டாவது பித்த-கபப் பிரக்ருதி.

ஸர்ப்பஜாதிக் கடிகள்:—(1) போகி யென்னும் ஸர்ப்பம் தீண்டினால் கடிவாய் கறுப்பாயிருக்கும்; வாத ஸம்பந்தமான ஸகலவிகாரங்களையும் அவ்விஷமுண்டுபண்ணும். (2) மண்டலி யென்கிற ஸர்ப்பம் கடித்தால் கடிவாயில் ஒருவாறு பசுமையும், மிருதுவுமான வீக்கமுண்டாம்; பித்த ஸம்பந்தமான இதர விகாரங்களும் இருக்கும். (3) இராஜில மென்கிற பாம்பு கடித்தால் கடியுண்டவிடம் பிசுபிசுப்பாகவும், ஸ்திரமான வீக்கமுள்ளதாகவும், மிகத் தடித்துத் தோய்ந்த இரத்தக் கசிவு பெற்றிருப்பதோடு, பிணியாளி ஸ்நிக்த்தமாகவும், பாண்டுரோகி போலவும் காணப்படுவான். 17, 18.

ஸர்ப்பக்கடியில் அஸாத்யாதி நிலைமைகள்:—(1) அரசமரம், தேவாலயங்கள், மயானம், புற்றுகள், நாற்சந்திகள் ஆகிய பிரதேசங்களிலும், ஸந்தியாகாலத்திலும், பரணிநக்ஷத்திரத்தன்றும்[1] ஸர்ப்பம் தீண்டினாலும், ஸிராமர்மங்களிற் கடித்தாலும் கடியுண்டவன் பிழையான். (2) அவற்றுள் போகியென்ற ஸர்ப்பத்தின் கடி வெகு துரிதமாகப் பிராணனைப் போக்கும். எல்லா விஷங்களுமே உஷ்ண ஸம்பந்தத்தினால் அதனதன் வீர்யத்தில் இரண்டத்தனை பலத்தைப் பெறுகின்றன. மேலும் அஜீர்ணரோகிகள், பித்த தோஷத்தினாலும் வெயிலாலும் பிடிக்கப்பட்டவர், பாலர், வயது முதிர்ந்தவர், பசித்தவர், க்ஷதக்ஷீணரோகி, மேஹ ரோகி, குஷ்டி, ரூக்ஷதேஹி, துர்ப்பலன், கர்ப்பிணி இவர்களை ஸர்ப்பம் தீண்டினாலும் அவ்விஷம் அவர்களை ஜடிதியில் மரிக்கச் செய்யும். (3) சஸ்திரத்தினால் குத்திக்கீறும்போது இரத்தம் வடியாமற் போனாலும், கொடி முதலியதால் அடிக்கையில் கோடுகள் அல்லது கொடிபோன்ற வீக்கங்கள் எழும்பாமற் போனாலும், மிகச் சீதளமான தண்ணீரை மேலே இறைக்கையில் மயிர்ச்சிலிக்கை யுண்டாகாவிட்டாலும் அத்தகைய விஷந்தீண்டிய மனிதன் சிகித்ஸையினால் குணமடையமாட்டான். முகம் பயங்கரமாக வக்கிரமாதல், உரோமங்கள் உதிர்தல், நாசி தழைந்து போதல், தலையைத் தாங்கமுடியாமை, கடிவாயில் கறுஞ்சிவப்பாக வீக்கம் தோன்றல், ஹநுஸந்திகளென்கிற மோவாய்க்கட்டையின் அள்ளுகள் அசைக்கமுடியாமை, வாயிலிருந்து தடித்த நார்போன்று உமிழ்நீர் வெளியாதல், வாயிலிருந்தும் குதத்திலிருந்தும் இரத்தப் பெருக்குண்டாதல், பாம்பின் நான்கு பற்களும் ஆழ்ந்துப் பதிந்திருத்தல், உன்மாதமுண்டாதல், உபத்திரவங்களால்[2] வருந்துதல், குரல் ஈனஸ்வரமடைதல், உடல் கறுத்தல், அதிக அரிஷ்டங்கள் உண்டாதல், இயற்கை வேகங்கள் மிக்க அடங்குதல் இக்குறிகளுள்ள விஷக்கடியும் அஸாத்யமாம். 19—24½.

---

1. ஆருத்ரை, ஆச்லேஷம், மகம், மூலம், கிருத்திகை இந்த நக்ஷத்திரங்களிலும் விஷவேகம் பலமாகுமென்று ஸ்ரீகண்டதத்தன்.

2. விஷவேகத்தில் ஜ்வரம், அதிஸாரம், இரக்தவாந்தி, மூர்ச்சை முதலியவை உபத்திரவங்கள்.

## தூஷீ விஷங்கள்

தூஷீவிஷமும் அதன் குணங்களும்:—(1) முற்கூறிய ஸ்த்தாவர ஜங்கம விஷங்களின் வீர்யமே விஷஹரமான ஓஷதி முதலிய வற்ருல்[1] அடிக்கப்பட்டோ, காட்டுத்தீ-காற்று-வெயில் இவற்ருல் சோஷிப்பிக்கப்பட்டோ, இயற்கையாகவோ ஹீனகுணமாக[2] ஆகின்றன. அதனுல் அவ்விஷமே தூஷீவிஷமாய்விடுகிறது. (2) குணங்கள்:— வீர்யத்திற் குன்றியிருப்பதால் தூஷீவிஷம் மனிதனைக் கொன்று விடுவதில்லை; ஆனுல் கபத்துடன் சேர்ந்துகொண்டு வருஷக்கணக்காகச் சரீரத்திலேயே தங்கியிருக்கும்; அதனுல் பேதியாகும்; தேஹ நிறம் கறுக்கும்; உடலில் ஒருவித துர்நாற்றம் உண்டாம்; வாயில் அரோசகம் காணும்; நாவறட்சியும் அதிகப்படும்; இப்பிணியாளி ஒவ்வொரு ஸமயம் மூர்ச்சை, தலைச்சுற்றல், நாவுளறுதல், வாந்தி இவற்ருல் வருந்தியும், அமைதியின்றியும் புரளுவான். (3) இவ்விஷம் ஆமாசயத்தில் தங்கியிருந்தால் கப-வாததோஷங்களின் ஸம்பந்தமான ரோகங்களும், பக்குவாசயத்தில் தங்கியிருந்தால் வாத-பித்த தோஷங்கள் ஸம்பந்தமான ரோகங்களும் உண்டாம்; மேலும் அவன் தலைமயிரும், உடலிலுள்ள உரோமங்களும் முற்றும் உதிர்ந்துபோய், இறகுகளைச் சிதைத்துபோட்ட பறவைபோலத் தோற்றுவான். (4) தூஷீவிஷமானது இரஸம் முதலிய தாதுக்களைப்பற்றியிருந்தால் ஒவ்வொரு தாதுவுக்கு மியல்பான விகாரங்களையுண்டுபண்ணும்; சைத்தியத்திஞலும், வாயு மேலே அதிகமாய் வீசுவதாலும், மழையினுலும் இக் கோளாறு மிகவும் விருத்தியடையும். 25—29.

தூஷீவிஷக்கோளாறுகளின் பூர்வரூபம்:—அதிக நித்திரை, சரீரத்தில் குருத்வம், அதிக கொட்டாவி, அவயவங்கள் துவண்டுபோதல், மயிர்ச்சிலிர்க்கை, துவைக்கப்படுவதுபோல் உடலில் வலி ஆகியவை தூஷீவிஷத்திஞல் உண்டாகும் விகாரங்களின் பூர்வரூபமாம். 29½.

தூஷீவிஷக் கோளாறின் பொதுக்குறிகள்:—(1) அன்னமதம்,[3] உணவு ஜீர்ணமாகாமை, அரோசகம், உடலில் வட்டமான தடிப்புகள், கோடம், மாம்ஸம் க்ஷீணித்தல், பாதங்களிலும் புறங்கைகளிலும் வீக்கம், மூர்ச்சை, வாந்தி, அதிஸாரம், ச்வாஸரோகம், த்ருஷ்ணுரோகம், ஜ்வரம், வயிறு பருத்துப்போதல் ஆகிய விகாரங்களைத் தூஷீவிஷம் உண்டுபண்ணும். (2) சில தூஷீவிஷங்கள் முற்கூறியவற்றைத் தவிர உன்மாதத்தையு முண்டுபண்ணும். சில தூஷீவிஷம் ஆநாஹமுண்டாக்கும். சில தூஷீவிஷம் சுக்கிரதாதுவை க்ஷீணிக்கச் செய்யும்.[4] சில நாக்கைக் குளறச் செய்யும். சில தூஷீ

---

1. விஷஹரமான ஓஷதிகள்—விஷங்களை முறிக்கு மியல்புடைய அகதங்கள் என்கிற மூலிகைகள்.

2. வியவாயி, விகாஸி முதலான பத்துவித விஷகுணங்களில் ஏதேனும் சில குணும்சங்கள் குறைந்திருத்தல் என்று பொருள்.

3. அன்னமதம்—உணவுண்டதும் தோன்றுகிற ஒருவித வெறி. "அன்னமதம் என்பது இரஸாஜீர்ணமே" என்று கதாதரன்.

4. ஷாண்ட்யமென்கிற நபும்ஸகத்தன்மையை யுண்டுபண்ணுமென்று கருத்து.

விஷம் குஷ்டத்திற்கும், வேறு சில மற்றும் அநேக வியாதிகளுக்கும் காரணமாவதுண்டு. 30—32.

தூஷீவிஷ பரிபாஷை :—விஷமானது தேசம், காலம், உணவு,[1] பகல், நித்திரை இவற்ருல் அடிக்கடியும் தூஷிக்கப்பட்டு வீர்யங்குன்றுவதால், சரீரத்தில் தாதுக்களைத் தூஷிப்பிக்கும் ; ஆகவே இது "தூஷீவிஷம்" என்று வழங்கப்படும். 33.

தூஷீவிஷத்தில் ஸாத்யாஸாத்யாதிகள் :—(1) தனது நிலைகளை நன்குணர்ந்து முறைதவருது நடப்பவனுக்கு உடனே பரிஹாரம் செய்தால், தூஷீவிஷக்கோளாறுகள் சுலபமாக சிகித்ஸிக்கக் கூடியவையாம். (2) தூஷீவிஷம் சரீரத்திற் சேர்ந்து ஒரு வருஷம் சென்று விட்டால் யாப்யமாகும். (3) மிகவும் இளைத்துப்போனவனுக்கும், அஹிதமான ஆஹார-விஹாரங்களை யுபயோகிப்பவனுக்கும் தூஷீவிஷம் தேஹத்திற் சேர்ந்தால் அஃது அஸாத்யமாகும். 34.

ஸம்யோகஜவிஷம் :—[2] ஸ்த்ரீகள் ஆடவரை வசீகரிப்பதற்காக வியர்வைநீரையும், வசீகரண சூர்ணத்தையும்,[3] பல அங்கங்களிலிருந்துண்டாகும் மலங்களையும், பகைஞரிடும் கரமென்கிற விஷங்களையும் உணவோடு கலந்து கொடுத்து விடுவதுண்டு. அதனுல் அப்புருடன் வெளிறிய சரீரமுடையவனுகவும், மிக்க இளைத்தவனுகவும், பசி மந்தித்தவனுகவும் ஆகிறன் ; இவனுக்கு வயிற்றில் கரம் என்னும் ஒருவகை விஷமும் உண்டாகும் ; இவனுக்கு மர்மங்களில் அதிக வேதனையும், வயிற்றுப்பொருமலும், கைகளில் வீக்கமும், மஹோதரமும், கிரஹணீதோஷமும், க்ஷயரோகமும், குல்மமும், ஜ்வரமும், தேஹக்ஷீணமும் உண்டாம். இவற்றைத் தவிர இதர வியாதிகளுடைய குறிகளையும் இவனிடம் காணலாம். 35—37.

லூதாவும் லூதாவிஷமும்:— (1) சினங்கொண்ட முனிவரது வியர்வை நீர்த்துளிகள் லூநதிருணத்தின்மீது சிந்தி, அதிலிருந்து சில விஷஜந்துக்கள் கிளம்பின. ஆகவே அந்த ஜந்துக்கள் "லூதா" எனப்

---

1. தேசம் — ஆநூபாதிப் பிரதேசம்; காலம்—ஹேமந்தாதிருதுக்கள்; உணவு—வாற்கோதுமை, எள் முதலியவற்ருலானது.

2. சில சரக்குகளை ஒன்றோடொன்று சேர்ப்பதால் பரிணமிக்கும் விஷம் "ஸம்யோகஜ விஷம்" எனப்படுகிறது. ஸம்யோகஜவிஷம் இரண்டுவிதம். அவற்றுள் விஷகுணமுள்ள பதார்த்தங்களின் சேர்க்கையால் பரிணமிப்பது கிருத்ரிமவிஷம் ; சுயம் விஷகுணமற்ற சில சரக்குகளைச் சேர்ப்பதால் விஷத்தன்மையைப் பெற்றதாகப் பரிணமிக்கும் விஷம் கரவிஷம்.

3. "இரஜஸ்" என்கிற ஸம்ஸ்க்ருத மூல சப்தத்துக்கு மதுகோசவியாக்யாநப்படி சூர்ணம் என்று பொருள் எழுதப்பட்டது ; ஆனல் "இரஜஸ்" என்பதற்கு இச்சந்தர்ப்பத்திற்கேற்ப "ஆர்த்தவம்" என்றும் பொருள் கூறுவர்.

படுகின்றன. [1] அவை பதினாறுவகை. [2] (2) சிலந்திகளால் கடியுண்டவிடம் பதனழியும்; இரத்தப் பெருக்குமுண்டாம்; ஜ்வரம், உடலழற்சி, அதிஸாரம், மற்றும் ஸந்நிபாத ஸம்பந்தமான விகாரங்கள் ஆகியவை தோன்றும்; பலவகையான கட்டிகள் புறப்படும்; பெரிய வட்டமான தடிப்புகள் கிளம்பும்; மிருதுவாகவும், சென்னிறமாகவும், கபிலநிறமாகவும், அசைவற்றவையுமான பெரிய வீக்கங்கள் காணும். இவை எல்லாச் சிலந்திக் கடிகளுடையவும் பொதுக் குறிகளாம். [3] (3) எந்தக் கடியானது கிழிருந்து மேல்நோக்கிப் பரவுவதாகவும், மிகவும் வேக்காடு-துர்நீர்க்-கசிவு-வீக்கம்-ஜ்வரம் இவற்றுடன் கூடியதாகவும், (கடியின்) மத்தியபாகம் கறுப்பான அல்லது கபிலநிறமான சாளரங்களைப்போன்ற புள்ளிகளோடு கூடியதாகவு மிருக்கின்றதோ, அக்கடி காலக்கிரமத்தில் விருத்தியடைந்து கோளாறை யுண்டுபண்ணும் தூஷீகுணமுள்ள லூதாக்களால் உண்டானதாகக் கருதவேண்டும். [4] (4) வெளுப்பாகவோ, கறுப்பாகவோ, சிவப்பாகவோ, பசுமையாகவோ கட்டிகள் கிளம்புதல், சோதை, ஜ்வரம் ஆகிய கடுமையான கோளாறுகளும், பிராணனை ஹரிக்கக்கூடியவையான ச்வாஸம் விக்கல் சிரோக்கிரஹம் என்கிற கழுத்தின் பிடிப்பு ஆகியவைகளும் சிலந்திக்கடியின் அஸாத்யக் கோளாறுகளாம்[5]. 38—43.

ஆகுதூஷீவிஷம்:—பெருச்சாளிக் கடியின் தூஷீவிஷத்தினால் வருந்துபவருக்குக் கடியுண்டது முதல் அவ்வாயிலிருந்து இரத்தம் கசிந்துவரும்; வெளுத்த தடிப்புகள் ஏற்படும்; ஜ்வரமும், அரோசகமும், மயிர்ச்சிலிர்க்கையும், அழற்சியும் தோன்றும். 44.

---

1. விச்வாமித்திரர் க்ஷத்திரியராயிருக்கையில் காமதேனுவுக்காக வஸிஷ்டமாமுனியை வலிய நிர்ப்பந்தித்ததால் அவர் மிகச் சினங்கொள்ள, அப்பொழுது அவர் சரீரத்திலிருந்து வெப்பத்தினால் வடிந்த வியர்வைத்துளிகள் காமதேனுவுக்காக அறுத்துப் போட்டிருந்த புற்கள்மீது (லூந த்ருணம்—என்றால்—அறுத்துவைக்கப் பட்டபுல்) விழ, அவ்வியர்வை நீரிலிருந்து சில சிலந்திகள் என்கிற விஷப்பூச்சிகள் உண்டாயின; அவையே லூதா (லூநத்ருணத்தி லுற்பத்தியானவை) என்று வழங்கப்படுகின்றனவாம்.

2. பதினாறுவித லூதாக்கள்:—"த்ரிமண்டலா, ச்வேதா, கபிலா, பீதகா, லாலாவிஷா, மூத்திரவிஷா, இரக்தா, கடிநா, ஸௌவர்ணிகா, இலாஜவர்ணா, ஜாலிநீ, ஏகபதீ, க்ருஷ்ணா, அக்னிவக்த்ரா, காண்டா, மாலாகுணீ என்பவை" என்று ஸுச்ருதர்.

3. இக்குறிகள் ஸௌவர்ணிகா முதலிய எட்டுவித லூதாக்களின் கடிகளிலேயே தோன்றுபவையென்று ஸுச்ருதர்.

4. த்ரிமண்டலா முதலான எட்டுவித லூதாக்களின் கடிகளே இவ்விதம் தூஷீவிஷத்தன்மை யுடையவைகளாய் வெகுகாலம் தொந்தரவளிக்கும்.

5. இவ்வஸாத்யக் கோளாறுகள் ஸௌவர்ணிகா முதலான எட்டுவித சிலந்திகள் ஸம்பந்தமானவை.

மூஷிகதம்சம்:—அஸாத்யக் கோளாறுகளுண்டு பண்ணுங் குணமுடைய எலிகள் கடித்தால் மூர்ச்சை, உடல் வீக்கம், உடல் கறுத்தல், துர்நீர்க்கசிவு, சப்தம் செவியுறுமை, ஜ்வரம், சிரோபாரம், உமிழ்நீரும் இரத்தமும் வாந்தியாதல் ஆகியவை குறிகளாம்; இவ் விஷக்கடி அஸாத்யமெனப் படுகிறது[1]. 45.

க்ருகலாஸ தம்சம்:—பச்சோந்தி யென்கிற ஓணன் கடித்தால் உடல் கறுப்பாகவோ, கபில நிறமாகவோ, அல்லது பலவேறு நிறமாகவோ ஆகும்; மயக்கமும், பேதியும் உண்டாம். 46.

வ்ருச்சிக தம்சம்:—(1) தேள் கொட்டினால் முதலில் நெருப்பைப் போல் வெகு தீக்ஷ்ணமான வேதனை யுண்டாக்கியவாறு கடுமையான கடுப்புடன் சீக்கிரம் விஷவேகம் மேல்நோக்கி யேறும்; பிறகு அவ் விஷமும் வேதனையும் கொட்டிய வாயில் சில நேரம் இருக்கும். (2) கொடிய தேள் கொட்டினால் அவ்விஷம் அஸாத்ய நிலைமையை யுண்டு பண்ணுவதுண்டு; அது இருதயத்தைத் தாக்கும்; நாசி, நாக்கு இவை இழுத்து அடைக்கப்படும்; மாம்ஸங்கள் சிதைந்து மிகச் சிதறுவது போலிருக்கும்; இவ் வேதனையினால் வருந்தி பிணியாளி உயிரிழப்பான்.[2] 47, 48.

வேறு விஷக்கடிகள்: கணப தம்சம்:—கம்பளிப் பூச்சியின் கடியினால் விஸர்ப்பம், வீக்கம், குத்தல், ஜ்வரம், வாந்தி இவையுண்டாம்; கடித்தவிடத்தில் வலி அதிகமாயிருக்கும். (2) உச்சிடிங்க தம்சம்: செய்யான் கடித்தால் மயிர்ச்சிலிக்கையும், லிங்கத்தடிப்பும், கடும் வேதனையும் உண்டாம்; குளிர்ந்த ஜலத்தினால் உடலெல்லாம் நனைக்கப் பட்டதுபோன்ற உணர்ச்சியு முண்டாம். (3) விஷத் தவளை கடித்தால் ஒரு கோரப்பல் குத்தியதன் குறியோடு [3], கடித்தவிடம் வீக்கங் கொண்டும், வலியுண்டுபண்ணுவதாகவும், பசுமை நிறமுள்ளதாகவும் காணப்படும்; பிணியாளிக்கு நாவறட்சியும், வாந்தியும், நித்திரையும் உண்டாம். (4) விஷகுணமுள்ள மத்ஸியங்கடித்தால் கடியுண்டவிடத்தில் அழற்சியும், வீக்கமும், வலியும் உண்டாகும். (5) விஷகுணமுள்ள அட்டை கடித்தால் கடியுண்டவிடத்தில் தினவும், வீக்கமும், ஜ்வரமும், மூர்ச்சையும் காணும். (6) பல்லியின் விஷத்தால் அழற்சி, வீக்கம், குத்தல், வியர்வை ஆகியவை தோன்றும். (7) மரவட்டைக்கடியில் வியர்வையும், நோவும், அழற்சியும் உண்டாகும். (8) கொசுகின் கடி தினவும், சிறிது தழும்பு போன்ற வீக்கமும், சொற்ப வேதனையு முள்ளதாயிருக்கும். அஸாத்ய குணமுள்ள கடுமையான கொசுகு கடித்தால், அஸாத்ய ஸாத்ர

1. இதில் சிற்றெலிகளைப் போன்ற வீக்கம் உடம்பெல்லாம் எழும்புமென்றும் கூறப்படுகிறது.

2. இங்கே (2) என்ற குறிப்புக்குக் கீழுள்ளவை நண்டு வாய்க்காலி யென்னும் பெருந்தேளின் விஷக்குறிகள் ஆகும்.

3. தவளைக்கடியில் ஒரு பல் மாத்திரம் படுமாம்.

முதலிய ஜந்துக்களின் கடிக்குறிகள்[1] உண்டாகும். (9) கடுமையான ஈக்கள் கடித்தால் உடனே இரத்தக்கசிவு உண்டாம்; கடிவாய் ஒருவாறு கறுத்து, அழற்சியுள்ளதாகவும் இருக்கும்; கட்டியும் உண்டாம்; ஜ்வரமும், மயக்கமும் தோன்றும்; ஸ்த்தகிகா என்கிற ஈ மிகத் தீங்குண்டுபண்ணுவதாகும். (10) நாற்கால்-இருகால் ஜந்துக்களின்[2] நகங்களாலாவது, பற்களாலாவது தாக்கி விஷப்பற்றுண்டானால் கடியில் சீழுண்டாகும்; வேக்காடும், துர்நீர்க்கசிவும் தோன்றும்; ஜ்வரமும் காணும். 49—56.

நிர்விஷ லக்ஷணம்:— தோஷங்கள் சமனமடைந்து, தாதுக்கள் இயற்கை நிலைமையைப் பெற்று, உணவில் விருப்பமுண்டாய், மலமூத்திரங்கள் ஒழுங்காக வெளிவந்துகொண்டு, தேஹநிறமும், இந்திரியங்களும், மனதும், அந்தந்த அவயவங்களின் இயற்கைக் காரியங்களும் சுபாவநிலைமைக்கு வந்து தெளிவடைந்தால் அம்மனிதனுடைய சரீரத்திலிருந்து விஷம் நீங்கிவிட்டதாக வைத்தியன் தெரிந்து கொள்ளலாம். 57.

ரோகபரீக்ஷைக்கு மூன்று உபாயங்கள்:—தரிசநம், பரிசம், பிரச்னை இம்மூன்று உபாயங்களால் ரோகியைப் பரீக்ஷிக்கவேண்டும். வயது, தேஹநிறம், சரீரம், இந்திரியங்கள் இவற்றின் நிலைமைகளையும் தரிசனத்தினால் உற்றுப் பரீக்ஷிக்கலாம். 58.

---

## 70. விஷயாநுக்ரமணிகா*

இக்கிரந்தத்தில் விவரித்த ரோகநிதாநஸங்கிரஹம்:—ஜ்வரம், அதிஸாரம், கிரஹணி, அர்சஸ், அக்னிமாந்த்ய-அஜீர்ண-விஷூசி-அலஸக-விளம்பிகைகள், கிருமிரோகம், பாண்டு-காமலா-ஹலீமகங்கள், இரத்த-பித்தம், இராஜயக்ஷ்ம-க்ஷதக்ஷீணங்கள், காஸம், ஹிக்கா-ச்வாஸங்கள், ஸ்வரபேதம், அரோசகம், சர்தி, த்ருஷ்ணை, மூர்ச்சாதிகள், பாநாத்யயாதிகள், தாஹம், உந்மாதம், அபஸ்மாரம், வாதவியாதி, வாத-ரக்தம், ஊருஸ்தம்பம், ஆமவாதம், சூல-பரிணாமசூலாதிகள், உதாவர்த்தாநாஹங்கள், குல்மம், ஹ்ருத்ரோகம், மூத்திரக்ருச்சிரம், மூத்திராகாதம், அச்மரீ, பிரமேஹ - பிரமேஹபிடகா-மதுமேஹங்கள் மேதோரோகம், உதர ரோகம், சோதை, வ்ருத்தி, களகண்ட-கண்டமலா-அபசீ-கிரந்தி-அர்புதங்கள், ச்லீபதம், வித்ரதி, விரணசோதை, சாரீர விரணம், ஸத்யோவிரணம், பக்நம், நாடீவிரணம், பகந்தரம், உபதம்சம், சூததோஷம், குஷ்டம், சீத-பித்தோதர்த - கோடங்கள்,

---

1. கொசுக்களில் பார்வதீய மசகம் என்பது ஒரு ஜாதி. அக்கொசுக் கடி, கொடிய விஷ குணமுள்ளதென்றும், ஜ்வராதிகளால் பிராணனைப் போக்குந் தன்மையதென்றும் ஸுச்ருதர்.

2. நாற்கால் ஜந்துக்கள்:—நாய், நரி, முதலியன. இருகால் ஜந்துக்கள்-வெறிப்பிடித்த மனிதன் வாலில்லாக் குரங்கு முதலியன.

* விஷய அட்டவணை யென்று பொருள்.

அம்ல-பித்தம், விஸர்ப்பம், விஸ்ப்போடம், ரோமாந்த்யம் முதலான மஸூரிகைகள், க்ஷுத்ர ரோகங்கள், முகரோகங்கள், கர்ணரோகங்கள், நாஸாரோகங்கள், நேத்திரரோகங்கள், சிரோ ரோகங்கள் அஸ்ருக்தர-யோநிவியாபத்-யோநிகந்த-மூடகாப்ப-ஸூதிகா-ஸ்தன-ஸ்தந்ய ரோகங்களென்கிற ஸ்த்ரீரோகங்கள், பால ரோகங்கள், விஷநித்தாநம் ஆக இவை "ருக்விநிச்சயம்" என்னும் இக்கிரந்தத்தில் விவரிக்கப்பட்டுள்ள வியாதிகளாகும். 1—9.

ஆசிரியரின் முடிவுரை:—எந்தெந்த வைத்தியநூலில் எவ்வெவ் விஷயம் ரோக நிர்ணயமுறைக்குச் சிறந்ததாகத் தோன்றிற்றோ, அஃ தனைத்தும் "இந்துகரன்" என்பவரது புத்திரனை மாதவகரனால் ஸகலரோகநிர்ணயத்திற்கும் உபயோகமாகுமாறு இக்கிரந்தத்திற் பெரு முயற்சியினால் திரட்டி யொருங்கே விவரிக்கப்பட்டன. இதிற் கூறியவாறு பிணிகளைப் பரிசோதித்து நிர்ணயம் செய்து நிறைவேற்றப்பட்ட சொற்ப வைத்தியமுறையும் நன்கு செய்யப்பட்டதாகும்; அதனால் ஜனங்கள் பிணி நீங்கியவர்களாய் என்றைக்கும் இனிது வாழ்வார்கள். 10, 11.

---

# அநுபந்தம்*

## ஸ்நாயுக நிதாநம்[1]

ஸ்நாயுகநிதாந-ஸம்ப்ராப்திகள்:—தோஷமானது சாகைகளில்[2] பிரகோபித்து, விஸர்ப்பம்போன்ற வீக்கமுண்டுபண்ணி அதை உடையச் செய்யும்; மேலும் அப்பிரதேசத்தில் சூட்டை விருத்திசெய்து, ஸ்நாயுவையும்[3] சோஷிப்பித்து, திரண்டு வெண்மையான நூல் போன்ற ஜந்துவைப் பரிணமிக்கச் செய்ய, அவ்விஷக் கிருமி சிறுகச் சிறுக அவ்விரணத்திலிருந்து வெளியாகும். அதை மத்தியில் அறுத்து விட்டால் பலமாகப் பிரகோபித்துத் தொந்தரவளிக்கும்; அக்கிருமி தானே நழுவி முற்றிலும் வெளியாய்விட்டால் வீக்கம் வடியும்; மீண்டும் வேறோரிடத்தில் அவ்விதமே கிளம்பும்; இவ்வியாதி ஸ்நாயுகம் என்று வழங்கப்படுகிறது. இதற்கு விஸர்ப்பத்திற்குச் செய்வது போலவே சிகித்ஸை செய்யவேண்டும். 1—3.

---

* மாதவகரன் மொழியாத சில ரோகநிதாநங்கள் பாவமிச்ரன் முதலியவர்களால் கூறப்படுவதை அனுஸரித்து இவ்வநுபந்தத்தில் விவரிக்கப்படுகின்றன.

1. ஸ்நாயுகம்:—நரம்புச்சிலந்தி. [ஸ்நாயு வெண்பஜை நரம்பென்று கூறுபவரும் உண்டு. இக்கிருமி நரம்புபோலிருப்பதால் இப் பெயரிடப்பட்டதாக அன்னார் கருத்து.]

2. சாகைகள்:—கைகளும் கால்களும்.

3. ஸ்நாயு:—நரம்பு அல்லது பிரக்ருதாநுஸாரமாய் தசைநார்.

